த. பா. நி (க.வெ.) வரிசை எண் — 360

# மக்கள்தொகை

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்
ந. வரதப்பன், M.A., B.Ed.,
பொருளாதாரப் பேராசிரியர்,
அரசு ஆடவர் கல்லூரி,
கும்பகோணம்.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—360

# மக்கள்தொகை

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்

ந. வரதப்பன், M.A., B.Ed.,
பொருளாதாரப் பேராசிரியர்,
அரசு ஆடவர் கல்லூரி,
கும்பகோணம்.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1972

T.N.T.B.S. (C.P.) No. 360



# POPULATION

**N. Varadappan**

**Price Rs. 10-00**

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the Uaiversity level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

Printed by
The Darwin Printing Works,
5/5, Whannels Road,
Egmore, Madras-8.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி–உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றுன மக்கள்தொகை என்ற இந் நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 360ஆவது வெளியீடாகும். இதுவரை 395 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

. சென்னை, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக்கழகங்கள் வகுத்துள்ள பாடத்திட்டங்களை யொட்டி இந்நூலை எழுதியுள்ளேன். இந்தியப் பொருளாதாரப் பிரச்சினைகளில் மக்கள்தொகைப்பிரச்சினை தலைசிறந்தது. மக்கள்தொகையின் பல்வேறு அம்சங்களையும் இந்திய நிலைமைகளுக்குத் தகுந்தவாறு ஆராய்ந்துள்ளேன். மேலும் மக்கள்தொகைக் கோட்பாடுகளையும் இத்துடன் சேர்த்துள்ளேன். கடந்த பத்து ஆண்டுகாலமாக நான் பொருளாதாரத்தைப் பட்டப்படிப்பில் தமிழ் போதனமொழியின் வாயிலாகப் போதித்து வந்துள்ளேன். பழக்கத்திலுள்ள கலைச்சொற்களைக் கையாண்டுள்ளேன். ஆகவே இப்புத்தகம் இந்தியப் பொருளாதாரப் பிரச்சினைகள், பொருளாதாரக் கோட்பாடுகள் நவீன இந்தியப்பொருளாதார வளர்ச்சிபோன்று பட்டப்படிப்புக்குரிய பாடங்களுக்கு, குறிப்பாகப் பொருளாதாரத்துறை மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய வகையில் தயாரித்துள்ளேன். இந்நூலைக் கண்ணுறும் அன்பர்களும், ஆசிரியர்களும் நூல் மேலும் சிறப்புறுவதற்கு ஏதுவான கருத்துகளை எடுத்தறிவித்தால் நன்றியுடையவனாக இருப்பேன். இந்நூலினை எழுதும் வாய்ப்பினை எனக்கு அளித்த தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்திற்கு என் உள்ளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ந. வரதப்பன்

# பொருளடக்கம்

# 1. மக்கள்தொகை வளர்ச்சி
# (Growth of Population)

மனித சமுதாயத்தில் மிகவும் அடிப்படையான பிரச்சினை மக்கள்தொகைப் பிரச்சினையாகும். இது மனித வர்க்கத்தின் சமூக வர்ழ்வை, நாட்டை, ஏன், உலகத்தையே ஆட்டிப் படைக்கும் மிக முக்கியப் பிரச்சினைகளில் ஒன்ருகும். குடும்பங் களின் மகிழ்ச்சியையும், ஆரோக்கியத்தையும் பெரிதும் பாதிக்கும் பிரச்சினை. நாட்டின் செழிப்பையும், சமூக முன்னேற்றத்தையும் தடை செய்கிறது. இப்பிரச்சினை உலக அமைதியைக் கெடுக்கும். இன்னும் சொல்லப்போனல் உலக யுத்தங்களையும் உண்டாக்கக் கூடியது. இந்தியாவிற்கு இது மிக முக்கியப் பொருளாதாரப் பிரச்சினையுமாகும். இந்தியாவில் மக்கள்தொகை அதிகரிப்பு பஞ்சம், பட்டினி, பிணி, வேலையின்மை, வாழ்க்கைத்தரக் குறைவு, குறைவான தலாவருமானம் போன்ற பல சமூகக் கேடுகளுக்கு, அடித்தளமாக விளங்குகிறது. இயற்கை வளங்களைக் காட்டிலும் மக்கள் வளம் அதிகமிருந்தும் அதை நன்முறையில் பாதுகாக்கவும், பேணி வளர்க்கவும் முடியாத நிலையைக் காண்கிறோம். இப்படி மக்கள் தொகை வளர்வதற்கு என்ன காரணம்? எந்தவிதமான சூழ்நிலையில் இப்படி இது பெருகிக்கொண்டே போகிறது? அப் படித் துரிதமான வேகத்தில் போக வேண்டிய காரணங்கள் யாவை? இதுபோல வளர்வது நாட்டிற்கு நல்லதா? கெடுதலா? அப்படி கெடுதல் என்ருல் அதை எவ்வாறு கட்டுப்படுத்த வேண் டும்? எந்த விதத்தில் அதன் தரத்தை உயர்த்த வேண்டும்? ஆகவேதான் அதன் தன்மை, அமைப்பு, தரம் முதலியவற்றைப் பற்றி விரிவான முறையில் ஆராய்வது எல்லா விதத்திலும் நன்மை யைப் பயக்கும்.

இந்தியாவின் நிலப்பரப்பு 32,67,500 சதுர கி. மீட்டர்கள். அதாவது உலக நிலப்பரப்பில் 2·4 சதவிகிதத்தைக் கொண்டது.

இந்திய மக்கள்தொகையானது உலக மக்கள்தொகையில் 14·6 சதவிகிதமாகும். இந்தியா உலக நாடுகளுள் மக்கள்தொகையில் இரண்டாவது இடத்தில் உள்ளது. உலகில் முதன்மையானது 710 மில்லியன்கள் மக்கள்தொகை கொண்ட சீன தேசமாகும். 1941ஆம் ஆண்டில் இந்திய மக்கள்தொகை உலக மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பங்காக இருந்தது. 1951ஆம் ஆண் டில் இந்தியாவில் மக்கள்தொகை 361 மில்லியன்களாகும். 1961ஆம் ஆண்டில் மக்கள்தொகைக் கணக்கின்படி 439 மில் லியன்களாகும். அதாவது 1951 முதல் 1961 வரை, 10 ஆண்டு களில் அதிகரித்த மக்கள்தொகை 78 மில்லியன்களாகும். இவ் வாறு அதிகரித்த மக்கள்தொகை மட்டும் இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய இருநாடுகளின் மொத்த மக்கள்தொகைக்குச் சமம். 1971ஆம் ஆண்டின் கணக்கின்படி இந்திய மக்கள்தொகை 547 மில்லியன்கள். அதாவது 1961 முதல் 1971 வரை, 10 ஆண்டுகளில் அதிகரித்த மக்கள்தொகை 108 மில்லியன்கள். மக்கள்தொகை வளர்ச்சியின் விகிதம் 1961ஆம் ஆண்டில் 21·5 சதவிகிதத்திலிருந்து 1971ஆம் ஆண்டில் 24·57 சதவிகித மாக உயர்ந்துள்ளது.

இந்திய மாநிலங்களில் அதிக மக்கள்தொகையைக் கொண் டது உத்தரப்பிரதேசம். குறைவான மக்கள்தொகையைக் கொண்டது ஜம்மு-காஷ்மீர் மாநிலமாகும். வளர்ந்துவரும் மக் கள்தொகை இந்தியாவிற்கு அதிகமென்பதும், அதனால் போதிய உணவு, குடியிருப்பு வசதிகள், வேலை வாய்ப்பு வசதிகள் அளிக்க முடியாது என்பதும் பலருடைய கருத்தாகும். இந்த நூற்றாண் டின் ஆரம்பத்தில் இந்தியாவின் மக்கள்தொகை 236 மில்லியன் களாகும். ஆனால் அது 1971ஆம் ஆண்டில் 547 மில்லியன் களாக உயர்ந்துள்ளது. அதாவது கடந்த எழுபது ஆண்டுகளுக் குள் 311 மில்லியன்கள் அதிகப்படியாக வளர்ந்துள்ளது. அதி லும் குறிப்பாக சென்ற நாற்பது ஆண்டுகளாக இதன் வளர்ச்சி யின் வேகம் அதிகம். ஒவ்வொரு பத்தாண்டிலும் அதன் வளர்ச்சி 22 சதவிகிதமாக உயருகிறது. அதாவது கிட்டத்தட்ட ஆண்டு தோறும் 2·2 சதவிகிதம் வளர்ந்து வந்துள்ளது. உலகில் இந்தி யாவைவிட இன்னும் சில நாடுகள் மக்கள்தொகையை விரை வாகப் பெருக்கி வருகின்றன. நமக்கு முக்கியமாக ஆண்டு தோறும் 2·2 சதவிகித வளர்ச்சி பெரியதாகத் தெரியாவிட்டாலும், அது எந்த அளவுக்கு எண்ணிக்கையை அதிகரிக்கின்றது என் பதை நோக்கும்போது நமக்கு மிகவும் பயங்கரமாகத் தோன்று கிறது. பின்வரும் அட்டவணை எவ்வாறு இந்திய மக்கள்

தொகை வளர்ந்து வந்துள்ளது என்பதையும் அதன் வளர்ச்சியின் வேகத்தையும் எடுத்துக் காட்டுகிறது.

## அட்டவணை 1

**மக்கள்தொகை வளர்ச்சி (மில்லியன்கள்)**

| ஆண்டு | மக்கள்தொகை | பத்தாண்டுகளில் உயர்வு சதவிகிதம் |
|---|---|---|
| 1901 | 238 | — |
| 1911 | 252 | + 5·75 |
| 1921 | 251 | − 0·31 |
| 1931 | 278 | + 11·00 |
| 1941 | 318 | + 14·22 |
| 1951 | 361 | + 13·31 |
| 1961 | 439 | + 21·51 |
| 1971 | 547 | + 24·57 |

**(Year Book—1970)**

கீழே உள்ள அட்டவணையில் உலகில் உள்ள முக்கியக் கண்டங்களின் நிலப்பரப்பளவு சதுர கிலோமீட்டர்களிலும், ஜனத்தொகை மில்லியன்களிலும் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் மூலமாக உலக மக்கள்தொகை எவ்வாறு பங்கிடப்பட்டுள்ளது என்பதை நாம் அறியலாம்.

## அட்டவணை 2

| கண்டத்தின் பெயர்கள் | பரப்பளவு (ச.கி. மீட்டர்கள்) | ஜனத்தொகை (மில்லியன்கள்) |
|---|---|---|
| ஆசியா | 2,69,40,000 | 1,867 |
| ஐரோப்பா | 49,55,000 | 449 |
| ஆஃப்ரிக்கா | 3,03,66,000 | 318 |
| வட அமெரிக்கா | 2,42,48,000 | 217 |
| தென் அமெரிக்கா | 1,77,93,000 | 251 |

1961ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கின்படி பல்வேறு மாநிலங்களின் பரப்பளவு, மக்கள்தொகை, ஜன நெருக்கம், நகரங்களின் வளர்ச்சி முதலியவற்றைப் பின்வரும் அட்டவணையிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

# அட்டவணை 3

## மக்கள்தொகைக் கணக்கு 1961

## இந்திய மாநிலங்கள், பிராந்தியங்கள்

| | பரப்பு (ச.மைல்) | மக்கள் தொகை | ச.மைலுக்கு ஜனத் தொகை | நகரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| இந்தியா | 11,78,997 | 439,234,771 | 370 | 2,690 |
| **மாநிலங்கள்** | | | | |
| ஆந்திரப் பிரதேசம் | 1,06,286 | 35,983,447 | 339 | 223 |
| அஸ்ஸாம் | 47,091 | 11,872,772 | 252 | 60 |
| பீகார் | 67,196 | 46,455,610 | 691 | 153 |
| குஜராத் | 72,245 | 20,633,350 | 286 | 118 |
| ஜம்மு—காஷ்மீர் | — | 3,560,976 | — | 43 |
| கேரளா | 15,002 | 16,903,715 | 1,127 | 92 |
| மத்தியப்பிரதேசம் | 1,71,217 | 32,372,408 | 189 | 219 |
| தமிழ்நாடு | 50,331 | 33,686,953 | 669 | 338 |
| மகாராஷ்டிரம் | 1,18,717 | 39,553,718 | 333 | 265 |
| மைசூர் | 74,210 | 23,586,772 | 318 | 230 |
| நாகாலாந்து | 6,366 | 369,200 | 58 | 3 |
| ஒரிஸ்ஸா | 60,164 | 17,548,846 | 292 | 62 |
| பஞ்சாப் | 47,205 | 20,306,812 | 430 | 187 |
| ராஜஸ்தான் | 1,32,152 | 20,155,602 | 153 | 145 |
| உத்தரப்பிரதேசம் | 1,13,654 | 73,746,401 | 649 | 275 |
| மேற்குவங்காளம் | 33,829 | 34,926,279 | 1,032 | 184 |
| **பிராந்தியங்கள்** | | | | |
| அந்தமான் நிக்கோபார் தீவுகள் | 3,215 | 63,548 | 20 | 1 |
| தத்ரா, நாகர் ஆவேலி | 189 | 57,963 | 307 | — |
| டெல்லி | 553 | 2,658,612 | 4,640 | 3 |
| கோவா, டையூ, டாமன் | 1,426 | 626,667 | 440 | — |
| இமாசலப்பிரதேசம் | 10,885 | 1,151,144 | 124 | 13 |
| லாக்கடைவ்,மினிகாய் | — | 24,108 | 2,192 | — |
| அமிந்திவி தீவுகள் | 11 | 780,037 | 90 | 1 |
| மணிப்பூர் | 8,628 | 336,558 | 11 | — |

| | | | | |
|---|---|---|---|---|
| வ. மே. எ. பி. (நேஃபா) | 31,438 | 369,075 | 1,995 | 5 |
| பாண்டிச்சேரி | 185 | 162,189 | 59 | 1 |
| சிக்கிம் | 2,744 | 1,142,005 | 283 | 6 |
| திரிபுரா | 4,036 | 1,142,005 | 283 | 6 |

1971ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கின்படி சில முக்கிய மாநிலங்களில் மக்கள்தொகையின் அளவை எடுத்துக் காட்டும் அட்டவணை கீழே உள்ளது.

## அட்டவணை 4

| | மாநிலங்களின் பெயர்கள் | மக்கள் தொகை |
|---|---|---|
| 1. | உத்தரப்பிரதேசம் | 88,299,453 |
| 2. | பீகார் | 56,387,296 |
| 3. | மகாராஷ்டிரம் | 50,295,081 |
| 4. | மேற்கு வங்காளம் | 44,440,095 |
| 5. | ஆந்திரப்பிரதேசம் | 43,394,951 |
| 6. | மத்தியப்பிரதேசம் | 41,449,729 |

மேலேயுள்ள அட்டவணையில் முதல் மூன்று மாநிலங்களும் (உத்தரப்பிரதேசம், பீகார், மகாராஷ்டிரம்) மக்கள்தொகையில் அதே வரிசையைப் பாதுகாத்துவருகின்றன. மேற்கு வங்காளம் 1961ஆம் ஆண்டில் ஐந்தாவது இடத்தில் இருந்தது. ஆனால் 1971ஆம் ஆண்டில் அது நான்காவது இடத்தை அடைந்து உள்ளது. 1961ஆம் ஆண்டில் தமிழ்நாடு ஆறுவது இடத்தில் இருந்தது. 1971ஆம் ஆண்டில் மத்தியப்பிரதேசம் ஆறுவது இடத்தைப் பிடித்துக் கொண்டது. மேலும் 1961 முதல் 1971 வரை, 10 ஆண்டுகளில் கீழேயுள்ள மாகாணங்கள் அதிகப்படியான மக்கள்தொகை வளர்ச்சியை எடுத்துக் காட்டுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | நாகாலாந்து | — | 39·64 % |
| 2. | அஸ்ஸாம் | — | 33·51 % |
| 3. | அரியாறு | — | 31·36 % |
| 4. | ஜம்மு–காஷ்மீர் | — | 29·60 % |
| 5. | மத்தியப்பிரதேசம் | — | 28·04 % |
| 6. | ராஜஸ்தான் | — | 27·63 % |

மத்திய அரசின் பிராந்தியப் பகுதிகளில் முதல் மூன்று இடங்களில் உள்ளவை முறையே:

1. சண்டிகட் — 114·36%
2. அந்தமான் நிக்கோபார் — 81·11%
3. டெல்லி — 52·12%

10 ஆண்டுகளில் அதிகப்படியான மக்கள் வளர்ச்சியை எடுத்துக் காட்டும் முதல் மூன்று பகுதிகள் மேலே குறிப்பிடப்பட்டுள்ளன.

எடுத்துக்காட்டாக, 1951ஆம் ஆண்டு முதல் 1961ஆம் ஆண்டுவரை, அதிகப்படியான மக்கள்தொகை 78 மில்லியன்கள் உயர்ந்துள்ளது என்பதுதான் இதன் பொருளாகும். அடுத்த பத்தாண்டுகளில் அதாவது 1961 முதல் 1971 வரையிலும் அதிகப்படியான மக்கள்தொகை 150 மில்லியன்களாக உயரலாம். அதற்கும் அடுத்த 10 ஆண்டுகளில் (1971–81) மேலும் மக்கள்தொகை 200 மில்லியன்களாக உயரலாம். ஆகவே இங்கு நாம் நினைவில் கொள்ள வேண்டுவன: (1) உலக நாடுகளுள் இந்தியாவின் மக்கள்தொகை அதிகமானது; அதிலும் குறிப்பாக இரண்டாவது இடத்தில் உள்ளது என்பது. (2) மக்கள்தொகை வளர்ச்சி விகிதமும் மற்ற நாடுகளைவிட அதிகமாக இருக்கிறது. அதாவது ஆண்டு ஒன்றுக்கு 2 சதவிகிதத்திற்கு மேல் வளர்ந்து வருகிறது என்பது.

# 2. மக்கள்தொகை அதிகரிப்புக்கான காரணங்கள்

இந்தியாவில் ஏன் மக்கள்தொகை இவ்வளவு விரைவாக வளர்கிறது? ஏன் நம் நாட்டில்மட்டும் இவ்வளவு துரிதமாகவும் ஏனைய நாடுகளில், அதிலும் மேற்கத்திய நாடுகளான சுவீடன், பிரான்ஸ் இவற்றில் மக்கள்தொகை வளர்ச்சி மெதுவாகவும், நிதானமாகவும் நடைபெறுகிறது? மக்கள்தொகை அதிகரிப்பின் விகிதம் இந்தியாவில் அதிகம் இருப்பதற்கு அடிப்படையான காரணம் பிறப்பு விகிதம் நிரந்தரமாக இருப்பதும், இறப்பு விகிதம் அதிகமாகக் குறைந்து செல்வதும்தான். ஆகவே இந்தியாவில் அதிகப்படியான பிறப்பு விகிதம் இருக்கக் காரணங்கள் யாவை என்பதை ஆராய வேண்டும். பொதுவாக, பிறப்பு விகிதம் என்றால் 1000 பேருக்கு எத்தனை குழந்தைகள் பிறக்கின்றன என்பதைக் காட்டுவதாகும். 1961ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கின்படி பிறப்பு விகிதம் 1000 பேர்களுக்கு 40 குழந்தைகள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற நாடுகளில் பிறப்பு விகிதம் 1000 பேர்களுக்கு 18 குழந்தைகள் எனவும், கனடாவில் 25 குழந்தைகள் எனவும் கணிக்கப்பட்டுள்ளது. ஆனால் கடந்த அறுபது ஆண்டுகளில் நம் நாட்டின் பிறப்பு விகிதத்தில் ஒரு சிறிய அளவுதான் குறைந்துள்ளது. கீழேயுள்ள அட்டவணை இதனைத் தெளிவுபடுத்தும்.

**அட்டவணை 5**

இந்தியாவின் பிறப்பு இறப்பு விகிதம் (1000 பேர்களுக்கு)

| ஆண்டுகள் | பிறப்பு விகிதம் | இறப்பு விகிதம் |
|---|---|---|
| 1901—1911 | 51·3 | 43·1 |
| 1911—1921 | 49·2 | 48·6 |
| 1921—1931 | 46·4 | 36·3 |
| 1931—1941 | 45·2 | 31·2 |
| 1941—1951 | 39·9 | 27·4 |
| 1951—1961 | 40·0 | 18·0 |

பல்வேறு நாடுகளின் பிறப்பு விகிதங்களேயும் சற்று ஆராய் வோம். உதாரணமாக பர்மாவில் 1000 பேர்களுக்கு 44 பிறப்பு விகிதம், இலங்கையில் 42, சீனுவில் 37, ஜப்பானில் 19·2, பாகிஸ்தானில் 50 என முறையே கணிக்கப்பட்டுள்ளது. அதைப் போல் உலக மக்கள்தொகையைச் சற்று ஆராய்ந்தால் அது எவ்வாறு வளர்ந்து வருகிறது என்பதும் புலனுகும்.

## அட்டவணை 6

**உலக மக்கள்தொகை 1900—2000**

| ஆண்டு | மக்கள்தொகை மில்லியன்கள் | உயர்வு சதவிகிதம் |
|---|---|---|
| 1900 | 1,550 | — |
| 1925 | 1,907 | 23 |
| 1950 | 2,497 | 31 |
| 1975 | 3,828 | 53 |
| 2000 | 6,267 | 64 |

உலக மக்கள்தொகை ஒரு நூற்றுண்டில் நான்கு மடங்காகப் பெருகுகிறது. அதாவது ஆண்டு ஒன்றுக்கு $1\frac{1}{2}$ சதவிகிதம் உயரு கிறது. குறிப்பாக, பின்தங்கிய நாடுகளில் அல்லது குறைவான வருமானத்தைக் கொண்ட நாடுகளில் பிறப்பு விகிதமானது, முன் னேற்ற நாடுகளைவிட அதிகமாக உயர்ந்து வருகிறது. அதைப் போல் பின்தங்கிய நாடுகளில் இறப்பு விகிதமும் அதிகம் என்ப தில் ஐயமில்லை. இந்த நூற்றுண்டின் ஆரம்பத்தில் பிறப்பு விகிதம் 1000 பேர்களுக்குக் கிட்டத்தட்ட 50ஆக இருந்தது. ஆனுல் சென்ற 10 ஆண்டுகளில் இந்த விகிதம் மாறி வந்திருப்பதைக் காண்கிறேம், அதாவது 1000 பேர்களுக்கு 40ஆகத் தற்சமயம் வந்துள்ளது. இருந்தபோதிலும் இந்த விகிதம் அதிகப் பிறப்பை எடுத்துக் காட்டுகிறது. இவ்வாறு இந்தியாவில் அதிகமாகப் பிறப்பு வளர்வதற்குக் காரணங்களைக் காண்போம்.

1. திருமணம் முடித்துக் கொள்ளுதல் பரந்த உண்மையா கும்: இந்தியாவில் திருமணம் செய்து கொள்ளுதல் எல்லோரும் ஒப்புக் கொண்ட உண்மையாகும். மேலும் யாவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய தத்துவமாகும். ஒவ்வொருவரும் தம் வாழ் நாளில் திருமணத்தைச் செய்து கொள்ள வேண்டும். இது கடமையாகும். திருமணம் ஆகாமலும் செய்து கொள்ளாமலும் இருக்க முடியாது. சமுதாயம் சும்மாவும் இருக்காது; இருக்கவும் விடமாட்டார்கள். திருமணம் ஆகாமல் இருப்பவர்கள் இந்தியா

வில் குறைவு என்ருல் மிகையாகாது. இதன் காரணமாக மக்கள் பெருக்கம் ஏற்படுகிறது.

2. விரைவில், அதிலும் இளம் பருவத்தில் திருமணம் : பெண்களுக்கு விரைவில் பொதுவாக 14 வயது அல்லது 15 வயதில் திருமணத்தை முடிக்கிருர்கள். 45 வயது வரையில் பெண்களுக்குக் குழந்தைகள் பிறக்கின்றன. குழந்தைகள் பெறும் பருவம் இந்தியாவில் குறிப்பாக முப்பது ஆண்டுகளாகும். ஆனல் மேல் நாடுகளில் பெண்கள் மெதுவாக அதிலும் 25 வயதுக்கு மேல் தான் திருமணம் முடித்துக் கொள்கிருர்கள். அதன் காரணமாகக் குழந்தைகள் பெறும் பருவக்காலம் குறைவாக இருக்கிறது. அதாவது (25–45) இருபது ஆண்டுகள்தான் குழந்தை பெறும் காலமாக உள்ளது. ஆகவே பிறப்பு விகிதம் அங்குக் குறைவாக உள்ளது. சாரதா சட்டப்படி பெண்கள் 14 வயதுக்குள் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. ஆனல் 1951ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கின்படி 92 லட்சத்திற்குப் பெண்கள் சட்டத்தை மீறி 14 வயதுக்குள் திருமணம் செய்து கொண்டுள்ளதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. ஆகவே பெண்கள் 14 வயதுக்குள் திருமணம் முடித்துக் கொள்கிருர்கள். இளமையில், சீக்கிரத்தில் திருமணத்தை முடிப்பதில் தனிப் பெருமையும், சிறப்பும் அடைகிருர்கள். நாட்பட்டு, காலம் கடந்து கல்யாணம் செய்து கொண்டால் கேலி செய்வதையும் காண்கிருேம். படிக்கும் போதும், வேலைக்குப் போகாமல் இருக்கும்போதும் திருமணங்கள் நடைபெறுகின்றன. இந்தியாவில் விதவைகள் மறுமணம் செய்து கொள்ளக் கூடாது. இந்த விதி ஆண்களுக்குப் பொருந்துவதில்லை. ஆண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதியும், பூரண ஒப்புதலும் இங்கு உண்டு. ஆனல் விதவைகள் மீண்டும் திருமணம் செய்து கொள்ளத் தடையும் காண்கிருேம். டாக்டர் கியான் சந்த் (Dr. Gyan Chand) அவர்கள் குறிப்பிடுவது யாதெனில், இந்தியாவில் ஏராளமான விதவைகள் உள்ளனர் ; அவர்களுக்கு மறுபடியும் இனவிருத்திச் செய்ய வாய்ப்புகள் இல்லை ; மொத்தப் பெண்களில் இன்று 12 சதவிகிதம் விதவைகள் உள்ளனர்; மறு ஆக்கத்திற்கு இவர்களைப் பயன்படுத்துவதில்லை; ஆண்களில் வயதானவர்கள் இளம் பெண்களைத் திருமணம் செய்துகொள்வதால் மீண்டும் விதவைகள் அதிகரிக்க வாய்ப்புகள் உண்டு எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

3. இந்தியாவில் சராசரியாகக் குடும்பம் ஒன்றுக்கு 4 அல்லது 5 குழந்தைகள் உள்ளன. இந்தியாவில் குடும்பத்தின்

அளவு பெரியதாகும்; ஆனால் மேல் நாடுகளில் குடும்பம் ஒன்றுக்கு பொதுவாக இரண்டே குழந்தைகள் உள்ளன. ஆசைக்கு ஒரு பெண், ஆஸ்திக்கு ஓர் ஆண் என இரு குழந்தைகளை வைத்துக் கொண்டு இன்பமாக, அமைதியாக, ஆரோக்கியமாக, தரமான வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். ஆகவே மேல் நாடுகளில் குடும்பங்கள் சிறிய அளவில் உள்ளன. நம் நாட்டில் கல்யாணம் செய்துகொண்ட தம்பதிகளைப் பார்த்து 'குழந்தை வேண்டுமா, கார் வேண்டுமா?' என்றால் குழந்தையைத்தான் வேண்டுவார்கள்; இதிலிருந்து நம் நாட்டின் மக்கள் மனத்தை நன்கு புரிந்து கொள்ள முடியும். மேல்நாடுகளில் முதல் மூன்று ஆண்டுகளுக்கு தம்பதிகளுக்கு குழந்தைகள் பிறக்காது; மேலும் அவர்கள் விரும்பவும் மாட்டார்கள். முதல் மூன்று ஆண்டுகளுக்கு சந்தோஷமாக எல்லா இடங்களையும் சுற்றிப்பார்ப்பதிலும், இன்பமாகப் பொழுது போக்குவதிலும் காலத்தைக் கழிப்பார்கள். பின்னர்தான் குழந்தைகளை விரும்புவார்கள். ஆனால் நம் நாட்டில் இந்த ஆண்டு திருமணம் என்றால் அடுத்த ஆண்டு அதே நாளில் கையில் குழந்தையைக் காணலாம். அப்படிக் குழந்தையை அடுத்த ஆண்டில் அவர்கள் பெற்று எடுக்காவிட்டால், எத்தனை விதமான பேச்சுகள் இங்கு நடக்கின்றன! இன்னும் சமுதாயம் திருந்தவில்லை என்பதை இது புலப்படுத்துகிறது.

4. இந்தியாவில் அதிக அளவில் மக்கள் அறியாமை இருளில் இருக்கிறார்கள். ஆகவே எவ்வாறு மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவது என்பது ஒன்றும் இவர்களுக்குத் தெரியவில்லை. மேல் நாடுகளில் பின்பற்றப்படும் குடும்பக்கட்டுப்பாடு முறைகளைப் பற்றி ஒரு சிறிதேனும் நம் மக்களுக்குத் தெரிவதில்லை. அப்படி ஒரு சிலருக்குத் தெரிந்தாலும் அவர்கள் அம்முறைகளைப் பின்பற்றப் பயப்படுகிறார்கள். ஆகவேதான் ஏழை மக்கள், படிக்காத மக்கள் பெரிய அளவில் குடும்பங்களை வைத்திருப்பதையும், படித்தவர்கள் சிறிய அளவுக்குக் குடும்பம் வைத்திருப்பதையும் நாம் காண்கிறோம்.

5. அதிகமான மக்கள் ஏழ்மையில் இருக்கிறார்கள். பொதுவாக இந்தியக் குடும்பம் ஏழ்மையானது. அதிகப்படியான குழந்தைகள் பிறப்பதால் ஏற்படும் பண நெருக்கடியைப்பற்றி ஒரு சிறிதும் கவலைப் படமாட்டார்கள். ஏழைக் குடும்பங்கள் அதிக பிள்ளைகளை வரவேற்கிறார்கள். ஏனெனில் எதிர்காலத்தில் இந்தக் குழந்தைகள் வேலை செய்து குடும்பத்திற்குப் பெரிதும் உதவுவார்கள் என நம்புகிறார்கள். மேலும் கூட்டுக் குடும்பங்கள்

இந்தியாவில் நிலவி வருவதால், ஒருவருடைய சம்பளத்தைப் பலரும் சேர்ந்து, பகிர்ந்து கொள்ளும் பழக்கமும் இங்கு உண்டு. அதன் காரணமாக எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் அதைப் பற்றிக் கவலை கொள்ளும் பழக்கமும் கிடையாது.

6. இந்தியாவில் மக்கள் அதிக மதப்பற்று கொண்டவர்கள். ஆகவே குழந்தைகளைக் கடவுள் கொடுத்த வெகுமதியாக நினைக்கிறார்கள். குழந்தைகள் இல்லாத குடும்பத்தை இழித்தும், பழித்தும் கூறும் பழக்கத்தை இன்று கண்கூடாகக் காண்கிறோம். குழந்தையில்லாதவர்களை பாவத்தைச் செய்தவர்கள் எனத் தூற்றுவதைக் காண்கிறோம். குழந்தை வேண்டுமென்று எத்தனையோ மக்கள் பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் கோயில்களுக்கும் செல்கிறார்கள். மரத்தொட்டில் வாங்கிக் கோயில்களில் கட்டித் தொங்க விடுகிறார்கள். ஆகவே மக்கள் குழந்தைகளைப் பெரிதும் விரும்புகிறார்கள். மேலும் ஒரு குழந்தை பெற்றால் அதை மிகவும் அவசியமாகவும், அன்பாகவும் போற்றுவார்கள். முதல் குழந்தைக்குத் துணையாக மற்றொரு குழந்தையும் வேண்டுவார்கள். இரண்டு இருந்தால் போதாது, அவசரத்திற்கு மூன்றுவதாக ஒரு குழந்தை வேண்டும் என்றும் கூறுவார்கள். (First child is a necessity; Second child is for company; Third child is for emergency.) இந்தியாவில் தற்போது 1000 பேர்களுக்கு 40 குழந்தைகள் பிறக்கின்றன. இவற்றுள் முதல் 8 குழந்தைகள் முதல் பிறப்பாகும்; அடுத்த 16 குழந்தைகள் இரண்டாவது பிறப்பாகும்; மீதமுள்ள குழந்தைகள் மூன்றாவது பிறப்பாகும். அதிகமான குழந்தைகள் குறிப்பாக மூன்றாவது அல்லது நான்காவது பிறப்பாகும். மூன்றுக்கு மேல் பிறக்கும் குழந்தைகளின் சதவிகிதம் இந்தியாவில்தான் அதிகம். மூன்றுக்கு மேல் போனால் அதனால் உண்டாகும் விளைவுகள் பல உண்டு. பெற்றோர்களின் அஜாக்கிரதையாலும், வருங்காலத்தைப்பற்றி அக்கறை கொள்ளாத காரணத்தாலும் இதைப் போன்று மூன்றுக்கு மேலான குழந்தைகள் இந்தியாவில் அதிகம் பிறக்கின்றன. மற்ற நாடுகளுடன் இந்தியாவை இந்த விஷயத்தில் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியாவில்தான் மூன்றுக்கு மேலாகப் பிறக்கும் குழந்தைகளின் சதவிகிதம் அதிகம்.

| | |
|---|---|
| ஜெர்மனி | 12% |
| இங்கிலாந்து | 14% |
| அமெரிக்கா | 19% |
| பிரான்ஸ் | 20% |
| ஜப்பான் | 34% |
| **இந்தியா** | **43%** |

ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் மக்கள்தொகை மெதுவாகவும், நிரந்தரமாகவும் சென்று குறையவும் ஆரம்பித்து விட்டது. பிரான்ஸ் தேசத்தில் 1939-ல் பிறப்பு இறப்பு விகிதங்கள் கள் முறையே, 14·6 : 15·5. அதேபோல் 1943-ல் பிறப்பு, இறப்பு விகிதங்கள் முறையே 15·9 : 16·4 ஆக இருந்தன. பிரான்ஸில் பிறப்பு விகிதத்தைவிட இறப்பு விகிதம் அதிகம். அதன் காரண மாகத்தான் மக்கள்தொகை குறைய ஆரம்பித்துவிட்டது. பிரான்சில் மக்கள்தொகையை அதிகரிக்கப் பல சமூக நலத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. அடுத்து அமெரிக்காவிலும் மக்கள்தொகை குறைய ஆரம்பித்துவிட்டது. குறைவான பிறப்பு விகிதத்தைப்பற்றிக் கவலை கொள்ள வேண்டியதில்லை. ஆனல் இந்தியாவை நோக்கும்போது இது கவலைக்கிடமாக உள்ளது. பிறப்பு விகிதம்தான் அதிக ஜன நெருக்கத்திற்கும், துரித மக்கள் பெருக்கத்திற்கும் காரணம் என எண்ணிவிடவேண்டாம்.

இந்தியாவில் மக்கள் நெருக்கம் பிராந்தியங்களுக்கு ஏற்ற வாறு மாறுபடுகின்றது. உதாரணமாக மேற்கு வங்காளத்தில் சில பகுதியில் ஜன நெருக்கம் ஒரு சதுரமைலுக்கு 800 பேர்கள் உள்ளனர். ஆனல் இந்தியாவின் சராசரி ஜனநெருக்கம் ஒரு சதுரமைலுக்கு 261 பேர்கள். இந்த ஜனநெருக்கம் அமெரிக்காவின் ஜன நெருக்கத்தைப்போல் 5½ மடங்கு அதிகம். அதே நேரத்தில் ஜெர்மனி, ஜப்பான், இங்கிலாந்து நாடுகளில் உள்ள மக்கள் நெருக்கத்தைவிட இது குறைவானது. இந்தியாவில் மக்கள் தொகை அதிகரிப்பின் விகிதம் 1921 முதல் 1931 வரை 10 ஆண்டுகளில் அதிகரிப்பு 10·6 சதவிகிதம், 1931 முதல் 1941 வரை 10 ஆண்டுகளில் அதிகரிப்பு 15 சதவிகிதம். ஆனல் அதே 10 ஆண்டில் (1931–41) அமெரிக்காவின் மக்கள்தொகை அதிகரிப்பு 16 சதவிகிதமாகும். அமெரிக்காவில் இந்த அதிகரிப்பு ஏற்கெனவே குறைவாக உள்ள மக்கள்தொகையினுல் பெரிய தாகத் தெரியவில்லை. ஆனல் இந்தியாவில் ஏற்கெனவே அதிகம் உள்ள மக்கள்தொகையுடன், இந்த அதிகரிப்பினுல் மேலும் 50 மில்லியன்கள் சேர்க்கப்படுகின்றன. ஆகவேதான் இந்தியாவின் வளர்ச்சி மற்ற நாடுகளைவிட மாறுபட்டதாகும்.

இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிவதற்கு முன் 1872 முதல் 1941 வரை மக்கள்தொகை 54 சதவிகிதம் அதிகரித்தது. அதே காலத்தில் இங்கிலாந்தின் ஜனப்பெருக்கம் 56 சதவிகித மாக உயர்ந்தது. குறிப்பாக 1821 முதல் 1891 வரை 70 ஆண்டு களில் இங்கிலாந்து தேசத்தின் ஜனப்பெருக்கம் 81 சதவிகிதம் உயர்ந்தது. ஜப்பானில் அதே 70 ஆண்டுகளில் 136 சதவிகித

மாக உயர்ந்தது. மேலே கூறப்பட்டுள்ள மக்கள்பெருக்கத்தை வைத்துக்கொண்டு இந்தியாவுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் 19ஆம் நூற்றுண்டில் இந்தியாவின் மக்கள்தொகைப் பெருக்கம் அவ்வளவு அதிகம் இல்லையெனலாம். பேராசிரியர் கார் சாண்டர்ஸ் (Prof. Carr Saunders) அவர்கள் 1872 முதல் 1931 வரை உள்ள இடைக்காலத்தில் மக்கள்தொகை அதிகரிப்பின் விகிதம் குறைவு எனவும் இது ஜப்பானின் ஜனப்பெருக்க விகிதத்தின் பாதி அளவு எனவும் குறிப்பிட்டுள்ளார். இதற்குப் பல காரணங்களைச் சுட்டிக்காட்டியுள்ளார். சமூக, பொருளாதார, அரசியல், மதக் கொள்கைகள், நாட்டின் அமைதி இவைதாம் காரணங்களாக அமைந்திருக்கின்றன. 1941ஆம் ஆண்டில் மக்கள் கணக் கெடுப்பு முறையில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. கணக் கெடுப்பு அமைதியான முறையில் நடந்தது. மக்களின் ஒத்துழைப்பும், அரசியல் விழிப்பும், ஓட்டுரிமை, வாக்காளர் பட்டியலில் பெயர்களைப் பதிவு செய்தல் போன்றவைகளும் தலைசிறந்த காரணங்களாகும். நல்ல சுகாதார நிலை மக்களின் தரத்தையும் உயர்த்தியது. ஒரு பெண்ணைக் காப்பாற்றினுல் அவளை மட்டும் காப்பதுமல்லாமல், எதிர்காலத்தில் மக்கள்தொகையை அதிகப் படுத்த அவளுடைய தொண்டும் அவசியம் என்பதை அறிந் தார்கள்.

7. வெப்பதட்ப நிலையும் மக்கள்தொகை வளர்ச்சிக்கு ஆதார மாக இருக்கிறது. இந்தியப் பெண்கள் திருமணப் பருவத்தை 12 வயது முதல் 15 வயதுக்குள் அடைகின்றனர். உடல் வளராவிட்டாலும், உணர்ச்சியால் அவர்கள் குழந்தை பெறும் பருவத்தை அடைகின்றனர். அகில இந்திய மாதர்கள் மகா நாட்டின் அறிக்கைப்படி மொத்தப் பெண்களில் 40 சதவிகிதம், 15 வயதுக்குள் திருமணம் செய்து கொள்கிருர்கள். இளம் வயதிலேயே ருது ஆகி, திருமணம் முடித்துக்கொண்டு குழந்தைகளைப் பெற்றுக்கொள்வதாலும், அதிலும் அடுத்து அடுத்து குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதாலும், ஒரு குழந்தைக்கும், மற்ருெரு குழந்தைக்கும் இடையேயுள்ள காலக்குறைவினுலும், பெண்கள் சாவும், குழந்தைகள் சாவும் இந்தியாவில் அதிகரித்து வருகின்றன. குறைவான வாழ்க்கைத்தரத்தாலும், நீண்டகாலக் கல்வி அல்லது பயிற்சி இல்லாமையால் பெரிய குடும்பங்கள் தோன்றுவதாலும், கூட்டுக் குடும்பங்களாலும் மக்கள்தொகை பெருகி வருகின் றது. கருத்தடைக்குரிய மருத்துவ நிலையங்கள் இல்லாத காரணத்தாலும் மக்கள் பெருக்கம் அதிகமாயுள்ளது. எல்லா வற்றையும்விட உளவியல் காரணத்தின்படி ஒவ்வொரு மனித

னும் தன் மனைவியை விளையாட்டுப் பொருளாகவும், பொழுது போக்குக்குரிய கருவியாகவும் கருதுவதாலும், மனைவியுடன் மிக்க நெருக்கமாகப் பழகுவதாலும் மக்கள்தொகை பெருகி வருகின்றது என டாக்டர் சந்திரசேகரன் குறிப்பிட்டுள்ளார். அப்படி இல்லை யெனில் உற்சாகம் இழந்த வாழ்வு, பயனற்ற வாழ்க்கை என நினைக்கிறார்கள். அமெரிக்காவில் ஒரு சமயம் மின்சாரம் இயங்காத காரணத்தால் எங்கும் இருள் சூழ்ந்தது. ஆனால் 10 மாதங்கள் கடந்த பின் பார்த்தால் மக்கள் பிறப்பு அதிகரிப்புக்குக் காரணம் மின்சார விளக்குகள் அணைந்ததுதான் என்பது புலனாயிற்று. ஆகவே வெப்ப தட்ப நிலைகள், சூழ்நிலைகள், அமைதி, மக்கள் கணக்கெடுப்பில் முன்னேற்றம், சுகாதாரம், ஆரோக்கிய முன்னேற் றங்கள், நீர்ப்பாசன நிலங்களின் பரப்பு அதிகரிப்பு, பரந்தத் திரு மணம், அதிலும் இளம் வயதில் திருமணம், இளம் வயதில் அதிக குழந்தைகளைப் பெற்று எடுத்தல், கூட்டுக் குடும்பங்கள் முன் னேற்றம், நவீன குடும்பக் கட்டுப்பாடு முறைகள் இல்லாமை ஆகிய காரணங்களால் மக்கள்தொகை பெருகியது என்பதில் சந்தேகமில்லை.

## இறப்பு விகிதம்

பிறப்பு விகிதத்தைப் போல் இறப்பு விகிதமும் இந்தியாவில் உச்ச கட்டத்தில் உள்ளது. 1961ஆம் ஆண்டின் கணக்கின் படி இறப்பு விகிதம் 1000 பேர்களுக்கு 18 ஆகக் குறிப்பிடப்பட் டுள்ளது. ஆனால் இறப்பு விகிதம் சென்ற 10 ஆண்டுகளாகத் தொடர்ந்து குறைந்து வருகிறது.

| ஆண்டுகள் | இறப்பு விகிதம் (1000 பேர்களுக்கு) |
|---|---|
| 1891–1900 | 44 |
| 1921–1930 | 36 |
| 1951–1960 | 18 |

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இறப்பு விகிதம் குறைந்து வருகிறது. இறப்பு விகிதத்தை கீழேயுள்ளவாறு சத விகிதத்திலும் காட்டலாம்:

| | | |
|---|---|---|
| 1881–1891 | — | 27·4 % |
| 1921–1925 | — | 26·0 % |
| 1931–1935 | — | 23·8 % |
| 1945–1950 | — | 22·5 % |
| 1956–1961 | — | 21·6 % |

இவ்வாறு இறப்பு விகிதம் குறைவதற்குச் சிறப்பான காரணம் மேற்கத்திய நாடுகளின் மருந்து வகைகளை அதிகப்படியாக உபயோகிப்பதேயாகும். கொள்ளை நோய்கள், கொடிய தொத்து நோய்கள் போன்றவற்றை அடியோடு நீக்கவும், அவற்றை நல்ல முறையில் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வரவும் இந்தமேலை நாட்டு மருந்து முறைகள் பெரிதும் உதவி வந்திருக்கின்றன. பொதுவாக குழந்தைகள் இறப்பும் அதிகமாக இருந்தது. இப்போது மேல் நாட்டு மருந்து முறைகளை உபயோகித்து வந்தமையால் அது குறைந்து வருகின்றது. மருத்துவ நிலையங்கள் பன்மடங்கு அதிகரித்துள்ளன. பொதுச் சுகாதாரம், ஆரோக்கியம் இவற்றில் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. ஆகவே இந்தியாவில் இறப்பு விகிதம் குறைந்துவந்துள்ளது.

மற்ற நாடுகளின் இறப்பு விகிதத்தையும் சற்று ஆராய்வோம்.

## அட்டவணை 7

### இறப்பு விகிதம் (1954-56)—1000 பேர்களுக்கு

| | | |
|---|---|---|
| பர்மா | 26 | பின்தங்கிய நாடுகளில் இறப்பு விகிதம் |
| பாகிஸ்தான் | 30 | |
| இந்தியா | 27–31 | |
| இந்தோனேஷியா | 24 | |
| பிலிப்பைன்ஸ் | 21 | |
| மெக்ஸிகோ | 13 | |
| பிரேஸில் | 20 | |
| ஆஸ்திரேலியா | 9 | |
| சீனு | 8 | |
| பிரான்ஸ் | 12·2 | அதிக வருமானம் உள்ள நாடுகளில் இறப்பு விகிதம் |
| இங்கிலாந்து | 11·6 | |
| அமெரிக்கா | 9·3 | |
| இலங்கை | 10·0 | |
| கனடா | 7·8 | |

இறப்பு விகிதம் பின்தங்கிய நாடுகளில் அதிகம். முன்னேற்றம் அடைந்த நாடுகளில், அதிக வருமானத்தைக் கொண்ட நாடுகளில் இறப்பு விகிதம் குறைவு. பின்தங்கிய நாடுகளுள் இந்தியாவில்தான் அதிகமான இறப்பு என்பதை மேலேயுள்ள அட்டவணையிலிருந்து அறியலாம்.

இந்தியாவில் பிறக்கும் குழந்தைகளில் ஐந்தில் ஒரு பங்கு ஒரு வயதை அடையும் முன்னர் இறந்து விடுகின்றனர். 1951 கணக்கின்படி மொத்த இறப்பு விகிதத்தில் 27 இறப்பில் 11 இறப்பு 5 வயதை எட்டிப்பிடிக்காத குழந்தைகளின் இறப்பாகும்.

அதிகமான மரணத்திற்குக் காரணங்கள்: சத்து இல்லாத தாய் மார்கள், ஏழ்மை, போதிய உணவு இன்மை, பட்டணங்களில் ஜனநெருக்கடி, ஊட்ட உணவு இல்லாமை, அறியாமை, குழந்தை களை நல்ல முறையில் பேணி வளர்க்க முடியாத நிலை, ஓய்வுக் குறைவு, அடுத்து அடுத்து குழந்தைகள் பிறத்தல் போன்ற பல வாகும். தாய்மார்கள் குழந்தைகள் பெறும் காலத்தில் ஏராளமாக இறக்கிறார்கள். குழந்தைகள் பிறக்கும்போது இறக்கும் தாய்மார் கள் இந்தியாவில் 1000 பேர்களுக்கு 20 பேர்கள். ஆனால் இங்கி லாந்தில் 1000 பேர்களில் 3 பேர்கள்தான் இறக்கிறார்கள். இதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்தியாவில் தாய்மார்கள் பிரசவக் காலத்தில் பயங்கரமாக இறக்கிறார்கள் என்பது விளங்கும். போதிய மருந்து வசதிகள் இல்லாமை, அடுத்து அடுத்து குழந்தைகளை ஈன்று எடுத்தல், ஏழ்மை, தரக்குறைவான போஷிப்பு, அதிகமான கருப்பம், பெண்களின் வாழ்க்கை எளியதாகக் கருதப்படுதல், மேலும் பெண்கள் தங்கள் வாழ்க்கையைத் துச்சமாக மதித்தல், நல்ல வசதி படைத்த குடும்பங்களில்கூடப் பெண்களுக்கு நல்ல ஆகாரம், மருந்து வசதிகள் அளிப்பதில்லை. ஆனால் கடந்த சில ஆண்டுகளாக இந்தியாவில் இறப்பு விகிதம் கணிசமாகக் குறைந்து வந்துள்ளது. இதற்குச் சுகாதாரம், ஆரோக்கியம் ஆகியவற்றின் முன்னேற்றம், மருந்து, மருத்துவ வசதிகள், சமூக நலத்திட்டங் கள் ஆகியவை தலைசிறந்த காரணங்களாம்.

# 3. ஜனநெருக்கம்
## (Density of Population)

1961ஆம் ஆண்டின் கணிப்புப்படி இந்தியாவின் மக்கட் செறிவு ஒரு சதுர மைலுக்கு 370 பேர்கள் ஆகும். இது சராசரி மக்கள் நெருக்கம் எனப்படும். குறிப்பிட்ட ஆண்டில் மொத்த மக்கள்தொகையை மொத்த நிலப்பரப்பினுல் வகுத்துவரும் ஈவு தான் ஜனநெருக்கம் அல்லது சராசரி மக்கள்நெருக்கம் எனப் படும். 1956ஆம் ஆண்டில் உலக சராசரி ஜனநெருக்கம் சதுர மைலுக்கு 198 பேர்கள் எனக் கணக்கிடப் பட்டது. கீழேயுள்ள அட்டவணையில் பிற நாடுகளில் ஜனநெருக்கம் எவ்வாறு உள்ளது என்பதும் அதற்கு அடுத்த அட்டவணையில் 1961-ன் கணக்குப் படி மாநிலங்களின் ஜனத்தொகையும் ஜனநெருக்கமும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

### அட்டவணை 8

**1960-ல் பல நாடுகளின் ஜனத்தொகை, ஜனநெருக்கம்**

| நாடுகள் | மக்கள்தொகை (மில்லியனில்) | ஜனநெருக்கம் (ச.கி.மீட்டர்) |
|---|---|---|
| ஜப்பான் | 93 | 252 |
| இங்கிலாந்து | 53 | 215 |
| இத்தாலி | 49 | 164 |
| இந்தியா | 436 | 134 |
| பாகிஸ்தான் | 93 | 98 |
| பிரான்ஸ் | 46 | 83 |
| சீனு | 678 | 71 |
| இந்தோனேஷியா | 93 | 62 |
| அமெரிக்கா | 181 | 19 |
| ரஷ்யா | 214 | 10 |

## அட்டவணை 9

**மாநிலங்களில் மக்கள்தொகை, ஜனநெருக்கம் 1961**

| மாநிலங்கள் | மொ. ம. தொகை (மில்லியனில்) | ஜனநெருக்கம் (ச.கி.மீட்டர்) |
|---|---|---|
| டெல்லி | 2·66 | 1,793 |
| கேரளா | 16·90 | 435 |
| மே. வங்காளம் | 34·93 | 399 |
| பீகார் | 46·46 | 267 |
| சென்னை | 33·69 | 259 |
| உத்தரப்பிரதேசம் | 73·75 | 251 |
| பஞ்சாப் | 20·31 | 166 |
| **இந்தியா** | **439·23** | **138** |
| ஆந்திரப்பிரதேசம் | 35·98 | 131 |
| மகாராஷ்டிரம் | 39·55 | 130 |
| மைசூர் | 23·59 | 123 |
| ஒரிஸ்ஸா | 17·55 | 113 |
| குஜராத் | 20·63 | 110 |
| மத்தியப்பிரதேசம் | 32·37 | 73 |
| அஸ்ஸாம் | 12·21 | 60 |
| ராஜஸ்தான் | 20·51 | 59 |
| ஜம்மு-காஷ்மீர் | 3·56 | 26 |

மேலே உள்ள 9ஆவது அட்டவணையில் இந்தியா என்பதற்கு மேலே உள்ள மாநிலங்கள் இந்தியாவின் சராசரி ஜன நெருக்கத்தைவிட அதிகமான நெருக்கத்தைக் கொண்டவை ஆகும். டில்லி, கேரளா, மே. வங்காளம், பீகார், சென்னை, உத்தரப் பிரதேசம், பஞ்சாப் இவற்றில் இந்தியாவின் ஜனநெருக்கம் 138-க்குமேல் உள்ளது. இந்தியா என்பதற்குக் கீழே இருக்கும் மாநிலங்கள் இந்திய சராசரி ஜனநெருக்கத்தைவிடக் குறைவான நெருக்கத்தைக் கொண்ட மாநிலங்களாகும். ஆண்டுதோறும் மக்கள்தொகை சில மாநிலங்களில் அதிகரிப்பதால் அந்தப் பகுதி களில் மக்கள் நெருக்கம் அதிகமாக உள்ளது. ஜனநெருக்கத்தை மாநிலங்களில் 1931, 1941 ஆண்டுகளின் கணக்கின்படி ஒப்பிட்டுப்பார்க்கையில் சில மாநிலங்களில் மக்கள் நெருக்கம் பெருகி வருவதையும் சிலவற்றில்குறைந்து வருவதையும் காணலாம். பின்வரும் அட்டவணையில் இதனைக் காணலாம்.

## அட்டவணை 10

ஜனநெருக்கம் மாகாணங்கள் வாரியாக.

| மாகாணங்களின் பெயர்கள் | பரப்பளவு (ச. மைல்கள்) | மக்கள்தொகை (மில்லியன்) | | ஜனநெருக்கம் (ச. மைலுக்கு) | |
|---|---|---|---|---|---|
| | | 1941 | 1931 | 1941 | 1931 |
| அஸ்ஸாம் | 54,951 | 10·2 | 8·6 | 186 | 157 |
| வங்காளம் | 77,442 | 60·3 | 50·1 | 779 | 627 |
| பீகார் | 69,745 | 36·3 | 32·3 | 521 | 464 |
| பம்பாய் | 76,443 | 20·8 | 1·79 | 272 | 235 |
| மத்திய மாகாணம் | 98,575 | 16·8 | 15·3 | 170 | 156 |
| சென்னை | 1,26,166 | 49·3 | 44·2 | 391 | 350 |
| வ. மே. எ. பி. | 14,263 | 3·0 | 2·4 | 213 | 179 |
| ஒரிஸ்ஸா | 32,198 | 8·7 | 8·0 | 271 | 249 |
| பஞ்சாப் | 99,089 | 28·4 | 23·5 | 287 | 238 |
| ஐக்கிய மாகாணம் | 1,06,247 | 55·0 | 48·4 | 518 | 456 |
| ஐதராபாத் | 82,313 | 16·3 | 14·4 | 198 | 175 |
| சிந்து | 48,136 | 4·5 | 3·8 | 94 | 81 |
| மைசூர் | 29,458 | 7·3 | 6·5 | 249 | 224 |
| காஷ்மீர் | 82,258 | 4·0 | 3·6 | 49 | 44 |
| பரோடா | 8,176 | 2·8 | 2·4 | 345 | 299 |
| குவாலியர் | 26,367 | 4·0 | 3·5 | 154 | 135 |
| திருவிதாங்கூர் | 7,662 | 6·0 | 5·0 | 792 | 665 |
| கொச்சி | 1,493 | 1·4 | 1·2 | 953 | 807 |

டாக்டர் பிரைட்சிங் (Dr. Bright Singh) அவர்கள் மக்கள் நெருக்கத்தையும், பொருளாதார முன்னேற்றத்தையும் அடிப்படையாகக் கொண்டு உலக நாடுகளை நான்கு வகையாகப் பிரித்துள்ளார் :

(1) முன்னேற்றம் அடைந்த, நெருக்கமான மக்கள்தொகையைக் கொண்ட நாடுகள்:

ஜப்பான், இத்தாலி, சுவிட்சர்லாந்து.

(2) முன்னேற்றம் அடைந்த, குறைவான மக்கள் நெருக்கத்தைக் கொண்ட நாடுகள்:

அமெரிக்கா, ரஷ்யா, கனடா.

(3) முன்னேற்றம் அடையாத, அதிகமான ஜனநெருக்கத்தைக் கொண்ட நாடுகள்:

இந்தியா, சீனு, ஜாவா, எகிப்து.

(4) முன்னேற்றம் அடையாத, குறைவான ஜன நெருக்கத்தைக் கொண்ட நாடுகள்:
பிரேசில், பர்மா.

இந்தியாவில் மக்கள் நெருக்கம் ஆண்டுதோறும் அதிகரித்துக்கொண்டே வருகிறது. மக்கள்தொகை துரிதமாக வளர்ந்து வருவதே இதற்குக் காரணமாகும். ஒரு சதுர மைலுக்கு அதிகமான எண்ணிக்கையில், மக்கள் வாழ்ந்தால் அதிகமான ஜனநெருக்கத்தைக் காட்டுகிறது. நகரங்களிலும், பட்டணங்களிலும் சராசரி மக்கட் செறிவு அதிகம். ஏனெனில், குறைவான இடங்களில் அதிகமான மக்கள் வாழ்கின்றனர். அதைப்போல் கிராமப் பகுதியில் ஒரு சதுர மைலுக்கு குறைவான எண்ணிக்கையில் மக்கள் வாழ்கின்றனர். ஆனுல் நாடு முழுவதுமுள்ள சராசரி ஜன நெருக்கத்தைக் கணக்கெடுக்கும்போது அதிக நெருக்கமான பகுதிகள், குறைந்த நெருக்கமான பகுதிகள் இவை இரண்டையுமே சேர்த்துதான் மொத்தமாக எடுத்துக் கொள்கிருேம்.

இந்தியாவில் மக்கள் நெருக்கம் எல்லா மாநிலங்களிலும் ஒரே அளவாக இல்லே. உதாரணமாக கேரளா, மே. வங்காளம், உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்கள் அதிக மக்கள் தொகையையும், மிகுதியான ஜன நெருக்கத்தையும் கொண்டதாக உள்ளன. அதே நேரத்தில் அஸ்ஸாம், ராஜஸ்தான், ஜம்மு-காஷ்மீர் குறைந்த ஜன நெருக்கத்தைக் கொண்டதாகவும் உள்ளன. ஜன நெருக்கத்தை வைத்துக் கொண்டு எந்தப் பிரதேசம் அல்லது எந்தப் பிராந்தியம் அதிகமான மக்கள்தொகையைக் கொண்டது, எந்தப் பிராந்தியம் குறைவான மக்கள்தொகையைக் கொண்டது என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

ஜன நெருக்கத்தை பாதிக்கும் காரணிகள்: ஒரு நாட்டில் அல்லது ஒரு பிராந்தியத்தில் ஜன அடர்த்தி அதிகம் இருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு :

(1) வெப்ப தட்பநிலே : எந்தப் பகுதிகளில் அதிகமான மழையும், நல்ல வெப்பதட்பநிலேயும் இருக்கின்றனவோ, அப்பகுதிகளில் விவசாயம் நன்கு செழிக்கும். அதனுல் பல்வேறு மக்களுக்கு உணவு வசதிகள் செய்து கொடுக்க முடியும். ஆகவேதான் கங்கைநதிச் சமவெளிப் பிரதேசத்தில் உள்ள உத்தரப்பிரதேசம், பீகார், மேற்கு வங்காளம் முதலிய மாநிலங்களில் பொதுவாக ஜன நெருக்கம் அதிகம். அதாவது சதுர மைலுக்கு 500 பேர்களுக்கு மேல் வாழ்கின்றனர். அதே நேரத்தில் நாம் நிஜேவில் கொள்ள

வேண்டியது, மழை மட்டும் ஜன நெருக்கடிக்கு நல்ல காரண மாகாது என்பதே. உதாரணமாக, அஸ்ஸாமில் உலகத்திலேயே அதிக மழை பெய்கிறது. ஆனால் அங்கு ஜன நெருக்கம் இந்திய நாட்டின் சராசரி ஜன நெருக்கடியைவிடக் குறைவாக உள்ளது. அதாவது சதுர மைலுக்கு 252 பேர்கள் வீதம் வாழ்கின்றனர்.

(2) ஜன அடர்த்திக்கு நல்ல நீர்ப்பாசன வசதிகள் ஒரு காரணமாகும். நீர்ப்பாசன வசதியால் தொடர்ந்து விவசாயத்தை ஆண்டு முழுவதும் செய்ய முடியும். அதனால் உணவு தானியங்கள் அதிக அளவில் உற்பத்தி செய்ய முடிகிறது. மக்களுக்கும் போதிய உணவு கிடைப்பதால் அப்பகுதிகளில் மக்கள் நெருக்கம் அதிகமாக உள்ளது.

(3) ஜனநெருக்கடிக்கு ஓரிடத்தின் பொருளாதார முன் னேற்றமும் ஒரு சிறப்பான காரணமாகும். ஓரிடத்தில் தொழில்கள் மேலும் மேலும் தோன்றுவதால் அங்கு உபதொழில்கள் பல தோன்றுகின்றன. இதனால் பாங்குவசதிகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் பல தோன்றுகின்றன. அதன் காரணமாக வியாபாரம், வர்த்தகம் தழைத்து ஓங்குகின்றன. எப்பிராந்தியத்தில் பொருளாதார முன்னேற்றம் அதிகரிக்கின்றதோ அப்பகுதிகளில் ஜன அடர்த்தி அதிகமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. இதற்கு நல்ல உதாரணங்கள் பம்பாய், கல்கத்தா, கோயம்புத்தூர் போன்ற பல உள. சில பிராந்தியங்கள் பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ளன. உதாரணமாக, ராஜஸ்தான் மாநிலம் பின்தங்கிய நிலையில் இருப்பதால் ஜனநெருக்கம் அங்குக் குறைவாக இருக் கிறது. ஆகவே ஜனநெருக்கத்திற்கு ஏதாகிலும் ஒரு காரணத்தைக் கொண்டு முடிவு கூறுவது முற்றிலும் பொருத்தமற்றது. ஓர் இடத்தின் ஜனநெருக்கம் பல காரணங்களைக் கொண்டதாகும். மேல் நாடுகளின் ஜனநெருக்கத்தைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

| நாடுகள் | சதுர மைலுக்கு ஜனஅடர்த்தி |
|---|---|
| பெல்ஜியம் | 654 |
| இங்கிலாந்து | 536 |
| ஜப்பான் | 581 |
| ஜெர்மனி | 443 |

மேலே குறிப்பிடப்பட்டுள்ள நான்கு நாடுகளிலும் சராசரி ஜன அடர்த்தி இந்தியாவினுடைய ஜன அடர்த்தியைவிட அதிக மாக உள்ளது. இந்தியாவின் ஜன அடர்த்தி சதுர மைலுக்கு 370 பேர்கள் ஆகும். இந்த நான்கு நாடுகளும் தொழில் வளர்ச்சியில்

முதன்மையானவை; மக்களின் வாழ்க்கைத் தரமும் உன்னத நிலையில் உள்ளது. ஆகவே சிலரின் கருத்துப்படி அதிக மக்கள் நெருக்கத்தைக் கொண்ட நாடுகள் செழிப்புத் தன்மை வாய்ந்தவை; பொருளாதாரத்தில் முன்னேறியவை என்பது பொருத்தமாகிறது. இதை வைத்துக்கொண்டு இந்தியாவின் ஜனஅடர்த்தி அதிகம் இருப்பதனல் இந்தியாவும் தொழில் முன்னேற்றத்தில் முதன்மை யானது எனக்கூற முடியாது.

சில நாடுகள் குறைவான ஜன அடர்த்தியைக் கொண்டிருந்த போதிலும் பொருளாதாரத்தில் அவை முன்னேறியுள்ளன. இதைக் கீழ்க்கண்ட உதாரணத்தால் விளக்கலாம்.

| நாடுகள் | சதுர மைலுக்கு ஜனஅடர்த்தி |
|---|---|
| அமெரிக்கா | 56 |
| ரஷ்யா | 23 |
| ஆஸ்திரேலியா | 3 |
| கனடா | 3 |

மேலே உள்ள நாடுகளின் மக்களின் வாழ்கைத்தரம் அதிகம் என்பதில் சந்தேகமில்லை. குறைவான ஜன நெருக்கத்தைப் பெற்று இருப்பதால் வாழ்க்கைத்தரம் உயர்ந்துள்ளது என்றும் கூறிவிட முடியாது. ஏனென்ருல் சில நாடுகளில் ஜன நெருக்கடி குறைவாக இருந்தும் அவை ஏழ்மையாகவே உள்ளன. உதாரணமாக சீன நாட்டில் ஜன நெருக்கடி சதுர மைலுக்கு 123 பேர்தான். ஆப்பிரிக்காவிலுள்ள நாடுகளிலும் ஜன நெருக்கடி சதுர மைலுக்கு 10 பேர்களுக்கும் குறைவாக உள்ளது. ஆனுல் இந்த நாடுகள் யாவும் பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ளன; மக்களும் குறைவான வாழ்க்கைத்தரத்தைப் பெற்றுள்ளார்கள். ஆகவே குறைவான ஜன நெருக்கத்தைக் கொண்டு அல்லது அதிகமான ஜன நெருக்கத்தைக் கொண்டு ஒரு நாட்டினுடைய செழிப்புத் தன்மையையும் பொருளாதார முன்னேற்றத்தையும் கணக்கிட முடியாது. மக்கள் நெருக்கத்தையும் பொருளாதார வளர்ச்சியையும் கொண்டு நாடுகளை டாக்டர் பிரைட் சிங் (Dr.Bright Singh) அவர்கள் நான்கு வகைகளாகப் பிரித்துள்ளார்கள்:

(1) குறைவான ஜன நெருக்கம், சாதாரண வளர்ச்சி

(2) குறைவான ஜன நெருக்கம், துரிதமான வளர்ச்சி

(3) அதிகமான ஜன நெருக்கம், சாதாரண வளர்ச்சி

(4) அதிகமான ஜன நெருக்கம், துரிதமான வளர்ச்சி

ஒரு நாட்டினுடைய மக்களின் கொள் அளவைக் கண்டு பிடிப்பதற்கு ஜன நெருக்கம் சரியான அளவு கோலாகக் கருத முடியாது. ஒரு நாட்டிற்கு எவ்வளவு மக்கள் தேவை என்பது அந்த நாட்டில் கிடைக்கக் கூடிய இயற்கை வளங்களையும், அவ்வளங்கள் எவ்வாறு விஞ்ஞானம், தொழில்நுட்பம் இவற்றினுல் பயன் படுத்தப் படுகின்றன என்பதையும் பொறுத்ததாகும். இயற்கை வளங்கள், தொழில்கள், விவசாய முன்னேற்றம் உண்மையாகவே அதிகமான ஜன நெருக்கத்தைச் சமாளிக்க முடியும். எடுத்துக் காட்டாக, இந்தியாவைவிட ஜப்பானின் ஜன நெருக்கம் இரண்டு மடங்கு; ஆனுல் ஜப்பானின் வாழ்க்கைத்தரம் அதிகமாக உள்ளது. காரணம், ஜப்பான் தொழிலில் முன்னேற்றம் அடைந்த நாடு. அதே நேரத்தில் ஜப்பான் ஒரு விவசாய நாடு என்பதையும் மறந்து விட முடியாது. அமெரிக்காவில் அதிகமான வாழ்க்கைத்தரம் இருப்பதற்கு அங்குள்ள இயற்கை வளமும், உயர்ந்த பொருளாதார முன்னேற்றமும் காரணங்களாகும். சுருங்கக் கூறின், ஜன நெருக்கம் ஒரு நாட்டின் ஏழ்மையை அல்லது செழிப்புத் தன்மையை எடுத்துக் காட்டாது. சமீபகாலத்தில் 1-4-71 மக்கள் கணக்குப்படி இந்தியாவின் ஜன நெருக்கம் சதுர கிலோ மீட்டருக்கு 182 பேர்கள் எனக் கணிக்கப்பட்டுள்ளது. டாக்டர் சந்திரசேகரன் தம் புத்தகம் ஒன்றில், 'காலியான நிலங்கள், பட்டினி மக்கள்' என்பதில், நாடுகளை இரண்டு வகைகளாகப் பிரித்துக் காட்டியுள்ளார். முழு நிலங்களைப் பயன்படுத்தி அதனுல் அந்த நாடுகளின் ஜன நெருக்கத்தை ஒரு வகையாகப் பிரித்தார். மற்றொரு வகை காலியான நிலங்கள், குறைவான மக்கள் நெருக்கத்தைக் கொண்ட நாடுகள் எனக் குறிப்பிட்டார். அதன்படி கீழேயுள்ள அட்டவணை தீட்டப் பட்டுள்ளது.

## அட்டவணை 11

முழு நிலங்கள் — ஜனநெருக்கம்
(Full lands — Density per sq. mile)

| வரிசை எண் | நாடுகளின் பெயர் | ஆண்டு | ச.மைலுக்கு ஜனநெருக்கம் |
|---|---|---|---|
| 1 | பெல்ஜியம் | 1947 | 726 |
| 2 | ஹாலந்து | 1945 | 717 |
| 3 | இங்கிலாந்து | 1947 | 534 |
| 4 | இத்தாலி | 1945 | 397 |
| 5 | ஜெர்மனி | 1947 | 408 |
| 6 | ஜப்பான் | 1940 | 496 |
| 7 | சீனு | 1939 | 105 |
| 8 | இந்தியா | 1947 | 261 |
| 9 | இந்தோனேஷியா | 1947 | 88 |

## அட்டவணை 12

### காலி நிலங்கள் — ஜனநெருக்கம்
### (Empty lands — Density)

| வரிசை எண் | நாடுகளின் பெயர் | ஆண்டு | ச. மைலுக்கு ஜனநெருக்கம் |
|---|---|---|---|
| 1 | ஆஸ்திரேலியா | 1949 | 2 |
| 2 | கனடா | 1941 | 3 |
| 3 | சைபீரியா | 1941 | 5 |
| 4 | அர்ஜென்டினு | 1945 | 5·8 |
| 5 | ஆஃப்ரிக்கா | 1949 | 0·65 |
| 6 | பிரேஸில் | 1940 | 13 |
| 7 | லத்தீன் அமெரிக்கா | 1947 | 0·28 |
| 8 | நியுஜிலாந்து | 1947 | 4·5 |
| 9 | அமெரிக்கா | 1941 | 41 |

# 4. ஆண் பெண் விகிதாசாரம்

## (Sex Ratio)

ஆண் பெண் விகிதாசாரம் சமூக, பொருளாதார விளைவு களுக்கு மிகவும் அவசியமாகும். பொதுவாக, பெண்கள் ஆண் களைக் காட்டிலும் வலுப்பெற்று நோய்களைச் சமாளிக்கும் ஆற்றல் பெற்றுள்ளனர். ஆதலால் இறப்பு விகிதம் பெண்களில் ஆண்களை விடக் குறைவாய் இருக்கிறது. சொல்லப்போனால் பெண்களைவிட ஆண்கள்தான் பலவீனமுடையவர்கள். ஆண்கள் அதிகமிருந்து பெண்கள் குறைவாய் இருந்தால் சமூகத்தில் பல பிரச்சினைகள் தோன்றலாம். வயதுவந்த ஆண்களுக்குத் தகுந்த மணப்பெண் கள் கிடைக்க மாட்டார்கள். அதைப்போல் பெண்கள் அதிக மிருந்து ஆண்கள் குறைவாக இருந்தால், ஒரு ஆண் இரு பெண் களைத் திருமணம் செய்து கொள்ள நேரிடும். அதனால் மக்கள் தொகையும் அதிகரிக்கும். மேலும் கடினமான வேலைகளுக்குத் தக்க ஆண்கள் கிடைக்க மாட்டார்கள். இந்தியாவின் ஆண் பெண் விகிதாசாரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. கடந்த ஒரு நூற்றாண்டு காலமாக இந்தியாவில் மொத்தத்தில் பெண்கள் பற்றாக்குறை இருந்து வருகின்றது. பாகிஸ்தான் பிரிவதற்கு முன்னும், பின்னும் பெண்கள் பற்றாக்குறை இந்தியாவில் தொடர்ந்து இருந்து வருகின்றது.

**அட்டவணை 13**

| ஆண்டு | 1000 ஆண்களுக்குப் பெண்கள் |
|---|---|
| 1881 | 954 |
| 1891 | 958 |
| 1901 | 963 |
| 1911 | 953 |
| 1921 | 945 |
| 1931 | 940 |
| 1941 | 934 |
| 1961 | 941 |
| **1971** | **932** |

கடந்த எழுபது ஆண்டுகளாக இந்தியாவில் ஆண்களைவிட பெண்கள் குறைவாக உள்ளனர் என்பதை மேலேயுள்ள அட்டவணை மூலமாக நன்கு அறியலாம். அதனுல் பெண்கள் பற்ருக் குறை ஏற்பட்டுள்ளது. 1–4–1971 மக்கள் கணக்கெடுப்பின்படி இந்தியாவின் மொத்த மக்கள் 546,955,945. இதில் ஆண்கள் 283,055,987; பெண்கள் 263,899,958. அதாவது 1000 ஆண்களுக்கு 932 பெண்கள் எனக் கணிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது, இந்தியாவில் தற்சமயம் பெண்கள் பற்ருக்குறை இருக்கிறது என்பதாகும். ஆனுல் ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் பெண்கள் ஆண்களை விட அதிகமாக உள்ளனர். மேல் நாடுகளில் 1000 ஆண்களுக்கு எத்தனை பெண்கள் என்பதனைக் காட்டும் அட்டவணை கீழேயுள்ளது.

### அட்டவணை 14

| நாடுகள் | ஆண்டு | பெண்கள் | 1880ஆம் ஆண்டில் |
|---|---|---|---|
| அமெரிக்கா | 1940 | 993 | 965 |
| இங்கிலாந்து | 1931 | 1,088 | 1,033 |
| ஜெர்மனி | 1939 | 1,050 | 1,038 |
| பிரான்ஸ் | 1931 | 1,071 | 1,005 |
| இத்தாலி | 1936 | 1,037 | 995 |
| சுவீடன் | 1935 | 1,022 | 1,062 |

ஜெர்மனி, இங்கிலாந்து, பிரான்ஸ், இத்தாலி, சுவீடன் போன்ற நாடுகளில் பெண்கள் ஆண்களைவிட அதிகம். இந்த நாடுகள் யாவும் பொருளாதாரத்தில் முன்னேற்றம் கண்ட நாடுகள். ஆனுல் இந்தியாவில் இதற்கு மாருக உள்ளது; பெண்கள் குறைவாகவும் ஆண்கள் அதிகமாயும் உள்ளனர்.

1961ஆம் ஆண்டு கணக்கின்படி இந்தியாவில் 1000 ஆண்களுக்கு 941 பெண்கள் இருந்தனர். 1971ஆம் ஆண்டு கணக்கின்படி பெண்களின் விகிதம் 941-லிருந்து 932ஆகக் குறைந்து வந்துள்ளது. இது மிகவும் வருந்தத்தக்கது. இந்தியாவில் மேலும் மேலும் பெண்கள் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது. பெண்கள் பற்ருக்குறைக்குக் காரணம், இந்தியாவில் அதிகப்படியான தாய்மார்கள் இறக்கிருர்கள். அதிலும் குழந்தை பெறும் பருவத்திலும், மறு இன விருத்திக் காலங்களிலும், பெண் குழந்தைகளைச் சரியாகப் பேணி வளர்ப்பது கிடையாது. மேலும் வளர்ந்த பெண்களையும் சரிவரக் கவனிப்பதும் கிடையாது.

மாநிலங்களுள் அதிகமான பெண்களைக் கொண்டது கேரளா. அங்கு 1,000 ஆண்களுக்கு 1,019 பெண்கள் உள்ளனர். அதைப் போல் மத்திய அரசு பிராந்தியமான தத்ரா — நாகர் ஆவேலியில் 1,000 ஆண்களுக்கு 1,007 பெண்கள் உள்ளனர். இந்தியாவின் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் ஆண் பெண் விகிதங்கள் கிட்டத் தட்ட சமமாகவே உள்ளன. ஆனால் வடக்கு, மேற்குப் பகுதி களான மத்தியப்பிரதேசம், உத்தரப்பிரதேசம், ஹரியானு, பஞ்சாப் பகுதிகளிலும், வடகிழக்குப் பகுதிகளான அஸ்ஸாம், நேஃபா ஆகிய வற்றிலும் பெண்கள் பற்ருக்குறை அதிகமாக உள்ளது. ஆகவே ஆண் பெண் விகிதாசாரங்கள் இந்தியாவில் மாநிலங்களுக்கு ஏற்ற வாறு மாறுபடுகின்றன. 1931ஆம் ஆண்டிலும், 1941ஆம் ஆண் டிலும், ஆண் பெண் விகிதாசாரங்களைக் கீழேயுள்ள அட்டவணை எடுத்துக் காட்டுகின்றது. இன்னமும் சில மாநிலங்களில் பெண் கள் பற்ருக்குறை தொடர்ந்து இருந்து வருகிறது என்பதை அட்ட வணை 14 புலப்படுத்தும்.

## அட்டவணை 15

**சில மாகாணங்களில் 1,000 ஆண்களுக்கு எத்தனை பெண்கள் என்ற எண்ணிக்கையை எடுத்துக்காட்டும் அட்டவணை.**

| மாகாணங்கள் | 1941 | 1931 |
|---|---|---|
| சென்னை | 1,009 | 1,021 |
| வங்காளம் | 899 | 924 |
| பம்பாய் | 927 | 929 |
| ஐக்கியமாகாணம் | 906 | 902 |
| பீகார் | 994 | 999 |
| ஒரிஸ்ஸா | 1,009 | 782 |
| கொச்சி | 1,042 | 887 |
| டெல்லி | 715 | 908 |
| மைசூர் | 949 | 908 |

1941ஆம் ஆண்டில் சென்னை, ஒரிஸ்ஸா, கொச்சி போன்ற மாநிலங்களில் பெண்கள் ஆண்களைவிட அதிகமாக இருந்தனர்; ஏனைய மாநிலங்களில் பெண்கள் ஆண்களை விடக் குறைவாக இருந்தனர் என்பதை அறியலாம். 1931ஆம் ஆண்டில் மக்கள் கணக்கெடுப்பு கமிஷனர் திரு. ஹட்டன் (Hutton) அவர்கள் பெண் கள் பற்ருக்குறைக்குக் காரணம் தவருன கணக்கெடுப்பு என ஒத்துக்கொள்கிருர். இந்த ஆண் பெண் விகிதமானது 1951 முதல் 1961 வரையில் அஸ்ஸாம், பீகார் ஆகிய இரு மாநிலங்

களில் பெண்கள் அதிகமாயும், பஞ்சாப், மேற்கு வங்காளம் இவற்றில் பெண்கள் குறைவாகவும் கொண்டு இருந்தது. 1951ஆம் ஆண்டில் மொத்த மக்கள்தொகை 361 மில்லியன்கள். இவற்றில் 186·5 மில்லியன்கள் ஆண்கள்; 174·6 மில்லியன்கள் பெண்கள். அதாவது பெண்களைக் காட்டிலும் ஆண்கள் 11·9 மில்லியன்கள் அதிகமாக இருந்தனர். அதேபோல் 1961ஆம் ஆண்டின் மொத்த மக்கள்தொகையில் 439 மில்லியனில் ஆண்களின் எண்ணிக்கை 226·5 மில்லியன்கள் ; பெண்களின் எண்ணிக்கை 212·4 மில்லியன்கள். அதாவது ஆண்கள் பெண்களைவிடக் கிட்டத்தட்ட 14 மில்லியன்கள் அதிகம். கடந்த முப்பது ஆண்டுகளாக இந்தியாவில் பெண்கள் பற்றுக்குறை தொடர்ந்து பெரிய அளவில் இருந்து வருகின்றது.

தமிழ்நாட்டைப்பற்றிச் சற்று ஆராய்வோம். 1–4–71 கணக்கின்படி தமிழ்நாட்டின் மொத்த மக்கள்தொகை 41,103,125. ஆனால் 1961ஆம் ஆண்டில் மொத்த மக்கள்தொகை 33,686,953. கடந்த 10 ஆண்டுகளில் மக்கள்தொகை உயர்வு 22·01 சதவிகிதமாகும். இந்திய நாட்டின் மக்கள்தொகை உயர்வு 24·57 சதவிகிதமாகும். 1971 கணக்கின்படி தமிழ்நாட்டில் ஆண்களின் எண்ணிக்கை 20,772,549; பெண்களின் எண்ணிக்கை 20,330,576. அதாவது ஆண் பெண் விகிதாசாரம் 1,000 ஆண்களுக்கு 979 பெண்கள் ஆகும். 1961ஆம் ஆண்டில் ஆண் பெண் விகிதாசாரம் 1000 : 992 ஆக இருந்தது. பெண்களின் எண்ணிக்கை தமிழ்நாட்டில் குறைந்து வருகிறது. சென்னையிலும் மற்ற மாவட்டங்களிலும் அதாவது இராமநாதபுரம், திருநெல்வேலி நீங்கலாக, மற்ற மாவட்டங்களில் ஆண்கள் பெண்களை விட அதிகம். தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் 1961 கணக்கின்படி பெண்கள் ஆண்களை விட அதிகம் இருந்தார்கள். ஆனால் தற்சமயம் அது மாறி விட்டது. 1961ஆம் ஆண்டின் கணக்கை வைத்துப் பார்க்கையில் 1971-ல் பெண்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டு வருகிறது. ஆனால் சென்னை, தர்மபுரி, நீலகிரி மாவட்டங்களில் பெண்களின் எண்ணிக்கை குறையாமல் வளர்ந்து வருகிறது. உதாரணமாக தர்மபுரி மாவட்டத்தில் 968/1,000 ஆக இருந்த பெண், ஆண் விகிதம் இப்போது 970/1000ஆக மாறி விட்டது. அதைப்போல் சென்னை மாவட்டத்தில் இருந்த விகிதம் 901/1,000; இப்போது இது மாறி 902/1,000 ஆக உள்ளது. சில மாவட்டங்கள் குறையாமல் அதே அளவை நிலை நிறுத்தி வருகின்றன.

## அட்டவணை 16

**மாவட்டவாரியாக ஆண் பெண் விகிதாசாரம், 1971 கணக்கின்படி**

| மாவட்டங்களின் பெயர் | | 1,000 ஆண்களுக்குப் பெண்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| சென்னை | — | 902 |
| செங்கல்பட்டு | — | 941 |
| வட ஆர்க்காடு | — | 976 |
| தென் ஆர்க்காடு | — | 970 |
| தர்மபுரி | — | 970 |
| சேலம் | — | 966 |
| கோயம்புத்தூர் | — | 956 |
| நீலகிரி | — | 948 |
| மதுரை | — | 988 |
| திருச்சி | — | 992 |
| தஞ்சாவூர் | — | 995 |
| இராமநாதபுரம் | — | 1,044 |
| திருநெல்வேலி | — | 1,044 |
| கன்னியாகுமரி | — | 947 |

தமிழ்நாட்டில் இரண்டு மாவட்டங்களைத் தவிர அதாவது இராமநாதபுரம், திருநெல்வேலி நீங்கலாக, மற்ற மாவட்டங்களில் பெண்களின் எண்ணிக்கை குறைவாக உள்ளது; மேலும் குறைந்து கொண்டே வருகிறது. இவ்வாறு பெண்கள் குறைவிற்குப் பல காரணங்கள் உண்டு. 1961 மொத்த மக்கள்தொகைக் கணக்கின்படி 1 வயது முதல் 14 வயது வரை 41·1 சதவிகிதம், 15 வயது முதல் 55 வயது வரை 51·1 சதவிகிதம், 55 வயதுக்குமேல் 7·8 சதவிகித மாகும். இந்தியாவில் விதவைத் திருமணத்திற்குத் தடை உண்டு. விதவைகள் மீண்டும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. மேல் நாடுகளில் இந்தத் தடை கிடையாது. இந்தியாவில் பெண் குழந்தை பிறந்தால் செலவாகவும், ஆண் குழந்தை பிறந்தால் வரவாகவும் கருதி வருகிறார்கள். அதிலும் கிராமப் புறங்களில் பெண் குழந் தையை அலட்சியப் படுத்துதல் அதிகம், போதிய அளவிற்கு கண் காணிப்பதும் கிடையாது. சீன நாட்டில் ஆண் குழந்தைகளை விடப் பெண் குழந்தைகள் பிறப்பில் அதிகம். ஆனால் டாக்டர் டாசென் (Dr. Tachen) அவர்கள் சீன நாட்டின் மக்கள்தொகை பற்றிக் கூறும் போது ஆரம்பத்தில் பெண் குழந்தைகள் ஆண் குழந்தைகளை விட அதிகம் பிறந்தாலும் கொஞ்ச நாட்களில் பெண் குழந்தைகள் இறந்த பிறகு ஆண் பெண் விகிதம் சம நிலைக்கு

வந்து அடைகிறது என்கிறார். இதற்குக் காரணம் பெற்றோர்கள் ஆண் குழந்தைகளின் மீது அதிகப் பற்று கொண்டிருப்பதும், பெண் குழந்தைகளை அதிக அளவில் அலட்சியப் படுத்துவதும் தான். இந்தியாவில் உள்ள நிலை சீன நாட்டிலும் உள்ளது. பெண் குழந்தைகளை உதாசீனம் செய்வதாலும் பெண் குழந்தைகளின் மரணம் அதிகம் இருப்பதாலும் பெண்கள் பற்றாக்குறை ஏற்படு கிறது.

டாக்டர் ராதாகமல் முகர்ஜீ (Dr. Radhakamal Mukerjee) அவர்கள் பெண்கள் பற்றாக்குறைக்குக் காரணங்களைக் குறிப் பிட்டுள்ளார். கொடிய வியாதிகள், தொத்து நோய்கள், பிளேக், மலேரியா போன்ற வியாதிகள் பரவிய பகுதிகளில் ஆண்களை விட பெண்கள் அதிகம் பாதிக்கப்பட்டு இறக்கிறார்கள். இத்துடன் பொருளாதார நெருக்கடி, கொடுமையான உஷ்ணம், மழை யின்மை இவை காரணமாகவும் இந்தியாவில் மக்கள் மடிகிறார்கள் எனவும் குறிப்பிட்டுள்ளார்கள். அடுத்து, இந்தியாவில் இளமையி லேயே திருமணத்தை முடிக்கிறார்கள்; அதனால் பிறப்பு விகிதம் அதிகரிக்கிறது. ஐந்து வயதுக்குள் இருக்கும் குழந்தைகளின் விகிதத்தை ஆராய்ந்து பார்த்தால் பெண் குழந்தைகள்தான் அதிகமாக இருக்கின்றன. ஆனால் சீக்கிரமாகத் திருமணங்களை முடிப்பதால் அதிகமான தாய்மார்கள் இறக்கிறார்கள். அத்துடன் விதவைகளும் மீண்டும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது.

இந்தியாவில் தாய்மார்களின் மரணம் மிகவும் பயங்கரமானது. 1000 தாய்மார்களில் குழந்தை பிறக்கும்போது 100 தாய்மார்கள் இறக்கிறார்கள். சராசரியாக ஆண்டு தோறும் கிட்டத்தட்ட 2 லட்சம் தாய்மார்கள் குழந்தை பிறக்கும்போது இறக்கிறார்கள். அதிலும் 25 வயது முதல் 35 வயதுக்குள் இறக்கும் தாய்மார்கள் நோய்களினாலும் அதிகக் களைப்பினாலும், நரம்புத் தளர்ச்சியாலும் குழந்தையைத் தாங்க முடியாத நிலையாலும் இறக்கிறார்கள்.

சந்ததி உண்டாக்கும் பருவமாகிய 15 வயது முதல் 45 வயது வரை இருக்கக் கூடிய தாய்மார்களில் மொத்தத்தில் 15 சத விகிதம் தாய்மார்கள் விதவைகளாக மாறுகிறார்கள். அதனால் அவர்கள் மீண்டும் குழந்தைகளைப் பெறுவதற்கில்லை. அவர்களுடைய சந்ததி உண்டாக்கும் பருவம் சீர்குலைகிறது. 12 மில்லியன் தாய்மார்கள் விதவையாவதன் காரணமாகச் செயலற்று விடுகிறார்கள். சந்ததி உண்டாக்கும் பருவம் முடிவதற்குள் தங்களுடையகணவன்மார்களை இழந்து விடுகிறார்கள். இம்மாதிரி இளமையிலேயே விதவை ஆவதற்குக் காரணங்கள் ஏழ்மை, குடும்பத்தில் பூசல், கணவனால்

புறக்கணிக்கப்படுதல், சில காலமே குடும்பம் நடத்துதல் போன்ற பலவாகும். இளம் விதவைகள் அதிகரிப்பதற்குப் பொருத்த மில்லாத கல்யாணம் ஒரு சிறப்புக் காரணமாகும். 40 வயது முதல் 45 வயதுக்குள் இருப்பவர்கள் 30 வயதுள்ள பெண்களை, குறைந்து 26 வயதுள்ள பெண்களையாவது திருமணம் முடிப் பதற்குச் சம்மதிப்பதில்லை. அவர்கள் பெரும்பாலும் 14 வயது முதல் 18 வயதுக்குள் உள்ள பெண்களையே திருமணம் முடித்துக் கொள்கிறார்கள். இவ்வாறு வயது பொருத்தமில்லாமல் திருமணம் முடித்துக் கொள்வதால் வயதான புருஷர்கள் இளம் பெண்களைச் சீக்கிரத்தில் விட்டு விட்டு இறந்து விடுகிறார்கள். ஆகவே இந்த இளம் மனைவிமார்கள் விதவைகளாக மாறுகிறார்கள். எனவே இந்தியாவில் பெண்கள் பற்றாக்குறை மேலும் வளர்ந்து வருகிறது.

# 5. கிராமப்புற, நகர்ப்புற விகிதம்
## (Rural and Urban Ratio)

1961-ன் கணக்கின்படி 17·97 சதவிகித மக்கள் நகரங்களிலும் பட்டணங்களிலும் வாழ்கின்றனர். 82·03 சதவிகித மக்கள் கிராமப் புறங்களில் வாழ்கின்றனர். ஆனல் மேலே நாடுகளில் இந்த விகிதம் மாறுபடுகிறது. அங்கு நகரமக்களின் தொகை அதிகமாக உள்ளது. உதாரணமாக பிரான்ஸில் 52 சதவிகிதமும், இங்கிலாந்தில் 80 சத விகிதமும், மக்கள் நகர்ப் புறத்தைச் சார்ந்தவர்கள். மத்திய நிர்வாகப் பகுதியான டெல்லி நீங்கலாக, நகர வளர்ச்சி அடைந்த மாநிலங் கள், மகாராஷ்டிரம், மேற்கு வங்காளம், மைசூர் முதலியவை ஆகும். இன்னமும் நகர வளர்ச்சி அடையாத மாநிலங்கள் ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், பீகார் முதலியன. ஒரு நாட்டின் பொருளா தாரம் வளர்ச்சி அடைவதால் நகரங்களின் வளர்ச்சியும் அதிகரிக் கின்றது. இந்தியாவில் நகர்ப்புறங்களில் வசிப்பவர்கள் குறைவான எண்ணிக்கையில் இருப்பதற்குக் காரணம், இன்னும் நாம் வர்த்தகம் வியாபாரம், போக்குவரத்து, தொழில்கள் முதலியவற்றில் கணிச மான அளவில் முன்னேற்றம் அடையாததேயாகும். ஆனல் கிராமப் புறத்தில் அதிக மக்கள் இருப்பதற்குக் காரணம் பெரும்பான்மை யான மக்கள் விவசாயத்தையே நம்பி இருக்கின்றனர். கிராம-நகர்ப் புற மக்களின் பங்கீடு இன்னும் ஒரு முக்கியமான கருத்தையும் தெரிவிக்கிறது, கிராமப்புறங்களில் உள்ள மக்கள் பழங்காலக் கருத்துக்களைக் கொண்டுள்ளனர். அவர்களை எளிதில் மாற்ற முடியாது. சாத்திரம், சம்பிரதாயம் முதலியவற்றுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்கள். ஆனல் நகரத்தில் வாழக் கூடிய மக்கள் மிகவும் உற்சாகமாகவும், சுறு சுறுப்பாகவும், புதிய கருத்துக்களை உடையவர்களாகவும் தென்படுகிருர்கள். இந்தியாவில் முக்கிய நகரங்கள் 1961-ல் 20,000 மக்களுக்கு மேல் உள்ள நகரங்கள் 515 ஆகும்; 1 லட்சத்திற்குமேல் உள்ளவை 107 பட்டணங்கள் ஆகும். இந்தியாவில் குறைவான நகரங்கள் இருப்பதானது தொழிலில் பின்தங்கிய நிலையை எடுத்துக் காட்டு கிறது. கிராமம், நகரம் இவற்றில் சமமான மக்கள்தொகையைப்

பங்கீடு செய்வது நலம். கீழேயுள்ள அட்டவணை 1901ஆம் ஆண்டு முதல் 1961ஆம் ஆண்டுவரை கிராம–நகர்ப்புற மக்கள் தொகை வளர்ச்சியை எடுத்துக்காட்டும்.

## அட்டவணை 17

### கிராம-நகர்ப்புற மக்கள்தொகை வளர்ச்சி (1901-1961)

| ஆண்டு | மக்கள்தொகை (மில்லியன்கள்) கிராமம் | நகரம் | மொ.ம.தொகை சதவிகிதம் கிராமம் | நகரம் | நகரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1901 | 210 | 26 | 89 | 11 | 1,910 |
| 1921 | 223 | 28 | 89 | 11 | 2,050 |
| 1941 | 274 | 45 | 86 | 14 | 2,427 |
| 1961 | 360 | 79 | 82 | 18 | 2,690 |

நகரத்தை நோக்கிச் செல்லும் மக்களும் குறைவாக உள்ளனர். 1921ஆம் ஆண்டில் நகரத்தில் 11 சதவிகிதம் வாழ்ந்த மக்கள் இப்போது 18 சதவிகிதமாக உயர்ந்துள்ளனர். இவ்வாறு நகர வளர்ச்சிக்கு முக்கியமான காரணங்கள் பின்வருமாறு: தொழில் வளர்ச்சி, வேலை தேடிச் செல்லுதல், பட்டணங்களின் மீது மோகம், நாகரிகம், கல்வி, வைத்தியம் போன்ற பலவாகும். நகரங்களில் வாழக்கூடிய மக்கள் பலர் பயங்கரமான நெருக்கடியிலும் வெப்ப தட்ப நிலையிலும் வாழ்கின்றனர். தொத்து நோய்கள் அதிகமாகப் பரவுகின்றன. அதன் காரணமாகப் பல மக்கள் இறக்கின்றனர். மக்களுடைய ஒழுக்கம், ஆரோக்கியம், திறமை நாளுக்கு நாள் குறைகின்றன. இந்தியாவில் மேலை நாடுகளைப் போலக் கண்மூடித் தனமாக நகர்ப்புறங்களில் போய்க் குவிதல் கூடாது. அதைவிட புதிய நகரங்களை நிர்மாணித்தல், நெருக்கடியைத் தவிர்த்தல், சிறந்த வசதியான காற்றோட்டமுள்ள நடுத்தரமான நல்ல நகரங்களை ஏற் படுத்தல் வேண்டும். நகரத்திலேயே நாம் கிராமத்தின் வசதிகளைக் கொண்டு வருதல் வேண்டும். கீழேயுள்ள அட்டவணை இந்தியா வில் கிராம–நகர்ப்புறங்களில் வாழும் மக்கள் பங்கீட்டைச் சதவிகி தத்தில் எடுத்துக்காட்டும்:

## அட்டவணை 18

| ஆண்டு | கிராமப்புறம் | நகர்ப்புறம் |
|---|---|---|
| 1872 | 91·28 | 8·72 |
| 1881 | 90·59 | 9·41 |
| 1891 | 90·54 | 9·46 |
| 1901 | 90·21 | 9·79 |
| 1911 | 90·65 | 9·35 |
| 1921 | 89·70 | 10·30 |
| 1931 | 89·00 | 11·00 |
| 1941 | 87·28 | 12·78 |

இந்த அட்டவணை கிராமப்புறத்தில் பெரும்பான்மையான மக்கள் விரும்பி வாழ்வதை எடுத்துக்காட்டுகிறது.

முன்னேற்றம் அடைந்த பல நாடுகளில் கிராம-நகர்ப்புற விகிதங்களை ஆராய்ந்தால், நகர்ப்புற முன்னேற்றம் அதிகம் எனத் தெரியவருகிறது. கீழேயுள்ள அட்டவணை இதனை நன்கு புலப்படுத்தும்.

## அட்டவணை 19

### பல நாடுகளின் கிராம-நகர்ப்புற மக்களின் சதவிகிதம்

| நாடுகள் | ஆண்டு | சமீபத்திய ஆண்டில் | | 1880 ஆண்டில் | |
|---|---|---|---|---|---|
| | | கிராமம் | நகரம் | கிராமம் | நகரம் |
| அமெரிக்கா | 1940 | 43·5 | 56·5 | 70·5 | 29·5 |
| ரஷ்யா | 1926 | 83·4 | 16·6 | 86·5 | 13·5 |
| சுவீடன் | 1935 | 67·7 | 32·3 | 84·9 | 15·1 |
| ஜப்பான் | 1925 | 35·5 | 64·5 | — | — |
| இத்தாலி | 1936 | 29·3 | 70·7 | 46·2 | 53·8 |
| ஜெர்மனி | 1933 | 43·5 | 56·3 | 70·9 | 29·1 |
| பிரான்ஸ் | 1936 | 53·1 | 46·9 | 65·2 | 34·8 |
| இங்கிலாந்து | 1930 | 22·7 | 77·3 | 32·1 | 67·9 |
| கனடா | 1930 | 58·3 | 41·7 | 84·1 | 15·9 |
| ஆஸ்திரியா | 1934 | 54·9 | 45·1 | 80·2 | 19·8 |

இங்கிலாந்து, ஜெர்மனி, இத்தாலி, அமெரிக்கா போன்ற நாடுகளில் நகர்ப்புறத்தில் வாழக்கூடிய மக்களின் சதவிகிதம் அதிகம் என்பது புலனாகும். மேலும் 1880ஆம் ஆண்டிலிருந்து சமீபத்திய ஆண்டுகளின் சதவிகிதத்தை ஒப்பிட்டுப்பார்க்கையில் எல்லா நாடுகளிலும் நகர்ப்புற மக்கள்தொகையின் சதவிகிதம் கூடுதல் கண்டுள்ளது. இந்தியாவில் மொத்தத்தில் கிட்டத்தட்ட 6 லட்சம் கிராமங்கள் உள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏறக்குறைய 2,000 கிராமங்கள் உள்ளன. ஒவ்வொரு கிராமத்திலும் சராசரியாக 517 பேர்கள் வாழ்கின்றனர். எல்லா கிராமங்களையும் சேர்த்து மொத்தமாக உள்ள வீடுகள் 66,436,094. அதாவது கிராமம் ஒன்றுக்குச் சராசரியாக 101 வீடுகள் உள்ளன. வீடு ஒன்றுக்குச் சராசரியாக 5 பேர் உள்ளனர். இந்தியாவில் அதிக மக்கள் கிராம வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். மேலும் விவசாயத்தைச் சிறந்த தொழிலாகக் கொண்டுள்ளார்கள். அவர்களுக்கு நகர்ப்புற நன்மைகள் கிட்டுவதில்லை. நகர்ப்புற மக்களுக்கு உணவு அனுப்புதல்தான் முக்கியமான வேலை ஆகும். பெரிய ஜமீன்தார்கள்,

மிராசுதார்கள், நிலச்சுவான்தார்கள் விவசாயத்திலிருந்து அதிக செல்வத்தை அடைந்துள்ளனர். இவர்கள் இப்போது நகரத்தை நோக்கி இன்னும் சௌகரியமாக வாழ்வதற்குச் செல்கின்றார்கள். கல்வி வசதிக்காகவும், சமூக நல வசதிக்காகவும், நாகரிகத்தின் வளர்ச்சியாலும், தற்போது மக்கள் நகர்ப்புறத்தை நோக்கிச் செல்கின்றனர். பெரிய தொழிற்சாலைகள், மருத்துவ நிலையங்கள், பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், விளையாட்டு அரங்கங்கள், திரைப் படக் கொட்டகைகள் யாவும் நகரத்தில்தான் அமைந்துள்ளன. மேலைநாடுகளைப்போல் இந்தியாவில் நகர்ப்பகுதிகளுக்கு சரியான இலக்கணம் கிடையாது; பெரும்பாலும் கணக்கெடுக்கும் அதிகாரியின் முடிவைப் பொறுத்ததாகும். 1941 மக்கள்தொகைக் கணக்கின்படி நகரங்கள் கிராமங்கள் வகைப்படுத்தியதைக் கீழேயுள்ள அட்டவணை அறிவிக்கும்.

## அட்டவணை 20

| மக்கள்தொகைப் பிரிவுகள் | கிராமங்கள் அல்லது நகரங்கள் | மக்கள்தொகை (மில்லியன்கள்) |
|---|---|---|
| 500 மக்களுக்குக் குறைவு | 4,50,902 | 94·2 |
| 500— 1,000க்குக் குறைவு | 1,23,911 | 86·9 |
| 1,000— 2,000க்குக் குறைவு | 57,408 | 79·3 |
| 2,000— 5,000க்குக் குறைவு | 22,151 | 63·4 |
| 5,000— 10,000க்குக் குறைவு | 3,017 | 20·5 |
| 10,000— 20,000க்குக் குறைவு | 733 | 10·0 |
| 20,000— 50,000க்குக் குறைவு | 321 | 9·6 |
| 50,000—100,000க்குக் குறைவு | 95 | 6·1 |
| 100,000-மும் அதற்கு மேலும் | 57 | 15·9 |

பொதுவாக கிராமம் என்றால் 5,000 மக்களுக்குக் குறைவாகவும், நகரம் என்றால் 5,000 மக்களுக்கு மேல் என்றும் வரையறுத்துள்ளனர். பட்டணங்களில் 1,00,000-க்கு மேல்உள்ளனர் ரஷ்யாவில் கிராம மக்களை வைத்துக்கொண்டே நகரங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ரஷ்யாவும் இந்தியாவைப்போல் விவசாய நாடாக இருந்தது. ஆனால் பொருளாதார முன்னேற்றத்தினால் நகரத்தில் உள்ள வசதிகளைப்போல கிராமத்தில் உள்ள மக்களுக்கு அளிக்கப்பட்டுவிட்டன. இந்தியாவைப் பிரிப்பதற்கு முன்பு நகரங்களின் எண்ணிக்கை 2,703. சராசரி நகரம் ஒன்றுக்கு மக்கள்தொகை 18,365. நகரங்களில் வீடுகளின் எண்ணிக்கை 9,599,251. ஒவ்வொரு நகரத்திற்கும் சராசரி வீடுகளின் எண்ணிக்கை 3,551·3; ஒவ்வொரு வீட்டிற்கும் சராசரியாக 5·2 பேர்கள் வசிக்கிறார்கள்.

1941 கணக்கின்படி 10,000 மக்களைக் கொண்ட பட்டணங்கள் 57 ஆகும். நகரத்தையும் கிராமத்தையும் ஒன்றிணைத்து 1,000 வீடுகளுக்கு 1931-ல் 4,965 மக்கள் வீதமும், 1941-ல் 5,116 மக்கள் வீதமும் வாழ்ந்தனர். 100 சதுர மைலுக்கு உண்டான வீடுகள் 1931-ல் 3,930 வீடுகளும் 1941-ல் 4,808 வீடுகளும் இருந்தன எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

**நகர வளர்ச்சி :** நகர்ப் புறத்தில் வசிக்கும் மக்கள் முன்னேற்றக் கருத்துக்களைக் கொண்டவர்கள்; கடினமாக உழைப்பவர்கள்; பொருளாதார முன்னேற்றத்தில் பெரிதும் அக்கறை கொண்டவர்கள். எப்போதும் அவர்கள் உற்சாகத்துடனும், சுறு சுறுப்பாகவும் உள்ளனர். ஆனால் கிராம மக்கள் அறியாமை நிறைந்தவர்கள்; கல்லாதவர்கள்; பழங்காலக் கருத்தைக் கொண்டவர்கள். அவர்கள் புதிய கருத்துகளை எளிதில் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். நகரங்களின் வளர்ச்சியானது தொழில் வளர்ச்சிக்கு அறிகுறியாகக் கருதப்படுகிறது. ஆகவே நகர வளர்ச்சி மிக அவசியமாகும். ஆனால் இந்தியாவில் நகர வளர்ச்சி அதிகமாக, விரைவாக நடப்பதில்லை. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் 1901-ல் நகரத்தில் வாழக்கூடிய மக்கள் 11 சதவிகிதம். கிராமத்தில் வாழக்கூடிய மக்கள் 89 சதவிகிதம். 1961-ல் நகர்ப்புறத்தில் மக்கள்தொகை 18 சதவிகிதம், கிராமத்தில் 82 சதவிகிதம். சென்ற அறுபது ஆண்டு காலமாக 7 சதவிகித மக்கள் கிராமத்திலிருந்து நகர்ப்புறத்திற்குச் சென்றுள்ளார்கள். 19ஆம் நூற்றாண்டில் நகர வளர்ச்சிக்குரிய காரணங்கள் பல உண்டு:

1. துரிதமான ரெயில்வே முன்னேற்றம் நகர வளர்ச்சிக்கு ஒரு காரணமாகும். தொழில் நகரங்களுக்கு மூலப்பொருள், உணவுப் பொருள்கள் கொண்டுபோகவும் முடிவடைந்த பொருள்களைப் பல பகுதிகளுக்கும் எடுத்துச் செல்லவும், மக்கள் பல இடங்களுக்குச் சென்று வருவதற்கும் ரெயில்வே போக்குவரத்து பெரிதும் உதவியது.

2. 19ஆம் நூற்றாண்டில் பஞ்சம் ஏற்பட்டதனால் பெருமளவில் மக்கள் வேலை தேடி கிராமப்புறத்திலிருந்து நகர்ப்புறத்துக்குச் சென்றனர். 1872-1881, 1891-1901 ஆகிய இரு பத்தாண்டுகளில் பெரும் பஞ்சம் ஏற்பட்டதால் கிராம மக்கள் நகர்ப்புறத்தை நாடிச்சென்றனர்.

3. நிலச்சுவான்தார்கள், ஜமீன்தார்கள் ஆகியோர் மேலும் சௌகரியமாக வாழ்வதற்கும் பல வசதிகளை அடைவதற்கும் நகரத்தை நோக்கிச் சென்றார்கள்.

4. புதிய தொழிற்சாலைகள் ஏற்படுவதாலும், பழைய தொழிற்சாலைகள் வளர்ச்சியடைவதாலும், பலர் வேலைக்காக நகர்ப்புறத்துக்குச் சென்றுர்கள். ஏதாகிலும் புதிய தொழிற்சாலை, பணிமனை ஏற்படுத்தினுலும் நகர்ப்புறத்தில் அமைக்கிருர்கள். உதாரணமாக, இரும்பு, எஃகு தொழிற்சாலைகளுக்கு ரூர்கேலா, துர்காப்பூர், பிலாய் ஆகியவை பெரிய நகரங்களாக வளர்ந்துள்ளன. தொழில் நகரங்களை நோக்கி கிராம மக்கள் செல்கிருர்கள்.

5. நகர வாழ்க்கைக்கு இன்னும் சில காரணங்கள், வேலை வாய்ப்பு, அதிக சம்பளம், பட்டணத்தில் உள்ள சினிமா, ஹோட்டல் போன்ற பல வசதிகள், பொழுதுபோக்கு, கண்ணுக்கு விருந்து, சந்தோஷத்திற்கு வேண்டிய பல இடங்கள் ஆகியவையாகும்.

6. 1947-ல் பாகிஸ்தான் பிரிந்த பின்னர் இந்துக்கள் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்குக் குடியேறினுர்கள். ஏராளமான அகதிகள் பர்மா, இலங்கை, பாகிஸ்தான் போன்ற இடங்களிலிருந்து வந்த வண்ணம் இருக்கின்றனர். அவர்கள் நகரத்திலேயே குடி அமர்த்தப்படுகின்றனர். அதனுல் அரசாங்கமும் ஏராளமான பணத்தை அவர்களுக்காகச் செலவு செய்கிறது. ஆகவே நகரங்கள் வளர்கின்றன. வர்த்தகம், வாணிபம், தொழில்கள் அதிகரிப்பினுல் புதிய நகரங்கள் தோன்றுகின்றன. பழைய நகரங்கள் பெரியதாக்கப்படுகின்றன. அதனுல் நாட்டின் செல்வமும் பொருளாதாரமும் வளர்கின்றன. நாட்டின் வருமானம் உயர்கிறது. ஆகவே நகர்ப்புற வளர்ச்சியை வரவேற்க வேண்டும். நல்ல முறையில் திட்டங்களைத் தீட்டி நகரங்களை உருவாக்க வேண்டும். நகரங்களைத் திட்டம் இல்லாமல் அமைத்தால் குடிசைகள் தோன்றும்; சில பகுதிகளில் மக்கள் நெருக்கம் அதிகமாக இருக்கும்; இன்னும் சில பகுதிகளில் எல்லா விதமான தொத்து நோய்களும் உண்டாகும்; இது மக்களுடைய ஆரோக்கியத்திற்கும், சுகத்திற்கும் கெடுதல்களை உண்டாக்கும். ஆகவே புதிய நகரங்களை அமைக்கும்போது நல்ல காற்ருேட்டமுள்ள திறந்த வெளியில் ஆரோக்கியமான நகரங்களை அமைத்தல் வேண்டும்.

பின்வரும் அட்டவணையில் சில முக்கிய நகரங்களின் மக்கள் தொகையை வரிசைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளது. 1931-ல் பம்பாய் நகரம்தான் அதிக மக்களைக் கொண்ட நகரம். 1941-ல் கல்கத்தா நகரம்தான் முதன்மையாக இருந்தது.

## அட்டவணை 21

| நகரங்கள் | வரிசை | 1931 | வரிசை | 1941 |
|---|---|---|---|---|
| பம்பாய் | 1 | 1,161,000 | 2 | 1,488,500 |
| கல்கத்தா | 2 | 1,141,000 | 1 | 2,109,000 |
| சென்னை | 3 | 647,000 | 3 | 777,000 |
| ஹைதராபாத் | 4 | 467,000 | 4 | 729,000 |
| லாகூர் | 5 | 430,000 | 5 | 672,000 |
| டெல்லி | 6 | 365,000 | 7 | 533,000 |
| ஆமதாபாத் | 7 | 310,000 | 6 | 590,000 |
| லக்னோ | 8 | 275,000 | 9 | 387,000 |
| அமிர்தசரஸ் | 9 | 265,000 | 8 | 391,000 |

1941ஆம் ஆண்டில் கல்கத்தாவில் மக்கள்தொகை அதிகரிப்பு 85 சதவிகிதமும், பம்பாயில் 28 சதவிகிதமும் இருந்தது. ஆமதா பாத் ஆருவது இடத்தைப் பிடிந்துள்ளது. முதலில் அது 7-வது இடத்தில் இருந்தது. சென்னை, ஹைதராபாத், லாகூர் ஆகியவை தங்கள் இடங்களைத் தக்க வைத்துக்கொண்டுள்ளன. மேலும் உலகில் பம்பாய், கல்கத்தா இரு நகரங்களும் அதிக மக்கள் தொகையைக் கொண்ட நகரங்களாகவும் மதிக்கப்பட்டன. உலகில் பல நகரங்கள் பிரசித்தி பெற்றவை. அந்த நகரங்களுடன் கல்கத்தா, பம்பாய் போன்ற நகரங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. கீழேயுள்ள அட்டவணை இதனைப் புலப்படுத்தும்.

## அட்டவணை 22

| நகரங்களின் பெயர் | 1970 | 1940 | 1930 | 1900 |
|---|---|---|---|---|
| நியூயார்க் | 8,070,000 | 7,454,995 | 6,930,446 | 3,437,202 |
| டோக்கியோ | 8,893,094 | 5,875,667 | 2,070,000 | 1,819,000 |
| லண்டன் | 8,190,000 | 4,094,500 | 4,396,821 | 4,536,267 |
| மாஸ்கோ | 6,330,000 | 3,641,500 | 2,781,000 | 1,174,673 |
| சிக்காகோ | 3,550,400 | 3,396,808 | 3,376,438 | 1,698,575 |
| பாரிஸ் | 3,075,678 | 2,829,746 | 2,891,000 | 2,660,559 |
| லெனின்கிராடு | 3,300,000 | 2,739,800 | 2,228,000 | 1,439,613 |
| கல்கத்தா | 2,927,289 | 2,109,000 | 1,485,582 | 1,145,933 |
| பீகிங் | 4,140,000 | 1,556,364 | 1,297,718 | 1,000,000 |
| பம்பாய் | 4,152,056 | 1,488,500 | 1,161,000 | 776,000 |

1971 ஆம் ஆண்டின் மக்கள் கணிப்புப்படி அதிகமான மக்கள் தொகையைக் கொண்ட நகரங்கள் வரிசைப்படியாக கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### அட்டவணை 23

| வரிசை | நகரின் பெயர் | மக்கள்தொகை |
|---|---|---|
| 1 | கல்கத்தா | 7,040,345 |
| 2 | பம்பாய் | 5,931,989 |
| 3 | டெல்லி | 3,629,842 |
| 4 | சென்னை | 2,470,288 |
| 5 | ஹைதராபாத் | 1,798,910 |
| 6 | ஆமதாபாத் | 1,746,111 |
| 7 | பெங்களூர் | 1,648,232 |
| 8 | கான்பூர் | 1,273,042 |
| 9 | பூனா | 1,123,399 |

1. 1.6 மில்லியன் மக்களுக்குமேல் உள்ள நகரங்கள் A வகை சார்ந்த பட்டணங்கள்.
2. 8 லட்ச மக்கள்தொகைக்கு மேலுள்ள நகரங்களை B வகை நம்பர் 1 வகையாகப் பிரிக்கப்பட்டது.
3. 4 லட்ச மக்கள்தொகைக்கு மேலுள்ள நகரங்களை B வகை நம்பர் 2 வகையாகப் பிரிக்கப்பட்டது.
4. 50,000 மக்களுக்குமேல் உள்ள நகரங்கள் C வகையாகக் கருதப்படும். இந்த வகையில் தற்சமயம் 246 நகரங்கள் உள்ளன.

தமிழ்நாட்டின் கிராம—நகர்ப்புற மக்களின் விகிதங்களை ஆராய்வோம். தமிழ் நாட்டைச் சுற்றிலும் உள்ள மாநிலங்களிலும் எவ்வாறு இந்த விகிதங்கள் உள்ளன என்பதைப் பார்ப்போம்.

| மாநிலத்தின் பெயர் | | மொத்த மக்கள் தொகையில் நகர்ப்புற மக்கள் சதவிகிதம் (1961) |
|---|---|---|
| 1. தமிழ்நாடு | — | 26·69 |
| 2. ஆந்திரப் பிரதேசம் | — | 17·44 |
| 3. கேரளா | — | 15·11 |
| 4. அந்தமான் நிக்கோபார் தீவுகள் | — | 22·15 |
| 5. பாண்டிச்சேரி | — | 24·11 |

தமிழ் நாட்டிலும், பாண்டிச்சேரியிலும் நகரமக்கள் 1961-ன் கணக்கின்படி கிட்டத்தட்ட 25%க்குக் குறையவில்லை. மீதமுள்ள மக்கள் கிராமப்புறத்தில்தான் வாழ்கின்றார்கள்.

# 6. வயது அமைப்பு

## (Age Composition)

எவ்வளவு பேர் உழைக்கும் சக்தியைப் பெற்றுள்ளார்கள் என்பதை வயது அமைப்பிலிருந்து தெரிந்து கொள்ளலாம். 1961 கணக்குப்படி வேலை செய்யும் மக்கள் குறிப்பாக 15 வயது முதல் 60 வயது வரை இருப்பார்கள் எனத் தீர்மானிக்கப் பட்டுள்ளது. வயதுக்குத் தகுந்தபடி ஜனத்தொகைப் பகிர்வு சதவிகிதத்தைக் கீழேயுள்ள அட்டவணை தெரிவிக்கும்.

அட்டவணை **24**

| ஆண்டு | 0–14 | 15–59 | 60-க்கு மேல் |
|---|---|---|---|
| 1911 | 38·8 | 60·2 | 1·0 |
| 1921 | 39·2 | 59·6 | 1·2 |
| 1931 | 38·3 | 60·2 | 1·5 |
| 1951 | 37·4 | 57·1 | 5·5 |
| 1961 | 41·0 | 53·3 | 5·7 |

1961 கணக்கின்படி குழந்தைகளின் தொகை 41 சதவிகித மாகக் கணிக்கப்பட்டது. இது முன்னுள்ள ஆண்டுகளைவிட அதிகம் எனத்தெரிகிறது. இந்த அதிகரிப்புக்குக் காரணம் அதிகமான பிறப்பு விகிதம். அதிகப்படியான குழந்தைகளை வெறும் நுகர்வோர் எண்ணிக்கையில்தான் சேர்க்க வேண்டும். ஏனெனில் அவர்களால் யாதொரு உற்பத்தியும் செய்ய முடியாது. 1931 ஆம் ஆண்டில் 15 வயதுக்குக் குறைவாக உள்ளவர்களின் மொத்த எண்ணிக்கை 38·3 சதவிகிதம் ஆகும். ஆனால் அமெரிக்காவில் இந்த வயதுக்குள் இருக்கும் மக்கள்தொகை 27 சதவிகிதமாகும். அதைப்போல் 55 வயதுக்கு மேல் உள்ளவர்களின் எண்ணிக்கை 8·3 சதவிகித மாகும். ஆனால் அமெரிக்காவில் 16·9 சதவிகிதம்; பிரான்ஸ்,

இங்கிலாந்து ஆகிய நாடுகளில் 21 சதவிகிதத்திற்கு மேல் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. பொதுவாக, உழைக்கும் சக்தியைப் பெற்றவர்களாக 15 வயதுக்கு மேல் 60 வயதுக்குள் உள்ளவர்களைத்தான் கருத முடியும். 1961 கணக்கின்படி மொத்தம் 44 கோடி மக்களில் 19 கோடி மக்கள்தான் வேலை செய்யும் மக்களாக கணிக்கப்பட்டுள்ளனர். கீழ் உள்ள அட்டவணை வேலை செய்யும் மக்கள்தொகை வேலை செய்ய முடியாத மக்கள்தொகை ஆகியவற்றை எடுத்துக்காட்டுகிறது.

## அட்டவணை 25

| | மொத்த மக்கள்தொகை (கோடியில்) | | | மொத்த மக்கள்தொகை சதவிகிதம் | | |
|---|---|---|---|---|---|---|
| | வேலை செய்பவர்கள் | வேலை செய்யாதவர்கள் | மொத்தம் | வேலை செய்பவர்கள் | வேலை செய்யாதவர்கள் | மொத்தம் |
| வேலை செய்பவர்கள் | 18·84 | 24·99 | 43·83 | 42·98 | 57·02 | 100 |
| ஆண்கள் | 12·90 | 9·68 | 22·58 | 57·12 | 42·88 | 100 |
| பெண்கள் | 5·04 | 16·21 | 21·25 | 27·96 | 72·04 | 100 |

இந்தியாவில் வேலை செய்யக்கூடிய மக்கள் ஆண்களில் 13 கோடியும் பெண்களில் 5 கோடியும் உள்ளனர். அதாவது மொத்த ஜனத்தொகையில் 43 சதவிகிதம் வேலைசெய்யும் மக்களாகும். 57 சதவிகிதம் ஆண்களில், 28 சதவிகிதம் பெண்களில் வேலை செய்யும் மக்களாகக் கருதப்படுகின்றனர். வேலை செய்யும் மக்கள் வேலை செய்யாத மக்கள் ஆகியோரின் விகிதாசாரம் 43:57 ஆகும். 100 பேர் வாழ்வதற்கு 43 பேர் உழைத்தாக வேண்டும் அட்டவணை 26-ல் பல்வேறு நாடுகளில் வேலை செய்யும் மக்களின் சதவிகிதமும், வேலைசெய்யும் மக்களில் ஆண்கள், பெண்கள் சதவிகிதமும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

## அட்டவணை 26

| நாடுகள் | ஆண்டு | வேலை செய் பவர்கள் | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|---|---|
| ரஷ்யா | 1959 | 52·2 | 55·8 | 49·3 |
| மேற்கு ஜெர்மனி | 1960 | 47·5 | 63·6 | 33·2 |
| இங்கிலாந்து | 1951 | 46·2 | 66·6 | 27·4 |
| பிரான்ஸ் | 1958 | 44·5 | 61·1 | 28·8 |
| அமெரிக்கா | 1961 | 40·4 | 55·0 | 26·1 |
| இந்தியா | 1961 | 43·0 | 57·0 | 28·0 |

இந்தியாவை மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இந்தியாவும் கொஞ்சம் தேவலாம். இருந்த போதிலும் பிறப்பு விகிதம் எதிர்காலத்தில் குறைந்தால் நிச்சயமாக தன் நிலையை மேலை நாடுகளைப்போல் உயர்த்திக்கொள்ளும். அதைப்போல் பெண்களுக்குப் போதிய கல்வி அளிக்கப்படுமானுல் வேலை செய்யும் பெண்களின் எண்ணிக்கையும் உயரும். இந்தியாவில் அதிக பேர் வேலை செய்யும் மக்களாக இருந்தபோதிலும் அவர் களுடைய உற்பத்தித் திறன் குறைவாக உள்ளது. உதாரணமாக, மூன்று இந்தியர்கள் செய்யக் கூடிய வேலைகளை ஓர் ஆங்கிலேயர் செய்து முடிப்பார். ஆகவே வேலை செய்யும் மக்களின் விகிதா சாரம் அதிகமிருந்தாலும் உற்பத்தி எதிர்பார்த்தபடி இல்லை. மேல் நாடுகளில் மக்களின் உற்பத்தித் திறன் அதிகம். ரஷ்யா, ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளில் மக்கள் கடுமையாக உழைப்பார்கள். அதனுல் உற்பத்தித்திறனும் கூடுதல் ஆகிறது. உற்பத்தியும் அதிகரிக்கிறது. ஆனுல் இந்தியாவில் பெரும்பாலோர் வேலை செய்தாலும் உற்பத்தி மொத்தத்தில் குறைவாக உள்ளது. ஆகவே தான் ஏழ்மை இன்னும் இங்கு குடிகொண்டு இருக்கிறது.

# 7. வேலைகளுக்கு ஏற்றவாறு மக்கள்தொகைப் பங்கீடு
## (Occupational distribution of population)

ஒரு நாட்டின் மக்கள்தொகையை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று வேலை செய்யும் மக்கள், மற்றொன்று வேலை செய்யாதவர்கள். வேலை செய்யும் மக்கள் யாவரும் ஒரே விதமான வேலையில் ஈடுபடுவதில்லை. சிலர் விவசாயத்திலும், சிலர் தொழிற்சாலைகளிலும், போக்குவரத்து கம்பெனிகளிலும், சிலர் ஆசிரியர்களாகவும், வக்கீல்களாகவும், டாக்டர்களாகவும் பலவிதமாகப் பணியாற்றுகிறார்கள். இந்த வேலைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

1. முதன்மையான வேலைகள்:

விவசாயம், கால்நடைகளைப் பேணி வளர்த்தல், காடுகள், மீன் பிடித்தல்போன்ற வேலைகள் முதன்மையான தொழில்களாகும். இவையே நாட்டின் தொன்மையான தொழில்கள். விவசாயத்தின் மூலமாக உணவு உற்பத்தி செய்தல், கால் நடைகளைப் பராமரித்தல், வேட்டையாடுதல், மீன் பிடித்தல்போன்ற பலவாகும். இவர்கள் உற்பத்தி செய்யக்கூடிய பொருள்கள் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதவை.

2. இரண்டாம் வகைத் தொழில்கள்:

பெரிய தொழிற்சாலைகள், சிறிய தொழிற்சாலைகள், பல்வேறு ஆலைகள் இவைகள் இரண்டாம் வகைத் தொழில்களைச் சேர்ந்தவை. முதன்மையான வேலையில் உள்ளவர்கள் மூலப் பொருள்களை உற்பத்தி செய்து ஆலைகளுக்கு அனுப்புவார்கள். ஆலைகளில் முடிவடைந்த பொருள்களைச் செய்வதுதான் சிறந்த வேலையாகும். உதாரணமாக, கிராமப் பகுதிகளில் விவசாயிகள் பருத்தியை

உற்பத்தி செய்து நகர்ப்புறத்தில் உள்ள தொழிற்சாலைகளுக்கு அனுப்புகிறார்கள். தொழிற்சாலைகளில் பஞ்சை நூலாகவும், நூலைத் துணியாகவும் செய்கிறார்கள். மக்களுக்கு இந்தப் பொருள்கள் விநியோகிக்கப்படுகின்றன. ஆகவே எத்தனை பேர்கள் தொழிற்சாலைகளிலும், ஆலைகளிலும், குடிசைத் தொழில்களிலும் பணிபுரிகிறார்கள் என்பதையும் அறியவேண்டும்.

3. மூன்றாம் வகைத் தொழில்கள்:

போக்குவரத்து, தபால், தந்தி, செய்தித்துறை, பாங்குகள், நிதிக் கார்ப்பரேஷன், சொந்தமாகத் தொழில்கள் நடத்தும் டாக்டர்கள், வக்கீல்கள் அரசாங்க வேலையில் இருப்பவர்கள் யாவரும் இந்த வகையைச் சார்ந்தவர்கள். இந்தியாவில் வேலை செய்யும் மக்கள் இந்த மூன்று விதமான தொழில்களில் பங்கிடப்பட்டுள்ளார்கள். இந்தப் பங்கீட்டு முறைக்கு வேலையின் அமைப்பு முறை எனவும் கூறலாம்.

பல நாடுகளில் வேலை செய்யும் மக்களின் பங்கீட்டு முறையைக் கீழேயுள்ள அட்டவணையில் அறியலாம்.

அட்டவணை 27

| நாடுகள் | காலம் | வேலை செய்யும் மக்களின் அதிகரிப்பு | அதிகரிப்பு அல்லது குறைப்பு: முதன்மையான தொழில்கள் | இரண்டாம் வகைத் தொழில்கள் | மூன்றாம் வகைத் தொழில்கள் |
|---|---|---|---|---|---|
| அமெரிக்கா | 1870–1920 | 100 | 16·3 | 37·7 | 46·0 |
| இங்கிலாந்து | 1841–1891 | 100 | 3·1 | 51·9 | 45·0 |
| ஜெர்மனி | 1907–1939 | 100 | 29·8 | 25·3 | 44·9 |
| சுவீடன் | 1900–1945 | 100 | –24·6 | 79·6 | 45·0 |
| ஜப்பான் | 1872–1920 | 100 | 2·0 | 47·6 | 50·4 |

வேலையின் அமைப்பு முறையும், பொருளாதார முன்னேற்றமும் :- சிறப்பான பொருளாதார மேதைகளான காலின் கிளார்க் (Colin clark), ஃபிஷர் (Fisher) என்பவர்கள் வேலையின் அமைப்புக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உள்ள நேரிடையான

தொடர்பை எடுத்துக் கூறியுள்ளார்கள். உதாரணமாக, ஃபிஷர் அவர்கள் கூறுவது யாதெனில், முன்னேற்றப் பொருளாதாரம் என்பது முதன்மையான தொழிலிலிருந்து இரண்டாம் தர அல்லது மூன்றாம் தரத் தொழில்களின் வகைக்கு மாறுவது எனக் குறிப்பிட்டுள்ளார். இதன் காரணமாக முதன்மையான தொழிலிலிருந்து இரண்டாம் வகைத் தொழிலுக்கு முதலீடு செய்வதும், மக்கள் விவசாய வேலையிலிருந்து தொழில்களில் பணியாற்ற நகர்ப்புறங்களை நோக்கி செல்வதும் நடைபெறுகின்றன. ஒரு நாடானது முதன்மையான தொழில்களில் அதிகக் கவனம் செலுத்துமானால் அது விவசாய நாடாகக் கருதப்படும். ஒரு நாடு விவசாய நிலையிலிருந்து தொழில் நிலையை அடையும்போது மக்களின் வேலைகளில் மாற்றம் ஏற்படுகிறது. மேலும், பொருளாதார வளர்ச்சியினால் பொருளாதாரம் மேலும் வளர்ந்து தொழில் வளர்ச்சியின் உச்ச கட்டத்தை அடையும்போது மூன்றாம் வகையினை வந்து அடையும். குறிப்பாக போக்குவரத்து, செய்தித் துறை, பாங்குத்துறைகள் வளர்ச்சி அடைகின்றன. மக்களும் இதுபோன்ற நிலையங்களில் பணியாற்றுகின்றனர். ஆகவே பொருளாதார முன்னேற்றத்திற்கும் மக்களின் வேலைப் பங்கீட்டு முறைக்கும் தொடர்பு உண்டு.

வளர்ச்சி அடையும்போது முதல் வகையிலிருந்து இரண்டாவது வகைக்கு மக்கள் வேலையில் அமர்த்தப்படுகிறார்கள். பொருளாதாரத்தில் முன்னேறிய இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் மக்களில் சிறிய பகுதியினர் முதன்மையான தொழில்களிலும், பெரும் பகுதியினர் இரண்டாம் வகை, மூன்றாம் வகைத் தொழில்களிலும் பணியாற்றுகிறார்கள். பின்தங்கிய நாடுகளிலும், ஏழ்மை நாடுகளிலும், மக்களின் பெரும்பான்மையோர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். சிறுபான்மையோர் தொழில்களில் ஈடுபட்டுள்ளார்கள். ஆகவே தொழில் முன்னேற்றத்திற்கும் மக்களின் வேலைப் பங்கீட்டுக்கும் தொடர்பு உண்டு என்பதில் சந்தேகம் இல்லை.

தொழில்களில் முன்னேறிய நாடுகளான அமெரிக்கா, இங்கிலாந்து இவற்றில் மூன்றாம் வகையான தொழில்களில் மொத்த மக்கள்தொகையில் 50 சதவிகிதம் பணியாற்றுகிறார்கள். ஆனால் இந்தியாவில் மூன்றாம் வகைத் தொழில்களில் மொத்த மக்கள்தொகையில் 16 சதவிகிதம் பணியாற்றுகிறார்கள். விவசாயத்தில் முன்னேறிய நாடுகளான ஆஸ்திரேலியா, நியுஜிலாந்து போன்ற நாடுகளில் விவசாயத்தில் ஈடுபடும் மக்கள்தொகை 25 சதவிகிதம்தான். மூன்றாம் வகைத் தொழில்களில் ஈடுபாடு உடையவர்கள் 75 சதவிகிதமாவர். ஆனால், இந்தியாவில்

75 சதவிகிதம் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். இந்திய மக்களின் வேலைமுறைகளைச் சற்று ஆராய்வோம். கீழேயுள்ள அட்டவணையில் 1961 மக்கள்தொகைக் கணக்கின்படி வேலை செய்யும், செய்யாத மக்கள்தொகை சதவிகிதத்தில் காட்டப் பட்டுள்ளது.

## அட்டவணை 28

### 1961 மக்கள்தொகைக் கணக்கின்படி

| | எண்ணிக்கை மில்லியனில் | சதவிகிதம் |
|---|---|---|
| மொத்த மக்கள்தொகை | 439 | 100 |
| வேலை செய்யும் மக்களின் எண்ணிக்கை | 188 | 43 |
| வேலை செய்யாத மக்களின் எண்ணிக்கை | 251 | 57 |

மொத்த மக்கள்தொகையும், வேலை செய்யும் மக்கள்தொகையும் (மில்லியன்கள்)

| | 1951 | 1960-61 | 1966-67 |
|---|---|---|---|
| மொத்த மக்கள்தொகை | 361·1 | 439·2 | 498·9 |
| மொத்தம் வேலை செய்யும் மக்களின் எண்ணிக்கை* | 140·9 | 187·0 | 214·4 |
| வேலை செய்யும் மக்களின் சதவீதம் | 39·1 | 42·9 | 42·9 |

1961-ன் கணக்குப்படி இந்தியாவில் வேலை செய்யாத மக்களின் எண்ணிக்கை 57 சதவிகிதமாகும். இவர்கள் அநேகமாகக் குழந்தைகள், வயதானவர்கள், நோயுற்றவர்கள், வேலை செய்ய முடியாத நிலையில் உள்ளவர்கள், வேலையில்லாதவர்கள் ஆகியவர்களே. வேலை செய்யும் மக்களின் எண்ணிக்கை 43 சதவிகிதமாகும். இவர்கள் பல்வேறு வேலைகளில் ஈடுபட்டுள்ளார்கள். 1961-ன் கணக்குப்படி வேலை செய்யும் மக்களின் அட்டவணை கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அட்டவணையிலிருந்து நாம் தெரிந்துகொள்வது யாதெனில் இந்தியாவில் வேலை செய்யும் மக்கள்தொகையில் முக்கால் பாகம் முதன்மையான தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள். சிறப்பாக, விவசாயத்தைப் பெரும்பாலான மக்கள் நம்பி வாழ்கின்றனர்.

## அட்டவணை 29

| | | |
|---|---|---|
| முதன்மையான தொழில்கள் → | | 73·6% |
| விவசாயம் | 53·0 | |
| நிலமில்லா விவசாயிகள் | 16·8 | |
| காடுகள், தோட்டப் பயிர்கள் | 3·8 | |
| இரண்டாம் வகையான தொழில்கள் → | | 10·4% |
| ஆலைத் தொழில்கள் | 9·3 | |
| ஆக்க வேலைகள் | 1·1 | |
| மூன்றும் வகையான தொழில்கள் → | | 16·0% |
| வியாபாரம், பாங்குகள் | 5·7 | |
| இதர வேலைகள் | 10·3 | |
| எல்லா வேலைகளும் சேர்ந்து → | | 100 |

## அட்டவணை 30

### வேலைவாரியாக மக்கள்தொகைப் பகிர்வு 1901-1967

| | 1901 | 1931 | 1951 | 1961 | 1967 |
|---|---|---|---|---|---|
| முதன்மையான தொழில்கள் | 71·8 | 74·8 | 72·1 | 72·3 | 73·2 |
| 2ஆம் வகையான தொழில்கள் | 12·6 | 10·2 | 10·6 | 11·6 | 10·9 |
| 3ஆம் வகையான தொழில்கள் | 15·6 | 15·0 | 17·3 | 16·0 | 15·9 |

வேலை செய்யும் மக்கள்தொகையில் இரண்டாம் வகை, மூன்றும் வகைத் தொழில்களில் கால்பாகம்தான் ஈடுபட்டுள்ளார்கள். இந்தியாவில் தொழில், வர்த்தகம், வாணிகம், பாங்குகள் இவற்றில் பணிபுரிபவர்கள் மொத்தத்தில் 25 சதவிகிதம் ஆவார்கள். இந்தியாவில் எவ்வாறு இந்த வேலைசெய்யும் மக்களின் பங்கீட்டுமுறை மாறி வருகிறது என்பதையும் சற்று ஆராய்வோம்.

## அட்டவணை 31

| வகைகள் | 1901 | 1951 | 1961 |
|---|---|---|---|
| முதன்மையான தொழில்கள் | 71·5 | 72·6 | 73·6 |
| 2ஆம் வகையான தொழில்கள் | 11·7 | 10·1 | 10·4 |
| 3ஆம் வகையான தொழில்கள் | 16·8 | 17·3 | 16·0 |
| | 100 | 100 | 100 |

1901ஆம் ஆண்டிலிருந்து முதன்மையான தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. 1901ஆம் ஆண்டில் மக்களில் 71·5 சதவிகிதம் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தார்கள். 1951ஆம் ஆண்டில் இது 72·6 சதவிகிதமாக உயர்ந்தது. 1961ஆம் ஆண்டில் மேலும் 73·6 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. ஆகவே ஆண்டுதோறும் விவசாயத்தில் மக்கள் அதிகமாக ஈடுபடுவதை இது எடுத்துக்காட்டுகிறது. இரண்டாம் வகை, மூன்றும் வகைத் தொழில்களில் ஈடுபட்டுள்ள மக்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் குறைந்துகொண்டே வந்துள்ளது. 1901ஆம் ஆண்டில் இந்த இருவகைத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்கள் 28·5 சதவிகிதமாக இருந்தது. ஆனல் 1951ஆம் ஆண்டில் இது 27·4 சதவிகிதமாகவும், 1961ஆம் ஆண்டில் மேலும் இது 26·4 சதவிகிதமாகவும் வந்துள்ளது.

ஆகவே இரண்டாம் வகை, மூன்றும் வகைத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டு வருகிறது. மூன்று ஐந்தாண்டு திட்டங்களைச் செயல்படுத்தியும் தொழில்களை அதிகரித்தும், இதில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கை கணிசமாக உயரவில்லை.

சென்ற 60 ஆண்டுகாலமாக இந்தியாவில் வேலைசெய்யும் மக்களின் பங்கீட்டு அமைப்பில் யாதொரு மாற்றமும் காணவில்லை. அதற்கு பதிலாக இந்தியாவில் பின்தங்கிய நிலை வளர்ந்து வருவதை எடுத்துக் காட்டுகிறது. மக்கள் மாற்று வேலைகளை நாடிச் செல்லாமல் மேலும் மேலும் விவசாயத்தையே நம்பி வாழ்கிருர்கள். என்பதைப் புலப்படுத்துகிறது. இது நமக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணுகிறது. ஏனெனில் அரசாங்கம் தொழில், வர்த்தகம், வாணிகம், போக்குவரத்து முதலிய துறைகளுக்கு எவ்வளவோ முதலீடு செய்தும், முன்னேற்றத்திற்கு முயற்சிகள் எடுத்தும், யாதொரு மாற்றமும் காணவில்லை. இதற்கு முக்கியக் காரணம், மக்கள்தொகை அதிவிரைவில் வளர்ந்து வருவதுதான். அதிகப்படியாகப் பெருகிவரும் மக்கள் இரண்டாம் வகை, மூன்றும் வகைத் தொழில்கள் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்த போதிலும் இவற்றில் ஈடுபடுவதில்லை. பெருகிவரும் மக்கள் மீண்டும் மீண்டும் முதன்மையான தொழில்களையே மேற்கொள்கின்றனர். பின்தங்கிய நாடுகளில் பொதுவாக மக்கள்தொகையில் 70 சதவிகிதம் விவசாயத்தில் ஈடுபாடு உடையவர்கள்; இருந்த போதிலும் உணவு உற்பத்தி எல்லோருக்கும் போதுமானதாக இல்லை.

ஆகவே விவசாய நாட்டில் பெரும்பான்மையோர் விவசாயத்தை மேற்கொண்டிருந்தும், உணவுப் பற்றுக்குறை இன்னும்

இருந்துவருவது வியக்கத்தக்கதாகும். அமெரிக்காவில் விவசாயத்தில், மொத்த ஜனத்தொகையில் 10 சதவிகிதம்தான் ஈடுபாடு உடையவர்கள். 90 சதவிகிதம் இரண்டாம், மூன்றும் வகைத் தொழில்களை மேற்கொண்டுள்ளார்கள். அமெரிக்காவில் தனி ஒரு குடியானவன் 20 பேர்களுக்கு வேண்டிய உணவை உற்பத்தி செய்து அளிப்பர்ன். மேலும் ஏற்றுமதியும் செய்கிறார்கள். அமெரிக்காவில் விவசாயம் நவீன முறையில் நடைபெறுகிறது. இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. பெரிய அளவில் விவசாயம் நடைபெறுகிறது. விஞ்ஞான முறைகள் பின்பற்றப்படுகின்றன. ஆகவே குறைவான பேர்கள் விவசாயம் செய்த போதிலும், உள்நாட்டுக்கு வேண்டிய உணவு உற்பத்தியை அளித்ததுபோக மீதியை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். அங்கு உணவுக்குப் பஞ்சமில்லை. ஆனால் இந்தியாவில் இன்னும் உணவுப் பஞ்சம் தீரவில்லை. நாள் ஒன்றுக்கு ஒரு கோடிக்குப் போதுமான உணவு தானியங்களை இந்தியா இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. ஆகவே அதிக பேர்கள் விவசாயத்தை மேற்கொண்டாலும் உற்பத்திப் பற்றாக்குறை இருந்து வருகிறது. பேராசிரியர் A. M. குஸ்ரோ (A. M. Khusro) தம்முடைய புத்தகத்தில் "பொருளாதார முன்னேற்றமும் மக்கள்தொகை மாற்றமின்மையும்" என்ற தலைப்பில் இந்தியாவில் 1975ஆம் ஆண்டு வரையில் மக்கள்தொகை வேலை அமைப்பில் யாதொரு மாற்றமும் ஏற்படாது எனத் திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளார்கள். ஏனெனில் மக்கள்தொகைப் பெருக்கம் ஒரு பக்கம், வேலையில்லாத் திண்டாட்டம் மற்றொரு பக்கம், விவசாயத்தில் அதிகப்படியான மக்கள் ஈடுபாடு போன்ற பல காரணங்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்கள்.

இந்தியாவில் திட்டக் கமிஷன் இந்த வேலை அமைப்பு முறையை மாற்றி அமைக்க வேண்டுமெனக் கூறிவந்துள்ளது. அதாவது 60 சதவிகித மக்களை விவசாயத்திலும், 40 சதவிகித மக்களை இரண்டாம், மூன்றும் வகைத் தொழில்களிலும் ஈடுபடுத்த வேண்டும் என்று கூறுகிறது. விவசாயத்தை மேலும் திறமையுடையதாக மாற்றவேண்டும். நாட்டின் வருமானத்தையும் அதிகரிக்க வேண்டும். அதனால் தலா வருமானமும் உயரும். இந்தியாவை உலகில் முதன்மையான நாடாக மாற்ற முடியும். ஆனால் இப்போது இருக்கும் நிலையில் மேலே குறிப்பிட்டுள்ள குறிக்கோள்களை அடைய வேண்டுமானால் முதற்கண் மக்கள்தொகையை விரைவில் கட்டுப்படுத்தியாக வேண்டும். இந்தியாவில் தொழிற்சாலைகள், ஆலைகள் முதலியவற்றில் பணிபுரியும் மக்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் குறைந்து வருகிறது என்பதைப் பின்வரும் அட்டவணை எடுத்துக் காட்டுகிறது.

## அட்டவணை 32

| விவரங்கள் | 1911 | 1921 | 1931 | 1941 |
|---|---|---|---|---|
| மக்கள்தொகை (மில்லியன்கள்) | 315 | 319 | 353 | 400 |
| வேலை செய்யும் மக்கள் ( ,, ) | 149 | 146 | 156 | 170 |
| தொழிலில் வேலை செய்யும் மக்கள் ( ,, ) | 17·5 | 15·7 | 15·3 | 16·0 |
| வேலைசெய்யும் மக்களில் தொழிலில் வேலை செய்யும் மக்கள் சதவிகிதம் | 11·0 | 11·0 | 10·0 | 9·4 |
| மொத்த மக்கள்தொகையில் தொழிலில் வேலை செய்யும் மக்கள் சதவிகிதம் | 5·5 | 4·9 | 4·3 | 4·0 |

## அட்டவணை 33

**வேலைகளுக்கு ஏற்றவாறு மக்கள்தொகையை வகைப்படுத்தல்—மில்லியன்கள் - 1951.**

| வேலைகள் | சுதந்திரமாக | சுதந்திரமாக அல்லாமல் | சம்பாத்தியத்தை நம்பி யுள்ளவர்கள் | மொத்தம் | மொத்த மக்கள் சதவிகிதம் |
|---|---|---|---|---|---|
| 1. சொந்த நிலத்தைக் கொண்டு விவசாயம் | 45·7 | 100·1 | 21·5 | 167·3 | 46·9 |
| 2. சொந்த நிலமில்லாதவர்கள் விவசாயம் | 8·8 | 18·9 | 3·9 | 31·6 | 8·8 |
| 3. விவசாயத் தொழில்கள் | 14·9 | 24·7 | 5·2 | 44·8 | 12·6 |
| 4. விவசாயம் செய்யாமல் வாடகை வாங்குபவர்கள் | 1·6 | 3·3 | 0·4 | 5·3 | 1·5 |
| விவசாயம் செய்யும் மக்கள் - மொத்தம் | 71·0 | 147·0 | 31·0 | 249·0 | 69·8 |
| 5. தொழில்கள் | 12·2 | 22·3 | 3·2 | 37·7 | 10·5 |
| 6. வர்த்தகம் | 5·9 | 14·5 | 0·9 | 21·3 | 6·0 |
| 7. போக்குவரத்து | 1·7 | 3·7 | 0·2 | 5·6 | 1·6 |
| 8. மற்ற வேலைகள் | 13·6 | 26·8 | 2·6 | 43·0 | 12·1 |
| விவசாயம் செய்யாத மக்கள்-மொத்தம் | 33·4 | 67·3 | 6·9 | 107·6 | 30·2 |
| மொத்த மக்கள் | 104·4 | 214·3 | 37·9 | 356·6 | 100·0 |

இந்தியாவில் கிட்டத்தட்ட 85 சதவிகிதம் முதல் 90 சதவிகிதம் வரையில் நேர்முகமாக அல்லது மறைமுகமாக விவசாயத்தில் ஈடுபாடு உடையவர்கள். அதாவது மொத்த ஜனத்தொகையில் மூன்றில் இரண்டு பங்காகும். தொழில்களில் ஈடுபடும் மக்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட 5 சதவிகிதமாகும். அதுவும் தற்சமயம் குறைந்துகொண்டே வருகிறது.

1951ஆம் ஆண்டில், 1961ஆம் ஆண்டில் எவ்வாறு வேலை அமைப்பு முறையில் மாறுதல் ஏற்பட்டுள்ளன என்பதைக் கீழேயுள்ள அட்டவணையின் மூலமாக ஆராயலாம்.

அட்டவணை 34

வேலைக்கு ஏற்றவாறு பகிர்வு

| விவரங்கள் | 1931 | 1951 | 1961 |
|---|---|---|---|
| விவசாயம் | 65·84 | 69·8 | 69·53 |
| தொழில் | 10·38 | 10·5 | 10·61 |
| வர்த்தகம் | 5·83 | 5·9 | 4·05 |
| போக்குவரத்து | 1·65 | 1·5 | 1·59 |
| இதர வேலைகள் | 16·30 | 12·3 | 14·22 |
| | 100 | 100 | 100 |

1931ஆம் ஆண்டில் இந்தியாவில் மைய பாங்கு விசாரணைக் கமிட்டியின் அறிக்கையின்படி 25 மில்லியன் மக்கள் விவசாயம் அல்லாத தொழில்களில் ஈடுபட்டுள்ளார்கள்; அதிலும் தொழில்களில் 16 மில்லியன் மக்கள் பணியாற்றுகிறார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 100 பேர்களை வேலை செய்யும் மக்களாகக் கொண்டால், அதில் 65 பேர் விவசாயத்திலும், 10 பேர் தொழில்களிலும், 12 பேர் அரசாங்க வேலைகளிலும், 6 பேர் வர்த்தகம், வாணிகம் இவற்றிலும், 3 பேர் காட்டு இலாக்கா, 2 பேர் போக்குவரத்து இலாக்கா, 2 பேர் ஆக்க வேலைகளிலும் ஈடுபடுகிறார்கள். இந்தியாவில் மட்டும்தான் விவசாயத்தில் அதிக பேர் உள்ளனர். மற்ற நாடுகளில் ஒப்பிட்டுப் பார்க்கையில், குறிப்பாக விவசாயத்தில் முன்னேறிய நாடுகளை நோக்கும்போது, அங்கு விவசாயத்தில் ஈடுபடுபவர்கள் குறைவாக உள்ளனர். இதனைப் பின்வரும் புள்ளி விவரங்களிலிருந்து நாம் அறியலாம்.

**மற்ற நாடுகளில் விவசாயத்தில் ஈடுபாடு உடையவர்கள்.**

| நாடுகள் | | சதவிகிதம் |
|---|---|---|
| இங்கிலாந்து | — | 6 |
| அமெரிக்கா | — | 19 |
| பெல்ஜியம் | — | 17 |
| சுவீடன் | — | 24 |
| நியூஜிலாந்து | — | 20 |
| ஆஸ்திரேலியா | — | 16 |
| கனடா | — | 26 |

இந்தியர்வில் மாநிலங்களைப்பற்றி ஆராயும்போது அதிகமான மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். ஒன்று அல்லது இரண்டு மாநிலங்களைத் தவிரப் பெரும்பாலும் எல்லா மாநிலங்களிலும் விவசாயத்தைச் சிறப்பான தொழிலாகக் கொண்டு மக்கள் வேலை செய்து வருகின்றார்கள்.

**மாநிலங்களில் விவசாயத்தில் பணிபுரியும் மக்கள்தொகை சதவிகிதம்.**

| மாநிலங்கள் | சதவிகிதம் |
|---|---|
| மேற்கு வங்காளம் | 57·2 |
| பம்பாய் | 61·5 |
| பஞ்சாப் | 64·5 |
| சென்னை | 64·9 |
| ராஜஸ்தான் | 70·9 |
| அஸ்ஸாம் | 73·3 |
| உத்தரப்பிரதேசம் | 74·2 |
| மத்தியப்பிரதேசம் | 76·0 |
| ஒரிஸ்ஸா | 79·3 |
| பீகார் | 86·0 |

இந்தியாவில் நிலமற்ற விவசாயிகளின் எண்ணிக்கையும் உயர்ந்து கொண்டே வருகிறது. உதாரணமாக,

| | | |
|---|---|---|
| 1882 ஆம் ஆண்டில் | | 7·5 மில்லியன்கள் |
| 1921 | ,, | 21 மில்லியன்கள் |
| 1931 | ,, | 33 மில்லியன்கள் |

இவ்வாறு உயர்வதற்குக் காரணம் மக்கள்தொகை அதிகரிப்புக்கு ஏற்றவாறு போதிய அளவிற்கு நிலம் இல்லாத குறையினால் நிலமற்ற விவசாயிகளின் எண்ணிக்கை வளர்ந்துகொண்டே வருகிறது. ஆகவே இந்தியாவில் பெரும்பாலோர் விவசாயத்தைப் பெரியதாகக் கொண்டு வாழ்ந்துவருகின்றார்கள்.

# 8. கல்வி

ஆயுட்காலம், கல்வியின் தரம், நுட்பப்பயிற்சியின் நிலை முதலியவற்றைக் கொண்டுதான் ஒரு நாட்டின் மக்கள் தரம் தீர் மானிக்கப்படுகிறது. 1961 கணக்கின்படி இந்தியாவில் கல்வி கற்றவர்கள் 24 சதவிகிதமாகும். ஆனால் முன்னேற்றமடைந்த நாடுகளான ஆஸ்திரேலியா, கனடா, இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் கல்வி கற்றவர்களின் எண்ணிக்கை 95 சத விகிதத்திற்கு மேல் உள்ளது. பள்ளி செல்லும் சிறுவர், சிறுமியர் கள், குறிப்பாக 6 வயது முதல் 15 வயது வரை உள்ளவர்களின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டே வருகிறது. உயர்ந்து வரும் எண்ணிக்கையைச் சதவிகிதத்தில் கீழே காணலாம்.

1950-51—25·4%
1960-61—39·9%
1965-66—50·0%

மொத்த மக்கள்தொகையில் பள்ளி செல்லும் குழந்தைகளின் எண்ணிக்கையை ஒப்பிட்டுப் பார்க்கையில் குறைவாக உள்ளது. மேலும் கல்வியில் ஏராளமான வீண் சேதமும் ஏற்படுகிறது. எத்தனையோ குழந்தைகள் 5-வது வகுப்புவரை அல்லது உயர் நிலைப்பள்ளி வரையில் படிப்பை முடிக்காமல் நடுவிலேயே நிறுத்தி விடுகிறார்கள். இந்தியாவில் இன்று 1மில்லியன் மக்களுக்கு 13 டாக்டர்கள், 1மில்லியன் மக்களுக்கு 16 இஞ்ஜினியர்கள் வீதம்தான் உள்ளனர். மேல் நாடுகளில் ஏராளமான டாக்டர்கள், இஞ்ஜினியர் கள் நல்ல முறையில் படித்து, பயிற்சி பெற்று நாட்டிற்கு நற்பணி யாற்றுகிறார்கள்.

கல்வியின் அமைப்புதான் மக்களின் தரத்தை அறிந்துகொள்வதற் கான ஓர் அளவுகோல். பள்ளியில் எத்தனை ஆண்டுகள் படித்தனர் என்ற விவரத்தைச் சரியான முறைப்படி தயாரிப்பதில்லை. கல்வியின்

மட்டத்தை அறிந்துகொள்ள வெறும் எழுதப் படிக்கத் தெரிந்த வர்களின் புள்ளி விவரங்களைமட்டும் தயாரித்தால் போதாது. எத்தனை ஆண்டுகள் பள்ளியில் அல்லது கல்லூரியில் பயின்றனர் என்ற விவரம்தான் மிக அவசியம். அதுதான் உண்மையில் மக்களின் அறிவு வளர்ச்சியை எடுத்துக் காட்டும். இதுபோன்ற விவரங்களை உலகில் அமெரிக்கா ஒரு நாடுதான் தெளிவான புள்ளி களைத் தயாரித்து வெளியிடுகிறது. நம் நாட்டில் படித்தவர், படிக் காதவர் என இருவகையாகப் பிரித்துக் காட்டுகிறோம். இது திருப்தி யானதும் சரியானதும் அன்று. அடுத்து, வேலைகளுக்கு ஏற்ற வாறு படித்தவர்களை வகைசெய்தல் வேண்டும். எந்தெந்த வேலைக்கு யார், யார் தகுதியுடையவர்கள் என்பதைத் தீர்மானித்து அதற்குத் தகுந்தாற் போல் வேலையில் அவர்களை நியமனம் செய்வ தால் நல்ல திறமை, உற்சாகம், உற்பத்தித்திறன் முதலியவற்றைப் பெற முடியும். பல வேலைகளுக்கு தகுதியற்றவர்கள் அமர்த்தப் படுவதை நாம் காண்கிறோம். சில வேலைகளுக்குப் பள்ளிப் படிப்பு அல்லது உயர்நிலைக் கல்விகூடப் படிக்காமல் சிலர் அமர்த்தப்படு கிறார்கள். ஆகவே படிப்பின் வகைகள், எத்தனை ஆண்டுகள் பயின்றனர், எத்தனை பேர்கள் அதற்கென்று படித்தவர்கள் என்ற முழு விவரமும் நமக்குத் தேவைப்படுகிறது. அப்பொழுதுதான் பொருளாதார, சுகாதார கல்விக்குரிய நல்ல கொள்கைகளை உரு வாக்க முடியும்.

வயதுக்குத் தகுந்தவாறு படித்தவர்களை வகைப்படுத்தல் வேண்டும். குழந்தைகள் நான்கு வயது அல்லது ஐந்து வயது வரை உள்ளவர்களை நீக்க வேண்டும். புதியதாக வருபவர்களை அவ்வப்போது கணக்கில் சேர்த்துக்கொள்ள வேண்டும். 50 வயது அல்லது 60 வயதுக்குமேல் படிக்காதவர்களை நீக்கி விட லாம். 1931ஆம் ஆண்டில் 1,000 பேர்களுக்கு 80 பேர்கள் வீதமும், 1941ஆம் ஆண்டில் 1,000 பேர்களுக்கு 120 பேர்கள் வீதமும் படித்தவர்கள் என்றால் தன்னுடைய தாய்மொழியில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களைத்தான் இது குறிக்கும். தற்சமயம் 1971ஆம் ஆண்டின் கணக்குப்படி, படித்தவர்களின் எண்ணிக்கை 1961ஆம் ஆண்டில் இருந்ததை விட 5·32 சதவிகிதம் கூடுதலாக உயர்ந்துள்ளது. அதாவது 1961ஆம் ஆண்டில் 24·03 சத விகிதமும், 1971ஆம் ஆண்டில் 29·35 சதவிகிதமும் படித்த வர்கள். 1971ஆம் ஆண்டின் கணக்குப்படி சண்டிகட் பிராந் தியத்தில் கல்வியின் வளர்ச்சி மிக அதிகம். இங்கு இந்தியாவிலேயே, அதிகம் படித்தவர்கள் உள்ளனர். இதன்படி, இங்கு படித்தவர் களின் சதவிகிதம் 61·24 ஆகும். சில மாநிலங்கள் கல்விக்காக அதிக முயற்சிகள் எடுத்து முன்னேறி வருகின்றன. மகாராஷ்டிரம்

இமாசலப் பிரதேசம், ஹரியாணு மாநிலங்களில் கல்வி வளர்ந்து வருகிறது. ஆனால் இன்னும் சில மாநிலங்கள் கல்வியில் பின்தங்கிய நிலையில் உள்ளன. உதாரணமாக வட கிழக்கு எல்லை பிராந்தியம், அஸ்ஸாம், பீகார், மணிப்பூர் ஆகிய மாநிலங்களில் கல்வியில் போதிய அளவுக்கு முன்னேற்றம் காணப்படவில்லை.

## அட்டவணை 35

| 1971-ன்படி வரிசைப் படுத்தல் | மாநிலங்கள், மத்திய பிராந்தியங்கள் பெயர்கள் | 1971 | 1961 | 1961-ல் வரிசை | உயர்வு சதவிகிதம் |
|---|---|---|---|---|---|
| 1 | சண்டிகர் | 61·24 | 51·06 | 2 | 19·94 |
| 2 | கேரளா | 60·16 | 46·85 | 3 | 28·41 |
| 3 | டெல்லி | 56·65 | 52·75 | 1 | 7·39 |
| 4 | கோவா, டையு, டாமன் | 44·53 | 30·75 | 7 | 44·81 |
| 5 | அந்தமான், நிக்கோபார் தீவுகள் | 43·48 | 33·63 | 5 | 29·29 |
| 6 | லாக்கடைவ், மினிக்காய் தீவுகள் | 43·44 | 23·27 | 15 | 36·68 |
| 7 | பாண்டிச்சேரி | 43·36 | 37·43 | 4 | 15·84 |
| 8 | தமிழ்நாடு | 39·39 | 31·41 | 6 | 25·41 |
| 9 | மகாராஷ்டிரம் | 39·06 | 29·82 | 10 | 30·99 |
| 10 | குஜராத் | 35·70 | 30·45 | 8 | 17·24 |
| 11 | பஞ்சாப் | 33· 9 | 26·74 | 13 | 24·87 |
| 12 | மேற்கு வங்காளம் | 33 05 | 29 28 | 11 | 12 88 |
| 13 | மணிப்பூர் | 32·80 | 30·42 | 9 | 7·82 |
| 14 | மைசூர் | 31 47 | 25·40 | 14 | 23·90 |
| 15 | இமாசலப்பிரதேசம் | 31·32 | 21·26 | 17 | 47·32 |
| 16 | திரிப்புரா | 30·87 | 20·24 | 19 | 52·52 |
| 17 | அஸ்ஸாம் | 28.74 | 29·19 | 12 | -1 54 |
| 18 | மேகாலாயா | 28·41 | 18·47 | 21 | 53·82 |
| 19 | நாகாலாந்து | 27·33 | 17 91 | 23 | 52·60 |
| 20 | ஹரியாணு | 26 69 | 19·93 | 20 | 33 92 |
| 21 | ஒரிஸ்ஸா | 26 12 | 21 66 | 16 | 20·59 |
| 22 | ஆந்திரப்பிரதேசம் | 24·56 | 21·19 | 18 | 15 90 |
| 23 | மத்தியப்பிரதேசம் | 22·03 | 17·13 | 25 | 28 60 |
| 24 | உத்தரப்பிரதேசம் | 21·64 | 17 65 | 24 | 22·61 |
| 25 | பீகார் | 19 97 | 18 40 | 22 | 8·53 |
| 26 | ராஜஸ்தான் | 18·79 | 15 21 | 26 | 23 54 |
| 27 | ஜம்மு–காஷ்மீர் | 18·30 | 11·03 | 27 | 65 91 |
| 28 | தாத்ரா–நாகர் அவேலி | 14·86 | 9·48 | 28 | 56·75 |
| 29 | நேஃபா (NEFA) | 9·34 | 7·13 | 29 | 31·00 |

## அட்டவணை 36

### தமிழ்நாட்டில் மாவட்டவாரியாக படித்தவர்களின் எண்ணிக்கை.

| மாவட்டங்களின் பெயர் | 1971 | 1961 |
|---|---|---|
| சென்னைப்பட்டணம் | 1,532,839 | 1,028,326 |
| செங்கல்பட்டு | 1,128,319 | 612,588 |
| வட ஆர்க்காடு | 1,280,548 | 777,829 |
| தென் ஆர்க்காடு | 1,135,340 | 814,179 |
| தர்மபுரி | 369,486 | 209,175 |
| சேலம் | 937,398 | 547,344 |
| கோயம்புத்தூர் | 1,691,300 | 1,074,229 |
| நீலகிரி | 232,245 | 146,084 |
| மதுரை | 1,635,422 | 1,072,055 |
| திருச்சி | 1,439,619 | 954,927 |
| தஞ்சாவூர் | 1,527,413 | 1,088,855 |
| ராமநாதபுரம் | 1,129,570 | 777,559 |
| திருநெல்வேலி | 1,436,626 | 993,319 |
| கன்னியாகுமரி | 713,567 | 484,177 |

மேலேயுள்ள 35ஆம் அட்டவணையிலிருந்து சண்டிகட் கல்வியில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளதை அறிகிறோம். அங்கு படித்தவர்களின் சதவிகிதம் 61·24. கல்வியில் குறைவான பகுதி வடகிழக்கு எல்லைப் பிரதேசம். இங்கு படித்தவர்களின் எண்ணிக்கை 9·34 சதவிகிதம். ஒரிஸ்ஸா 1961ஆம் ஆண்டில் 16-வது இடத்தில் இருந்தது. 1971-ல் இது 21-வது இடத்தைப் போய் அடைந்துள்ளது. ஒரிஸ்ஸாவில் கல்வியில் பெருத்த முன்னேற்றம் இல்லை. மகாராஷ்டிரம், இமாசலப்பிரதேசம், ஹரியாணு முதலிய மாநிலங்கள் பெருந்த முயற்சியுடன் கல்வியில் முன்னேறியுள்ளன. அஸ்ஸாம், பீகார் ஆகியவை கல்விக்காகப் பெரும் முயற்சி எடுக்காதது வருந்தத்தக்கது. இந்த மாநிலங்களில் குறைவான முன்னேற்றம்தான் கண்டுள்ளது. மணிப்பூர் 8 சதவிகிதமும், ஆந்திரப்பிரதேசம் 15·9 சதவிகிதமும் கல்வியில் உயர்ந்துள்ளன.

இந்தியாவில் பெண்களைவிட ஆண்கள் அதிகம் படித்தவர்கள். ஆனால் அமெரிக்காவில் பெண்கள் ஆண்களைவிட அதிகம் படித்த வர்கள். நாட்டின் கலாச்சாரம் ஓங்க பெண்களின் பணி மிகவும் சிறப்பானது என அமெரிக்கர்கள் கூறுகின்றார்கள்; அங்கே பெண் கல்விக்கு உயர்விடம் தரப்பட்டுள்ளது. ஆனால் இந்தியாவில் படித்தவர்கள் ஆண்களில் 1,000 பேர்களுக்கு 195 பேர்கள், பெண்களில் 1,000 பேர்களுக்கு 52 பேர்கள்தான் எனக் கணக் கிடப்பட்டுள்ளது. 1941ஆம் ஆண்டின் கணக்கின்படி உலக மக்களில் பாதிக்குமேல் எழுதவும் படிக்கவும் தெரியாதவர்கள். அப்படிப் படிக்கத் தெரியாதவர்களின் எண்ணிக்கையில் மொத்தத் தில் மூன்றில் ஒரு பங்கு இந்தியாவில் உள்ளனர். படித்தவர்களின் எண்ணிக்கையின் சதவிகிதம் பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை வளர்ந்து கொண்டே வருகிறது.

1921 — 31·1 சதவிகிதம்

1931 — 41·4 சதவிகிதம்

படிக்காதவர்களின் எண்ணிக்கையும் ஆண்டுதோறும் அதிகரித்து வருகிறது.

1931 — 315 மில்லியன்கள்.

1941 — 341 மில்லியன்கள்.

இதற்கு முக்கிய காரணம் மக்கள்தொகை அதிகரிப்பு என்பதில் ஐயமில்லை. 10 ஆண்டுகளுக்குள் 35 மில்லியன்கள் படித்தவர்களாக ஆக்கினால், பிறப்பு விகிதத்துடன் இது ஒத்துவரும். அதாவது ஆண்டுதோறும் 3½ மில்லியன்கள் படித்தவர்களாக ஆக்கவேண்டும். மக்கள்தொகை வளர்ச்சியை முழுமையும் கட்டுப்படுத்த முடியாது. ஆகவே அதிகப் பள்ளிக்கூடங்கள், ஆசிரியர்கள் தேவைப்படுவார்கள். கிராமப் புறங்களில் பள்ளி வசதிகள் அதிகம் கிடையாது இரண்டு மகாயுத்தங்களின் இடைப்பட்ட காலத்தில் ரஷ்யாவின் கல்வித் தரம் ஓங்கி வளர்ந்துவிட்டது. முதல் மகாயுத்தத்திற்கு முன் ரஷ்யாவில் படிக்காதவர்கள் 78 சதவிகிதமாகும். ஆனால் பின்னர் 30 ஆண்டுகளில் படிக்காதவர்களின் எண்ணிக்கை 8 சதவிகிதத் திற்கும் குறைவு என்றால், எந்த அளவிற்கு ரஷ்யா 30 ஆண்டு களில் கல்விக்குத் தனிச் சிறப்பிடம் அளித்து ஊக்கத்துடன், உற்சாகத்துடன் கல்வியில் முன்னேறி வந்துள்ளது என்பதைப் பார்க்கும்போது நமக்கு வியப்பாக உள்ளது. 1939ஆம் ஆண்டில் படித்தவர்களின் எண்ணிக்கை 81·2 சதவிகிதம் உயர்ந்துள்ளது.

டாக்டர் ஃபிராங்க் லோரிமர் (Dr. Frank Lorimer) அவர்கள் ரஷ்யாவின் கல்வி வளர்ச்சியைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு கணித்துள்ளார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1897-ல் | 9 வயதுக்கு மேல் | படித்தவர்கள் | 24% |
| 1926-ல் | ,, | ,, | 51·1% |
| 1939-ல் | ,, | ,, | 81·2% |

இந்தியா ஐந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியது. ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆட்சி செய்தார்கள். ஆனால் கல்வியில் யாதொரு முன்னேற்றமும் ஏற்படவில்லை. அதிக அளவில் மக்கள் கல்வி இல்லாத காரணத்தால் ஜனநாயக முறையும் முரண்பாடாகத் தெரிகிறது. போதிய கல்வி இல்லாமையால் சரியாகச் சிந்திப்பதற்கும் நல்ல முறையில் எதையும் சீர்தூக்கிப் பார்க்கவும் முடியாத நிலையையும், கண்மூடித் தனமாகச் சில கொள்கைகளைப் பின்பற்றுவதையும் இன்றும் காண்கிறோம்.

கல்வி போதிய அளவு இல்லையே எனக் குறை கூறுவதைவிட பொதுக் கல்வித் திட்டம், முதியோர் கல்வித்திட்டம் சமூகநலக் கல்வி, விவசாயம், சுகாதாரம், குடிமைப் பயிற்சி, இவற்றைக் கல்வி முறையுடன் ஒன்றுபடுத்தல் நலம் பயக்கும். குறைந்த பட்சக் கல்வி ஒவ்வொருவருக்கும் மிக அவசியமாகும். நவீன உலகில் நவநாகரிமாக வாழ்வதற்குக் கல்வி மிக அவசியமாகும். ஆகவே கல்வியின் வசதியை அதிகரித்தல் வேண்டும். இங்கு பாரதியாரின் பாடல்களை நினைவில் கொள்ளுதல் வேண்டும்.

"வீடு தோறும் கலையின் விளக்கம்,
வீதி தோறும் இரண்டொரு பள்ளி;
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்க ளெங்கும் பலபல பள்ளி;
தேடு கல்வியி லாததொ ரூரைத்
தீயி னுக்கிரை யாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்"

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி ணுயிரம் நாட்டல்;
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்,
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்"

ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் ஆரம்ப பாடசாலை;
ஒவ்வொரு நகரத்திலும் ஓர் உயர் நிலைப்பள்ளி;
ஒவ்வொரு தாலுக்காவிலும் ஓர் கல்லூரி;
ஒவ்வொரு ஜில்லாவிலும் ஓர் மேற் பட்டப்படிப்புக் கல்லூரி.

இதுமட்டுமன்றி விவசாய, பொறியியல், மருத்துவக் கல்லூரிகள் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏற்படுத்தவேண்டும். கல்வியில் எல்லோருக்கும் சம வாய்ப்பு அளித்தல் வேண்டும். கல்வியில் ஏற்றத் தாழ்வுகளைப் போக்க வேண்டும். பணக்காரப் பிள்ளைகளுக்கு ஒரு கல்வி, ஏழைகளுக்கு ஒரு கல்விமுறை என்பதை அகற்றிடல் வேண்டும். அமெரிக்காவில் கல்வியின் தரம் அதிகமானது. இனும் படிப்பு, பரந்த படிப்பு, கட்டாயமானது, ஒரே விதமான படிப்பு, வேலை செய்து கொண்டே படிக்கும் வசதிகள், இரவுப் பள்ளிகள், நுட்பப் பயிற்சிக்குரிய பள்ளிகள் எனக் கல்வியில் எத்தனையோ முன்னேற்றங்களைக் கண்டுள்ளது. ஆனால் இந்தியாவில் போதிய வசதிகள் கிடையாது. தமிழ்நாட்டில் புகுமுக வகுப்பு வரையில் கட்டணமில்லாமல் இனமாகப் படிக்க வசதிகள் உண்டு. ஏனைய மாநிலங்களைவிடத் தமிழ்நாடு கல்வியில் முன்னேறி வருகிறது. படித்தவர்கள் தமிழ்நாட்டில் 42 சதவிகிதமாகும். படிக்காதவர்களின் எண்ணிக்கை 58 சதவிகிதமாகும். எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் குறிப்பாக 5-வது வகுப்புவரை படித்தவர்களின் எண்ணிக்கை 24 சதவிகிதமாகும். 200 பேர்களுக்கு 3 பட்டதாரிகள் என்று பட்டம் பெற்றவர்களின் விகிதம் கணக்கிடப்பட்டுள்ளது. ஒருவர் டாக்டர் ஆக வேண்டுமானல் குறைந்தது அரசாங்கச் செலவு ரூ. 32,000 ஆகிறது. அதைப் போல் ஒருவர் எஞ்சினியர் ஆகவேண்டுமானல் குறைந்தது அரசாங்கச் செலவு ரூ 26,000 ஆகிறது. இந்தியாவில் கல்வி கற்றுக் கொள்ளவும், கல்வியின் வசதிகளை அதிகரிக்கவும் ஏராளமான செலவுகள் பிடிக்கின்றன.

சுலபமான முறையில், சிக்கன முறையில் படிக்க முடியாத நிலையை இன்றும் காண்கிறோம். ஆகவே மேலை நாடுகளைப் போல் கல்வியை இலவசமாகவும், கட்டாயமாகவும், ஒரே மாதிரியானதாகவும், (Free, Compulsory and Universal) ஆக்க வேண்டும். அன்றுதான் கல்வியில் முன்னேற்றம் காணமுடியும். தகுதிமிக்க மாணவர்களுக்கு சம்பளச் சலுகைகள் அளித்திடல் வேண்டும். திறமையான மாணவர்களை மேலும் உற்சாகப்படுத்தி கல்வியின் உச்சக் கட்டம் வரை படிப்பதற்கு வசதிகள் அளித்திடல் வேண்டும்.

கல்வியில்லாமல் கிணற்றுத்தவளை மாதிரி வாழக்கூடாது. மேலை நாடுகள் பீடு நடைபோட்டு நடக்கும்போது நாம் மட்டும் கல்வியில் பின்தங்கி இருக்கக் கூடாது. படிப்பு ஒருவரை நல்ல குடிமகனாக மாற்ற உதவும்; நற்பண்புகளை வளர்க்கும்; சம வாய்ப்புகளைத் தோற்றுவிக்கும். ஆகவே கல்வியில்லாதோர் முகத்தில் இரண்டு புண் உடையவர்கள் என்ற திருவள்ளுவரின் வாக்கு பொருத்தமானது. 1939 முதல் 1940 வரை மொத்த பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை 2,35,489. இவற்றில் கிராமப் பகுதியில் 2,06,174 பள்ளிகள் அமைந்துள்ளன. அந்த ஆண்டில் படித்த மொத்தப் பிள்ளைகள் 11,616,791. இவர்களுள் ஆண்கள் 10,519,703; பெண்கள் 1,097,088. 1941ஆம் ஆண்டில் மொத்த மக்கள்தொகை 295,808,722. இவர்களுள் ஆண்கள் 153,020,166; பெண்கள் 142,788,556. கிராமப் பகுதிகளில் மொத்த ஜனத்தொகை 258,261,892. இதில் ஆண்கள் 131,984,526; பெண்கள் 126,277,366. ஒவ்வொரு வகைப் பாட்டிலும் பாதிக்கு மேல் 5 வயது முதல் 25 வயதுக்குள் இருக்கும் மக்கள் ஆகும்.

மேலே கொடுக்கப்பட்டுள்ள புள்ளிவிவரங்களிலிருந்து மொத்த ஜனத்தொகையில் 5·15 சதவிகிதம்தான் கல்வி பயின்றனர். 1941ஆம் ஆண்டில் 1000 பேர்களுக்கு 120 பேர்கள் தான் படித்தவர்கள்; 1951ஆம் ஆண்டில் 166ஆகவும், 1961 ஆம் ஆண்டில் 240ஆகவும் இது உயர்ந்துள்ளது. 1939 – 40 கணக்கின்படி 1500 மக்களுக்கு அல்லது 4 கிராமங்களுக்கு ஒரு தொடக்கப்பள்ளி எனத் தீர்மானிக்கப்பட்டது. 80 சதவிகிதம் குழந்தைகள் ஓர் ஆண்டு படித்த பின்னர் ஏழ்மையின் காரணமாகப் பள்ளிப் படிப்பை நிறுத்திக் கொள்கிறார்கள். மேலும் 9 குழந்தைகளுக்கு ஒரு குழந்தைதான் தொடக்கப் பள்ளிக்குப் போகிறது எனவும், 8 சிறுவர்களில் ஒரு சிறுவன் வீதமும், 16 சிறுமிகளுக்கு ஒரு சிறுமி வீதமும் நடுத்தரப் பள்ளிக்குப் போகிறார்கள் எனவும் தீர்மானிக்கப்பட்டது. உயர்

கல்வி, கல்லூரிக்கல்வி கொஞ்சம் தேவலாம் எனவும் கருதப் பட்டது. ஆரம்ப நிலையைவிட உயர்கல்வியில் முன்னேற்றம் கண்டனர்: 1961 கணக்கின்படி இந்தியாவில் படித்தவர்கள் மொத்தத்தில் 25 சதவிகிதமாகும். படித்தவர்களைத் தனித்தனியே ஆராய்ந்தால், ஆண்களில் படித்தவர்கள் 34 சதவிகிதமும், பெண் களில் படித்தவர்கள் 13 சதவிகிதமும் ஆவர். கல்வியின் வளர்ச்சி குறைவாகத்தான் உள்ளது. ஆண்டு ஒன்றுக்கு ஒரு சதவிகிதத் துக்கும் குறைவாக உள்ளது. குறிப்பாகப் பெண்களில் ஆண்டு ஒன்றுக்குப் படித்தவர்களின் அதிகரிப்பு $\frac{1}{2}$ சதவிகிதத்திற்கும் குறைவு. பெண்களின் கல்வி ஆண்களின் கல்வியில் $\frac{1}{4}$ பாகத்திற் கும் குறைவாக உள்ளது. கல்வியில் ஏராளமான சேதாரம் ஏற்படு கிறது. ஆகவே குறைகளை நீக்கி நன்முறையில் கல்வியை முன் னேற்ற வேண்டும்,

# 9. ஆயுட்காலம்

இந்திய மக்களின் ஆயுட்காலம் சராசரியாக 40 ஆண்டுகள் எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. சென்ற 60 ஆண்டுகளாக ஆயுட்காலம் உயர்ந்து வந்துள்ளது. இந்த உண்மையைக் கீழேயுள்ள அட்டவணையிலிருந்து அறியலாம்.

அட்டவணை 37

| பத்தாண்டுகள் | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|
| 1901–11 | 22·6 | 23 3 |
| 1911–21 | 19·4 | 20·9 |
| 1921–31 | 26·9 | 26·6 |
| 1931–41 | 32·1 | 31·4 |
| 1941–51 | 32·5 | 31·7 |
| 1951–61 | 41·9 | 40·6 |

ஆயுட்காலம் மக்களின் இறப்பு விகிதத்தைப் பொறுத்தது. தொத்து நோய், கொள்ளை, கொடிய நோய்கள், சரியான போஷிப்பு இல்லாத குறை, மோசமான வாழ்க்கை, தாய்மார்கள் குழந்தைகள் சாவு முதலியவை இறப்பு விகிதத்தைப் பெரிதும் பாதிக்கும். இந்தியாவில் இதுபோன்ற காரணத்தால் முதலில் இறப்பு விகிதம் அதிகமாக இருந்தது. வெகு நாட்களாக இந்திய மக்களின் ஆயுட்காலம் மிகக் குறைவாக இருந்தது. குறிப்பாக 1921 ஆம் ஆண்டுவரை அதிக அளவில் இறப்பு விகிதம் இருந்தது. 1881 முதல் 1921 வரை இறப்பு விகிதம் 1000 பேர்களுக்கு 40 முதல் 48 பேர்கள் வரையில் இருந்தது.

அதைப்போல் பிறப்பு விகிதமும் உச்ச நிலையில் இருந்தது. 1921 ஆம் ஆண்டுக்குப் பின்னர் இறப்பு விகிதம் குறைய நேரிட்டது. காரணம் தொத்து நோய்களைக் கட்டுப்பாட்டிற்குக்

கொண்டு வந்ததுதான். இந்தியாவில் குறைவான ஆயுட்காலத்திற்கு மற்ருெரு காரணம் குழந்தைகள் சாவு உச்சகட்டத்தில் இருந்தது. ஆனால் சென்ற 20 ஆண்டுகளாகக் குழந்தைகள் சாவு விகிதம் கொஞ்சம் குறைந்தது. குழந்தைகளின் சாவு விகிதம் 1916முதல் 1920வரை ஆயிரம் பேர்களுக்கு 218ஆக இருந்தது. 1960ஆம் ஆண்டில் அது 88ஆகக் குறைந்தது. இவ்வாறு குறைவதற்குக் காரணம் தாய், சேய்நல விடுதிகளின் முன்னேற்றம், குழந்தைகளைச் சுகாதார முறையில் பேணி வளர்த்தல், கல்வியின் முன்னேற்றம்போன்ற சமூக நலத்திட்டங்கள் பெரிதும் உதவியதாகும். ஆகவேதான் இந்தியாவில் ஆயுட்காலம் பொதுவாக 1951-ல் 32ஆக இருந்ததை 1961ஆம் ஆண்டில் 45ஆக உயர்த்த முடிந்தது. தாய்மார்களை நல்லமுறையில் பாதுகாத்தல் வேண்டும். அவர்களின் ஆயுட்காலம் ஆண்களைவிடக் குறைவு. வீட்டில் தாய்மார்களைப் புறக்கணித்தல், சத்துள்ள உணவை ஆண்களுக்குமட்டும் கொடுத்தல் (காரணம் ஆண்கள்தான் சம்பாதிக்கிருர்கள்), பெண்களுக்குள்ள அதிகமான வேலைத் தொந்தரவுகள், பயிற்சி பெருத தாதிகளின் கவனிப்பு, மருத்துவச்சிகள் ஆயாக்கள் கவனிப்பு இவற்ருல் தாய்மார்கள் அனுவசியமாக இறக்கிருர்கள்.

போதிய டாக்டர் வசதிகள் இல்லாத காரணத்தாலும் நிகர இன விருத்தி வயதில் தாய்மார்கள் அதிகம் இறக்கிருர்கள். இந்தியாவில் தாய்மார்களின் இறப்பு அதிகமாக இருந்தது. தற்சமயம் கொஞ்சம் இது குறைந்து வருகிறது. இருந்தபோதிலும் சரியான சத்துள்ள உணவு இல்லாத காரணத்தாலும், போஷிப்பு இல்லாமையாலும் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படுகின்றது. அதனுல் ஆயிரக்கணக்கில் இறக்கிருர்கள். பசி, பிணி, ஏழ்மை, வசதியின்மை இவையே அதிக இறப்புக்குக் காரணங்களாகும்.

இப்போது புதிய மருந்துமுறைகளைக் கண்டுபிடித்துத் தொத்து நோய்கள், கொள்ளை நோய்களான காலரா, அம்மை முதலியவற்றைப் பரவவிடாமல் தடுத்து வருகிருர்கள். மருத்துவ நிலையங்கள், டாக்டர்கள், தாதிமார்கள் பெருகிக்கொண்டு வருவதாலும் தாய்மார்களின் இறப்பு குறைந்து வருகின்றன. நோய்களைக்கட்டுப்படுத்திப் பல பேர்களின் உயிர்களைப் பாதுகாத்தும் வருகிறேம். 1943-ல் கொடிய பஞ்சம் ஏற்பட்டு எத்தனை உயிர்களைக் கொள்ளை கொண்டது. தற்காலத்தில் நல்ல சுகாதார திட்டங்களைச் செயல்படுத்தி இறப்பு விகிதத்தைக் குறைத்து வருகிறேம். தற்போதுள்ள ஆயுட்காலத்தை வைத்துக்கொண்டு முன்னேறிய நாடுகளுடன் ஒப்பிடுதல் அவ்வளவு உசிதம் ஆகாது. ஏனெனில், மேலை

நாடுகளில் ஆயுட்காலம் இந்தியாவைவிட அதிகம். கீழேயுள்ள அட்டவணையிலிருந்து இதனை அறியலாம்.

## அட்டவணை 38

### ஆயுட்காலம்

| நாடுகள் | ஆண்டு | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|---|
| அமெரிக்கா | 1962 | 66·8 | 73·4 |
| ஜப்பான் | 1962 | 66·2 | 71·2 |
| இங்கிலாந்து | 1960–62 | 68·0 | 74·0 |
| ஆஸ்திரேலியா | 1960-62 | 66·0 | 70·63 |
| சுவீடன் | 1960–62 | 67·06 | 69·71 |

## அட்டவணை 39

### ஆயுட்காலம்

| நாடுகள் | | சராசரி ஆயுட்காலம் |
|---|---|---|
| இந்தியா | — | 32·45 |
| எகிப்து | — | 35·65 |
| மெக்ஸிகோ | — | 37·92 |
| ஆஸ்திரேலியா | — | 66·02 |
| கனடா | — | 65·18 |
| சுவீடன் | — | 67·06 |
| இங்கிலாந்து | — | 66·39 |

இந்திய மக்களின் ஆயுட்காலம் உலகத்திலேயே மிகக்குறைவு. மேலும் மற்ற நாடுகளில் பெண்களின் ஆயுட்காலம் ஆண்களின் ஆயுட்காலத்தைவிட அதிகம். ஆனால் இந்தியாவில் இதற்கு எதிரிடையாக உள்ளது. இதனை மேலேயுள்ள அட்டவணைகளிலிருந்து அறிகிறோம். இந்தியாவில் ஆண்டுதோறும் பல நல்ல திட்டங்களை தயாரித்து ஆயுட்காலத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி வருகிறோம். அதிகமான அளவில் குழந்தைகள் இறப்பதனால் ஏராளமான முயற்சியும், முதலீடு செய்ததும் குழந்தைகளை வளர்க்கவும் பாதுகாக்கவும் எடுத்துக்கொண்ட முயற்சிகளும், பணச்செலவும் வீண் ஆகின்றன. குறைந்த ஆயுட்காலம் வேலை செய்யும் காலத்தையும் குறைக்கிறது. வேலை செய்யும் பருவகாலம் இந்தியாவில் குறைவாக உள்ளது. மேல் நாடுகளில் மக்கள் நீண்ட நாள்கள் வாழ்வதாலும், ஆயுட்காலம் அதிகமுள்ளதாலும், அவர்களின்

வேலை செய்யும் பருவக்காலமும் அதிகமாக உள்ளது. ஆகவே ஆண்களின் ஆயுட்காலத்தை அதிகரிக்க வேலை செய்யும் பருவத்தைக் கூட்டவும், அதிக அளவில் ஆண்களுக்கும் முதலீடு செய்ய வேண்டும். எனவே ஆயுட்காலத்தை அதிகரிக்க நல்ல போஷிப்பு, நோய்களைக் கட்டுப்படுத்தல், சத்துள்ள உணவு. தாய்மார்கள் குழந்தைகளின் இறப்பைக் குறைத்தல் இவற்றினுல் தான் முடியும் என்பதை அறிகிறோம்.

இந்தியாவைவிட மற்ற நாடுகளில் ஆயுட்காலம் அதிகம் என்பதை மேலேயுள்ள சராசரி ஆயுட்கால அட்டவணை மூலம் அறியலாம். மக்கள் நீண்டகாலம் வாழ்வதால் வேலை செய்யும் பருவக்காலத்தில் நன்கு உழைக்க முடியும். அதிகம் உற்பத்தி செய்ய முடியும். அதனுல் வாழ்க்கைத்தரம், நாட்டின் செல்வம், தலா வருமானம் ஆகியவை உயருகின்றன. 1941 முதல் 1950 வரை கணக்குப் பார்க்கும்போது இந்தியாவில் சராசரி ஆயுட்காலம் 32. பிறகு 1951 முதல் 1960வரை கணக்குப் பார்க்கும்போது மக்களின் ஆயுட்காலம் 42ஆக உயர்ந்துள்ளது. ஐந்தாண்டு திட்டங்கள் செயல்பட்ட பின்னர் இந்தியாவில் ஆண்டுதோறும் ஆயுட்காலம் ஒவ்வொன்ருகக் கூடி வந்துள்ளது.

# 10. மொழி

மொழி ஒருவருக்கொருவர் தங்கள் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளப் பெரிதும் உதவுகிறது. தனி நபரின் முன்னேற்றம், நாட்டின் முன்னேற்றம் இவற்றிற்கும் மொழி அவசியம். மொழி நாட்டின் மக்களை ஒன்ருக இணைக்கும்; ஒற்றுமை உணர்வை வளர்க்கும். நம் மாநிலத்தின் மொழி தமிழ். இது மிகவும் தொன்மை யானது; சிறப்பானது; எளிமையானது; இனிமையானது. இந்தியா பல்வேறு மொழிகளைக் கொண்டது. 1901ஆம் ஆண்டு கணக் கின்படி 147 மொழிகள் எனத் தீர்மானிக்கப்பட்டது. ஆனல் 1921ஆம் ஆண்டில் 222 மொழிகள் எனவும், 1931ஆம் ஆண்டில் 240 மொழிகள் எனவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இந்தியாவில் பலர் தாய் மொழியிலும், வேறு மொழிகளுள் ஒன்று அல்லது இரண்டு மொழிகளிலும் நல்ல முறையில் பேசுகிருர்கள். சில மாநிலங்களில் மக்கள் இரண்டு அல்லது மூன்று மொழிகளில் திறமையாகப் பேசுகிருர்கள். மேல்நாடுகளான கனடா, சுவிட்சர்லாந்து, தென்அமெரிக்கா, சீன போன்ற நாடுகளில் மக்கள் தாய்மொழியைத் தவிர இதர மொழிகளையும் நன்முறையில் கற்றுக்கொண்டு வருகிருர்கள். இந்தியாவிலும் சில மில்லியன் மக்கள் 2 மொழிகளும் அதற்கு மேலும் கூட மொழிகளைப் பேசுகிருர் கள். உதாரணமாக, தமிழ் நாட்டில் பலர் தமிழ், தெலுங்கு இரு மொழிகளைப் பேசி வருவதைக் காண்கிருேம். தெலுங்கு—கன்னடம், குஜராத்தி—மராத்தி ஆகிய இரு மொழிகளையும் பேசும் மக்கள் பல மாநிலங்களில் உள்ளனர். 1971ஆம் ஆண்டின் கணக்கெடுப் பில் மொழிவாரியாக மக்களை வகைப்படுத்த கேள்விகள் கேட்கப் பட்டுள்ளன. ஆங்கிலத்தின் அவசியத்தை மறுக்கமுடியாது; மறக்க வும் முடியாது. இந்தியாவில் பெரும்பாலோர் ஆங்கிலத்தில் நல்ல முறையில் பேசுகிருர்கள். ஆங்கிலம் நெடுநாட்களாக இந்தியா வில் இருந்து வருகிறது. மேலை நாட்டு அறிவு, விஞ்ஞானம், நுட்பம், கலை, நாகரிகம், முன்னேற்றம் முதலியவற்றை அறிந்து கொள்ள ஆங்கிலம் பெரிதும் உதவுகிறது.

தாய்மொழியில் இன்று கல்வி கற்பதால் பொருள் தெளிவும், புலமையும், அறிவு வளர்ச்சியும், ஆராய்ச்சியும் ஓங்கி வளர்கின்றன. மாணவர்கள் நன்முறையில் பாடங்களை எளிதில் புரிந்து கொள்கின்றனர். ஆசிரியர் மாணவர்களுக்குள் பிணைப்பும் ஓங்கி வளர்கிறது. அதிகமான மாணவர்கள் பரீட்சைகளில் தேறுவதற்கும் தாய்மொழி உதவுகிறது. ஜப்பான் நாட்டில் ஆங்கிலமும், ஜப்பானிய மொழியும் மேல் பட்டப்படிப்புவரையில் உபயோகப்படுத்தப்படுகின்றன.

தேசிய மொழியும் இந்தியாவுக்கு மிக அவசியமாகும். இந்தியாவில் மாநிலங்கள் மொழிகளின் அடிப்படையில் பிரிக்கப்பட்டு உள்ளன. ஆகவே இம்மாநிலங்களை இணைக்க தேசிய மொழி அவசியம். தேசிய மொழி மக்களை இணைக்கும் கருவியாக இருத்தல் வேண்டும். தற்சமயம் இந்தி மொழியும் ஆங்கில மொழியும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆகவே மாநிலங்களுக்கு அல்லது பிராந்தியங்களுக்குத் தாய்மொழியும், பல்வேறு மாநிலங்களை இணைக்கத் தேசிய மொழி அல்லது பொது மொழியும், பல்வேறு நாடுகளை இணைக்கவும் அறியவும் ஆங்கிலமும் அவசியப்படுகின்றன. 1961 கணக்கின்படி இந்தியாவில் மொழிகளின் எண்ணிக்கை 872 ஆகும். ஒவ்வொரு தடவையும் மக்கள் கணக்கெடுப்பின்போது இந்திய மொழிகளின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டே போகிறது. இந்தியாவில் மிக முக்கியமான மொழிகளையும் அம்மொழியில் பேசக்கூடிய மக்களின் எண்ணிக்கையையும் கீழே உள்ள அட்டவணையின் மூலமாக அறியலாம்.

## அட்டவணை 40

இந்தியாவின் முக்கிய மொழிகளும் அவற்றைப் பேசும் மக்கள் தொகையும்—1961 கணக்குப்படி.

| மொழிகளின் பெயர் | பேசும் மக்கள் | |
|---|---|---|
| | ஆண்கள் | பெண்கள் |
| அஸ்ஸாம் (Assamese) | 3,594,879 | 3,208,584 |
| வங்காளி (Bengali) | 17,539,221 | 16,215,187 |
| போஜ்புரி (Bhojpuri) | 3,910,777 | 4,053,978 |
| பிகாரி (Bihari) | 8,314,976 | 8,491,796 |
| குஜராத்தி (Gujarati) | 10,364,273 | 9,741,573 |
| இந்தி (Hindi) | 64,824,928 | 58,200,561 |
| கன்னடம் (Kanarese) | 8,832,964 | 8,172,665 |

| | | |
|---|---|---|
| கொங்கணி (Konkani) | 670,442 | 681,921 |
| காஷ்மீரி (Kashmiri) | 1,034,958 | 879,488 |
| மலையாளம் (Malayalam) | 8,462,837 | 8,502,082 |
| மராத்தி (Marathi) | 16,676,142 | 16,091,280 |
| ஒரிய்யா (Oriya) | 7,877,360 | 7,733,376 |
| பஞ்சாபி (Punjabi) | 5,313,832 | 4,544,447 |
| ராஜஸ்தானி (Rajasthani) | 7,746,357 | 7,186,659 |
| தமிழ் (Tamil) | 15,316,149 | 15,149,293 |
| தெலுங்கு (Telugu) | 19,008,556 | 18,633,883 |
| சிந்தி (Sindhi) | 703,055 | 668,877 |
| உருது (Urdu) | 12,076,949 | 11,246,098 |

உலகிலுள்ள பல்வேறு மொழிகளில் சில சிறப்பான மொழிகளைத் தேர்ந்தெடுத்து அம்மொழிகளைப் பேசும் மக்களின் எண்ணிக்கையையும் கீழேயுள்ள அட்டவணை உணர்த்துகிறது.

## அட்டவணை 41

| உலகிலுள்ள முக்கிய மொழிகளில் சில. | பேசும் மக்கள்தொகை | |
|---|---|---|
| அராபிக் (Arabic) | 98 | மில்லியன்கள் |
| வங்காளி (Bengali) | 98 | ,, |
| ஆங்கிலம் (English) | 314 | ,, |
| ஜெர்மனி (Germany) | 120 | ,, |
| இந்தி (Hindi) | 181 | ,, |
| ஜப்பானிய மொழி (Japanese) | 102 | ,, |
| மன்டரின் (Mandarin China) | 567 | ,, |
| ரஷ்யன் (Russian) | 188 | ,, |
| ஸ்பானிஷ் (Spanish) | 179 | ,, |
| மலேஷி (Malayese) | 80 | ,, |
| தமிழ் (Tamil) | 45 | ,, |
| தெலுங்கு (Telugu) | 48 | ,, |
| உருது (Urdu) | 55 | ,, |

(Year Book—1970)

மக்கள்தொகை வளர்வதற்கு ஏற்றாற்போல் புதிய மொழிகள் இந்தியாவில் அதிகரித்து வருகின்றன. உதாரணமாக 1901ஆம் ஆண்டில் மக்கள்தொகை 292 மில்லியனிலிருந்து 1921ஆம்

ஆண்டில் 316 மில்லியன்களாக உயர்ந்தது. அதேசமயத்தில் மொழிகளின் எண்ணிக்கையும் 147 முதல் 222ஆக வளர்ந்தது. மீண்டும் 1931ஆம் ஆண்டில் 240 மொழிகளாக வளர்ந்தது. உலகில் பல மொழிகளைப் பேசும் மக்கள்தொகையை அட்டவணை 41-ன் மூலமாக அறியலாம். இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிந்ததும் பஞ்சாபி, சிந்தி, வங்காளி மொழிகளைப் பேசிவந்த மக்கள்தொகை பெரிதும் குறைந்தது. இந்தியாவில் எல்லா மொழிகளையும் கணக்கிட்டு, அதில் பேசக்கூடிய மக்களின் தொகையைக் கணிப்பதும் சற்று கடினம். ஒருவர் இருமொழிகள் அல்லது மூன்று மொழிகள் பேசும் ஆற்றல் படைத்தவர்கள். பிற மொழிகளில் பேசும் மக்களின் புள்ளி விவரங்களைத் தயாரித்தல் வேண்டும். இது எந்த அளவுக்கு மொழி வளர்கிறது, பரவி வருகிறது, மேலும் எந்த அளவுக்கு மொழியும் குறைந்து வருகிறது என்ற விவரங்களைத் தரும். வருமானத்திற்கு ஏற்றவாறும், வேலைகளுக்கு ஏற்றவாறும் மக்கள் தொகையை வகைப்படுத்துவதைப்போல், பல்வேறு மொழிகளில் பேசும் மக்களை வகைப்படுத்தல் வேண்டும். ஆங்கில வளர்ச்சி பெரிதும் தேவைப்படுகிறது. கல்வி, நாகரிகம், கலாச்சாரம், விஞ்ஞானம், நுட்பம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு ஆங்கில மொழி பெரிதும் உதவுகிறது. சுதந்திர இந்தியாவில் இன்று தாய்மொழி அல்லது பிராந்திய மொழிகளின் வாயிலாகக் கல்வியைக் கற்று வருகிறோம். மொழிவழியாக மாநிலங்களை அமைத்தபடியால் மாநிலங்களிடையே மேலும் ஒருமைப்பாடு, ஒற்றுமை இவற்றை வளர்த்துவர வேண்டும். இதற்கு அதிகக் கவனமும் செலுத்த வேண்டும்.

# 11. மதம்

மதங்கள் ஆதி நாள் முதற்கொண்டு பின்பற்றப்படுகின்றன. மதத்தின் மூலமாக ஒவ்வொருவரையும் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது. தற்போதுள்ள இந்திய அரசாங்கம் மதச்சார்பு அற்றது. தனிப்பட்டவருடைய மதச் சுதந்திரத்தில் யாரும் தலையிடுதல் கூடாது. மதச் சகிப்புத்தன்மையை வளர்த்து வருகிறோம். அமெரிக்காவில் பல்வேறு மதத்தினர் குடியேறியபோதிலும் அவர்களுக்குள் இன்றும் ஒற்றுமை, ஒருமைப்பாடு காண முடிகிறது. அமெரிக்காவில் எப்பகுதியிலும் யாரை வேண்டுமானாலும், 'நீங்கள் யார்?' என்று கேட்டால், தன்னை ஒரு அமெரிக்கன் என்று பெருமையோடு சொல்லிக்கொள்வார்கள். அவர்கள் அத்தனை பேரும் மாறுபட்ட மதங்களை மறந்து, நாட்டின் முன்னேற்றத்திற்கும் உற்பத்திப்பெருக்கத்திற்கும் பாடுபடுகிறார்கள். இந்தியாவில் பல்வேறு மதத்தினர் குடியேறியுள்ளார்கள். ஆரியர்கள், அரேபியர்கள், முஸ்லீம்கள், கிறித்தவர்கள் மற்றும் பல மதத்தினர் இங்கு வந்து குடியேறி ஆட்சி செலுத்தியுள்ளார்கள். சில சமயங்களில் மதச் சண்டைகள், அரசியல், பொருளாதாரம் சமூகச் சண்டைகளாகவும் மாறும். இந்தியாவில் பாகிஸ்தான் பிரிந்த காலத்தில் முஸ்லீம் மதத்தை அடிப்படையாகக்கொண்டு பிரிக்கப்பட்டது. அதற்காக எல்லா முகம்மதியர்களையும் அங்கு அனுப்ப முடியவில்லை. அதேபோல் பாகிஸ்தானில் உள்ள எல்லா இந்துக்களையும் இந்தியாவுக்கு அனுப்பமுடியவில்லை. மதத்தின் அடிப்படையில் நாடுகளைத் துண்டுபோடுதலைவிட எல்லா மதத்தினரும் ஒன்றாக இணைந்து மக்களின் நன்மைக்குப் பாடுபடுதல் வேண்டும்.

பாகிஸ்தான் பிரிந்துசென்ற பின்னரும், இந்தியாவில் 35 மில்லியன் முகம்மதியர்கள் உள்ளார்கள் என்பதை நாம் மறக்கக் கூடாது. பாகிஸ்தான் பிரிந்தபடியால் இந்தியாவில் உள்ள இந்து மத மக்கள், முகம்மதிய மக்கள் இவர்கள் தொகை கணிசமாகக்

குறைந்தது. பாகிஸ்தானில் இன்றும் ஏராளமான இந்துக்கள் உள்ளனர். 1951ஆம் ஆண்டு கணக்கின்படி மதத்தின் அடிப் படையில் மக்கள்தொகையை வகைப்படுத்திய அட்டவணை கீழே யுள்ளது.

## அட்டவணை 42

| மதங்கள் | மொ. மக்களின் எண்ணிக்கை (மில்லியன்கள்) | சதவிகிதம் |
|---|---|---|
| இந்துக்கள் | 307·1 | 84·99 |
| முகம்மதியர்கள் | 35·9 | 9·93 |
| கிறித்தவர்கள் | 8·3 | 2·30 |
| சீக்கியர்கள் | 6·3 | 1·74 |
| புத்தமதத்தினர் | 0·22 | 0·06 |
| ஜைனமதத்தினர் | 1·6 | 0·45 |
| பார்சியர்கள் | 0·11 | 0·03 |
| மலைஜாதி மதத்தினர் | 1·7 | 0·47 |
| இதர மதத்தினர் | 0·11 | 0·03 |

மதத்திற்கும் மக்கள்தொகைக்கும் என்ன சம்பந்தம்? மதம் எவ்வாறு பிறப்பு இறப்பு விகிதங்களுக்குச் சம்பந்தப்பட்டது? வெவ்வேறு மதங்களில் எவ்வாறு திருமணம் நடத்துகிறார்கள்? மத வேறுபாடு மொழிகளிலும் வேறுபாட்டைக் காட்டும்; தேசங்களையும் பிரித்துக் காட்டும்.

கல்வியின் நிலை, பொருளாதாரப் பாதுகாப்பு, வேலை முறை அமைப்பு ஆகியவை எவ்வாறு மதத்தினால் பெரிதும் பாதிக்கப்படு கின்றன என்பதையும் அறியவேண்டும். முகம்மதியர்களும், கத்தோலிக்கர்களும் ஏன் அதிகமான பிறப்பை விரும்புகிறார்கள்? முகம்மதியர்கள் சில குறிப்பிட்ட தொழில்களில் மட்டும் ஏன் ஈடு பாடு கொள்கிறார்கள்? சில மதத்தினர் நல்ல முறையில் படித்து விட்டு ஏன் பெருந்தொழில்களில் ஈடுபட்டுள்ளார்கள்? இப்படி பட்ட வினாக்களுக்கு மதத்தின் அடிப்படையில்தான் பதில் தர முடிகிறது. இந்தியாவின் மிக முக்கியமான மதங்கள் இந்து மதம், இஸ்லாம் மதம், கிறித்தவமதம், புத்த மதம், ஜைன மதம், சீக்கிய மதம் போன்ற பல உள்ளன. இந்தியாவில் 100 பேர்களை எடுத்துக் கொண்டால்—

62 பேர்கள் இந்துமதத்தைப் போற்றுபவர்கள்.

22 பேர்கள் முகம்மதியர்கள்.

3 பேர்கள் புத்த மதத்தினர்.

2 பேர்கள் அனிமிஸ்ட் மதத்தினர்.

1 சீக்கியர்.

1 கிறித்தவர்.

3 இந்த மூன்று பேர்கள் அநேகமாக கிறித்தவமதம், ஜைன மதம், புத்த மதத்தைச் சார்ந்தவர்கள்.

இந்திய மக்கள்தொகையை மதத்தின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது. அதில் எவ்வாறு சில மதங்கள் இந்தியாவில் வளர்ந்து வருகின்றன என்பதையும் பிற மதத்தில் மக்கள் எவ்வாறு பற்றுகொண்டு தழுவி வருகிருர்கள் என்பதையும் அறியலாம். இந்தியாவில் இந்துமதம் 10 ஆண்டுகளுக்கு ஒருமுறை குறைந்துதான் வருகிறது. இதனைக் கீழேயுள்ள அட்டவணையிலிருந்து அறியலாம்.

## அட்டவணை 43

மதத்தின் அடிப்படையில் மக்கள்தொகைப் பகிர்வு

| மதங்கள் | 1881 | 1891 | 1901 | 1911 | 1921 | 1931 | 1941 |
|---|---|---|---|---|---|---|---|
| இந்துமதம் | 74·3 | 72·3 | 70·4 | 69·4 | 68·6 | 68·2 | 65·7 |
| புத்தமதம் | 1·4 | 2·3 | 3·2 | 3·4 | 3·4 | 3·7 | 2·5 |
| ஜைனமதம் | 0.5 | 0·5 | 0·5 | 0·4 | 0·4 | 0·4 | 0·4 |
| சீக்கியமதம் | 0·7 | 0·7 | 0·8 | 1·0 | 1·0 | 1·2 | 1·1 |
| முகம்மதியமதம் | 19·7 | 20·2 | 21·2 | 21·3 | 21·7 | 22·2 | 24·2 |
| கிறித்தவமதம் | 0·7 | 0·8 | 1·0 | 1·2 | 1·5 | 1·8 | 1·4 |
| பிறமதங்கள் | 2·7 | 3·2 | 2·9 | 3·3 | 3·1 | 2·5 | 4·7 |

மேலேயுள்ள அட்டவணையில் முகம்மதிய மதம், புத்த மதம் மேலும் மேலும் வளர்ந்து வருகின்றன எனக்காணலாம். அவற்றில் மக்கள் மேலும் ஈடுபாடு கொள்கின்றனர். மேலும் அம் மதங்களில் பிறப்பு விகிதங்களும் அதிகரிக்கின்றன; இந்துமதம்குறைந்து வந்துள்ளது என்பதை மேலேயுள்ள அட்டவணையிலிருந்து அறியவும்.

## அட்டவணை 44

### இந்தியா, பாகிஸ்தான் நாடுகளில் மதத்தின் அடிப்படையில் மக்கள்தொகைப் பகிர்வு.

| நாடு | மதம் | மில்லியன்கள் | சதவிகிதம் |
|---|---|---|---|
| இந்தியா | ——————→ | 318·9 | 100 |
| | (a) முகம்மதியர்கள் | 40·7 | 11·9 |
| | (b) முகம்மதியர் அல்லாதவர்கள் | 278·2 | 88·1 |
| பாகிஸ்தான் | ——————→ | 70·1 | 100 |
| | (a) முகம்மதியர்கள் | 53·8 | 76·7 |
| | (b) முகம்மதியர் அல்லாதவர்கள் | 16·3 | 23·3 |

1961-ன் கணக்கின்படி மக்கள்தொகை முக்கியமான மதங்களின் அடிப்படையில் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| இந்துக்கள் | — | 366,502,878 |
| முகம்மதியர்கள் | — | 46,989,357 |
| கிறித்தவர்கள் | — | 10,726,350 |
| சீக்கியர்கள் | — | 7,845,170 |
| புத்தமதத்தவர்கள் | — | 3,250,227 |
| ஜைனமதத்தவர்கள் | — | 2,027,267 |

இத்தனை மதங்களைக் கொண்டிருந்தபோதிலும் இந்தியாவில் வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்கிறோம். மதச் சார்பற்ற இந்திய அரசாங்கம் எல்லா மதத்தவர்களையும் சமமாக மதித்து வருகிறது எதிர்காலத்தில் எல்லா மதத்தினரும் ஒன்றுபட்டு நாட்டின் முன்னேற்றத்திற்கும், உற்பத்திக்கும் பாடுபட வேண்டும். மதப்பூசல், ஜாதிச்சண்டை இவற்றை நீக்கி எல்லோரும் ஓர் இனம், ஓர் குலம் என்ற நல்ல மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும். மதச்சார்பற்ற, ஜாதிபேதங்கள் இல்லாமல் இருக்கக் கூடிய சமுதாயத்தை அமைத்திடல் வேண்டும். 'ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்' என்று கூறிய பாரதியாரின் பாடல்களை நினைவில் கொண்டு செயல்படுதல் வேண்டும். பல்வேறு மதங்கள், இனம், சாதிகளைக்கொண்ட நாட்டில் ஒற்றுமை, ஒருமைப்பாடு, விட்டுக்கொடுக்கும் மனப்பாங்கு,

சகிப்புத்தன்மை, பிறரும் வாழவேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் நட்பு போன்ற நல்லுணர்வுகள் வளர வேண்டும். இதற்குக் கல்வி கற்ற பெருமக்கள் வழிகாட்டிட வேண்டும். மாணவர்கள் வகுப்பில் சாதி ஏற்றத்தாழ்வு, கட்சி வேறுபாடு இவற்றை மறந்து எவ்வாறு வகுப்பு ஒற்றுமையுடன் ஓங்கிச் செயல்படுகின்றார்களோ, அதைப் போல சமுதாயத்தில் மக்கள் வேற்றுமைகளை மறந்து ஒன்றுபடுதல் நலமாகும்.

‘ ஒன்று பட்டால் உண்டு வாழ்வே–நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே ’

என்று கூறிய பாரதியாரின் நல்வாக்கினை மெய்ப்பிக்க வேண்டும். இதனை உணர்ந்துதான் வல்லரசு நாடுகள் தங்கள் நாட்டுப் பெயருடன் ஐக்கியம் என்ற இனிமையான, மேன்மையுடைய சொல்லினை இணைத்துள்ளார்கள் போலும்! மேற்கோளாக, United Kingdom, United States of America, Union of Soviet Socialist Republics போன்றவற்றைக் கூறலாம்.

# 12. சாதி முறைகள்

சில சாதிகளில் ஆண்களைவிட அதிகமான பெண்கள் மணப் பக்குவத்தில் உள்ளனர். அந்தச் சாதியில் மாப்பிள்ளைகள் கிடைப்பது அரிது. மற்றச்சாதியினர் இந்தச் சாதியில் உள்ள பெண்களைத் திருமணம் செய்துகொள்வதற்கில்லை. ஆகவே ஒரே சாதியில் தகுதியான மணமகன், மணமகள் கிடைப்பது அரியதாகும். அப்படிக் கிடைத்துவிட்டால் அது பெரிய அதிர்ஷ்டமாகும். தங்கள் இனத்தாரிடையேமட்டும் திருமணம் செய்துகொள்ளும் வழக்கத்தினுல் பெண்கள் பற்ருக்குறை ஏற்படுகிறது. இவ்வாறு பொருத்தமற்ற ஆண் பெண் விகிதாசாரத்தினுல் சமூகத்தின் அமைதி சீர்குலைகிறது. சாதி வேற்றுமைகள் அதிகரிக்கின்றன. பெண்களைக் கடத்திச் செல்லுதல் போன்ற பல சமூக ஒழுக்கப் பிரச்சினைகள் தோன்றுகின்றன.

20 முதல் 25 மில்லியன்கள்வரை பூர்வீகக் குடிகள் இந்தியா முழுமையும் பரவி வாழ்கிருர்கள். 1941ஆம் ஆண்டுக்கு முன் அவர்களுடைய அளவு, எண்ணிக்கை, எங்கெங்கு வாழ்கிருர்கள் என்பதைப்பற்றி முழு விவரங்கள் கிடைக்கவில்லை. 1941 மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போது 143 தேர்ந்து எடுக்கப்பட்ட சாதியினருடைய மக்களின் எண்ணிக்கை பல்வேறு மாகாணங்களிலிருந்து சேகரிக்கப்பட்டது. உதாரணமாக அஸ்ஸாம் மலைப் பகுதியில் நாகர்கள், மைசூர் சென்னை இவற்றில் குறும்பர், இருளர், தோடர், படகர் இவர்களைப்பற்றிச் சேகரிக்கப்பட்டது. இந்தியா இரண்டாகப் பிரிவதற்கு முன் பூர்வீகக்குடி மக்களின் எண்ணிக்கை 22 மில்லியன்கள். 1951ஆம் ஆண்டின் சரியான முறைப்படி கணக்கெடுப்பில் 25 மில்லியன்களாகக் கருதப்பட்டது. இந்த பூர்வீகக் குடிமக்கள் மலை அடிவாரங்கள், குன்றுகள், காடுகள் இப்பகுதிகளில் வாழ்ந்துவருகின்றனர். அவர்கள் தங்களுக்கெனத் தனியான மொழி, நாகரிகம், மதம் வைத்திருக்கிருர்கள். எதிர்காலத்தில் இந்து மதத்தைப் பின்பற்றுவோர்களாகக்

குறிப்பிடப்பட்டுள்ளது. வேட்டையாடுதல், மீன் பிடித்தல், விவசாயம் செய்தல் முதலியவை இவர்களுடைய தொழில்கள்.

மக்கள்தொகைக் கணிப்பில் இப்படிப்பட்ட மக்களின் தோற்றுவாய், மதம், இனம் இவற்றைப்பற்றிச் சரியாகக் குறிப்பிடவில்லை. ஏனெனில் அதற்கு போதிய அளவிற்கு ஆதாரங்களும் சான்றுகளும் சரிவரக் கிடைக்கவில்லை. இந்தியாவில் எல்லாவிதமான நாகரிகமும் காண முடியும். நகரங்கள், பட்டணங்களில் நாகரிகத்தின் உச்சகட்டத்தைக் காண முடியும். மலை அடிவாரங்கள் குன்றுகள் இவற்றின் பக்கம் பூர்வீகக்குடி மக்களையும் ஆதிவாசிகளையும் காணமுடியும். தற்சமயம் பூர்வீகக்குடிமக்கள் முன்னேறி வருகின்றனர். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இவர்கள் பெரிதும் புறக்கணிக்கப்பட்டனர். சுருங்கக் கூறின், ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இவர்களுக்கு யாதொரு நன்மையும் ஏற்படவில்லை. ஆனால் இந்தியா சுதந்திரம் அடைந்தபின்னர் இவர்களுக்குப் பல நன்மை பயக்கும் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஹரிஜனங்கள், ஆதிவாசிகள், பூர்வீகக் குடிகள் எல்லோரும் இந்து மதத்தின் ஒரு பகுதியினர் ஆவர். தீண்டாமையை ஒழித்துக் கட்டி, ‘எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம்’ என்பதை நிலைநாட்ட வேண்டும். அமெரிக்காவில் நீக்ரோக்களை அடிமைகளாக நடத்திய காலத்தில் நீக்ரோக்களின் முழு ஆற்றல், திறமை, அறிவு யாவும் வீண் அடிக்கப்பட்டன. பூர்வீகக் குடிமக்களை நன்முறையில் இந்தியாவில் பயன்படுத்தாவிட்டால், திறமையான மக்களின் வளத்தை வீண் அடிப்பதாகும். ஆகவே அவர்களுக்குப் பொருளாதார முன்னேற்றம், தீண்டாமை ஒழித்தல், சாதி முறையை அகற்றல் போன்ற பல நல்ல திட்டங்களை மேற்கொண்டால் நலம் பயக்கும்.

பொருளாதார நடவடிக்கைகள் பெரும்பாலும் சமூக, கலாச்சார செய்கைகளுடன் தொடர்பு கொண்டவையாகும். மனிதர்களுடைய குணாதிசயம் அவர்கள் செய்யக்கூடிய செய்கைகள், சூழ்நிலைகள் அவற்றிற்கு ஏற்றவாறு அமையும். பொருளாதாரத்தில் உச்சகட்டத்தை அடைவதற்கு மதம், சமூகம், பொருளாதாரக் கொள்கைகள், சமூகச் சூழ்நிலைகள் ஆகியவை பெரிதும் உதவுகின்றன. மார்ஷல் அவர்கள் மதமும், பொருளாதாரமும் இரண்டு முக்கிய காரணிகள் எனக் கருதுகிறார். இந்தியாவில் சாதிமுறை தொன்றுதொட்டு இருந்து வருகிறது. சமூக, மத நிறுவனங்கள், சாதி முறை, கூட்டுக் குடும்பமுறை, வாரிசு உரிமை மதசம்பந்தப்பட்ட போக்கு, பழக்க வழக்கங்கள், பர்தாமுறை, விதவைத் திருமணத்திற்குத் தடை, பெண் கல்வியை வெறுத்தல், பிறப்பு இறப்பு இவற்றுக்குப்

பெரிய சடங்குகள் செய்தல், சமூகக் காரியங்கள் கர்மாவின் தத்துவம், ஆன்மா பிரிதல் ஆகியவை நீண்ட நாட்களாக இந்தியாவில் இருந்து வருகின்றன. இதனால் இந்தியாவின் பொருளாதார, சமூக வாழ்க்கையில் மாறுதல்கள் ஏற்படு கின்றன. மனிதனின் செய்கைகள் தான் இருக்கும் சமூகத்திற்கு ஏற்றவாறு அமைகின்றன.

சாதி என்றால் குடும்பங்களின் கூட்டு அல்லது பல குடும்பங் கள் ஒன்று சேர்ந்து ஒரு பொதுவான பெயரில் இயங்குவதாகும். பெரும்பாலும் இவை தொழில்களின் அடிப்படையில் அமை கின்றன அல்லது தலைமுறையாகத் தொடர்ந்து இயங்கி வரு கின்றன. பல அறிஞர்கள் சாதியினுடைய தோற்றுவாய், ஆரம்ப நிலையை அறிவதற்கு முயற்சிகளை மேற்கொண்டார்கள். மார்ஷல் குறிப்பிடுவது யாதெனில் ஆதிநாளில் மதம், அரசியல், இராணு வம், தொழில் அமைப்புகள் ஆகியவை ஒன்றோடு ஒன்று தொடர்பு உடையவையாக இருந்தன; ஒரே பொருளின் பல பாகங்களாகக் கருதப்பட்டன. உலகில் முன்னேறிய நாடுகளிலும் சாதியின் கட்டுப்பாடு பின்பற்றப்படுகின்றன. குறிப்பாக ஆரியர்கள் சாதி முறையை உருவாக்கினார்கள் என்பது வரலாற்று ஆசிரியர்களின் கூற்று. அவர்கள் கிரீஸ், ரோம், இந்தியா போன்ற பல பகுதி களுக்குச் சென்று குடியேறினார்கள். ஜேம்ஸ் மில் அவர்கள் சாதி முறையை வேலை பகுப்பின் அடிப்படையில் தோன்றியதாகவும், அதன் முன்னேற்றத்தாலும் உண்டானது எனவும் கூறியுள் ளார்கள்.

மனு என்பவர் நான்கு சாதிகளையும் கூறி அவர்களுக்குரிய வேலைகளையும் வகுத்தார்:

| | | |
|---|---|---|
| பிராமணர் | — | போதித்தல், பிரசாரம் செய்தல் |
| க்ஷத்திரியர் | — | நிர்வாகம், பாதுகாப்பு |
| வைசியர் | — | விவசாயம், வர்த்தகம் |
| சூத்திரர் | — | பணிகள், உடல் உழைப்பு |

எனக் குறிப்பிட்டுள்ளார். ஆரம்ப நாட்களில் ஒரு சாதியில் இருந்து மற்றொரு சாதிக்குப் போக முடியும். ஆனால் நாளடைவில் கட்டுப்பாடுகள் அதிகரிக்கவே, சாதி முறை நிரந்தரமாகச் செயல் பட்டு ஒரு சாதியிலிருந்து மற்றொரு சாதிக்குப் போக முடியவில்லை. சாதி என்றால் பலருடைய நன்மைக்காகத் தனி ஒருவன் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதுதான் சிறந்தது. இங்கு சுயநலத்திற்கு இடமில்லை. சமூக முன்னேற்றத்திற்குத்தான் சிறப்பு என

வலியுறுத்தப்பட்டது. சாதிமுறை கிராம அமைப்புக்கும், பஞ்சாயத்து அமைப்புக்கும் காரணமாய் அமைந்தது. சமுதாயத்திலும் சாதி அடிப்படையில் வேலை பகுப்பு மேற்கொள்ளப்பட்டது. பொருளாதார முன்னேற்றத்திற்கு இது ஓர் ஒழுங்கை நிலை நாட்டியது. சில சமயங்களில் தலைமுறையாகத் தொழில்களை மேற்கொள்வதால் நுட்பமும், வேகமும், திறமையும், ஆற்றலும் பெற முடிகிறது. வகுப்புத் தகராறுகளையும் ஓரளவு சாதிமுறை குறைத்தது. சாதிகளில் சங்கங்கள் அமைத்து அதன் மூலமாக சமூகப் பணிகள், போராடும் பணிகள் ஆகியவை மேற்கொள்ளப்பட்டன.

தொழிற்சங்கங்களைப் போல சாதிச்சங்கங்களை அமைத்து அந்தந்த சாதியின் முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதை இன்றும் காண்கிறோம். இம்முறையில் ஒற்றுமையை உண்டாக்கி, சுரண்டலை எதிர்க்க முடியும். தங்களுக்குத் தேவையானவற்றைப் பெற முடியும். ஆகவே சமூகப்பணிகளுக்காகச் சங்கங்கள், தர்ம காரியங்களுக்குச் சங்கங்கள், தொழிற்சங்கங்கள், சாதிச் சங்கங்கள் பல தோன்றி அம் மக்களின் நல்வாழ்விற்கும், நன்மைக்கும் பணி புரிந்து வருகின்றன. ஆகவே இந்தியாவில் சாதிமுறை வெகு நாட்களாக இருந்து வருகிறது. அதன் காரணமாகச் சில தொழில்கள், வேலை பகுப்புமுறைகள், நுட்பம், ஆற்றல், அறிவு ஓங்குவதற்கும் பெரிதும் உதவுகிறது. இந்தியாவில் எதிர்காலத்தில் சாதி சமயமற்ற சமுதாயம் ஒன்றை அமைத்திடல் வேண்டும். எல்லோரும் இந்நாட்டு மன்னர்களாக வாழ்ந்திடல் வேண்டும். மக்கள் தங்களிடையே உள்ள பூசல்களை மறந்து நாட்டின் முன்னேற்றத்திற்கும், செல்வத்திற்கும் பாடுபட வேண்டும். 'ஏழை என்றும் அடிமை என்றும் எவனுமில்லை ஜாதியில், இழிவுகொண்ட மனிதர் என்பது இந்தியாவில் இல்லையே' என்று கூறிய பாரதியாரின் வாக்கை மெய்ப்பிக்க வேண்டும்.

# 13. பொதுச் சுகாதாரம்

மருத்துவ வசதிகள்: 1940-ல் இந்தியா முழுமையிலும் மொத்தமாக 6,927 மருத்துவமனைகள் இருந்தன. அவற்றில் 505 அரசாங்கத்திற்குச் சொந்தம். 4,106 ஸ்தல ஸ்தாபனத்திற்கும், 365 தனியாருக்கும் சொந்தம். 399 மாகாண பிரத்தியேக மருத்துவ மனையும் 385 இரயில்வேக்குச் சொந்தமான மருத்துவமனையும் இருந்தன. 589 தனியார் அரசாங்க உதவியில்லாத மருத்துவமனைகளும், 98 உதவி பெறக்கூடிய மருத்துவமனைகளும் ஆக எல்லா மாகாணத்திலும் பரவி இருந்தன. இங்கு மேலே குறிப்பிட்டுள்ள 7,000 மருத்துவமனைகளில் 3,000 உண்மையான மருத்துவமனையாகும். மீதியுள்ளவை சாதாரண மருத்துவமனைகள் அதாவது தரக் குறைவானவை. 182 கிறிஸ்தவ மிஷன் மருத்துவமனைகளும் இருந்தன. 1938ஆம் ஆண்டின் பொதுச் சுகாதார அறிக்கையின் படி 57,827 படுக்கைகள் இருந்தன. 1940-ல் 95,000ஆக உயர்த்தப்பட்டன. மக்கள்தொகையை இத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது 10,000 மக்களுக்கு 2 படுக்கைகள் வீதம் கணக்கிடப்பட்டது. ஆனுல் அமெரிக்காவில் 1941-ல் 10,000 மக்களுக்கு 97 படுக்கைகள் உள்ளன. அமெரிக்காவில் மக்கள் ஆரோக்கியமாகவும், சந்தோஷமாகவும் உள்ளனர். காரணம் மருத்துவமனைகள், மருந்து வசதிகள், டாக்டர் வசதிகள், நகரங்களில் பெரிய அரசாங்க மருத்துவமனைகள் உள்ளன. ஆனுல் இந்தியாவில் போதிய மருத்துவ வசதிகள் இல்லை. மருத்துவமனைகள் பெரும்பாலும் நகர்ப்புறங்களில் அமைந்துள்ளன. சாதாரண வைத்தியங்களுக்குத்தான் இந்த மருத்துவமனைகள் பயன்பட்டன.

மருத்துவ வசதியில் இந்தியா தன்னிறைவு அடையவில்லை. இந்தியாவில் மருத்துவச் சாதனங்கள், மருந்து வகைகள் மொத்தத்தில் 15 சதவிகிதம் இங்குச் செய்யப்படுகிறது. மீதியுள்ள 85 சதவிகிதம் வெளிநாடுகளிலிருந்து, குறிப்பாக இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளிலிருந்து

இறக்குமதி செய்யப்படுகிறது. உலக மகாயுத்தத்திற்கு முன் 50 சதவிகிதம் மருந்து வகைகள், சாதனங்கள், கருவிகள் இவற்றை இங்கிலாந்திலிருந்தும், 15 சதவிகிதம் அமெரிக்காவிலிருந்தும், 10 சதவிகிதம் ஜப்பானிலிருந்தும், மீதியுள்ள 10 சதவிகிதம் ஜெர்மனியிலிருந்தும் தருவிக்கப்பட்டன. 1940ஆம் ஆண்டில் 14,000 மருத்துவப் பட்டதாரிகளும் 27,000 மெடிக்கல் பிராக்டிஷனர்களுமாக மொத்தத்தில் 41,000 தகுதியுடைய மருத்துவர்கள் பணியாற்றினர். இதை மக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது 10,000 பேர்களுக்கு 1 டாக்டருக்கும் குறைவாக உள்ளது. ஆனால் இங்கிலாந்தில் 800 மக்களுக்கு 1 டாக்டர் வீதமும், அமெரிக்காவில் 1,000 பேர்களுக்கு 1 டாக்டர் வீதமும் கணிக்கப் பட்டது. மொத்த மருத்துவர்களில் ஐந்தில் ஒரு பங்கு அரசாங்கத்தில் பணியாற்றினார்கள். மீதமுள்ளவர்கள் நகர்ப் புறங்களில் தனியான மருத்துவ நிலையங்களை அமைத்துக் கொண்டு பணியாற்றுகிறார்கள். இந்தியாவில் அதிகமான மக்கள் கிராமப் புறங்களில் வாழ்கிறார்கள். அந்த மக்களுக்குப் போதிய மருத்துவ வசதிகள் கிடைக்கவில்லை. கிராமப்புறங்கள் மருத்துவ வசதிகள் இன்றிப் புறக்கணிக்கப்படுகின்றன.

இந்தியாவில் 1940-ல் தாதிகள் மொத்தம் 3,390 பேர் இருந்தார்கள். இவர்கள் அமெரிக்காவில் உள்ள நியூயார்க் என்ற நகரத்தில் வேலை செய்யும் தாதிகளின் எண்ணிக்கையை விடக் குறைவு. அதாவது இந்தியா முழுவதிலும் உள்ள தாதிகளின் எண்ணிக்கை அமெரிக்காவிலுள்ள ஒரு நகரத்தில் வேலை செய்யும் தாதிகளின் எண்ணிக்கையைவிடக் குறைவு என்றால் நம் நாட்டின் நிலைமையை நன்கு புரிந்து கொள்ள முடியும். இவர்களை இந்திய மக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஒரு லட்சம் பேர்களுக்கு இந்தியாவில் ஒரு தாதிக்கும் குறைவாக உள்ளது. ஆனால் அமெரிக்காவில் 5,000 பேர்களுக்கு ஒரு தாதிவீதம் கணக்கிடப் பட்டுள்ளது.

சுகாதார சர்வே முன்னேற்றக் கமிட்டியின் அறிக்கை(1946) யின்படி இந்தியாவில் நவீன மருத்துவமனைகள், தாதிகள் பற்றாக் குறை ஒரு பெரும் குறையாக உள்ளது. ஒவ்வொரு மாகாணத் தையும் ஆராய்ந்து பார்க்கும்போது தாதிகளின் எண்ணிக்கை படுமோசமாக உள்ளது. இதுபோன்ற குறைகளை அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளில் பொறுத்துக் கொள்ள முடியாது. உதாரண மாக 50 மில்லியன் மக்கள்தொகை கொண்ட ஐக்கிய மாகாணத் தில் மொத்த தாதிகளின் எண்ணிக்கை 257. ஆகவே, மருத்துவத் துறையில் முன்னேற வேண்டுமானால் தாதிகளின் எண்ணிக்கை யைப் பன்மடங்கு அதிகரிக்க வேண்டும்.

1940ஆம் ஆண்டில் இந்தியா முழுவதும் 2,000 பல் டாக்டர்கள் இருந்தனர். அவர்களில் 20 சதவிகிதம்தான் பல் வைத்தியத்திற்கான தரமான ஆயுதங்கள், நவீனக் கருவிகள், சாதனங்கள் ஆகியவற்றை வைத்திருந்தனர். ஆனால் அமெரிக்காவில் அதே ஆண்டில் 75,000 பல் டாக்டர்கள் இருந்தார்கள். நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி; மொத்தத்தில் இந்தியாவில் 75 பல் டாக்டர்கள்தான் தகுதியும் திறமையுமுடையவர்கள். 50 லட்சம் மக்களுக்கு ஒரு பல் டாக்டர் இந்தியாவில் உள்ளனர். இந்தப் புள்ளி விவரங்கள் இந்தியாவின் உண்மையான நிலையை எடுத்துக்காட்டுகின்றன. மேலும் பல் டாக்டர்கள், தாதிகள், கம்பௌண்டர்கள் யாவரும் நகரங்களிலும், பட்டணங்களிலும் பணியாற்றுகிறார்கள். கிராமப் புறத்தில் யாதொரு மருத்துவ வசதியும் கிடையாது. சாதாரண வைத்தியத்திற்கு கிராமப்புறத்திலிருந்து பல மைல்கள் நடந்து நகர்ப்புறத்தில் உள்ள மருத்துவமனைக்கு வந்து நீண்டநேரம் வரிசையில் நின்று மருந்து வாங்கவேண்டியுள்ளது. இந்தியாவில் பெரும்பான்மையான மக்களுக்குப் போதிய அளவுக்கு மருந்து வசதிகள், மருத்துவமனை வசதிகள், அறுவை சிகிச்சை, பல்வலி கண்வலி போன்றவற்றுக்குச் சிகிச்சை வசதிகள் குறைவாக உள்ளன. மருத்துவ வசதிகள் இல்லாத காரணத்தால் கொடிய நோய்களினால் கோடிக்கணக்கில் மக்கள் மடிகிறார்கள். எத்தனை நோய்களைக் கட்டுப்படுத்தினோம்? எத்தனை பேர்களின் உயிர்களைக் காப்பாற்றினோம்? இந்தியா ஓர் ஆரோக்கியமான நாடுதானா? இவற்றைப்பற்றி ஆராயும்போது, இந்தியாவின் பயங்கரமான நிலைமை தெரியவருகிறது.

இந்தியாவில் புள்ளிவிவரங்கள் பெரும்பாலும் சரியானவை அல்ல. சரியான முறையில் பிறப்பு இறப்பு விகிதங்களைக் கணிப்பதும் கிடையாது. 1931ஆம் ஆண்டின் கணக்குப்படி இருபது சதவிகிதம் தவறுதான் எனக்கண்டார்கள். அதேபோல் பொதுச் சுகாதாரக் கமிஷனர் 1936-ல் பிறப்பு இறப்பு விகிதப் புள்ளி விவரங்களில் 20 முதல் 25 சதவிகிதம் வரை தவறுகளைக்கண்டார். மேலும் இறப்பு விகிதத்தில் எவ்வளவோ பதிவு செய்யாமல் விட்டு விட்டார்கள். ஆகவே புள்ளிவிவரங்களைப் பெரும்பாலும் 75 சதவிகித மக்களுக்குத்தான் கணிக்கப்பட்டதாகவும், 30 அல்லது 33 சதவிகிதம் மேற்கொண்டு தவறுகளை நீக்கி, சேர்த்துக்கொள்ளப் பட்டதாகவும் கூறலாம். பிறப்பு விகிதம் 1855முதல் 1940வரை 36-லிருந்து 34ஆகக் குறைந்தது. இறப்பு விகிதம் நல்லமுறையில் முன்னேற்றம் கண்டுள்ளது. இருந்தபோதிலும் 1891முதல் 1921 வரை அதிக இறப்புக்குக் காரணங்கள் முறையே பஞ்சம், பிளேக் வியாதி, விஷஜுரம் போன்ற பல கொடிய நோய்களேயாகும்.

1897முதல் 1899வரை கொடிய பஞ்சத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 6 மில்லியன்கள். 1934-ல் ஏற்பட்ட பிளேக் வியாதியால் இறந்தவர்கள் தொகை 13 மில்லியன்கள் ஆகும். 1918 முதல் 1919 வரை விஷஜுரத்தால் இறந்தவர்களின் எண்ணிக்கை 12 முதல் 14 மில்லியன்கள் வரை இருக்கும் எனத்தீர்மானிக்கப் பட்டது. ஆகவே 1891முதல் 1921வரை இந்தியாவில் அதிகமான இறப்புகள் நேர்ந்தன; போதிய உணவு இல்லாமை, நோய்களைக் கட்டுப்படுத்தமுடியாத நிலை, ஜுரம் ஆகியவற்றால் மக்கள் தங்கள் வலிமையையும் ஆரோக்கியத்தையும், உற்பத்தித் திறனையும் இழந்தார்கள்.

கீழேயுள்ள அட்டவணையில் பிறநாடுகளின் சராசரி பிறப்பு இறப்பு விகிதங்களைக் காணலாம்.

### அட்டவணை 45

| நாடுகள் | பிறப்பு விகிதம் 1931–35 | இறப்புவிகிதம் 1931–35 |
|---|---|---|
| இந்தியா | 34·3 | 23·8 |
| அமெரிக்கா | 17·3 | 10·9 |
| இங்கிலாந்து | 15·5 | 12·2 |
| சுவீடன் | 14·1 | 11·6 |
| நார்வே | 15·3 | 10·3 |
| ஜெர்மனி | 15·9 | 11·0 |
| பிரான்ஸ் | 16·5 | 15·7 |
| இத்தாலி | 23·8 | 14·0 |
| நெதர்லாந்து | 21·2 | 8·9 |
| ஜப்பான் | 31·6 | 18·1 |

இறப்பு விகிதங்களை ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் போது இந்தியாவில் அதிகமான இறப்பு விகிதங்கள் உள்ளன. 1923முதல் 1930வரை ரஷ்யா நீங்கலாக ஐரோப்பிய நாடுகளில் சராசரியாக மொத்த ஜனத்தொகையான 378 மில்லியனில் 42·63 மில்லியன்கள் இறந்தார்கள். ஆனால் அதேகாலத்தில் இந்தியாவில் சராசரியாக மொத்த ஜனத்தொகையான 352 மில்லியனில் 50·27 மில்லியன்கள் இறந்தார்கள். அதாவது 8 ஆண்டுகளில் அதிகப்படியான மரணம் இந்தியாவில் 7·64 மில்லியன்கள். இருந்த போதிலும் ஐரோப்பாவைவிட 26 மில்லியன் மக்கள்தொகை இந்தியாவில் குறைவு.

புள்ளிவிவரத்தில் ஏற்படும் தவறுகளை நீக்கி அதாவது 30 சதவிகிதம் தவறுதலை நீக்கிப் பார்க்கையில் உண்மையில் இறந்தவர்கள் தொகை 10 மில்லியன்கள் ஆகும். மாகாணங்களில் இறப்பு விகிதங்களைக் கணக்கிடும்போது 9 ஆண்டுகளில் அதாவது 1931 முதல் 1939 வரையில் 56·74 மில்லியன்கள் இறந்தார்கள் என ஆதாரபூர்வமாகக் கூறப்படுகிறது. ஆண்டுதோறும் சராசரியாக 6·3 மில்லியன்கள் இறந்தார்கள். ஆகவே இந்தியா முழுமையும் மொத்தத்தில் 1931 முதல் 1939 வரை கிட்டத்தட்ட 70 மில்லியன் மக்கள் இறந்தார்கள். அதாவது ஆண்டுதோறும் சராசரியாக 7·7 மில்லியன் மக்கள் இறக்கிறார்கள். அதிலும் புள்ளிவிவரத்தில் ஏற்படும் தவறுகளை நீக்கி ஆராய்ந்தால் இது 90 மில்லியன்களாகக் கருதப்படும். ஆகவே ஆண்டு ஒன்றுக்கு 10 மில்லியன் வீதம் இறக்கிறார்கள்.

இறப்பு விகிதம் இந்தியாவில் அதிகம். குறிப்பாக, குழந்தைகள் சாவு. தாய்மார்கள் கர்ப்பிணியாக இருக்கும்போதும், குழந்தைகளைப் பெறும்போதும் அதிகமாக இறக்கிறார்கள். இறப்பு விகிதம் சென்ற 20 ஆண்டுகளாகக் குறைந்து வந்தாலும் மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இந்தியாவின் இறப்பு விகிதம் அதிகம் என்பதில் ஐயமில்லை. 1931 முதல் 1935 வரை இந்தியாவில் குழந்தைகளின் இறப்பு விகிதமும் மற்ற நாடுகளின் குழந்தைகள் இறப்பு விகிதமும் கீழேயுள்ள அட்டவணையில் உள்ளன.

## அட்டவணை 46

குழந்தைகளின் இறப்பு விகிதம்—1,000பேர்களுக்கு

| நாடுகள் | | விகிதம் |
|---|---|---|
| இந்தியா | — | 171 |
| அமெரிக்கா | — | 59 |
| இங்கிலாந்து | — | 65 |
| சுவீடன் | — | 51 |
| நார்வே | — | 47 |
| ஜெர்மனி | — | 76 |
| பிரான்ஸ் | — | 73 |
| இத்தாலி | — | 105 |
| நெதர்லாந்து | — | 45 |
| ஜப்பான் | — | 124 |

## அட்டவணை 47

### இந்தியாவில் குழந்தைகளின் இறப்பு விகிதம்
(1,000 பேர்களுக்கு)

| ஆண்டுகள் | | எண்ணிக்கை |
|---|---|---|
| 1911—1915 | — | 204 |
| 1916—1920 | — | 219 |
| 1921—1925 | — | 182 |
| 1926—1930 | — | 178 |
| 1931—1935 | — | 171 |
| 1936 | — | 162 |
| 1937 | — | 162 |
| 1938 | — | 167 |
| 1939 | — | 156 |
| 1940 | — | 160 |
| 1944 | — | 169 |
| 1945 | — | 150 |

குழந்தைகள் இறப்பு விகிதம் சரியானதல்ல. உதாரணமாக 1921–23 ஆண்டுவரை இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 241 பேர்கள். ஆனால் பதிவு செய்யப்பட்டவை 181 பேர்கள்தான். அதாவது 33 சதவிகிதம் குறைவாகக் கணக்கிடப்பட்டுள்ளது. 1933ஆம் ஆண்டில் சர் ஜான் மீகாவு அவர்கள் இந்திய மருத்துவப்பணியின் டைரக்டர் ஜெனரலாகப் பணியாற்றினர். அவர் குழந்தைகளின் இறப்பு விகிதம் 1,000 பேர்களுக்கு 232·6 என 1933ஆம் ஆண்டில் வெளியிட்டார். 1931-ல் ராயல் கமிஷனின் அறிக்கை 1,000 குழந்தைகளுக்கு 200க்கும் 250க்கும் இடையே உள்ளது எனக்கூறியுள்ளது. பதிவுசெய்யப்பட்ட விகிதங்களும், கணிக்கப்பட்ட விகிதங்களும் மாறுபடுகின்றன. 1936முதல் 1940வரை மொத்த பிறப்புகள் 62·9 மில்லியன்கள். ஆண்டு ஒன்றுக்கு 12·6 மில்லியன்கள் பிறப்பாகும். சராசரி குழந்தைகளின் சாவு 1,000 பிறப்பிற்கு 161 குழந்தைகள் எனவும் கணிக்கப்பட்டது.

1931முதல் 1935வரை உலகத்திலுள்ள நாடுகளுடன் இந்தியாவை ஒப்பிடுகையில் குழந்தை இறப்பு விகிதம் இந்தியா

வில்தான் அதிகம்—1,000 பிறப்புக்கு 171 குழந்தைகள் இறப்பு; ஆனால் அமெரிக்காவில் 59 குழந்தைகள், இங்கிலாந்து 65, சுவீடன் 51, நார்வே 47, ஜெர்மனி 76, பிரான்ஸ் 73, இத்தாலி 105, ஜப்பான் 124 வீதம் இறக்கின்றன. ஆகவே உலகிலேயே குழந்தைகள் இறப்பு விகிதம் இந்தியாவில்தான் அதிகம் எனத் தெரிகிறது. சுருங்கக்கூறின் ஆண்டுதோறும் 2 மில்லியனுக்குமேல் குழந்தைகள் இறக்கின்றன. அதாவது 25 சதவிகிதம் மொத்த இறப்பு எனக் கூறலாம்.

குழந்தைகள் இறப்பில் பாதி குழந்தைகள் முதல் மாதத்திலேயே இறக்கின்றன. அதிலும் குறிப்பாக, முதல் வாரத்திலேயே 60 சதவிகித குழந்தைகள் செத்துமடிகின்றன. எத்தனையோ குழந்தைகள் பிறந்தாலும் அவை பதிவாகாமல், கணக்கில் வராமல் மறைமுகமாக ஏராளமாக மாண்டுவிடுகின்றன. இறப்பு விகிதம் குழந்தைப் பருவத்தில் உச்ச கட்டத்தில் உள்ளது.

1936 பொது சுகாதாரக் கமிஷனரின் அறிக்கைப்படி 49 சதவிகிதம் இறப்பு 10 வயதுக்குள் குழந்தைகள் இறப்பதுதான். அதே சமயத்தில் இங்கிலாந்தில் அது 12 சதவிகிதமாகும். முதல் ஆண்டில் இறப்பு இந்தியாவில் இங்கிலாந்தின் இறப்பு விகிதத்தைப் போல் $3\frac{1}{2}$ மடங்கு ஆகும். 1 வயது முதல் 5 வயது வரை 5 மடங்கு அதிகம், 5 வயது முதல் 10 வயது வரை 3 மடங்கு அதிகம் எனத் தெரியவருகிறது. இறப்பு விகிதங்கள் பதிவு செய்யும் முறை, வகைப்படுத்தல் இவற்றில் பெரிய குறைபாடுகள் உள்ளன. 1945 பொது சுகாதாரக் கமிஷனர் அவர்கள் சரியான புள்ளிவிவரங்கள், குறிப்பாக இறப்பு விகிதங்கள்பொறுத்த வரையில் கிடைப்பதில்லை எனக்குறிப்பிட்டுள்ளார். தாய்மார்களின் இறப்பு விகிதமும் 1,000 பேர்களுக்கு 21 முதல் 29 வரை மாறுபடுகிறது. நகரங்களில் தாய்மார்களின் இறப்பு அதிகம். அதிலும் பெரிய நகரங்களான பம்பாய், சென்னை, கல்கத்தா இவற்றில் தாய்மார்களின் இறப்பு அதிகம்.

| | | | |
|---|---|---|---|
| சென்னை | 1930–31– | 1000 பேர்களுக்கு | 16·8 |
| பம்பாய் | 1936-37– | ,, ,, | 24·4 |
| கல்கத்தா | 1937-38– | ,, ,, | 8·9 |

தாய்மார்கள் மறுஇனவிருத்திக் காலங்களில், கருப்பம் தரிக்கும்போதும் குழந்தைகளைப் பெறும்போதும், பிரசவகாலத்திலும், அதிகமாக இறக்கிறார்கள். ஆண்டுக்கு 200,000 தாய்மார்கள் இறக்கிறார்கள். மற்றக் கணக்கின்படி தாய்மார்களின்

இறப்பு 1,000 பேர்களுக்கு 20முதல் 50வரை இறக்கிறார்கள். சர் ஜான் மீகாவு அவர்கள் கணித்தபடி மொத்தத் தாய்மார்களில் 1,000 பேருக்கு 100 பேர்கள் குழந்தை பிறக்கும்போது இறக்கிறார்கள். அமெரிக்காவின் மக்கள்தொகை இந்தியாவின் மக்கள் தொகையில் மூன்றில் ஒருபங்கு ஆகும். ஆனால் அங்கு 14,000 தாய்மார்கள் ஆண்டுதோறும் பிரசவக் காலத்திலும், குழந்தை பெறும்போதும் இறக்கிறார்கள். இங்கிலாந்தில் தாய்மார்களின் இறப்பு 1,000 பேர்களுக்கு 3க்கும் குறைவு எனவும் கணக்கிடப் பட்டுள்ளது. கீழ்க்கண்ட அட்டவணையில் இந்தியாவில் பெண்கள், ஆண்கள் இறப்பு விகிதங்களை சம்பந்தப்படுத்திக் காட்டப்பட்டுள்ளது.

## அட்டவணை 48

| பெண்களின் இறப்புவயதுப் பிரிவுகள். | | ஆண்களின் இறப்பு 100 என்றால் பெண்களின் இறப்பு கீழேயுள்ளபடி. |
|---|---|---|
| 0—1 | — | 90 |
| 1—5 | — | 104 |
| 5—10 | — | 99 |
| 10—15 | — | 95 |
| 15—20 | — | 126 |
| 20—30 | — | 131 |
| 30—40 | — | 101 |
| 40க்கு மேல் | — | 109 |

இரண்டு வயதுப் பிரிவுகளில், அதாவது 15முதல் 20 வயது வரை, 20முதல் 30வரை, பெண்களின் சாவு ஆண்களின் இறப்பைவிட மிக அதிகம். இந்த வயதுப் பிரிவுகளில் பெண்கள் பிழைத்து வருவது அரிதாகும். உயிர் வாழப் போராட வேண்டியுள்ள பருவக்காலமாக இதைக் கருதவேண்டும். பெண்கள் பற்றுக்குறை இந்தியாவில் உண்டு. பிறப்பது கொஞ்சம் பெண்கள் என்றால் இறப்பது அதிகமான தாய்மார்கள்தான். ஆகவே இந்த நெருக்கடி தொடர்ந்து இருந்துவருகிறது.

மேலும் இறப்பு, பிறப்பு விகிதம் அதிகமாக உள்ளதால் உயிர் வாழும் காலமும் குறைவாக உள்ளது. சிறு குழந்தைகள் இறந்தவுடன் மஞ்சள் துணியைப் போர்த்தி மயானத்திற்கு எடுத்துச்

செல்லுதல், இளம் தாய்மார்கள் இறத்தல் போன்ற கொடுமைகளை இந்தியாவில் காண்கிறோம். ஆண் பெண் இருபாலர்களையும் ஒன்று சேர்த்து இறப்பு விகிதத்தைக் கணக்கு எடுத்ததில் 1940ஆம் ஆண்டில் 1,000 பேர்களுக்கு 24·3 எனக் கணிக்கப்பட்டது. ஆனால் இங்கிலாந்தில் மொத்த இறப்பு விகிதம் 1,000 பேர்களுக்கு 12 எனவும், அமெரிக்காவில் 1,000 பேர்களுக்கு 11·6 எனவும் கணிக்கப்பட்டது. இந்தியாவின் இறப்பு விகிதம் அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளின் இறப்பு விகிதத்தைப் போல் இருமடங்கு என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

அடுத்து இந்தியாவில் ஆயுட்காலமும் குறைவாக உள்ளது. ஆண்கள் பெண்கள் இவர்களின் ஆயுட்காலம் மற்ற நாடுகளை விடக் குறைவாக உள்ளது. இந்தியாவில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஆயுட்காலம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## அட்டவணை 49

### ஆயுட்காலம்

| ஆண்டுகள் | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|
| 1881 | 23·67 | 25·58 |
| 1891 | 24·59 | 25·54 |
| 1901 | 23·63 | 23.96 |
| 1911 | 22·59 | 23·31 |
| 1931 | 26·91 | 26·56 |
| 1941 | 32·00 | 32·00 |

1881 முதல் 1931வரை மொத்தம் 50 ஆண்டுகளில் ஆயுட்காலம் மொத்தத்தில் இரண்டு ஆண்டுகள்தான் உயர்ந்துள்ளன. ஆனால் மற்ற நாடுகளில் அதே காலத்தில் 10 முதல் 20 ஆண்டுகள்வரை ஆயுட்காலம் உயர்ந்துள்ளது. 1931ஆம் ஆண்டில் இந்திய மக்களின் ஆயுட்காலம் 26·5 ஆண்டுகள். ஆனால் அமெரிக்கா, இங்கிலாந்து மக்களின் ஆயுட்காலம் அந்தச் சமயத்தில் 61 ஆண்டுகள்; ஸ்காட்லாந்து, ஜெர்மனியில் 57·5 ஆண்டுகள்; சுவீடன் 62·5; சுவிட்சர்லாந்து 56; நியூஜிலாந்து 64 ஆண்டுகள் என முறையே கணிக்கப்பட்டுள்ளன. 1941-ல் ஆயுட்காலம் 32 ஆக உயர்ந்துள்ளது. ஆயுட்காலத்தை வைத்துக் கொண்டு இறப்பு விகிதத்தைக் கணக்கிட முடியும். உதாரணமாக 1931ஆம் ஆண்டில் இறப்பு விகிதம் ஆண்களுக்கு $\frac{1,000 \times 1}{26·91} = 37/1,000$ எனவும், பெண்களுக்கு $\frac{1,000 \times 1}{26·56} = 38/1,000$

எனவும் கணக்கிடலாம். 1931-ன் கணக்கின்படி 1 வருடம் முதல் 10 வருடத்திற்குள் இறப்பு விகிதம் 45 சதவிகிதமாகும். 30 வயதுக்குள் இறக்கும் மக்களின் சதவிகிதம் 65 எனவும் 1931 கணக்கின்படி கூறப்பட்டுள்ளது. எனவே இந்தியாவில் அதிகப்படியான குழந்தைகள், தாய்மார்கள், ஆண்கள் இறப்ப தற்கு போதிய சுகாதார முறைகள், மருந்து வசதிகள், மருத்துவ மனைகள், பயிற்சிபெற்ற டாக்டர்கள், தாதிகள் இல்லாததுதான் காரணம் எனத் தெரியவருகிறது. ஆகவே தொத்துநோய்களைக் கட்டுப்படுத்தல், மருந்துகளைக் கொண்டு பிணிகளைப் போக்குதல், கிராமப்புறங்களிலும் மருந்து, மருத்துவ வசதிகள் ஏற்படுத்தல் போன்ற திட்டங்களைச் செயல்படுத்தல் வேண்டும். அப்போது தான் ஆரோக்கியமான வாழ்வு, நீண்ட ஆயுட்காலம் இவற்றோடு வேலைசெய்யும் காலமும் அதிகரிக்கும்; இறப்பு விகிதத்தையும் குறைக்க முடியும்.

# 14. நோய்கள்

பிறப்பு இறப்பு விகிதங்களைச் சரியான முறைப்படி கணிக்க முடியாதிருக்கும்போது நோய்களினுல் பீடிக்கப்பட்டவர்கள், இறந்தவர்களின் எண்ணிக்கையைப்பற்றிச் சேகரிப்பது அதை விடக் கடினமாகும். பெரும்பாலும் மருத்துவ வசதிகள் கிராமப் புறங்களுக்குக் கிடைப்பதில்லே. ஆனுல் இந்தியாவில் கிராமப் புறங்களில் மொத்தத்தில் 90 சதவிகித மக்கள் வாழ்கின்ருர்கள். இவர்களுக்கு வியாதிகளைப்பற்றி ஒன்றும் தெரியாது. அதன் காரணமாக ஏராளமான மக்கள் அல்லல்படவும் இறக்கவும் நேரிடு கிறது. நோயினுல் பாதிக்கப்படும் மக்களின் எண்ணிக்கையை அறிந்துகொள்ள மருத்துவ நிலேயங்கள் பாதுகாத்து வரும் புள்ளிவிவரங்களிலிருந்து சேகரிக்கலாம். மருத்துவ நிலேயங்களின் பதிவுஏடுகளிலிருந்தும், மாகாண அரசாங்க இறப்பு வீகித ரிகார்டுகளிலிருந்தும் சேகரிக்கலாம். மருத்துவ நிலேயங்கள் பெரும்பாலும் நகர்ப்புறத்தில்தான் அமைந்துள்ளன. ஆகவே கிராமப்புறங்களைப்பற்றி ஒன்றும் அறிந்துகொள்ள முடிய வில்லே. இந்தியாவில் அதிகமான மக்கள் கிராமப்புறங்களில் வசித்தாலும், அவர்கள் எந்தெந்த நோய்களினுல் பாதிக்கப்படு கிருர்கள், எத்தனே பேர்கள் அதன் விளேவாக இறந்தனர் என்ற முழு விவரமும் நமக்குக் கிடைப்பதில்லே. இந்தியாவில் இதுவரை 85 சதவிகித இறப்புக்குச் சரியான காரணங்கள் தெரியவில்லே. எதன் காரணமாக இறந்தார்கள் என்று சரியான புள்ளி விவரங் கள் கிடைப்பதற்கில்லே. 1939ஆம் ஆண்டில் பல்வேறு வியாதி களால் பாதிக்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை கீழே கொடுக்கப் பட்டுள்ளன.

## அட்டவணை 50

| | நோய்களின் பெயர் | சிகிச்சை பெற்றவர்கள் (1939) |
|---|---|---|
| 1 | மலேரியா | 13,157,580 |
| 2 | கீல் வாயு | 616,901 |
| 3 | T.B. காசநோய்–நுரையீரல் | 227,120 |
| 4 | T.B. காச நோய்-மற்ற வகைகள் | 114,539 |
| 5 | காலரா | 35,842 |
| 6 | அம்மை | 10,112 |
| 7 | பெரிபெரி | 43,370 |
| 8 | சீதபேதி | 1,542,105 |
| 9 | பேதி | 1,701,909 |
| 10 | கல்லீரல் நோய் | 347,411 |
| 11 | கண்நோய் | 9,456,894 |
| 12 | காதுநோய் | 4,945,630 |
| 13 | தோல் சம்பந்தப்பட்ட வியாதி | 5,734,291 |
| 14 | மேக நோய் | 367,200 |
| 15 | விபத்துகள், அடிபடுதல் | 4,386,381 |

1939ஆம் ஆண்டில் பல்வேறு நோய்களினால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையை அறியலாம். மொத்தத்தில் காய்ச்சலினால் இறக்கும் மக்களின் எண்ணிக்கை 60 சதவிகிதமாகும். மற்ற நோய்களினால் இறக்கும் மக்களின் எண்ணிக்கை 25 சதவிகிதமாகும். இந்தியாவில் அதிகமான மக்கள் இறப்பதற்குக் காரணம் விஷஜுரம், காய்ச்சல், பிளேக், காலரா போன்ற வியாதிகள் ஆகும். மொத்தத்தில் இறக்கும் மக்களில் 85 சதவிகிதத்திற்குத் தகுந்த காரணங்கள் தெரியவில்லை. உதாரணமாக 10 மில்லியன் மக்கள் ஆண்டு ஒன்றுக்கு இறப்பதாகக் கொண்டால் 8·5 மில்லியன் மக்கள் இறப்புக்குத் தகுந்த காரணம் தெரியவில்லை. மலேரியாகாய்ச்சல்நோய் உலகத்திலுள்ள உஷ்ணப் பிரதேசங்களில் மிக முக்கியமான நோய் எனக் கருதப்படுகிறது. 1924ஆம் ஆண்டில் சர்வதேசச் சங்கம் மலேரியா கமிஷன் ஒன்றை ஏற்படுத்தி உலகிலுள்ள நாடுகளில் மலேரியாவினால் இறக்கும் மக்கள்தொகையைக் கணிக்கத் தொடங்கியது.

ஆண்டுதோறும் உலக மக்கள்தொகையில் மூன்றில் ஒரு பங்கு மலேரியா காய்ச்சலினுல் அவதிப்படுகிருர்கள். அதாவது கிட்டத் தட்ட 650 மில்லியன் மக்கள் இந்த வியாதியால் பாதிக்கப்படு கிருர்கள். இந்தியாவில் மலேரியாவினுல் பாதிக்கப்படுகிறவர்கள் மொத்த மக்கள்தொகையில் ஐந்தில் ஒரு பாகமாக உள்ளனர். ஆனுல் உலகில் மலேரியா நோயினுல் பாதிக்கப்படும் மக்களில் மூன்றில் ஒரு பங்கு இந்தியாவில் உள்ளனர். இந்தியாவில் பல்வேறு காய்ச்சல்களில் மலேரியாதான் மிகவும் கொடியது. இது எல்லாப் பகுதிகளிலும் பரவக்கூடியது. குறிப்பாக நகர்ப்புறத்தை விட கிராமப்பகுதிகளில் அதிகமாகப் பரவுகிறது.

இந்தியாவில் மொத்த இறப்பு விகிதத்தில் மூன்றில் ஒரு பங்கு மலேரியா காய்ச்சலினுல் இறக்கிருர்கள். ஆண்டுதோறும் இந்த வியாதியால் அவதிப்படும் மக்களின்தொகை 100 மில்லியன்கள். அதற்குமேல் போனுலும் ஆச்சரியப்படத் தேவையில்லை. டாக்டர் பி. சி. ராய் அவர்கள் தமது அறிக்கையில் வங்காளத்தில் உள்ள 60 மில்லியன் மக்கள்தொகையில் 30 மில்லியனுக்குக் குறையா மல் பஞ்சத்தின் காரணமாக மலேரியா காய்ச்சலில் அவதிப் படுகிருர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். மலேரியாவின் சர்வே டைரக்டர், கர்னல் சான்டோன் (Col. Santon) அவர்கள் குறிப்பிடு வது: சாதாரண ஆண்டுகளில்கூட இந்தியாவில் மலேரியா காய்ச்சலினுல் இறக்கும் மக்கள் கிட்டத்தட்ட ஒரு மில்லியன் ஆகும். மிக மோசமான ஆண்டுகளில் இந்த எண்ணிக்கை 1·25 மில்லியன் முதல் 1·50 மில்லியன் வரையிலும் உயரும் எனவும் குறிப்பிட்டுள்ளார்கள்.

குழந்தைகளும் சிறுவர்களும் ஆண்டுதோறும் 2 மில்லியன் அளவிற்கு இறப்பதற்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் மலேரியாதான் காரணமாகிறது. உலகப்போருக்குமுன் அதாவது 1938ஆம் ஆண்டில் 3,883,627 இறப்புகள் எனத் தெரிகிறது. இதில் 1 மில்லியனுக்குமேல் மலேரியா காய்ச்சலினுல் இறந்தார் கள். வங்காளத்தில் இவ்வியாதியால் அதிக மக்கள் பாதிக்கப் படுகிருர்கள். ஆண்டுதோறும் மொத்த மக்களில் 60 சதவிகிதம் இந்த வியாதியால் பாதிக்கப்படுகிருர்கள். இதன் காரணமாக மக்களின் ஆற்றல், உற்பத்தித்திறன், மகிழ்ச்சி, வேலைநேரம் யாவும் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. அரசாங்க மருத்துவமனைகளில் 1930முதல் 1940வரை ஆண்டுதோறும் இந்த வியாதியோடு அனுமதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை 10முதல் 14 மில்லி யன்கள் வரை ஆகும். சரியான புள்ளிவிவரங்களின்படி ஆண்டு ஒன்றுக்கு மலேரியா காய்ச்சலில் இறப்பவர்கள் ஒரு மில்லியன்.

மறைமுகமானவையும் கணக்கில் வராதவையுமான இறப்புகளையும் சேர்த்து ஆராய்ந்தால் மொத்தத்தில் ஆண்டு ஒன்றுக்கு 3 மில்லியன் மக்கள் மலேரியாவினால் இறக்கிறார்கள். இவ்வியாதியால் பாதிக்கப்படும் மக்களின் எண்ணிக்கை 10 மில்லியன்கள் ஆகும்.

இதனால் மக்களின் ஆரோக்கியம் குறைகிறது; உற்பத்தித் திறனும் குறைகிறது. இந்த வியாதியிலிருந்து மீண்டவர்கள் மேலும் சரியான முறையில் உழைக்க முடிவதில்லை. அதனால் மக்களின் தரம் குறைந்துவருகிறது. 1940ஆம் ஆண்டில் மலேரியாவினால் பாதிக்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை பல்வேறு மாகாணங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து கீழேயுள்ள அட்டவணையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## அட்டவணை 51

**1940ஆம் ஆண்டில் மருத்துவமனையில் பதிவான மலேரியா நோயாளிகள்**

| மாகாணங்கள் | நோயாளிகளின் எண்ணிக்கை | மொ.ம.தொகை | மொத்த ம. தொகை சதவிகிதம் |
|---|---|---|---|
| வ. மே. எல்லை மாகாணம் | 539,866 | 2,523,589 | 21·1 |
| பஞ்சாப் | 1,568,000 | 26,069,027 | 9·7 |
| டெல்லி | 94,725 | 699,157 | 10·7 |
| ஐக்கிய மாகாணம் | 1,224,684 | 52,390,009 | 12·0 |
| பீகார் | 1,302,498 | 34,695,892 | 17·4 |
| ஒரிஸ்ஸா | 369,857 | 7,209,846 | 18·0 |
| வங்காளம் | 3,798,933 | 52,195,805 | 32·1 |
| மத்திய மாகாணம் | 653,405 | 19,383,756 | 23·3 |
| பம்பாய் | 588,751 | 4,237,554 | 15·3 |
| சிந்து | 242,485 | 47,201,685 | 23·3 |
| சென்னை | 1,107,937 | 47,201,685 | 6·0 |
| கூராக் | 161,058 | 164,619 | 41·8 |
| அஸ்ஸாம் | 716,192 | 8,438,246 | 30·3 |
| பலுசிஸ்தான் | 113,204 | 868,617 | 17·0 |
| மொத்தம் | 12,481,595 | சராசரி | 15·2 |

1950ஆம் ஆண்டில் பல்வேறு நோய்களினுல் இறந்தவர் களின் மொத்த சதவிகிதத்தையும் 1,000 பேர்களுக்கு எத்தனை பேர்கள் இறப்பு என்பதையும் விளக்கக் கீழேயுள்ள அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது.

## அட்டவணை 52

1950—இறப்புக் காரணங்கள்

| நோய்களின் பெயர் | காலரா | அம்மை | ஜுரம் | பேதி | பரவக்கூடிய நோய்கள் | விபத்துகள் | மற்ற நோய்கள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1,000பேர்களுக்கு இறப்பு | 0·4 | 0·2 | 13·0 | 0·1 | 0·9 | 1·8 | 10·6 |
| மொத்த சதவிகிதம் | 1·8 | 0·9 | 58·1 | 0·5 | 4·1 | 8·1 | 26.5 |

காசநோய்கள் : இந்தியாவில் உள்ள வீடுகளின் நிலைமை களைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் அறியலாம். வீடுகள் மோச மான நிலையில் உள்ளபடியால் காசநோயினுல் பாதிக்கப்பட்டவர் களின் எண்ணிக்கையைப் பார்த்து ஆச்சரியப்பட வேண்டிய தில்லை. நல்ல சுகாதாரம், ஆரோக்கியம், சரியான சத்துள்ள உணவு இல்லாத குறையே காசநோய் பரவுவதற்குக் காரணமாய் உள்ளது. கூட்டம் அல்லது நெருக்கடி அதிகமிருந்தால் காச நோய் பரவுதற்குச் சாதகமாய் உள்ளது. ஆகவே சமூக பொருளாதாரச் சூழ்நிலைகள் மாறினுலொழிய இந்த வியாதியை நீக்க முடியாது. மலேரியாவிற்கு அடுத்தபடியாகக் காசநோயி னுல் இந்தியாவில் அதிகப்படியாக மக்கள் பாதிக்கப்படுகிருர்கள். கிட்டத்தட்ட ஆண்டு ஒன்றுக்கு ½ மில்லியனுக்கு மேல் இந்த வியாதியால் மக்கள் இறக்கிருர்கள். 1939ஆம் ஆண்டில் பொது சுகாதாரக் கமிஷனரின் அறிக்கைப்படி மொத்த இறப்பில் இந்த வியாதியால் இறப்பவர்கள் 8·1 சதவிகிதமாகும்.

இந்த சதவிகிதம் இந்தியா முழுமைக்கும் பொருந்தும் என்ருல் மொத்தத்தில் 8 மில்லியன் மக்கள் காசநோயால் பாதிக்கப் படுகிருர்கள். வங்காளத்தில் ஆண்டு ஒன்றுக்குக் காசநோயால் இறப்பவர்கள் ஒரு லட்சம் பேர்கள் எனத் தீர்மானிக்கப்பட்டுள் ளது. மேலும் வங்காளத்தில்மட்டும் இந்த வியாதியால் பாதிக்கப்

பட்டவர்கள் ஒரு மில்லியன் ஆகும். அதாவது 10பேருக்கு இந்த வியாதி கண்டால் ஒருவர் இறக்கிருர். இந்த வியாதியால் நகர மக்கள்தான் பெரிதும் பாதிக்கப்படுகிருர்கள். இதைத்தடுப்பதற் குரிய முறைகளை முன்னதாகவே அரசாங்கம் மேற்கொண் டுள்ளது. காசநோய்க்கு 6,000 படுக்கை வசதிகள் உள்ளன; ஆனால் ஆண்டுதோறும் வியாதியால் இறப்பவர்கள் 5 லட்சம் பேர். இந்தியாவில் தற்சமயம் தொழில்கள் முன்னேறுவதாலும், நகரங்கள் வளர்வதாலும், மக்கள் கிராமப்புறத்திலிருந்து பட்டணங்களை நோக்கிப் போவதாலும் இந்தக் காசநோய் தீவிரம் அடைந்து வருகிறது. 1941ஆம் ஆண்டில் உலகில் மிக முக்கிய நகரங்களில் காசநோயினுல் ஒரு லட்சத்திற்கு எத்தனை பேர்கள் இறந்தார்கள் என்பதையும், மேலும் இந்தியாவிலுள்ள நகரங்களில் அவ்வாறு இறந்தவர்கள் ஏனைய நகரங்களில் இறந்தவர்களைவிட எண்ணிக்கையில் அதிகம் எனக் கீழேயுள்ள அட்டவணை புலப் படுத்துகிறது.

## அட்டவணை 53

**காச நோயினுல், க்ஷயரோகத்தினுல் ஒரு லட்ச மக்களுக்கு இறந்தவர்களின் எண்ணிக்கை—முக்கிய நகரங்கள்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாரிஸ் | — | 177 | கான்பூர் | — | 432 |
| மெக்சிகோ | — | 170 | லக்னே | — | 419 |
| நியூயார்க் | — | 128 | சென்னை | — | 290 |
| பெர்லின் | — | 120 | கல்கத்தா | — | 230 |
| லண்டன் | — | 96 | பம்பாய் | — | 140 |

சர் ஜான் மிகாவு அவர்கள் க்ஷயரோகம் மிகவும் வேகமாக இந்தியாவில் வளர்ந்து வருகிறது; இதற்குக் காரணங்கள் தொழிற்சாலைகளின் வளர்ச்சி, சுகாதாரக்குறைவு, குடிசைகளின் வளர்ச்சி, மருத்துவ வசதிகள் குறைவு, அறியாமை, ஆரோக்கியம் அற்ற நகர வளர்ச்சி போன்ற பல எனக் குறிப்பிடுகிருர்கள். க்ஷய ரோகத்தினுல் இறப்பவர்கள் கிராமத்தைவிட நகர்ப்புறத்தில் தான் அதிகம்; ஆண்களைவிட பெண்கள் அதிகம் என்பது பொது வான கருத்தாகும். மேலும், ஆரோக்கியமற்ற சூழ்நிலையாலும் சத்துள்ள உணவுக் குறைவினுலும், போஷாப்புக் குறைவினுலும், மோசமான வீடுகளினுலும், நெருக்கடியான நிலைமையாலும், பர்தா முறைகளினுலும் க்ஷயரோகம் அதிகம் பரவி வருகின்றது. இந்த வியாதியைப் போக்க வேண்டுமானுல் முதலில் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும். ஏழைகளின் சமூக, பொருளாதார நிலைமைகளில் மாற்றம் ஏற்பட வேண்டும்.

1941ஆம் ஆண்டில் காசாலியில் ஏற்படுத்தப்பட்ட லேடி லின்லித்கோ சானட்டோரியம் ஓர் மாதிரிநிலையாக விளங்குகிறது. இங்கு டாக்டர்களுக்குப் பயிற்சி முறைகளையும் நவீன முறைகளையும் சொல்லித் தருகிறார்கள். டெல்லியிலும் இதே மாதிரியாக மற்றொரு நிலையமும் ஏற்படுத்தப்பட்டது.

தொத்து நோய்கள் எல்லா இடங்களிலும் மிக விரைவாகப் பரவக் கூடியவை. ஜுரத்திற்கு அடுத்தபடியாகப் பரவக் கூடியவை தொத்து நோய்கள்தான். உதாரணமாக காலரா, பிளேக், அம்மை இவை பெருவாரியாகப் பரவி வருகின்றன. பொதுவாகக் காலராவினால் இறக்கும் மக்கள் 10,000 பேர்களுக்கு 2 முதல் 36 வரையில் உள்ளது. 1931முதல் 1939வரையில் சராசரியாக 10,000 பேர்களுக்கு காலராவினால் இறந்தவர்கள் 5·7 ஆகும்.

உண்மையில் ஆராய்ந்து பார்த்தால், தவறுகளை நீக்கிக் கணக்கிட்டால் 10,000 பேர்களுக்கு 7·5 பேர்கள் இறக்கிறார்கள். இந்தியா முழுமையும் 1931முதல் 1939வரையில் ஆண்டு ஒன்றுக்கு 270,000 பேர்கள் வீதம் காலராவினால் இறந்தார்கள். காலரா பெரும்பாலும் சந்தைகள், யாத்திரிகர்கள் கூடுமிடம், திருவிழாக்கள், பெரிய மாநாடுகள், சுகாதார வசதியில்லாமல் கூடும் கூட்டங்கள் இவற்றில் விரைவாகப் பரவக்கூடும். 1937ஆம் ஆண்டில் 10,000 கிராமங்கள் சுகாதார வசதியில்லாமல் காலரா வினால் பாதிக்கப்பட்டன. இதற்கு எந்த விதமான மருந்து வசதி களும் கிடையாது. 1942ஆம் ஆண்டில் சென்னை மாநிலத்தில் காலராவினால் இறந்தவர்கள் 20,000 பேர்கள். அதே நேரத்தில் பம்பாய் மாநிலத்தில் இறந்தவர்கள் 4,000 பேர்கள் எனக் கணக்கிடப்பட்டது.

உலகில் காலராவை உருவாக்கும் தேசம் இந்தியாதான் எனப் போற்றப்படுகிறது! மேலும் காலராவை இந்தியாவில் சரியான முறையில் கட்டுப்படுத்தவுமில்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு. எல்லா கிராமங்களிலும் பொதுச் சுகாதாரப் பணியாளர்கள் கிடையாது. அப்படியே பணியாளர்கள் இருந் தாலும், எண்ணிக்கையும், சாதனங்களும் மக்கள்தொகைக்கு ஏற்றவாறு அமையாமல் பற்றாக்குறையாக உள்ளன. எல்லா வற்றையும் சுத்தமான முறையில் வைத்திருப்பது கிடையாது. பாதுகாக்கப்பட்ட சுத்தமான தண்ணீர்த் திட்டம் கிடையாது. ஆகவேதான் இதுபோன்ற கொடிய தொத்துநோய்கள் விரை வாகப் பரவி பல மக்களை பாதிக்கின்றன, அதனால் பலர் இறக்கிறார் கள்,

சென்ற சில ஆண்டுகளாகப் பிளேக் வியாதி குறைந்து வருகிறது. இருந்தபோதிலும் 1898 முதல் 1939 வரை பார்த்தால் பிளேக் வியாதியால் இறந்தவர்கள் 14 மில்லியன்கள் எனப் பதிவு செய்யப்பட்டுள்ளன. பதிவு பெருமல் இருப்பவற்றையும் ஆராய்ந்து பார்த்தால் மொத்தத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 23 மில்லியன்கள். 1931முதல் 1939வரை 9 ஆண்டுகளில் ஆண்டு ஒன்றுக்கு 80,000 பேர்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

அம்மையின் கொடுமையும் சற்றுக் குறைந்துவருகிறது. இருந்தபோதிலும் குறைவானது எதிர்பார்த்த அளவுக்கு இல்லே. அரசாங்கப் புள்ளிவிவரப்படி சராசரி இறப்பு அம்மையினுல் 1931முதல் 1939வரை 10,000 பேர்களுக்கு 2·4 எனத் தீர்மானிக்கப்பட்டது. அதாவது ஆண்டு ஒன்றுக்கு 112,000 பேர்கள் அம்மையினுல் இறக்கிருர்கள். கலாசர் என்ற கொடிய மலேரியா காய்ச்சலினுல் எத்தனேயோ மக்கள் இறக்கிருர்கள். இதற்குண்டான புள்ளிவிவரங்கள் சரிவரக் கிடைக்கவில்லே. பெரிபெரி என்ற வியாதி வைட்டமின் B பற்ருக்குறையினுலும், அரிசி உணவை அதிகம் உட்கொள்வதாலும் ஏற்படக்கூடிய தாகும் பசியின்மை, கை கால்களின் வாதம், மூச்சுத்திணறல் போன்றவை காரணங்களாகும். எந்திரங்களினுல் தீட்டப்பட்ட அரிசியை உட்கொள்வதால் இந்த வியாதி ஏற்படும். கைக்குத்தல் அரிசிதான் உணவிற்குச் சிறப்பானது. பெரும்பாலும் எந்திரங்களில் தீட்டப்பட்ட அரிசியைத்தான் தென்னிந்திய மக்கள் உட்கொள்ளுகிருர்கள். அதனுல் தென்னிந்திய மக்கள் பெரிதும் வியாதியால் பாதிக்கப்படுகிருர்கள். தென் நாட்டில் உஷ்ணம் அதிகமிருப்பதாலும், அரிசியை உட்கொள்வதாலும் நோய்கள் இங்குக் கொடுமையாகவும் கடுமையாகவும் உள்ளன. ஆனுல் வடக்குப் பகுதிகளில் மித உஷ்ணத்தினுலும், கோதுமை போன்ற சத்துள்ள உணவை உட்கொள்வதாலும் மக்கள் ஆரோக்கியமாகவும், திடகாத்திரமாகவும் உள்ளனர். நோயினுல் பீடிக்கப்பட்டவர்களும் குறைவாக உள்ளனர். மொத்த இறப்பில் பெரிபெரி வியாதியால் இறப்பவர்கள் 6 சதவிகிதமாகும். இந்தியாவில் சில ஆண்டுகளில் சில வியாதிகளின் கொடுமையைத் தாங்க முடிவதில்லே. உதாரணமாக, 1907ஆம் ஆண்டில் பிளேக் வியாதி தோன்றியது. 1918ஆம் ஆண்டில் விஷஜுரம் பரவியது. 1943ஆம் ஆண்டில் பஞ்சம் ஏற்பட்டது. இதனுல் பலமில்லியன் மக்கள் மாண்டார்கள்.

இந்தியாவில் கொக்கிப்புழு வியாதியால் அதிகமான பேர்கள் பாதிக்கப்படுகிருர்கள். சாதாரணமாக, 40 சதவிகிதம் முதல் 50 சதவிகிதம்வரை இந்த வியாதியால் பாதிக்கப்படுகிருர்கள்.

சில சமயம் இது உச்சக்கட்டத்தையும் அடையும். கிட்டத்தட்ட 80% சதவிகித அளவில் பரவும். இந்த வியாதி அஸ்ஸாமில் உள்ள தேயிலைத் தோட்டங்களிலும், வங்காளம், திருவிதாங்கூர், கேரளா மாநிலங்களிலும், பீகாரின் சில பகுதிகளிலும், தமிழ் நாட்டிலும், ஐக்கிய மாகாணத்திலும் அதிகம் உண்டு. அதிகமாக மழை பெய்யும் பகுதிகளில் இந்த வியாதி இருக்கும். அடுத்து வயிற்றுப்போக்கு, சீதபேதி, பேதியாதல் இதுபோன்ற வியாதிகள் இந்தியாவில் அதிகம். இதற்கு அதிக உஷ்ணம், சத்துள்ள உணவு இல்லாமை, கடின உழைப்பு, ஜீரணசத்திக் குறைவு போன்றவை காரணங்களாகும்.

அரசாங்கப் புள்ளிவிவரத்தின்படி 1931முதல் 1939வரை ஆண்டு ஒன்றுக்கு இதனுல் இறக்கும் மக்கள் 336,000 பேர்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. அதாவது 10,000 பேர்களுக்கு 9·6 பேர்கள் என அறிவிக்கப்பட்டுள்ளது 1931ஆம் ஆண்டில் குருடர் களின் எண்ணிக்கை 601,000; தொழுநோயினுல் பீடிக்கப்பட்டவர் களின் எண்ணிக்கை 148,000; செவிடர்களின் எண்ணிக்கை 231,000; பைத்தியம் பிடித்தவர்களின் எண்ணிக்கை 120,000; பலவீனமுடையவர்களின் எண்ணிக்கை 1,095,000 எனக் கணக் கிடப்பட்டுள்ளன. 1947ஆம் ஆண்டில் குருடர்களின் எண்ணிக்கை 2 மில்லியன்கள் ஆகும். அதாவது 1000 பேர் களுக்கு 3 பேர் என வகுக்கப்பட்டுள்ளது. குருடர்களில் பாதிக்கு மேல் குணப்படுத்தக் கூடியவர்கள் என டாக்டர்கள் கூறுகிறுர்கள். சமீபத்தில் குருடர்களின் எண்ணிக்கையில் 5 லட்சத்திற்கு குணப் படுத்த முடியும் எனத் தெரிவித்துள்ளார்கள். 1940ஆம் ஆண்டில் தொழுநோயினுல் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை 147,911 ஆகும். உலக முழுவதிலும் தொழுநோயினுல் பாதிக்கப்பட்டவர்கள் 3 மில்லியன்கள் எனத் தெரிகிறது. உலக மக்கள்தொகையில் ஐந்தில் ஒருபங்கு இந்தியாவில் உள்ளனர். இவற்றில் மூன்றில் ஒரு பங்கு பயங்கர நோய்களினுல் பாதிக்கப்படுகிருர்கள். சீனுவில் மட்டும் 1 மில்லியன், ஏனைய நாடுகளில் மொத்தத்தில் 1 மில்லிய னும் கொடிய நோய்களினுல் பாதிக்கப்படுகிருர்கள்.

இன்று இந்தியா எங்கணும் உதவி முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. தனியார், அரசாங்க முயற்சிகளையும் சேர்த்து மொத்தத்தில் 1930ஆம் ஆண்டில் 22,000 வியாதியஸ்தர்களுக்கு உதவிகள் அளிக்கப்பட்டன. சென்ற 20 ஆண்டுகளாக நிலைமை யில் யாதொரு மாற்றமும் காணவில்லை. இந்தியாவில் இன்னும் 80,000 வியாதியஸ்தர்கள் எந்தவிதமான சானட்டோரியம் அல்லது மருந்து வசதிகளும் இல்லாமலும், சிகிச்சைகள் அளிக்கப் படாமலும் உள்ளனர். இப்படிப்பட்ட வியாதியஸ்தர்கள் பிச்சை

எடுத்துக்கொண்டும், தெருக்களில் தூங்கிக்கொண்டும், நோய்க்குரிய கிருமிகளைப் பல இடங்களில் பரப்பிக்கொண்டும் வருகிறார்கள். இவர்கள் பெரும்பாலும் நகர்ப்புறங்களிலும், பஸ் நிலையங்களிலும், ரயில்வே நிலையங்களிலும், சினிமா கொட்டகைகளிலும் கடை வீதிகளிலும் காணப்படுகிறார்கள். அத்துடன் இவர்களைக்கோயில்களிலும் புனித க்ஷேத்திரங்களிலும், திருவிழாக்காலங்களிலும் ஏராளமாகக் காணமுடிகிறது. இந்துக்கள் தர்மம் செய்தல், சோறு போடுதல் போன்ற பல தர்மகாரியங்களைக் கோயில்களில் மேற்கொள்வதால் அங்கே இது போன்ற வியாதியஸ்தர்கள் ஒன்று கூடுகிறார்கள். பல மக்கள் கோயில் குளங்களுக்குச் சென்று இது போன்ற வியாதிகளை ஒற்றிக்கொண்டு வருகிறார்கள். எந்த அரசாங்கமும் இதுவரை இந்தப் பிரச்சினைக்குச் சுத்தமாகத் தீர்வு காணமுடியவில்லை. அமெரிக்காவில் லூசியானா என்ற நகரில் இதுபோன்ற வியாதியஸ்தர்களை ஒன்றாக இணைத்து நகரில் பல இடங்களில் பரவவிடாமல், ஒரு சானட்டோரியம் ஏற்படுத்தி, அதில் வியாதிகளைக் குணப்படுத்தும் முறைகளை ஆராய்ந்து வருகிறார்கள். அதைப்போல இந்தியாவிலும் நோயினால் பீடிக்கப்பட்ட வியாதியஸ்தர்களை ஒன்றாக இணைத்து, வியாதியைக் குணப்படுத்த வேண்டும். இன்னும் பல வியாதிகளின் காரணமாக ஒரு ஆண்டு முடிவதற்குள் பம்பாய் நகரில் இறக்கும் குழந்தைகள் எண்ணிக்கை 9,000 ஆகும். இவற்றில் 3,000 குழந்தைகள் இயற்கையாகவே முடியாத நிலையில் பிறந்து ஒரு மாதம் முடிவதற்குள் இறந்துவிடுகின்றன. 3,000 குழந்தைகள் ஆண்டுதோறும் இறப்பது மொத்தக் குழந்தைகளின் இறப்பில் 30 சதவிகிதமாகும். இவை அநேகமாக கிரந்திநோய், மேகநோய், இழுப்பு போன்றவற்றால் இறக்கின்றன. வெள்ளைநோய், வெட்டைநோய் இவற்றினாலும் இறப்பதுண்டு. மொத்தக் குழந்தைகளின் இறப்பில் 25 சதவிகிதத்திற்குத் தகுந்த காரணங்கள் தெரியவில்லை. 1,000 பேர்களுக்கு 9 பேர் நோயினால் பாதிக்கப்பட்டால், அவற்றில் 5 பேர் கிரந்தி நோயினால் இறக்கிறார்கள். டாக்டர் ஜீ. லெயிஸி என்னும் உலகச் சுகாதார அமைப்பு நிபுணர் கூறுவது: மொத்தக் குழந்தைகளில் 4 சதவிகிதம் கிரந்தி நோயினால் பாதிக்கப்பட்டு மடிகின்றன. குழந்தை கர்ப்பத்தில் இருக்கும்போதே இதுபோன்ற தாய்மார்களைத் தனியான முறையில் கவனித்துத் தகுந்த சிகிச்சை கொடுக்கவேண்டும். இந்தியாவின் முன்னாள் சுகாதார மந்திரியான திருமதி ராஜகுமாரி அமிர்த கௌரி அவர்கள் அறிவிப்பது: 1,000 பேர்களில் 37 பேர் கிரந்தி நோயினால் பாதிக்கப்படுகிறார்கள். இந்தியாவில் 1948ஆம் ஆண்டில் 58 கிரந்தி நோய்க்குரிய மருத்துவநிலையங்கள் இருந்தன. இவற்றில் சென்னையில் 17-ம், பம்பாயில் 16-ம், மே. வங்காளத்தில் 10-ம் இருந்தன.

ஆண்டுதோறும் விபத்துகள், பாம்புகடி இவற்றின் மூலமாக இறக்கும் மக்கள்தொகை 1,500,000 ஆகும். போதிய மருந்து வசதிகள் இல்லாத காரணத்தால் ஆயிரக்கணக்கான வியாதிகளைத் தடுக்க முடியவில்லை. குணப்படுத்தவும் முடிவதில்லை. அதனால் ஏராளமான மக்கள் மடிகிறார்கள். மூளைக்கோளாறு, சித்தப்பிரமைக் குரிய காரணங்கள் கடுமையான பட்டினி, போஷாக்குக்குறைவு, விஷஜுரம், அடிக்கடி தாய்மார்கள் குழந்தைகளைப் பெற்றெடுத்தல் போன்றவையாகும். இந்தியாவில் 1,000 பேர்களுக்கு 2 பேர் வீதம் மூளைக்கோளாறு ஏற்படுகிறது. இந்தியா முழுவதிலும் இதனால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை 800,000 ஆகும். மூளைக்கோளாறு உள்ள மக்களுக்கு எப்படி மருத்துவ உதவி அளிக்கப்படுகின்றது? பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளில் 10,000 படுக்கைகள் உள்ளன. ஆனால் இந்தியாவில் இந்த வியாதியால் பாதிக்கப்பட்ட மக்கள் குறைந்தது 800,000 முதல் 1,000,000 வரையில் உள்ளனர். போதிய சிகிச்சைகள், தகுந்த முறையில் படுக்கை வசதிகள், மருத்துவநிலையங்கள் ஆகியவை இல்லை. பைத்தியக் கார ஆஸ்பத்திரிக்கு பற்றுக்குறை இன்றும் இந்தியாவில் இருந்து வருகின்றது. டாக்டர் எம். டெய்லர் அவர்கள் குறிப்பிடுவதாவது: பைத்தியக்கார மருந்துவநிலையங்கள் சிறைச்சாலையைவிட மோசமாகவும், கொடுமையாகவும் உள்ளன. படுக்கைகளின் எண்ணிக் கையும் குறைவாக உள்ளது. மருத்துவப் பயிற்சிகள் சரியான முறையில் அளிக்கப்படவில்லை; திறமையான டாக்டர்கள் கிடைப்பதில்லை. இத்துறையில் முன்னேற்றம் நத்தை வேகத்தில் போகிறது. தடுப்பு முறைகளை உடனே மேற்கொள்ளுதல் வேண்டும். புதிய மருந்துகளைக் கண்டுபிடிக்க வேண்டும். விரைவாகவும், எளிதாகவும் நோய்களைக் குணப்படுத்தல் வேண்டும். பயிற்சி பெற்ற டாக்டர்கள், தாதிகள் ஆகியோரைப் பணியாளராக நியமித்தல் வேண்டும். மக்களின் துயர்களைப் போக்கவேண்டும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பதற்கு இணங்க வியாதிகளைக் கட்டுப்படுத்திக் குணப்படுத்தவேண்டும்.

இந்தியாவில் பல மக்கள் நோய்களினால் பாதிக்கப்பட்டுக் கஷ்டத்திற்கும் துன்பத்திற்கும் ஆளாவதும் வியாதியஸ்தர்களின் அட்டவணையில் வருவதில்லை. அப்படி நோயுள்ளவர்களின் எண்ணிக்கை ஒன்றுகச்சேர்த்து கணித்தால் இந்தியாவில் பல மில்லியன்களைக் கொண்டதாகும். இந்தியாவில் மக்கள் உண்மை யில் ஆரோக்கியமாகவும், சுறுசுறுப்பாகவும், வேலைசெய்வதற் குரியவர்களாகவும், சம்பாதிப்பதற்குரியவர்களாகவும் தென்படவில்லை. பல மக்களுக்கு மருத்துவருடைய ஆலோசனையும் கிடைப்பதில்லை. சொல்லப்போனால் ஒரு அவுன்ஸ் மருந்துகூடக் கிடைப்பதில்லை. எத்தனையோ மக்களுக்கு ஒருவேளை

முழுச்சாப்பாடு கிடைப்பதும் இல்லை. சுத்தமான படுக்கையில் படுப்பதும் கிடையாது. வாழ்க்கை என்பது துன்பங்களையும், இன்னல்களையும் கொண்டதாகத்தெரிகிறது.

எப்படி ஆரோக்கியத்தையும், வலிமையையும் உண்டாக்குவது? மக்களின் துன்பங்களையும் இன்னல்களையும் அளப்பதற்குச் சரியான அளவுகோல் கிடையாது. இந்திய நாட்டில் ஏராளமான மக்கள் சேதம்; பல்வேறு நோய்களினால் பாதிக்கப்பட்டு மாண்டு மடிகின்றனர்கள்! நாளுக்குநாள் மக்களின் வலிமையும், ஆற்றலும் குறைந்துகொண்டே செல்கிறது. இந்தியாவில் மிக விரைவில் ஏராளமான மக்கள் இறக்கிறார்கள். ஆரோக்கியம் என்றால் கடையில் வாங்கும் பொருள் அன்று. மக்களுக்குச் சகல வசதிகளையும் அளித்து 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதற்கிணங்க அவர்களைப் பாதுகாத்திடல் வேண்டும். விஞ்ஞான வளர்ச்சி சென்ற 30 அல்லது 40 ஆண்டுகளாக முன்னேறியும் இந்தியாவில் பல கோடி மக்கள் வீணாக இறப்பதைப் பார்க்கும்போது வேதனைப்படவேண்டியுள்ளது. இருக்கக்கூடிய அத்தனை விஞ்ஞான அறிவையும், சாதனைகளையும், திறமைகளையும், வசதிகளையும் வைத்துக்கொண்டு நல்ல முறையில் மக்களை நோய்களிலிருந்து பாதுகாத்திடல் வேண்டும். 'செய்வன திருந்தச்செய்' என்பதற்கிணங்க இருப்பதை வைத்துக்கொண்டு நல்லமுறையில் பணியாற்றினால் பல ஆயிரக்கணக்கான மக்களைக் காப்பாற்ற முடியும். இப்போது உயிர் வாழ்வது மிகவும் கடினம். பல தொல்லைகளுக்கு உட்படவேண்டியுள்ளது. கிராமப்புறங்களில் மருத்துவ வசதிகள் கிடையாது. நகர்ப்புறங்களில் ஜன நெருக்கடி, காற்றோட்டமில்லாத வீடுகள் இவைபோன்ற சூழ்நிலைகளில் குழந்தைகளை வைத்துக்கொண்டு குடும்பவாழ்க்கை நடத்துவது கடினமாய் உள்ளது. ஒவ்வொருவருடைய வாழ்வும் இந்த நாட்டினுடைய நாகரிகத்தின் மையமாகக் கருதவேண்டும். அதற்காகச் சில முன்னேற்றங்களையும், சீர்திருத்தங்களையும் மேற்கொண்டு மக்கள் சந்தோஷமாகவும், ஆரோக்கியமாகவும் வாழ வகை செய்தல் வேண்டும். மக்களின் சேதாரத்தைக் கூடுமான வரைக்கும் குறைத்தல்வேண்டும். கொடிய நோய்களைக் கட்டுப்படுத்திடல் வேண்டும். எல்லோருக்கும் மருத்துவ வசதிகள் கிடைத்தல் வேண்டும். ஜனநாயகத்தில் அத்தனை மக்களுக்கும் மருத்துவ வசதிகள் அளித்திடல் வேண்டும். "ஒரு நாட்டினுடைய வளம் அந்த நாட்டிலேயுள்ள நிலங்கள், நீர்ப்பாசன வசதிகள் அல்ல, காடுகளும் சுரங்களும் அல்ல, மிருகங்களும் பறவைகளும் அல்ல, தங்கமும் வெள்ளியும் அல்ல; ஆனால் சந்தோஷமும், ஆரோக்கியமும் நிறைந்த மனிதர்களும் தாய்மார்களும் குழந்தைகளுமேயாவர்."

# 15. வீட்டுவசதிகள்

மொத்த மக்கள்தொகையில் 10-ல் 9 பாகம் கிராமங்களிலும் 10-ல் ஒருபாகம் நகர்ப்புறங்களிலும் மக்கள் வாழ்கிருர்கள். கிராமப் புறங்களில் உள்ள வீட்டு வசதிகளைப்பற்றிச் சரியான ஆய்வு நடத்தப்படவில்லை. இருந்தபோதிலும் சில ஆராய்ச்சியாளர்கள் கிராமப்புறங்களிலுள்ள நிலைமைகளை விளக்கி அவ்வப்போது அறிக்கைகள் வெளியிட்டுள்ளார்கள். இவர்கள் யாவரும் சரி யான முறையில் வீட்டு வசதிகளைப்பற்றிப் புள்ளிவிவரங்கள் தயாரிக்கவில்லை. இந்த ஆராய்ச்சியாளர் பெரும்பாலும் கிராமப் புறங்களில் உள்ள வாழ்க்கையின் நிலைமைகளை எடுத்துக் கூறி யுள்ளார்கள். ஆனுல் கிராமங்களில் எப்படி வீடுகள் உள்ளன? அவை போதுமானவையா? எத்தனை வீடுகள் இருக்கின்றன? என்பவற்றைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. இந்தியாவில் 66·4 மில்லியன் மக்கள் 6 லட்ச கிராமங்களில் வாழ்கிருர்கள். இவர் களில் 2 சதவிகிதம் கல்லினுல் கட்டப்பட்ட வீடுகளிலும், 7 சத விகிதம் கூரை வீடுகளிலும், மீதமுள்ளவர்கள் மண் குடிசை களிலும் வாழ்கிருர்கள். ஆனுல் இந்த குடிசைகள் மூங்கில், மண் சுவர், தென்னை, பனை ஓலைகளினுல், ஆக்கப்பட்டவை. சில மக்கள் வராண்டாக்களிலும், திண்ணைகளிலும் வாழ்கின்ருர்கள்.

இந்த வீடுகள் யாவும் ஒரே ஓர் அறையைக் கொண்டவை. அதன் உயரம் ஒர் ஆள் நிற்பதற்குரிய உயரமாகும். அதன் தரையின் பரப்பளவு 80முதல் 120வரையானச் சதுர அடிகளைக் கொண்டதாகும். அந்த குடிசைக்கு ஒரே ஒரு வாயிற்படி; அதிலும் கதவில்லாத வாயிற்படி. அந்த வீட்டிற்கு ஜன்னலும் கிடையாது. காற்று, வெளிச்சம் வருவதற்கு வாய்ப்பு கிடையாது. வாயிற்படி பெரும்பாலும் கிழிந்த துணியில் அல்லது சாக்கினுல் மூடப்பட்டிருக்கும். வீட்டுக்குள் குனிந்துதான் செல்ல வேண்டும். ஒவ்வொருவீட்டிலும் சராசரியாக நான்கு அல்லது

ஐந்து பேர்கள் வீதம் வசிக்கிறார்கள். அவர்கள் அந்த இடத்திலேதான் பிறந்து வளர்ந்தவர்கள். அங்கேயேதான் சாப்பிடுவார்கள், தூங்குவார்கள். அவர்களுக்குரிய சொத்துகள் கிழிந்த துணிகள், ஒருபாய் அல்லது ஒரு மரக்கட்டில்—மூங்கிலாலானது, சட்டிபானைகள், ஒன்று அல்லது இரண்டு பித்தளைப்பாத்திரங்கள். குளிக்கும் அறை இவர்களுக்குத் தெரியாது. இந்தியாவில் கிராம மக்கள் தினந்தோறும் மதச்சம்பிரதாயப்படி கிணற்றில், அல்லது குளத்தில், வாய்க்கால், நதிகளில் குளிப்பார்கள் வீட்டுக்குப் பக்கத்தில் ஓரமாக ஒரு தட்டியை அடைத்துவைத்து சிறுநீர் கழிக்கும் இடமாகப் பயன்படுத்துவார்கள். அந்தக் குடிசையில் கோழி, பூனை, மாடு அல்லது ஆடு இவற்றையும் வளர்ப்பார்கள். மழை, குளிர், காற்று, உஷ்ணம் எல்லா நாள்களிலும் சமையல் குடிசைக்குள் நடைபெறும். கக்கூஸ் வசதிகள் கிடையாது. திறந்தவெளியில் வெகுதூரம் சென்று கழிப்பார்கள். வசதியான குடும்பங்கள் மட்டும்தான் கக்கூஸ் வசதிகளை வைத்திருப்பார்கள். சுத்தமான குடிநீர் வசதிகள் கிடையாது. கிராமப்புறங்களில் பெரும்பாலும் மக்கள் குடிசையில் வாழ்கிறார்கள். ஒரே அறையைக் கொண்ட குடிசைகளில் குடும்பம் நடத்தப்படுகிறது.

நகர்ப்புறங்களில் வீட்டு வசதிகள் அதைவிட பயங்கரமாக இருக்கின்றன. ஏழைகளுக்கும் செல்வந்தர்களுக்கும் இடையே பெருத்த ஏற்றத்தாழ்வுகளைக் காணலாம். செல்வந்தர்கள் பங்களாக்களில் வாழ்கின்றார்கள். கார், தோட்டம், மேலை நாட்டு முறையில் குளியல், சாப்பாட்டு அறை, குளிக்கும் அறை, சமையல் அறை, தூங்கும் அறை, வரவேற்பு அறை போன்ற பல அறைகள் இருக்கின்றன. இந்த அறைகள் பெரும்பாலும் காற்று, வெளிச்சம், தாராளமான இடவசதிகள் அனைத்தையும் பெற்றிருக்கும். ஆனால் ஏழை மக்கள் பிளாட்பாரத்திலும், குடிசைகளிலும், வராண்டாக்களிலும், சாக்கடை ஓரங்களிலும் வாழ்கிறார்கள். அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளிலுள்ள குடிசைவாழ் மக்களின் நிலைமையைவிட மிக மோசமான நிலையில் நகர்ப்புறங்களில் ஏழை மக்கள் வாழ்கின்றனர். தொழில் நகரங்களைப்பற்றிப் பல்வேறு சர்வேக்கள் வீட்டுநிலைமைகளைப்பற்றி மேற்கொள்ளப்பட்டு, பல அறிக்கைகள் வெளிவந்துள்ளன. சராசரி தொழிலாளர் குடும்பம் ஒன்றுக்கு ஒரு தனி அறை கிடையாது. சில சமயங்களில் இரு குடும்பங்கள் பகிர்ந்து வாழ்கின்றனர். 1911ஆம் ஆண்டின் கணக்கின்படி பம்பாய் நகரிலுள்ள மக்கள்தொகையில் 69 சதவிகிதம் ஒற்றை அறைகளில் குடித்தனம் நடத்தி வந்தார்கள். அதேநேரத்தில் லண்டன் மாநகரில் மொத்த மக்கள்தொகையில் 6 சதவிகிதம்தான் ஒற்றை அறைகளில் வாழ்ந்தனர். ஓர்

அறைக்கு குடும்பம் ஒன்றுக்கு 5 பேர் வீதம் வாழ்ந்தனர். 1931 ஆம் ஆண்டு கணக்கின்படி பம்பாய் நகரின் ஜனத் தொகையில் 74 சதவிகிதம் ஒற்றை அறைகளில் வாழ்ந்தனர். கடந்த 20 ஆண்டுகளில் அதாவது 1911முதல் 1931வரை அதிகமான ஜனநெருக்கடியை இது எடுத்துக்காட்டுகிறது. மொத்த ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கு ஒற்றை அறை களில் 5 பேர்களுக்குமேல் குடித்தனம் நடத்தினர்கள். 2,56,379 மக்கள், அறை ஒன்றுக்கு 6முதல் 9 பேர்கள் வரை வாழ்ந்தனர். 8,133 மக்கள், அறை ஒன்றுக்கு 10முதல் 19 நபர்கள் வரை வாழ்ந்தனர். 15,490 மக்கள், 20 பேர்களுக்கு மேல் ஓர் அறையில் வாழ்ந்தனர்.

1921–22ஆம் ஆண்டில் பம்பாய் அரசாங்கம் தொழிலாளர் அலுவலகத்தார் நடத்திய விசாரணையின்படி 97 சதவிகிதத் தொழிலாளர்களின் குடும்பங்கள் பம்பாயில் ஒற்றை அறைகளில் குடியிருந்தார்கள் எனவும் ஓர் அறையில் இரண்டு முதல் 8 பேர்கள் வரைகொண்ட குடும்பங்கள் பகிர்ந்து வாழ்ந்தனர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. கல்கத்தா நகரிலும் இதைப்போல் ரயில்வே தொழிலாளர் கமிஷனின் அறிக்கைப்படி தனிஅறை களில் 6முதல் 9 பேர்கள் வரை வாழ்கின்றனர்கள் எனக்குறிப்பிட் டுள்ளார்கள். பருத்தித் தொழிற்சாலைக்குப் பெயர்போன ஆமதாபாத்தில் 73 சதவிகிதம் தொழிலாளர் குடும்பங்கள் தனி அறைகளில்தான் வாழ்க்கை நடத்திவருகின்றனர்கள்.

1928ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களின் தொழிற் சங்கக் காங்கிரஸ் இந்தியாவிற்குச் சுற்றுப்பயணம் செய்தபோது குறிப் பிடுகையில், உலகில் எங்கும் பார்க்காத கொடுமைகளை இந்தியா வில் கண்டதாகவும், 9அடி நீளம் அகலங்களைக்கொண்ட மண் சுவற்றினால் கட்டப்பட்ட இருட்டு அறைகளுக்கு மாதம் ஒன்றுக்கு ஒரு டாலர் வாடகை வசூலிக்கப்படுகிறது எனவும், அந்த அறையைச் சமைக்கவும், வாழவும், தூங்கவும் பயன் படுத்துகின்றனர் கள் எனவும், காற்று, வெளிச்சம் போன்ற யாதொரு வசதியும் கிடையாது எனவும், வெளியில் குப்பை மேடுகள், அதனால் ஈக்கள், கொசுக்கள், தொத்து நோய்க்கிருமிகள் ஏராளமாக அதிகரித்துப் பரவி வருதல் போன்ற கொடுமைகளையும் நன்முறையில் சுட்டிக் காட்டினர்கள். மேலும், சுகாதாரம் புறக்கணிக்கப்படுகிறது; கக்கூஸ் வசதிகள் கிடையாது; ஜன்னல் கிடையாது; ஒரே வாயிற் படி; ஒரேவழி; மண்ணெண்ணெய் விளக்கு; மறைவுக்கு கிழிந்த சாக்கு; இந்த இடத்தில் மனிதர்கள் பிறந்து, வாழ்ந்து, தூங்கி, சாப்பிட்டு, இறந்து வருகின்றனர்கள் என அந்த அறிக்கையில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

பெண் டாக்டர் ஒருவரை பம்பாய் நகரிலுள்ள வீட்டு வசதிகளையும் நிலைமைகளையும் விளக்கி அறிக்கை சமர்ப்பிக்கும்படி பம்பாய் அரசாங்கம் கேட்டுக்கொண்டது. அதற்கு இணங்கி சர்வே செய்த பின்னர் அறிக்கை ஒன்று வெளியிட்டார்கள்.

"ஒரு அறையின் நீளம் 15 அடி, அகலம் 12 அடி; இதில் 6 குடிகள் வாழ்ந்தன. அந்த அறையில் பெரியவர்கள், குழந்தைகள் உள்பட மொத்தம் 30 பேர்கள் இருந்தனர். 6 பெண்களில் 3 பெண்கள் சீக்கிரத்தில் குழந்தை பிறக்கும் பிரசவ நிலையில் உள்ளார்கள். அறை முழுவதும் ஒரே புகைமயம். குழந்தை பிறப்பதற்கு முன்னும் பின்னும் பெண்களின் வாழ்க்கை இந்த இடத்தில் மிகவும் கொடியது" என்று அந்தப் பெண் டாக்டர் அறிக்கை தயாரித்து அரசாங்கத்திற்குக் கொடுத்தார்கள். இது ஒன்று போதாதா ? நம் நாட்டின் வீட்டு வசதிகளைப் படம் பிடித்த மாதிரி எடுத்துக் கூறிவிட்டார்கள்.

பெரிய நகரங்களில் தண்ணீர், சுகாதார வசதிகள் முற்றிலும் குறைவாக உள்ளன. 1932-33ஆம் ஆண்டில் குடித்தனம் நடத்தும் மொத்த குடிகளுக்கு 26 சதவிகிதத்திற்கு 8 குடிகளுக்கு ஒரு தண்ணீர்க் குழாய் எனவும் 44 சதவிகிதத்திற்கு 9முதல் 15 குடிகளுக்கு ஒரு தண்ணீர் குழாயும், 29 சதவிகிதத்திற்கு 16 குடிகளுக்கு மேல் ஒரு தண்ணீர் குழாயும் இருக்கின்றன எனக் கணக்கிடப்பட்டது. அதேபோல் 85 சதவிகிதத்திற்கு 8 குடிகளுக்கு ஒரு கக்கூஸ், 12 சதவிகிதத்திற்கு 9முதல் 15 குடிகளுக்கு ஒரு கக்கூஸ், 24 சதவிகிதத்திற்கு 16 குடிகளுக்குமேல் ஒரு கக்கூஸ் வீதமும் இருந்தன. இதிலிருந்து போதிய அளவுக்குத் தண்ணீர் வசதிகளும், கக்கூஸ் வசதிகளும் இல்லையென்பது புலனாகிறது.

1935ஆம் ஆண்டில் ஆமதாபாத் தொழிற்சங்கம் நடத்திய ஆய்வு அறிக்கையின்படி மொத்த குடிகளின் எண்ணிக்கை 23,706. இவற்றில் 5,669 வீடுகளுக்குத் தண்ணீர் வசதி கிடையாது. 200 குடிகளுக்குமேல் ஒரு தண்ணீர்க் குழாய் எனக் குறிப்பிட்டுள்ளது. 5,000 குடிகளுக்குக் கக்கூஸ் வசதி கிடையாது. 1933ஆம் ஆண்டில் சென்னையில் பிளாட்பாரம், வராண்டாக்களில் வாழும் மக்களின் குடிகளின் எண்ணிக்கை 10,748. சென்ற 17 ஆண்டுகளாகச் சென்னை நகரின் மக்கள்தொகை மூன்று மடங்குகளாக உயர்ந்துள்ளது. இப்போது எத்தனை மில்லியன்கள் வீடு இல்லாமல் இருக்கிறார்களோ தெரியவில்லை. அநேகமாக ¼ மில்லியனுக்குமேல் இருக்கும் எனத்தோன்றுகிறது. ஆகவே இப்போது வீடுகளின் நிலைமைகள் நகர்ப்புறங்களில் திருப்தியாக

இல்லை; மக்கள்தொகைப் பெருக்கத்திற்கு ஏற்றவாறு வீட்டு வசதிகள் அதிகரிக்கவில்லை.

1946ஆம் ஆண்டில் சுகாதார சர்வே முன்னேற்றக் கமிட்டியின் அறிக்கையின்படி நகர, கிராமங்களிலுள்ள வீட்டின் நிலைமைகள் திருப்திகரமாக இல்லை; வீட்டினுடைய வளர்ச்சியை மக்கள் தொகையின் அதிகரிப்புக்கு ஏற்றவாறு துரிதப்படுத்தவில்லை. நகரங்களிலும் பட்டணங்களிலும் அதிகமான நெருக்கடி. சுகாதார முறைப்படி வீடுகள் அமைந்தில்லை. ஆரோக்கியமான வீடு வசதிகள் இல்லையென்றால் பல்வேறு தொத்து நோய்கள் விரைவாகப் பரவும்.

வீடுகள் குளிர்காலத்தில் குளிராகவும், வெய்யில் நாள்களில் அதிக உஷ்ணமாகவும், மழை நாள்களில் மழை கொட்டுவதாகவும் இந்த முறையில் வீடுகள் இந்தியாவில் அமைந்துள்ளன. யுத்த காலங்களில் ஏராளமான மக்கள் கிராமப்புறங்களிலிருந்து புறப்பட்டு ராணுவத்தில் சேருகிறார்கள். யுத்தம் முடிந்தவுடன் அவர்கள் நகர்ப்புறங்களைத்தான் விரும்புகிறார்கள். ஆகவே நகர்ப்புறங்களில் தங்கி வாழ்கிறார்கள். இதனால் நகரங்களில் வீட்டு வசதிகள் பற்றாக்குறை, ஜனநெருக்கடி ஆகியவை ஏற்படுகின்றன. நகரங்களுக்கு வந்துசேரும் மக்களுக்கு ஏற்றவாறு புதிய கட்டடங்கள் தோன்றுவதில்லை. வெளி நாடுகளிலிருந்து வரும் அகதிகள் யாவரும் நகர்ப்புறங்களில் குடி அமர்த்தப்படுகிறார்கள். அதனால் அவர்களுக்கு வீடு வசதிகள், தண்ணீர் வசதிகள் ஏற்படுத்தித் தருவது அரசாங்கத்தின் கடமையாகும். ஆகவே நகரங்களில் வீடுகளுக்கு அதிகப்படியான தேவை ஏற்படுகிறது. ஆண்டு தோறும் பர்மா, இலங்கை, பாகிஸ்தான் போன்ற நாடுகளிலிருந்து அகதிகள் இந்தியாவுக்கு வந்தவண்ணம் உள்ளார்கள். இவர்களும் நகர்ப்புறங்களில் தங்குகிறார்கள். எனவே வீட்டுப் பிரச்சினையும் இந்தியாவில் முக்கியப் பிரச்சினையாகும்.

# 16. வாழ்க்கைத்தரம்

குறைந்தபட்சத் தேவைகள் ஒவ்வொருவருக்கும் இருந்தால் எவ்வளவு மக்கள்தொகை இருந்தாலும் அதனைப் பிரச்சினையாகக் கருத முடியாது. இந்தியாவில் வாழ்க்கைத்தரம் மற்ற நாட்டினுடைய வாழ்க்கைத்தரத்தைவிடக் குறைவாக உள்ளது. முதலில் வாழ்க்கைத்தரம் என்றால் என்ன? பொதுவாக வாழ்க்கைத்தரத்திற்கு இலக்கணம் கூறுவது கடினம். பேராசிரியர் ஃபேர்சைல்ட் (Fairchild) அவர்கள் வாழ்க்கைத்தரம் என்பது சுகத்தினுடைய எல்லையைக் குறிப்பதாகும் எனக் கூறியுள்ளார். எதை எதைப் பெறுவதற்கு எண்ணுகிறோம், எதை எதை அடைவதற்கு விரும்புகிறோம், எதை வைத்துக்கொள்ள விரும்புகிறோம் — இதுவே வாழ்க்கைத்தரம் என்பதாகும். ஆனால் இந்த இலக்கணம் தெளிவாக இல்லை. சுருக்கமாக, வாழ்க்கைத்தரம் என்றால் தனிமனிதனின் தலாநுகர்வை எடுத்துக்காட்டுவதாகும். நுகர்வு என்றால் உணவு, துணி, வீடு, கல்வி, மருத்துவ வசதிகள், நாகரிக வசதிகள் இவை யாவும் போதுமான அளவிற்குமேல் இருக்கவேண்டும். நம்நாட்டில் உணவு பற்றாக்குறை நெடுநாட்களாக இருந்துவருகிறது. ஏனெனில் பலகோடி மக்கள் பஞ்ச நிலையிலேயே உள்ளனர். சமீப காலத்தில் அரிசி, கோதுமை பங்கீட்டு முறைகள் ஒழிக்கப்பட்டன. இருந்தாலும் தனி நபரின் தானியங்கள்நுகர்வின் அளவு குறைவாகவே உள்ளது. நாம் இன்னும் பஞ்சத்தை முற்றிலும் நீக்கியபாடில்லை. நம்முடைய விவசாயம் பருவக்காற்றை நம்பியுள்ளது. அதனால் நாம் எதிர்பார்த்த அளவுக்கு உற்பத்தியை அதிகரிக்க முடியவில்லை. உணவு தானியங்களின் பங்கீட்டு முறையை நீக்கியதால் உணவு தானியத்தினுடைய நுகர்வு தரத்திலும், பரிமாணத்திலும் உயர்ந்ததாகப் பொருள் ஆகாது. இந்தியாவில் தனிநபரின் நுகர்வு நாள் ஒன்றுக்கு 1,700 கலோரிகள் உணவு தானியங்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. அதைப்போல் தனி நபர் ஒன்றுக்கு துணியின் நுகர்வு 17 கெஜத்திற்கும் குறைவாகும்.

இது ஒரு மனிதனுக்கு குறைந்த பட்ச அளவுக்கும் குறைவானது என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். சரியான வீட்டு வசதிகளும் குறைவு. முன் அத்தியாயத்தில் இதைப்பற்றி அறிந்தோம். மக்கள்தொகையின் பெருக்கத்திற்கு ஏற்றவாறு வீட்டு வசதிகள் அதிகரிக்கவில்லை. மாநில அரசுகளும், தலஸ்தாபனங்களும், மத்திய அரசும், வீட்டு வசதிகளை அதிகரிக்கத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும். தனியார் நிறுவனங்கள் எங்காவது எப்போதாவது சில கட்டடங்களை நிறுவுகிறார்கள். கோடிக்கணக்கில் வாழும் மக்கள் கிராம, நகர்ப்புறங்களில் இருக்கிறார்கள். அவர்களுக்கு அன்றாட அத்தியாவசியமான குறைந்தபட்சப் பொருள்களும், வசதிகளும் மறுக்கப்படுகின்றன. ஆயிரக்கணக்கில் மக்கள் திண்ணைகளிலே வாழ்கின்றார்கள், தூங்குகிறார்கள்; பரிதாபகரமான வாழ்க்கையை நடத்துகிறார்கள். கல்வி வசதிகள், சுகாதார வசதிகள் பெரிதும் செய்துதர முடியவில்லை. இந்தியாவில் படித்தவர்களின் எண்ணிக்கை மிகவும் கீழ்நிலையில் உள்ளது. முதலில் 15 சதவிகிதமாக இருந்தது. தற்சமயம் 22 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் இடத்திற்காக அதிகமான நெருக்கடி. உத்தியோகசம்பந்தப்பட்டப் படிப்புகளுக்கு அதைவிட நெருக்கமாக உள்ளது. எத்தனையோ மாணவர்களுக்குக் கல்லூரியில் இடம் கிடைப்பதில்லை. அதனால் கல்வி வசதிகள் மறுக்கப்படுகின்றன. மருத்துவமனைகளில் ஏராளமான நோயாளிகள் நீண்ட வரிசையில் நிற்பதைப் பார்க்கும்போது எத்தனை மக்கள் நோய்களில் அல்லல்படுகிறார்கள் என்பது தெரிகிறது. மக்கள்தொகை துரிதமாக வளர்வதால் போதிய கல்வி வசதிகள், மருத்துவ வசதிகள் செய்துதர முடியவில்லை. நம்முடைய சக்தியும், பண வசதிகளும் போதவில்லை என்பதை இது புலப்படுத்துகிறது. வாழ்க்கைத்தரத்தை அமைப்பதற்குத் தலா வருமானம் சிறந்தது. அதாவது தனி நபரின் சராசரி வருமானம் 1948-49ஆம் ஆண்டுகளில் ரூ. 255/- எனத் தேசிய வருமானக் கமிட்டியால் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் இந்த வருமானத்தை வைத்துக்கொண்டு பிறநாடுகளின் வருமானத்துடன் ஒப்பிடமுடியாது. ஏனெனில் இப்புள்ளி விவரம் உண்மையான கருத்தைத் தெளிவுபடுத்தாது. இருந்தபோதிலும் சர்வதேசச் சங்கத்தினுடைய ஆராய்வுக்குழு 1949 கணக்கின்படி இந்தியாவின் தலா வருமானம் 81 டாலர்கள், இங்கிலாந்தில் 833 டாலர்கள், அமெரிக்காவில் 1,453 டாலர்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது இந்தியாவின் ஏழ்மையையும், குறைவான வாழ்க்கைத்தரத்தையும் எடுத்துக்காட்டுகிறது. இங்கிலாந்து, அமெரிக்காவின் தலா வருமானங்கள் இந்தியாவின் தலா வருமானத்தைப்போல் பன்மடங்காகும்.

எப்படி வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவது? எவ்வாறு எல்லோருக்கும் வசதிகளை அளிப்பது? என்பதை நோக்கும்போது, முதலில் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தல் வேண்டும். எவ்வளவு முன்னேறினாலும் அதனுடைய பலனைக் காண முடியாமைக்குக் காரணம் மக்கள்தொகை துரிதமாக வளர்ந்து வருவதேயாகும்.

வாழ்க்கைத்தரம் என்றால் எவ்வாறு ஒரு மனிதன் தினமும் இன்றியமையாத பொருள்கள், சுகபோகப் பொருள்கள் ஆகியவற்றை நுகர்கிறான் என்பதுதான் பொருளாகும். தனிநபரின் வாழ்க்கைத்தரத்தின் விகிதத்தை எடுத்துக் காட்டுகிறது. இது பெரும்பாலும் தலைமுறையைச் சார்ந்தது; முதியோர் கல்வி, அனுபவம், சமூகச் சூழ்நிலைகள், விருப்பங்கள், வசதிகள், கலாச்சாரம் முதலியவற்றைப் பொறுத்தாகும். மேலும் வருமானமும் அந்தஸ்தும் வாழ்க்கைத்தரத்தைத் தீர்மானிக்கும். என்னென்ன உணவுவகைகளை நாம் அருந்துகிறோம்; எந்தவிதமான ஆடைகளை நாம் உடுத்துகிறோம், எந்த மாதிரியான வீடுகளில் நாம் வாழ்கிறோம்; எப்படிப்பட்ட நகைகள், அணிகலன்கள் இவற்றை நாம் அணிகிறோம்; எந்த விதமான மரச்சாமன்களை நாம் உபயோகிக்கிறோம்; எந்த அளவுக்கு நாம் போக்குவரத்துகளைப் பெற்றுள்ளோம்; எப்படிப்பட்ட சுகப்பொருள்களை நாம் அனுபவித்து வருகிறோம்; இவை எல்லாமே நமது வாழ்க்கைத் தரத்தைத் தீர்மானிக்கின்றன.

சில சமயங்களில் இந்தச்சொல் குறைந்தபட்ச நுகர்வின் அளவை எடுத்துக்காட்டும். அதாவது ஆரோக்கியத்திற்கும், அழகிற்கும், சௌகரியமான, விருப்பப்பட்ட சாதாரண நுகர்வின் அளவுக்குமேல் என்பதைக் குறிக்கும்.

வாழ்க்கைத்தரம் நபருக்கு நபர், இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் மாறுபடுகிறது. வருமானம்தான் வாழ்க்கைத் தரத்தின் சிறந்த காரணியாகும். சமுதாயத்தில் மக்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். வருமானத்தின் அடிப்படையில் பணக்காரக்குடும்பங்கள், நடுத்தரக்குடும்பங்கள், ஏழைக்குடும்பங்கள் எனப் பகிரலாம். இவர்களின் வாழ்க்கைத்தரமும் மாறுபடுகிறது. இந்தியாவில் இயற்கைவளங்கள் உயர்ந்து இருந்தாலும், இந்திய மக்கள் ஏழையாகவும், வாழ்க்கைத்தரம் குறைந்தவராகவும் இருப்பதைக் காண்கிறோம். ஆகவே வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு எல்லா இயற்கை வளங்களையும், மக்கள் வளத்தையும் நன்முறையில் முழு அளவில் பயன்படுத்தவேண்டும். நுகர்வுப்பொருள்களை அதிக அளவில் உற்பத்தி செய்தல்

வேண்டும். சரியான முறையில், நியாயமாகச் செல்வத்தையும் வருமானத்தையும் பங்கீடு செய்து கொடுத்தல்வேண்டும். கடைசியாக, மக்கள்தொகையையும் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் போன்ற நாடுகளில் அதிகமான வாழ்க்கைத்தரத்திற்குக் காரணங்கள், இயற்கை வளங்களை நன்முறையில் பயன்படுத்தியுள்ளார்கள்; மக்களும் கடுமையாக உழைக்கிருர்கள்; விஞ்ஞான முறைகளும், நவீன முறைகளும் உற்பத்தியில் பின்பற்றப்படுகின்றன. மேலும் நுட்ப முறைகளையும் வாணிகம், தொழில், விவசாயம் முதலியவற்றில் பின் பற்றி வருகிருர்கள். இதன் காரணமாக மக்களின் வருமானம் உயருகிறது. வாழ்க்கைத்தரமும் உயரும் என்பதில் ஐயமில்லை. இந்தியாவில் மக்கள்தொகை ஆண்டு ஒன்றுக்கு 2·5 சதவிகிதம் அதிகரித்து வருகிறது. அதாவது விநாடி ஒன்றுக்கு 2 குழந்தைகள் வீதம் பிறப்பு விகிதம் அதிகரித்து வருகின்றன. இவ்வாறு வளர்ந்து வரும் மக்கள்தொகைக்குச் சரியான முறையில் உணவு உற்பத்தியை ஈடுகட்ட முடியாத நிலையினை இன்று காண்கிருேம். பஞ்சம், பட்டினி, ஏழ்மை, வேலையின்மை, சமுதாயக்குறைபாடுகள் போன்ற பல பிரச்சினைகள் தோன்றுகின்றன. வேலையின்மையினுல் மக்களின் திறமை குறைகிறது. அதனுல் நாட்டின் ஆக்கச் சக்தியும் குறையும். இந்தியா தலாவருமானத்தில் 116 நாடுகள்கொண்ட உலகில் 96-வது இடத்தைப் பற்றி நிற்கிறது. நாள் ஒன்றுக்குத் தனிநபரின் தலாவருமானம் ஒரு ரூபாய்க்குக் குறைவாக உள்ளது. ஆகவே ஒரு வேளை நல்ல உணவு உண்ண முடியாத அவல நிலையினை நாம் காண்கிருேம். பசியினைப்போக்க புதிய முறைகளை உற்பத்தியில் மேற்கொள்ளல்வேண்டும். புதிய நிலங்களை வேளாண்மைக்குக் கொண்டுவருதல், உயர்தரமான நீர்ப்பாசனமுறை, இரசாயன உரங்கள், தரமான விதைகள், நிதி வசதிகள் போன்ற பல நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும்.

இன்று இந்தியாவில் கொடிய பிணிகள், தொத்து நோய்கள், காலத்திற்கேற்ற பலவிதமான நோய்கள் மக்களிடையே பரவி அவர்களுக்கு உயிர்ச்சேதத்தினை அளிப்பதுடன், அவர்களது உற்பத்தித்திறனைப் பெரிதும் பாதிக்கிறது. மேற்கோளாக, தொழு நோய்க்குத் தமிழ்நாடு, ஆந்திரம்; விஷக்காய்ச்சலுக்கு இராஜஸ்தான், மகாராட்டிரம்; மலேரியாவுக்கு வங்காளம்; காச நோய்க்கு பம்பாய், கோயம்புத்தூர் போன்ற தொழில் நகரங்கள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. டாக்டர் சந்திரசேகரன் தம் புத்தகத்தில் பெருமளவில் தென்னிந்திய மக்கள்தான் பிணியால்

பீடிக்கப்பட்டுள்ளார்கள். ஏனெனில் அவர்கள் அரிசி உணவு உட்கொள்ளுதல், அதிக வெப்பநிலை, மக்கள் நெருக்கடி இவற்றிற்கு ஆளாக்கப்படுகிறார்கள். சத்துள்ள உணவு, பால், பழங்கள், முட்டை இவற்றை உணவுடன் எடுத்துக்கொள்ளும் மக்கள் மூன்று சதவிகிதத்திற்கும் குறைவாக உள்ளனர். மருத்துவமனைகளை நாம் சென்று காணும்காலத்தில் அங்கே மக்கள் வரிசை வரிசையாய் நிற்கும் நிலையினைக்கொண்டு எவ்வளவு மக்கள் பிணியினால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பதைத் தெள்ளத்தெளிய அறிந்துகொள்ளலாம். ஆகவே பிணியினைப்போக்க மருத்துவ வசதிகள், மருந்துவசதிகள், சத்துள்ளஉணவு அளித்தல், தொத்து நோய் வராமல் தடுத்தல், சுகாதாரத்தின் மேன்மைகளை வலியுறுத்தல், நல்ல குடிநீர், காற்றோட்டமுள்ள வீட்டு வசதிகள் செய்தல் இவற்றை அரசு சிறந்த பணியாக மேற்கொள்ளவேண்டும்.

பல்வேறு நாடுகளின் தலாவருமானங்களைக் கீழேயுள்ள அட்டவணையிலிருந்து அறிந்துகொள்ளலாம். 1965ஆம் ஆண்டில் அமெரிக்க டாலரில் கொடுக்கப்பட்டுள்ளன.

### அட்டவணை 54

| நாடுகள் | டாலர்கள் |
|---|---|
| அமெரிக்கா | 2,893 |
| சுவிட்சர்லாந்து | 1,942 |
| கனடா | 1,831 |
| டென்மார்க் | 1,638 |
| மே. ஜெர்மனி | 1,510 |
| ஜப்பான் | 696 |
| யூகோஸ்லாவியா | 301 |
| ஐக்கிய அரபுக்குடியரசு | 199 |
| இலங்கை | 129 |
| இந்தியா | 89 |

# 17. குடியேற்றம், வெளியேற்றம்

மக்கள்தொகைக்குத் தீர்வு காண்பதற்கு உள்நாட்டில் குடியேறுதல் ஒருவழியாகும். இந்தியாவைப் பொறுத்தமட்டில் மக்கள் இல்லாத பகுதியே கிடையாது. தார் பாலைவனத்தைத் தவிர எல்லாப்பகுதிகளிலும் மக்கள் பரவி வாழ்கிருர்கள். பாலை வனங்கள் மக்கள் வாழ்வதற்கு உகந்தவை அல்ல. ஆனுல் சில பகுதிகளில் ஜனநெருக்கம் ஏனைய பகுதிகளைவிடச் சதுரமைலுக்கு ஜன அடர்த்தி அதிகம் உள்ளது. மொத்த மக்கள்தொகையில் பாதிக்குமேல் மொத்த நிலப்பகுதியில் கால்பாகத்திற்கும் குறை வான நிலப்பகுதியில் அதிக ஜனஅடர்த்தியுடன் சில பகுதியில் வாழ்கிருர்கள். உதாரணமாக, கங்கைச் சமவெளிப் பிரதேசத்தில் அதிக மக்கள்அடர்த்தி சதுரமைலுக்கு 681முதல் 832வரை உள்ளனர். அதே நேரத்தில் சில பகுதிகளில் குறைவான ஜன அடர்த்தியைக் காணலாம். மலையடிவாரங்கள், குன்றுப்பிரதேசங் கள், பாலைவனப்பகுதிகள் இங்கெல்லாம் ஜன அடர்த்தி குறைவு. கிழக்கு இமயமலைப் பிரதேசத்தில் சதுரமைலுக்கு 118 பேர்கள் வீதமும் பாலைவனப்பகுதிகளில் சதுரமைலுக்கு 46 பேர்கள் வீத மும் வாழ்கிருர்கள். அஸ்ஸாமில் மேற்கு வங்காளத்தைவிட குறைவான மக்கள்அடர்த்தியாக உள்ளனர். சென்ற 20 ஆண்டுகாலமாகப் பக்கத்திலுள்ள மாநிலங்களிலிருந்து அஸ்ஸா முக்கு ½ மில்லியன் மக்கள் குடியேறியுள்ளார்கள்.

பல்வேறு கஷ்டங்களிடையே சென்ற சில ஆண்டுகாலமாக மக்கள் கூட்டம்கூட்டமாகப் பல்வேறு மாநிலங்களுக்குக் குடியேறு கிருர்கள். அதிலும் குறிப்பாகச் சென்ற 30 ஆண்டுகாலமாக மாகாணங்களிடையே குடியேறும் மக்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. உதாரணமாக அஸ்ஸாம் தோட்டப் பயிர் வேலைகளுக்கு சோட்டா நாக்பூர் பீடபூமியிலிருந்து ஏராளமான மக்கள் குடியேறியுள்ளனர். பக்கத்திலுள்ள வங்காளத்திலிருந்து இந்தத் தோட்டவேலையை மேற்கொள்வதற்கு மக்கள் விரும்பிச்

செல்லவில்லை. சோட்டாநாக்பூரிலுள்ள நிலக்கரி சுரங்கங்களில் வேலைசெய்ய பீகார், உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களிலிருந்து குடியேறியுள்ளார்கள். அதுபோல தெற்கேயுள்ளவர்கள் வடக்கு நோக்கி வேலையைத் தேடிச்செல்வதும், வடக்கேயுள்ளவர்கள் தெற்கே வியாபாரத்தை நாடியும் வந்துள்ளனர். இதுபோன்று மக்கள் நகருவதற்குரிய புள்ளிவிவரங்கள் சரியான முறையில் கணிக்கப்படுவதில்லை; ஏனெனில் இவை யாவும் தற்காலிக மானவை; மேலும் குறிப்பிட்ட காலங்களில்தான் நடைபெறு கின்றன.

ஒரு மாநிலத்திலிருந்து ஒரு கூட்டம் மற்றொரு மாநிலத்திற்குச் சென்றால், அதே நேரத்தில் இன்னொரு கூட்டம் அந்த மாநிலத் திற்கு வந்து சேரும். அப்படிப்பார்க்கும்போது மக்கள்தொகையில் யாதொரு மாற்றமும் தெரியவில்லை. மாநிலங்களிடையே குடி பெயர்வதால் மக்கள்தொகையைக் குறைக்க முடியாது. இந்தியா வில் பல பிராந்தியங்களில் மக்கள் குடி பெயர்வது வசதிகளை நாடியும், செழிப்பான பகுதிகளைக் கருதியும் செல்வதை இன்றும் காண்கிறோம். இந்தியாவில் எந்தப்பகுதியும் வாழ்க்கைத்தரத்தில் உச்சக்கட்டத்தில் இல்லை.

மேலும் விவசாயத்தைப் பெரிதும் கொண்டுள்ள மாநிலங்கள், பிராந்தியங்கள் இவற்றில் குடியேறுதலை அவ்வளவு துரிதப் படுத்துவதில்லை; உற்சாகப்படுத்துவதும் கிடையாது. மக்கள் பெயர்ச்சி தண்ணீரைப்போல் அல்லாமல் குறைவான வாழ்க்கைத் தரத்தையுடைய பகுதிகளிலிருந்து செழிப்பான, அதிகமான வாழ்க்கைத்தரத்தைக்கொண்ட பகுதிகளுக்குக் குடிபோகிறார்கள். சென்ற 30 ஆண்டுகளாக உள்நாட்டில் மக்கள் பெயர்ச்சிக்குப் பல்வேறு காரணங்கள் உண்டு. சில பகுதிகளில் கொடுமையான பஞ்சம், நீர்ப்பாசனத் திட்டங்கள், கால்வாய் வெட்டுதல், அதன் காரணமாக விவசாய நிலங்களை அதிகப்படுத்தல், பஞ்சங்கள் உண்டானதால் நல்ல நீர்ப்பாசனத் திட்டங்கள் பெரிய அணைக் கட்டுகள் கட்டுவதால் மக்கள் பல்வேறு இடங்களிலிருந்து வேலை தேடிக் குடியேறுகிறார்கள்.

சமூக, பொருளாதார, மதசம்பந்தப்பட்ட காரணங்களும் உண்டு. இந்தியாவில் மக்கள் நகரமுடியாத நிலைக்கு இவை தாம் காரணங்களாகும். அதனால் குறைவான அளவில்தான் மக்கள் நகருகிறார்கள். பெரும்பான்மையான மக்கள் தங்களுடைய சொந்த வீடுகளிலும், ஊர்களிலும் இருக்கவும் வேலைசெய்யவும் விரும்புகிறார்கள். வெளியிடங்களுக்குப் போகவும் விரும்புவ தில்லை. 1951 மக்கள்தொகைக் கணக்கின்படி ஒவ்வொரு

மாநிலத்திலும் 90 சதவிகித மக்கள் அந்த மாநிலத்திலேயே பிறந்து வளர்ந்தவர்கள். 5 சதவிகித மக்கள் அடுத்த மாநிலத்திலிருந்து தொழில் முன்னேற்றத்தைக் கருதியும், நகர்ப்புறத்தை விரும்பியும் வந்தவர்களாக உள்ளனர். 1901ஆம் ஆண்டில் ஒவ்வொரு மாநிலத்திலும் மொத்த மக்கள்தொகையில் வெளி மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் 9·25 சதவிகிதமாகும். 1911ஆம் ஆண்டில் இந்த சதவிகிதம் 8·7 ஆகக்குறைந்தது. 1931ஆம் ஆண்டில் அதே சதவிகிதம் இருந்தது. 1941-இல் இது சம்பந்தப் பட்ட புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லை. ஆகவே 1931முதல் 1941வரை பெரிய அளவில் மாநிலங்களிடையே மக்கள் பெயர்ச்சி கிடையாது. ஆனால் இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிந்தபோது ஏராளமான மக்கள் அங்கும் இங்கும் குடியேறினர்கள்.

இந்தியாவில் மக்கள் நகரமுடியாததற்குள்ள பொருளாதாரக் காரணங்களைக் கூறுதல் மிகவும் எளிதாகும். பெரும்பான்மையான மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். நிலம்தான் அவர்களுக்குச் சிறந்த சொத்தாகவும், வாழ்வதற்குச் சிறந்த காரணக் கருத்தாகவும் உள்ளது. சாதாரணக் குடிமகன் தன்னுடைய சொந்த நிலத்தை அதாவது அவன் எங்கு பிறந்தானே, எங்கு வேலைசெய்தானே. அந்த இடத்தைவிட்டுப் போக விரும்புவதில்லை. விவசாயம் ஒரு வேலை மட்டும் அன்று; வாழ்வதற்குரியதாகவும் அமைந்துள்ளது. ஆகவே பெரும்பாலோர் விவசாயிகளாக இருப்பதால் நகர்ப்புறங்களை விரும்பியோ, வேறு இடத்திற்கோ செல்ல விரும்புவதில்லை. மேலும் குடியானவர்கள் கிராமக் கடன் தொல்லையில் ஈடுபட்டுள்ளார்கள். அதனால் அவர்கள் நிலங்களை அடமானம் வைத்தல், வட்டிக்குக் கடன் வாங்குதல் போன்ற தொல்லைகளில் சிக்கியுள்ளார்கள். ஆகவே அவர்கள் எங்கும் நகரமுடியாது.

அப்படியே குடியானவன் இவற்றைப் புறக்கணித்துவிட்டு வேறு இடங்களுக்குச் சென்று நல்ல முறையில் வாழ்வான் என்பதற்கும் உறுதியளிக்க முடியாது. புதிய வேலைகளுக்குத் தகுந்தவாறு தன்னை மாற்றிக்கொள்ளும் பழக்கமும் கடினமாகும். ஆனல் சென்ற சில ஆண்டுகளாக கிராமப்புறத்திலிருந்து நகர்ப் புறத்திற்கு மக்கள் செல்வதைக் காண்கிறோம். அது தற்காலிகமானதன்று. விருப்பத்தோடு போகக்கூடியது. நிலத்தின் மேல் மக்களின் அழுத்தம் அதிகம் இருப்பதால் விவசாயிகள் வேலைதேடி நகர்ப்புறம் செல்கிறார்கள். ஏதாவது ஒரு வேலைதேடி வாழ்க்கையை நடத்துவோம் என்று எண்ணிச் செல்கிறார்கள். ஆனல் அது தாற்காலிகமானது. அவர்கள் மீண்டும் கிராமத்திற்கே

வரவேண்டும் என்று நினைக்கிறார்கள். அதனால் மனைவி மக்களை விட்டுவிட்டு நகர்ப்புறத்தை நாடிச்செல்கிறார்கள். இதனால் ஆண்களின் எண்ணிக்கை நகரில் அதிகரிக்கின்றது. இதன் காரணமாகத் தொழில் நகரங்களில் விபசாரம், மற்றும் சமூகக் குறைகள் தோன்றுகின்றன. சமூகக் காரணங்கள் யாதெனில் வீட்டை அதிகமாக நேசிக்கும் பண்பு இந்தியர்களுக்கு அதிகம். ஜாதி, மதம், மொழி, பல்வேறு பிராந்தியங்களில் மாறுபடுகின்றன. இவை யாவும் நகர்ப்புறங்களில் செல்லுவதற்கு இடையூறுகள். ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குச் செல்லுதல், ஒரே மாநிலத்தில் கிராமப்புறத்திலிருந்து நகர்ப்புறத்திற்குச் செல்லுதல் நம் நாட்டு மக்களுக்குப் புதியதாகத் தோன்றுகிறது. அங்குச் சென்றதும் புதுமையான மக்களைப் பார்ப்பதைப்போல் தோன்று கிறது. அவர்கள் பேசுவதும் வேறு மொழிபோல் தோன்றுகிறது.

சாப்பிடும் உணவு முறையில் மாற்றங்கள், பழக்கவழக்கங் களில் மாற்றம் இவற்றைக் காண்கிறார்கள். மாநிலப்பற்று, மொழிப் பற்று இவற்றின் காரணமாகப் பிற மாநிலங்களுக்கு மக்கள் குடி போதல் கிடையாது. குடிபோதல் மக்கள்தொகையில் சிறிய அளவில் கூட்டம் கூட்டமாக அதிக அளவில் போகிறார்கள். இந்தச் சிறிய அளவு மக்கள் வேறிடத்தில் சென்று பெரிய அளவு மக்களாக மாறுகிறார்கள். இந்தியாவில் 55 கோடி மக்களுக்கு எந்தவிதமான தாராளமான மக்கள்பெயர்ச்சி இல்லாமல் அவர்கள் சுகமாகத் தங்கி வாழ்வதற்கு வசதிகள் அளித்திட வேண்டியுள்ளது. தூர இடங்களுக்குச் செல்லும்போது தங்க ளுடைய வீடு, மனை இவற்றை மறக்கமுடியாது. என்னதான் புதிய வீடுகளில் எவ்வளவு வசதிகள் இருந்தபோதிலும் அந்தப் பழைய நினைவுகள் இருந்துகொண்டே இருக்கும். ஆகவே நாம் மக்களுக்கு அறிவு புகட்டி கிராமப்புறத்தைவிட நகர்ப்புறத்திற்குச் சென்றால் எல்லாவிதமான வசதிகளையும் பெறமுடியும் என்பதை நினைவுபடுத்தவேண்டும். மேலே சொன்ன சூழ்நிலையால் உள் நாட்டில் குடிப்பெயர்ச்சியினால் எந்தவிதமான பயனும் உண் டாகாது. இந்தியா பாகிஸ்தான் பிரிந்த காரணத்தால் முன்னரே ஏராளமான மக்கள் கட்டாயப்படுத்திக் குடியேற்றப்பட்டனர். அதனால் மாநிலங்களிடையே குடிபோதல் மந்தமாக உள்ளது. இந்தியாவில் தொடர்ந்து ஐந்தாண்டுத் திட்டங்களைச் செயல் படுத்துவதாலும், பெரிய தொழிற்சாலைகளையும் ஆலைகளையும் ஏற் படுத்துவதாலும், நகர்ப்புறங்களில் தொழில் பெருகுவதாலும் உள் நாட்டில் மக்கள்பெயர்ச்சி ஏற்படலாம்.

## இந்தியர்கள் வெளிநாடுகளுக்குச் செல்லுதல்

இந்தியர்கள் வெளிநாடு செல்வதற்கு வாய்ப்புகள் உள்ளனவா? உலகத்திலுள்ள மொத்த நிலப்பரப்பு வளங்கள், நுட்பங்கள் இவை யாவற்றையும் நன்முறையில் பயன்படுத்தி மக்களின் எண்ணிக்கைக்கும், தேவைக்கும் ஏற்றவாறு பல்வேறு நாடுகளுக்குப் பங்கிடவில்லை. உலகம் முழுவதையும் பார்க்கும் போது ஒரு பக்கம் பசி, பட்டினி, பஞ்சம், மக்கள்நெருக்கடி, மற்றொருபக்கம் செழிப்பாகவும், வசதியாகவும், குறைவான மக்கள் தொகையைக் கொண்டதாகவும் உள்ளது. அதிகமான மக்கள் தொகைகொண்ட நாடுகள் குறைவான மக்கள்தொகை கொண்ட நாடுகளுக்குச் சில குறிப்பிட்ட நிபந்தனைகளின்பேரில் அனுப்பினுல், அனுப்பும் நாடுகளுக்குச் சிறிது நிவாரணம் ஏற்படுவதுடன் மக்களை அடையும் நாடுகளுக்கும் நன்மை பயக்கும். ஆனுல் இதற்கு எண்ணற்ற தடைகள் உள்ளன; பொருளாதாரம், நாகரிகம் அரசியல் அமைப்பு போன்றவை மக்கள்மாற்றப் பாதையில் உள்ளன. அதிக மக்கள் கொண்ட பகுதிகள் ஆசியாவில்தான் உள்ளன. இன்று நம் நாட்டிலே வெளிநாடுகள் செல்வதற்கு வாய்ப்புகள் இல்லை; வசதியும் இல்லை; நாம் எதிர்பார்க்கவும் முடிவதில்லை. சில நாடுகள் குறிப்பாக ஆஸ்திரேலியா, பிரேசில், கனடா இவை இந்தியாவிற்கும் ஆசிய மக்களுக்கும் கதவுகளைத் திறந்துவிடுமானுல் மக்கள்பெயர்ச்சி பல்வேறு நாடுகளுக்கு நடைபெறும். அப்படியே நட்புமுறையில் அவர்கள் ஓரளவுக்கு மக்கள்தொகையைத் தங்கள் நாடுகளில் அனுமதித்தாலும் இந்தியாவில் மக்கள்தொகை ஆண்டுதோறும் 4 மில்லியனுக்கு அதிகரிக்கும். எந்த நாடும் ஆண்டுதோறும் அதிகரிக்கும் 4 மில்லியன் மக்கள்தொகையை வரவேற்கும் என்பது சந்தேகம்.

மக்கள்தொகையைப் பெருத்த அளவில் மாற்றமுடியாது என்ருலும், அதற்குண்டான நிதிவசதிகள் அதைவிட அதிகச் செலவு பிடிக்கும். மக்கள்பெயர்ச்சிக்குப் பணச்செலவு கொஞ்ச நஞ்சம் அன்று. பண்டைக்காலத்தில் இந்தியா பல்வேறு நாடுகளுடன் கடல் வாணிகம் செய்தது. பல்வேறு நாடுகளுடன் தொடர்பு கொண்டது. நீண்டதூரம் கடல் பிரயாணம் செய்து நம்நாட்டில் கிடைக்கக்கூடிய தந்தம், மயில்தோகை, முத்து, பவழம் முதலியவற்றை எடுத்துச்சென்ருர்கள். அத்துடன் அமைதிக்குரிய மதக் கருத்துக்களையும் எடுத்துச்சென்ருர்கள். தென்கிழக்கு ஆசியாவிலும் மக்கள் குடியேறினுர்கள். இந்திய மக்கள் யாவரும் நீண்டதூரம் சென்றதற்கு வர்த்தகம், வாணிகம், நட்புணர்வு இவைதாம் காரணம்; மக்கள்பெருக்கத்தின் காரணமாகச் செல்லவில்லை.

சென்ற ஒரு நூற்றுண்டில் உலகத்தின் பல்வேறு பாகங்களுக்கு இந்திய மக்கள் சென்றுர்கள். குறிப்பாக, பொதுநல நாடுகளில் வேலைதேடியும் நல்ல வாழ்க்கைத்தரத்தை அடையவும் சென்றுர் கள். வெளிநாடுகளில் நிரந்தரமாக உள்ள இந்தியமக்களின் எண்ணிக்கை 4 மில்லியன்கள். இருந்தாலும் அவர்கள் அங்கு நிம்மதியாக இல்லை. இந்த நாடுகள் ஓரளவுக்கு இந்தியர்களை வரவேற்றுலும் வளர்ந்துவரும் இந்திய மக்களின் அதிகரிப்பை அங்கு அப்படியே எடுத்துக் கொள்ளவும் முடியாது. ஆகவே இதுபோன்ற உலகச் சூழ்நிலைகளில் மக்கள்தொகைப் பிரச் சினையை நம் நாட்டிலேயே தீர்த்துக்கொள்ளவேண்டும்.

இந்திய மக்கள் பல்வேறு நாடுகளுக்குச் சென்றதையும் அவர்கள் குடிபோன நாடுகளையும் எடுத்துக்காட்டும் அட்டவணை கீழேயுள்ளது.

**அட்டவணை 55**

| நாடுகள் | ஆண்டு | எண்ணிக்கை (நூறுகளில்) | சதவிகிதம் |
|---|---|---|---|
| மொரிஷியஸ் | 1940 | 272 | 67 |
| பிஜித்தீவுகள் | 1941 | 102 | 51 |
| பிரிட்டிஷ் கயாணு | 1939 | 143 | 44 |
| ட்ரினிடாட் | 1938 | 158 | 40 |
| இலங்கை | 1949 | 1,972 | 34 |
| டச்சு கயாணு | 1938 | 44 | 29 |
| மலேயா | 1941 | 766 | 14 |
| ஏடன் | 1938 | 8 | 13 |
| பர்மா | 1950 | 1,010 | 6 |
| சான்சிபார் | 1939 | 16 | 6 |
| பிரெஞ்சு கயாணு | 1938 | 2 | 5 |
| தென்ஆப்பிரிக்கா | 1947 | 285 | 3 |

# 18. மக்களின் நகரமுடியாத தன்மை
## (Immobility of population)

இந்தியாவில் நகர வளர்ச்சி மெதுவாகவும், குறைவாகவும் இருப்பதற்குக் காரணம் இந்தியப் பொருளாதாரத்தின் சமூக, பொருளாதார, மத சம்பந்தப்பட்ட காரணங்கள் என்ருல் மிகை யாகாது. முக்கிய காரணமாகத் திகழ்வது மக்களின் நகர முடியாத தன்மைதான் என்பதில் ஐயமில்லே. நம் நாட்டில் ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கு மக்கள் நகரமுடியாத நிலேக்குக் காரணங்கள் மொழி, மதம், ஜாதி, வெப்பதட்பம் புதிய மக்களுடன் பழக சங்கோஜம் போன்ற பல. சொந்த ஊரில் சொந்த வீட்டிலேயே இருக்கவேண்டும் என்ற வீட்டைப்பற்றிய ஏக்கம் (Homesickness) பெரும்பாலான மக்களின் மனத்தில் குடி கொண்டுள்ளது. எல்லா மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் 90 சதவிகித மக்கள் அந்த மாவட்டத்தில் பிறந்து வளர்ந்தவர்களாகத்தான் இருப்பார்கள். மாற்று மாவட்ட மக்கள் குறைந்தது 5 சதவிகிதமாகத்தான் இருப் பார்கள். இவர்கள் நகர்ப்புற வாழ்க்கையை விரும்பியும், தொழில் முன்னேற்றத்தை நாடியும் வந்தவர்களாகத்தான் இருப்பார்கள். மற்றும் இந்த 5 சதவிகித மக்கள் பக்கத்து மாவட்டத்தைச் சார்ந்தவர்களாகத்தான் இருப்பார்கள். 1901 கணக்கின்படி ஒவ் வொரு மாவட்டத்திலும் 9·27 சதவிகித மக்கள் பிற மாவட்டத் தைச் சார்ந்தவர்கள்.

1911ஆம் ஆண்டின் கணக்கின்படி இந்தச் சதவிகிதம் 8·7ஆகக் குறைந்தது. 1931-லும் இதே சதவிகிதத்தில்தான் இருந்தது. 1941-லும் இது சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லே. இருந்தபோதிலும் 1931முதல் 1941வரை யாதொரு மாற்றமும், குறிப்பாக மாநிலம்விட்டு மாநிலம் போகும் மக்கள்பெயர்ச்சி காணப்படவில்லே. நகரமுடியாத

நிலைக்குப் பொருளாதாரக் காரணம்தான் அடிப்படையாகும். பெரும்பான்மையோர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். அவர்களின் பிழைப்புக்கு நிலம்தான் சிறந்த சொத்தும் ஆதாரமும் ஆகும். ஆகவேதான் சொந்த நிலங்களைவிட்டு வேறு இடங்களுக்குப் போவதில்லை. இந்தியாவில் விவசாயம் வேலைக்கு என்று செய்யப்படுவதில்லை. வாழ்க்கைக்கும், உயிர் வாழ்வதற்கும் விவசாயம் இன்றியமையாதது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஆகவேதான் தம் சொந்த நிலங்களையும், தம் ஊரையும் விட்டுப்போக பெரும்பாலோர் விரும்புவதில்லை. கிராமப்புறக் கடன்களும் தொடர்ந்து குடியானவர்களைப் பாதிப்பதால் அவர்கள் எங்கும் சென்றுவிடமுடியாது. விவசாயத்தைவிட்டு வேறு வேலைக்குச் சென்றாலும் அந்த நிலைக்கு ஏற்றவாறு விவசாயி தன் சூழ்நிலைகளை மாற்றிக்கொள்ள முடிவதில்லை. விவசாயம் குன்றிய காலங்களில் கிராமத்தைவிட்டு நகர்ப்புறங்களுக்கு மக்கள் தற்காலிகமாகப் போவதுண்டு. மேலும் நிலங்களில் மக்களின் எண்ணிக்கை அதிகரிப்பதால், அதிகப்படியான மக்களைத் தொழில்கள், குடிசைத் தொழில்கள், சிறிய தொழில்கள் ஆகியவற்றில் ஈடுபடுத்தலாம். அப்போது அவர்களை நகர்ப்புறத்திற்கு அனுப்பித் தொழிற்சாலைகளில் வேலை செய்யவைக்கலாம்.

சிலர் கிராமப்புறங்களில் வேலை கிடைக்காத காரணத்தால் நகர்ப்புறம் நோக்கிச் செல்லுகிறார்கள். அதுவும் பின்னர் கிராமத்திற்குத் திரும்பி வந்துவிடலாம் என்ற எண்ணம் கொண்டுதான் நகருக்குச் செல்லுகிறார்கள். ஆகவே தன் குடும்பத்தையும், மனைவி மக்களையும் கிராமத்திலேயே விட்டு, தாம் மட்டும் வேலைதேடி நகர்ப்புறம் போகிறார்கள். இதனால் நகர்ப்புறங்களில் ஆண்களின் எண்ணிக்கை அதிகரிக்கின்றது. மனைவி மக்களை விட்டுவந்தபடியால் தொழில் நகரங்களில் பல சமூகத் தொல்லைகளுக்கு இப்படிப்பட்டவர்கள் ஆளாக வேண்டியுள்ளது.

மக்கள் நகரமுடியாத நிலைக்கு சமூகக் காரணங்களும் உண்டு. ஜாதி, மதம், வட்டாரம் முதலியவற்றை விட்டு நகர்ப்புறம் செல்லுவதற்கில்லை. கிராமப்புறத்தைப்போல் நகர்ப்புறத்தில் வசதியாக வாழமுடியாது. அதிலும் பட்டணங்களுக்குச் சென்றால் புதிய முகங்களைப் பார்க்க நேரிடும். எல்லாமே புதுமையாகக் காட்சி அளிக்கும். மொழியில் வேறுபாடு, உணவுமுறையில் மாற்றம், பழக்கவழக்கங்களில் பெருத்த மாற்றம் தென்படுகிறது. பிற மாநிலங்களுக்குச் செல்லவேண்டும் என்ற எண்ணம் ஒரு சிலரிடையேதான் காணப்படுகிறது. உதாரணமாக, கேரள மக்கள் பெரும்பாலோர் பம்பாயில் வேலை செய்கிறார்கள். தங்கள் வட்டாரம்

மொழி, யாவையும் மறந்து புதிய இடங்களுக்குச் சென்று வேலை களைத்தேடி அங்குள்ள மொழி, பழக்கவழக்கங்களுக்கு ஏற்றவாறு வாழ்க்கை நடத்துவதைக் காண்கிறோம்.

"திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்ற மூதுரைக்கு ஏற்றவாறு பல பகுதிகளுக்குச் சென்று மக்கள் வாழவேண்டும்; இந்தியாவில் மொழிப்பிரச்சினையும் ஒரு காரணமாகும். அந்தந்த வட்டாரத்தில் அந்தந்த மொழியைக் கற்றவர்களுக்குத்தான் வேலை கொடுக்கப்படுகிறது. பிற மாநிலங்களுக்கு இதனால் பெரும் பாலோர் போகமுடிவதில்லை. அப்படிப் போகவேண்டுமானால் பிற மாநில மொழிகளைக் கற்றுக்கொள்ளவேண்டும். மக்கள்தொகை அதிகமுள்ள பகுதியிலிருந்து மக்கள்தொகை குறைவாக உள்ள பகுதிகளுக்குப் போகமுடியாத நிலையைக் காண்கிறோம். மக்கள் பெரும்பாலோர் வேறு இடத்திற்குப் போக விருப்பப்படுவதில்லை. ஒரு சிலரேதான் வேறு மாநிலங்களுக்குச் செல்லுகிறார்கள். ஆனால் அப்படிப்போக நேரிட்டால் மொழி, மதம், பழக்க வழக்கங்கள் குறுக்கே நிற்கின்றன.

அமெரிக்க நாட்டில் மக்கள் முதலில் கிழக்கே குடியேறி னார்கள். மக்கள்தொகை அதிகரித்த பின்னர் எல்லோரும் மேற்கு நோக்கி நகர்ந்தனர். அதன் காரணமாக மேற்கத்திய இயக்கம் அந்நாட்டில் ஏற்பட்டது. இதனால் மக்கள் பரவலாக்கப்பட்டனர். புதிய நிலங்கள் விவசாயத்திற்குக் கொண்டுவரப்பட்டன. உற்பத்தியும் பெருகியது. பல நகரங்கள், பட்டணங்கள், அங்காடிகள், தொழிற்சாலைகள் தோன்றின. போக்குவரத்தும் செய்தித்துறையும் துரிதப்படுத்தப்பட்டன. எல்லா இடங்களிலும் மக்களின் அடர்த்தி குறைக்கப்பட்டது. ஆனால் இந்தியாவில் ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குப் போகமுடியவில்லை. காரணம், விவசாயத்தை நம்பியிருத்தல், மொழி, மதம், பழக்க வழக்கங்கள் ஆகியவை குறுக்கே நிற்கின்றன. ஆகவேதான் சில மாநிலங்களில் மக்கள்தொகை அதிகமாக இருக்கிறது.

# 19. உழைப்பின் திறமை

உழைப்பு என்றால் பொருளாதாரத்தில் உடல் உழைப்பு, மூளை உழைப்பு, கூலிக்காக வேலைசெய்யும் எந்த உழைப்பையும் கருதலாம். மார்ஷல், மூளையை அல்லது உடலைப் பயன்படுத்தி முழு அளவில் அல்லது ஓர் அளவில் சம்பாதித்தால் அதில் வரும் சந்தோஷம் அல்லாமல் அதுவே உழைப்பாகும் என்கிறார். வேலை செய்யும்போது எந்த அளவில் துன்பங்களையும் கஷ்டங்களையும் அனுபவிக்கிறோம் என்பதையும் ஆராயவேண்டும். பொருள் உற்பத்தி அல்லது செல்வத்தை அதிகப்படுத்தல் இவற்றுக்கு உழைப்பைப் பயன்படுத்தியும் அடையலாம். உழைப்பால் பொருள் உற்பத்தி செய்யவும், பொருளை நுகரவும் முடிகிறது. ஆகவேதான் உழைப்பாளனை நுகர்வோனாகவும், உற்பத்தியாளனாகவும் கருதுகிறோம். பொருள்களை உற்பத்தி செய்யவும், உற்பத்தி செய்த பொருள்களை அனுபவிக்கவும் உழைப்பு பயன்படும்.

உழைப்பை உழைப்பாளரிடமிருந்து பிரிக்க முடியாது. உழைப்பு உழைப்பாளனின் ஒரு பகுதியாகும். உழைப்பை மனிதர்களிடமிருந்து அடையவேண்டியுள்ளது. உழைப்பாளர்கள் கூலிக்காகத் தங்களின் உழைப்பை விற்கிறார்கள். தனக்குச் சொத்தாக விளங்குகிற உழைப்பு எளிதில் அழியக்கூடியது. உழைப்பு கொஞ்ச நாட்களுக்குத்தான் நிற்கும். ஆகவேதான் அதை ஒருநாளும் வீண் அடிக்கக்கூடாது. ஒருநாள் சென்றால் மீண்டும் திரும்பிவராது. மேலும் அதனைப் பத்திரப்படுத்திவைக்கக் கூடிய நிலையில் இல்லை. ஆகவேதான் கூலி குறைவாக இருந்த போதிலும் அதை அவன் ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. தொழிலாளர்களுக்குப் போதிய பேரம்பேசும் ஆற்றலும் கிடையாது. ஏனெனில் உழைப்பை நீண்ட நாட்களுக்குப் பாதுகாக்க முடியாது. தனிப்பட்ட முறையில் தொழிலாளி முதலாளியுடன் பேரம் பேசமுடியாது. ஆகவேதான் தொழிற்சங்கங்கள் ஏற்படுத்தி அதன்மூலமாக வெற்றிபெறுகிறார்கள். ஆனால் முதலாளி ஆலை

களில் கதவடைப்புச் செய்தால் அப்போது தொழிலாளர்கள் பணிகிருர்கள். வேலையில்லாத் திண்டாட்டம் வந்துவிடும் என்று எண்ணிப் பயந்து ஒத்துக்கொள்கிருர்கள். தொழிலாளர்களுக்கும் விருப்பு, வெறுப்பு உணர்ச்சிகள் உண்டு. நிலம், முதல், போன்ற காரணிகள் உயிர் அற்றவை. அதனுல் தொழிலாளர்கள் நிலைமைகளுக்கு ஏற்றவாறு நடந்துகொள்ளவேண்டியுள்ளது. தொழிலாளி சந்தோஷமாக இருந்தால் மிக நன்ருக வேலை செய்வான். போதிய ஓய்வு, பொழுதுபோக்கு, நல்லமுறையில் அவர்களை நடத்துவது போன்றவை அவன் திறமையை வளர்க்கும். உழைப்பின் அளிப்பைத் தேவைக்கு ஏற்றவாறு அவ்வப்போது சரி செய்ய முடியாது. தேவைக்கு ஏற்றவாறு உழைப்பின் அளிப்பைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது. உத்தரவுக்கும் கட்டளைக்கும் தகுந்தவாறு உழைப்பைச் செய்துகாட்ட முடியாது. கூலியின் உயர்வுக்கு ஏற்றவாறு உழைப்பின் அளிப்பை அதிகரிக்க முடியாது. பொதுவாக, பொருள்களின் விலை அதிகமிருந்தால் அதிகமான பொருள் அளிப்பு செய்யமுடியும். ஆனுல் அதிகமான கூலியென்று உழைப்பை அதிக அளவில் கூட்டமுடியாது. குறைவான கூலியில் உழைப்பாளர்கள் தங்களின் குடும்பங்களுக்கு வேண்டிய, போதுமான வருமானத்தை ஈட்டமுடிவதில்லை.

வேலை செய்யும் திறமைதான் உழைப்பின் தரத்தின் அம்சமாகும். திறமை பல காரணிகளைப் பொறுத்ததாகும். தலைமுறை, வளர்ப்புமுறை, உடல் உழைப்பு, சீதோஷ்ண நிலைகள், வாழ்க்கைத் தரம், கூலி, உண்மையான கூலி பொருள் வடிவில், எத்தனைமணி நேரம் வேலை, முதலீட்டின் முன்னேற்றம், சாதனங்கள், தொழிலாளர்களின் ஒற்றுமை ஐக்கியம், சமூகநலப்பணிகள் பொதுநுட்ப வர்த்தகப்படிப்பு, பொதுவாக வேலை செய்யும் நிலைமைகள் சூழ் நிலைகள், சுகாதாரம், காற்று, வெளிச்சம், சுத்தம், தொழிற்சாலைகளில் அமைதி, ஒழுக்கத்தன்மைகள், உண்மை, மரியாதை, கடமை, உணர்ச்சி, உற்சாகம், உயர்வாக எதிர்பார்த்தல், மேலும் நன்மைகள் அடையவேண்டும், லாபம் போனஸ் பங்கீடுகள், வெகுமதிகள், தொழிலாளர்களின் புத்திகூர்மை யாவும் உற்பத்தித் திறனுக்கு முக்கிய காரணிகள் என்பதில் சந்தேகமே கிடையாது. சுருங்கக் கூறினுல், தொழிலாளர்களின் திறமையைத்தாங்கி நிற்பது இயற்கை அல்லது செயற்கை குணங்களேயாகும்.

உழைப்பை இருவகையாகப் பிரிக்கலாம்: (1) உழைப்பின் அளவு (2) உழைப்பின் திறன். உழைப்பின் அளவைவிட உழைப்பின் திறன் மிகவும் முக்கியமானது. திறன்மிக்க உழைப்பாளர்களாக இருப்பின் உழைப்பின் அளவு குறைவாக

இருந்தாலும் அதன் உற்பத்தி சிறந்து விளங்கும். ஆகவே திறமையும் நாட்டுப்பற்றும் அதிகமிருந்தால் அதிக அளவில் பொருளாதாரத்தை முன்னேற்ற முடியும். உழைப்பாளர்களின் எண்ணிக்கையைவிட தரம் மிகவும் சிறந்தது. அத்தகைய உழைப்பின் திறன் கீழ்க்கண்ட காரணிகளால் தீர்மானிக்கப் படுகின்றன.

1. **இனமும் பாரம்பரியமும்:** குறிப்பிட்ட பகுதிகளில் வாழும் மக்கள் இயற்கையிலேயே திறமை வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள். உதாரணமாக சுவிட்சர்லாந்து நாட்டவர்கள் கைக்கடிகாரம் செய்யும் தொழில்களிலும், ஆங்கிலேயர்கள், ஜப்பானியர்கள் கப்பல்கட்டும் தொழில்களிலும் சிறந்துள்ளார்கள். மலையடிவாரங்களில் வாழும் மக்கள் உடல் திறமையுடன் காணப் படுகிறார்கள். ஆகவேதான் அவர்களைப் படைபலத்திற்குப் பயன் படுத்துகிறார்கள்.

2. **வெப்பதட்பநிலை:** கடுமையான வெயிலில் வேலை பார்ப் பவர்கள் விரைவில் களைப்படைந்து விடுகிறார்கள். உஷ்ணப்பகுதி களில் கொஞ்ச நேரம் வேலைசெய்தாலும் களைப்படைகிறார்கள். மேலும் கோடைக்காலத்தில் தொழிலாளர்கள் சோர்வு அடை கிறார்கள். குளிரும், வெப்பமும் அதிகமில்லாமல் இதமான சூழ் நிலைகளில் தொழிலாளர்கள் களைப்பு அடையாமல் நீண்டநேரம் பணிபுரிய முடிகிறது. உதாரணமாக கோவை, நீலகிரியில் குளிர்ந்த உஷ்ணம் இருப்பதால் அங்கு மக்கள் நீண்ட நேரம் பணி புரிய முடிகிறது. மத்தியத்தரைக்கடல் பிரதேசங்களிலும் மக்கள் நீண்ட நேரம் வேலை செய்யமுடிகிறது. கடுமையான உஷ்ணம், கடும் குளிர் இவை நீண்டநேர வேலைகளுக்குச் சரிப்பட்டு வாரா.

3. **உணவு முறை:** திறமைக் குறைவுக்கு ஒரு காரணம் சரியான உணவு இல்லாதது. உணவின் அளவும், தரமும் உழைப்பின் திறமையை நிர்ணயிக்கின்றன. தரமான, சமசத்துள்ள உணவு உட்கொள்ளும் தொழிலாளர்கள் நன்றாக வேலை செய் கிறார்கள். உணவுப்பொருள்களில் புரதச்சத்துக்கள் போதுமான தாக இருந்தால் அவர்கள் கடுமையாகவும் நீண்ட நேரமும் உழைப்பார்கள். சத்துள்ள உணவு உற்பத்தித்திறனை வளர்க்கும்.

4. **சுகாதார வசதிகள்:** நல்ல சுகாதார வசதிகளும், மருத்துவ வசதிகளும் ஆரோக்கியமான வாழ்க்கைச் சூழ்நிலைகளும் உழைப் பாளர்களுக்கு நல்ல உடல் நலத்தைத் தந்து அவர்கள் திறமையாக வேலைசெய்ய உதவுகின்றன. இந்தியாவில் பெரும் பாலான மக்கள் வியாதிகளால் பாதிக்கப்படுகிறார்கள். அவர் களுக்குப் போதிய மருந்து, மருத்துவ வசதிகள் கிடைப்பதில்லை.

5. **கல்வி நிலை:** நுட்ப அறிவு, அறிவுக்கூர்மை நிதானமாக ஆராய்ந்து செயல்படுவது ஆகியவை உற்பத்தித்திறனை வளர்க்கும் எனப் பேராசிரியர் கெயின்கிராஸ் வலியுறுத்தியுள்ளார்கள். பொதுக் கல்வியும் நுட்ப விஞ்ஞான ஆராய்ச்சியும் நவீன காலத்தில் மிக அவசியமாகும், கல்வியின். வளர்ச்சி ஒரு நாட்டின் உற்பத்தித்திறனை வளர்க்கும்.

6. **சமுதாய, அரசியல் அமைப்புகள்:** பொதுவாக மக்களுடைய எண்ணங்களும் சிந்தனைகளும் சமுதாய அமைப்பின் அடிப் படையில் தோன்றுகின்றன. அதேபோல் அரசியல் அமைப்பும், மத சுதந்திரமும், உழைப்பாளர்களின் செய்திறத்தையும் அதிகரிக்கும். சமூகநலத் திட்டங்களைச் செயல்படுத்துவதால் தொழிலாளர்கள் கவலை கொள்ளாமல் மீண்டும் நன்ருக,ஊக்கத் தோடு உழைக்கின்ருர்கள்.

7. **வேலை செய்யும் இடத்தின் சூழ்நிலை:** வேலை பார்க்கும் இடங்கள் நல்ல காற்ரேட்டமுள்ள, ஆரோக்கியமான, அமைதியான சூழ்நிலையில் இருந்தால், உழைப்பாளர்கள் மேலும் உற்சாகத்துடன் நன்முறையில் உழைப்பார்கள். காற்று வசதி யில்லாத சுகாதாரக் குறைவினுலும், வெளிச்சமில்லாத அறை களிலும் இடங்களிலும் வேலை செய்வதாலும் திறமை குறையும்.

8. **வேலை பார்க்கும் காலம்:** வேலை பார்க்கும் மொத்தக்காலம் இடையில் தரப்படும் ஓய்வுநேரம், பொழுதுபோக்கு வசதிகள் தொழில் பகுப்புமுறைகள் உழைப்பின் திறமையை வளர்க்கும். விடுமுறைக்காலம், வாரத்தில் ஒரு நாள் அல்லது இரு நாட்கள் விடுமுறை, வேலை செய்யும் நேரம், இவையும் வேலையாட்களை மேலும் திறமையுடன் வேலைசெய்ய உற்சாகப்படுத்தும்.

9. **வருமானம், வாழ்க்கைத்தரம்:** வருமானம் மிகக்குறைவாக இருந்தால் திறம்படச் செயலாற்றமுடியாது: வருமானம் அவ்வப் போது ஏற்படும் விலையேற்றத்திற்குத் தகுந்தவாறு உயருதல் வேண்டும். மேலும் வருமானத்தைத் தேவையான பொருள்களுக்கு, குறிப்பாக, திறமையை வளர்க்கும் பொருள்களுக்குச் செலவு செய்தல் வேண்டும். வீண் ஆடம்பரங்களுக்கும், போதைப் பொருள்களுக்கும், அனுவசியமான பொருள்களுக்கும் செலவிடுதல் கூடாது. நாட்டில் துன்பம் தரக்கூடிய பொருள்களில் வருமானத்தைச் செலவிடுதல் கூடாது. இன்றியமையாத பொருள்கள், திறமையை வளர்க்கும் பொருள்கள், வாடிக்கை, வழக்கமான பொருள்களுக்கும் செலவிடுதல் வேண்டும்.

10. **தனிமனித இயல்புகள்:** ஒருசிலர் இயற்கையாகவே சுறுசுறுப்பாகவும், உற்சாகத்துடனும், ஊக்கமும், முயற்சியும் கொண்டு திறமையாக வேலைசெய்கிறார்கள். சிலருக்குத் தனி அறிவு, ஆற்றல் உண்டு. இது இறைவனின் வெகுமதியாகும். இத்தகைய மக்கள் மிக்க திறமையுடன் உழைத்துப் புகழ் பெறுவார்கள்.

11. **தொழிற்சங்கங்கள்:** தொழிற்சங்கங்களைத் தொழிலாளர்கள் அமைத்துக்கொண்டு தங்களுக்குத் தேவையான, வேண்டிய வருமான உயர்வு, வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொள்வதோடு தங்கள் திறமைகளையும் வளர்த்துக் கொள்வார்கள். தற்சமயம் எல்லா வேலைகளுக்கும் தொழிற்சங்கங்கள் தோன்றிவருகின்றன.

12. **கூலி தரப்படும் முறை:** குறிப்பிட்ட காலத்தில் தவறாமல் கூலியைக் கொடுத்திடல் வேண்டும். இன்றியமையாத பண்டங்கள், வசதிப் பண்டங்கள், வீட்டு வசதிகள் போன்றவை தரப்படுமானால் தொழில்களில் முழு கவனத்தைச் செலுத்தித் திறமையை வளர்க்க முடியும். உதாரணமாக, ராணுவத்தில் அதிகக் கூலி தருவதாலும், முன்கூட்டியே கொடுப்பதாலும், சிப்பாய்கள் உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள். சில தொழிற்சாலைகளில் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதிகள், துணிமணி வசதிகளும் அளித்து அவர்களை மேலும் ஊக்கத்துடன் உழைக்கச் செய்கிறார்கள்.

13. **நல்ல வீட்டு வசதி:** நல்ல காற்றோட்டமுள்ள வீடுகளில் வாழ்பவர்கள் உடல்நலமுள்ளவர்களாக இருப்பார்கள். அதனால் அவர்கள் நன்கு உழைக்க முடியும். சுகாதாரக் குறையுள்ள வீடுகளில் அடிக்கடி நோய் பரவுவதால் மக்கள் நன்முறையில் உழைக்க முடிவதில்லை. இந்தியாவில் மக்களுக்கும், மாணவர்களுக்கும் போதிய அளவுக்கு சௌகரியமான வீட்டுவசதிகள் இல்லாமையால் சரியான முறைப்படி தூங்கவும், படிக்கவும் முடிவதில்லை. அதன் காரணமாகத் திறமை குறைகிறது.

14. **நிர்வாகம்:** திறமையான நிர்வாகியாக இருந்து தொழிலாளர்களின் பிரச்சினைகளை அவ்வப்போது அக்கறையுடன் கவனித்து அவர்களிடம் அன்புகாட்டி வந்தால் உழைப்பாளர்கள் அன்புடன் வேலை செய்வார்கள்; திறமையும் வளர்ந்து வரும். ஆகவே திறமையை வளர்க்கவேண்டுமானால் மேலே கூறப்பட்டுள்ள எல்லாக் காரணங்களையும் சரிவரப்புரிந்து அவற்றை மக்களுக்கு நன்முறையில் செய்திடல்வேண்டும்.

திறமையான மக்கள் அதிகமிருந்தால் நல்ல முறையில் உழைத்து வருமானத்தை அதிகரிக்க முடியும். அதனுல் வாழ்க்கைத் தரம் உயரும். மேலும் நல்ல சௌகரியங்களையும் அடைய முடியும். தன் சக தொழிலாளர்களிடையேயும் நல்ல பெயர் நாட்டமுடியும். முதலாளியின் ஆதரவும் சலுகையும் கிடைக்கும். திறமையான தொழிலாளர்கள் நாட்டின் சொத்து, செல்வமாகக் கருதுகிருேம். அதனுல் நாட்டு வருமானம் வளரும். பொருள்களையும், பண்டங்களையும் அதிகமாக உற்பத்தி செய்யமுடியும். முதலாளிகளுக்கும் லாபம் கிடைக்கும். திறமையான தொழிலாளர்கள் மூலப்பொருள்களை வீணடிக்கமாட்டார்கள்; எந்திரங்களையும், கருவிகளையும் நன்முறையில் செயல்படுத்துவார்கள்; நஷ்டத்தை உண்டாக்க மாட்டார்கள்; தம் வேலையை நுணுக்கமாகவும், சீக்கிரமாகவும் கற்றுக்கொள்வார்கள்; வேலையையும் திறமையாகச் செய்து முடிப்பார்கள்; உற்பத்தியைக் குறைந்த செலவில் செய்துகாட்டுவார்கள். ஆகவே மேலேயுள்ள பலவிதமான நன்மைகளை உற்பத்தித் திறனுல் அடையமுடியும்.

(a) தொழிலாளர்கள் ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கும் போக முடியும். திறமையையும் பல இடங்களுக்குப் பகிர்ந்து அளிக்க முடியும். பூமியில் எப்பகுதிக்கு வேண்டுமானுலும் செல்ல முடியும். இதற்கு பூகோள அல்லது புவியியல் நகரும்தன்மை எனப்படும். (b) தொழிலாளர்கள் ஒரு வேலையைவிட்டு மறு வேலைக்குச்செல்லுதல், மாற்றுவேலையை ஒப்புக்கொள்ளுதல். இதற்குப் பொருளாதார அல்லது வேலையின் நகரும்தன்மை எனப்படும். (c) எல்லாப்பொருள்களையும் சாமான்களையும் மிக எளிதில் ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கு அனுப்பலாம். ஆனுல் மனிதனை அனுப்புவது மிகவும் கடினம் என ஆடம் ஸ்மித் அவர்கள் கூறியுள்ளார்கள். இவ்வாறு மக்கள் ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கு நகர்ந்து செல்வதால் பல நன்மைகளை அடையலாம். தொழிலாளர்களின் சௌகரியங்கள் முன்னேற்றப்படுகின்றன. உழைப்பின் தேவைக்கு ஏற்றவாறு மக்களின் அளிப்பு நிறைவு செய்யப்படுகிறது. மேலும் அதனை எளிதாகவும் விரைவாகவும் செய்யமுடியும்.

ஓர் இடத்தின் அல்லது தேசத்தின் வேலையின்மையைப் போக்க முடியும். மக்களின் நகருந்தன்மையினுல் வேலையின்மை பெரிதும் குறையும். மேலும், தேவையற்ற அல்லது அழிந்துவரும் தொழில்களிலிருந்து பெருகிவரும், வளர்ந்துவரும் தொழில்களுக்குத் தொழிலாளர்களைத் திருப்பிவிடலாம். புதிய இடங்களுக்குச் செல்லும்போது ஒருவிதமான பயமும் அச்சமும் ஏற்படுகிறது. புதிய இடத்தைப்பற்றி ஒருவிதமான பயம், உன்ருேர்

அரசியல்பற்று, குடும்பப்பற்று, அறியாமை, பிடிவாதம், ஆகியவை மக்கள் நகருவதைத் தடுத்து நிறுத்தும், வேலைதேடிச் செல்லும் மக்களின் பெயர்ச்சியும் கட்டுப்படுத்தப்படுகிறது. இதற்குச் சிறப்பான காரணங்களும் உள்ளன. சிறப்பான வேலைப் பகுப்பு, குடும்பத்தொழில், வெளியே போகவேண்டும் என்ற ஆசைக் குறைவு, எதிர் காலத்தைப்பற்றி பயம் போன்ற பல. இந்தியாவில் திறமை வாய்ந்த மக்கள் எல்லாப் பகுதிகளிலும் தாராளமாகப் போகவும் வரவும் இருக்கவேண்டும். திறமை எல்லாப் பகுதி மக்களுக்கும் கிடைத்தல்வேண்டும். திறமையை மேலும் நன் முறையில் வளர்த்து உற்பத்தியைப் பெருக்கிடல்வேண்டும்.

# 20. நிகர இனவிருத்தி விகிதம்
## (Net Reproduction rate)

பிறப்பு இறப்பு விகிதங்களைக்கொண்டு சரியாக மக்கள் தொகை வளர்ச்சியைக் கண்டுபிடிக்க முடியாது. இதற்குச்சரியான முறை நிகரஇனவிருத்தி விகிதம் எனப் பேராசிரியர் குசின்ஸ்சி (Prof. Kucznshi) கூறியுள்ளார். மக்கள்தொகை வளர்ச்சியைக் கண்டுபிடிக்க இந்த முறை சிறப்பானதாகும். ஒவ்வொரு நூற்றுண்டிலும் 1,000 தாய்மார்கள் தாங்கள் குழந்தை பெறும் காலத்தில் எத்தனை பெண் குழந்தைகளைப் பெற்றெடுக்கிறுர்கள் என்பதை முதலில் கண்டுபிடிக்க வேண்டும். உதாரணமாக, 1,000 தாய்மார்கள் தாங்கள் குழந்தைபெறும் காலம் முடியும்வரை 1,000 பெண் குழந்தைகளைப் பெற்றெடுப்பதாகக் கொள்வோம். இந்த 1,000 பெண் குழந்தைகள் வளர்ந்து தங்கள் பருவக் காலத்தில் மீண்டும் 1,000 பெண் குழந்தைகளைப் பெற்று எடுத்தால் அதன் பொருள் ஒவ்வொரு நூற்றுண்டிலும் அதே அளவுக்கு மறு உற்பத்தி செய்வதாக ஆகும். நிகரஇன விருத்தி விகிதம் அப்போது ஒன்றுக்குச் சமம். 1,000 பெண் குழந்தைகளுக்குமேல் பிறந்து வளர்ந்தால் அதன் நிகர இனவிருத்தி விகிதம் ஒன்றுக்குமேல் ஆகும். அப்படி 1,000 பெண்குழந்தைகளுக்குக் குறைவாக இருந்தால் அது ஒன்றுக்குக் குறைவு எனக் கூறலாம்.

நிகர இனவிருத்தி விகிதத்தைக் கணக்கு எடுக்கும்போது, 1,000 தாய்மார்களுக்கு எத்தனை பெண்குழந்தைகள் பிறந்தன எனக் கணக்கு எடுக்கும்போது ஒவ்வொரு தாயும் குழந்தை பெறுங்காலம் முடியும்வரை உயிர் வாழ்வதாகக் கொள்ள வேண்டும். பின்னர் தாய்மார்கள் இறப்பின் பட்டியலை வைத்துக் கொண்டு சரி செய்தல் வேண்டும். இதற்காகச் சில சலுகைகள் முன்எச்சரிக்கையாகச் செய்துகொள்ளுதல் வேண்டும்.

ஏனெனில் சில தாய்மார்கள் தங்கள் பருவம் முடிவதற்குள் இறந்து விடுகிறார்கள். இதுபோன்ற விவரங்களை இந்தியாவில் தயாரிப்பதில்லை. பல நிபுணர்கள் இந்த முறையைக் கண்டு பிடித்து பெரும் முயற்சிகளை மேற்கொண்டனர். டாக்டர் கோஷ் (Dr. Ghosh) அவர்கள் இந்தியாவின் நிகர இனவிருத்தி விகிதம் 1·1 எனக் குறிப்பிட்டுள்ளார்கள். அதாவது இந்திய மக்கள்தொகை ஒவ்வொரு நூற்றாண்டிலும் 10 சதவிகிதம் அதிகரித்துக் கொண்டு போகிறது என்பது பொருளாகும். தேசியத்திட்டக்கமிஷனின் அறிக்கையின்படி இந்தியாவின் நிகர இனவிருத்தி விகிதம் 1·45 எனத் தீர்மானித்தார்கள். இருந்தபோதிலும் இந்தப்புள்ளி விவரங்கள் தற்காலிகமானவை.

பெண்கள் எந்த விகிதத்தில் தங்களைப் பெருக்கிக் கொள்கிறார்களோ அந்த விகிதம்தான் நிகர இனவிருத்தி விகிதம் எனப்படுகிறது இவ்விகிதம் சராசரியாக ஒவ்வொரு பெண்ணுக்குமாகத்தான் கணக்கிடப்படுகிறதேயொழிய 100-க்கு அல்லது 1,000-க்கு இவ்வளவு என்று கணக்கிடப்படுவது கிடையாது. கீழ்க்கண்ட அட்டவணையைப் பயன்படுத்தி இந்தியாவின் மொத்த, நிகர இனவிருத்தி விகிதத்தைக் கண்டுபிடிக்கலாம்.

**அட்டவணை 56**

| வயது | சராசரி 1000 பெண்களுக்குப் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை | சராசரி 1000 பெண்களுக்குப் பிறக்கும் பெண் குழந்தைகளின் எண்ணிக்கை | பிறக்கும் 1000 பெண் குழந்தைகளுள் உயிரோடு இருப்பவர்களின் எண்ணிக்கை | இப்பொழுது இருக்கும் பெண்களுக்குப் பதிலாக இனவிருத்தி செய்யத் தயாரான நிலையிலிருக்கும் பெண்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| 15-20 | 691·2 | 332 | 548·94 | 182 |
| 21-25 | 1,670·1 | 803 | 499·37 | 401 |
| 26-30 | 1,556·5 | 748 | 447·95 | 335 |
| 31-35 | 902·2 | 634 | 394·38 | 171 |
| 36-40 | 430·5 | 207 | 339·77 | 70 |
| 41-45 | 188·8 | 91 | 285·32 | 26 |
| 46-50 | 79·9 | 38 | 234·01 | 9 |
| | 5,519.3 | 2,853 | 2,749·74 | 1,194 |

$$\text{மொத்த இனவிருத்தி விகிதம்} = \frac{2853}{1000} = 2{\cdot}853$$

$$\text{நிகர இனவிருத்தி விகிதம்} = \frac{1194}{1000} = 1{\cdot}194$$

நிகர இனவிருத்தி விகிதம் ஒன்றுக்கு அதிகமாக இருந்தால் மக்கள் தொகை வளர்ச்சி பெருகிவருகிறதென்றும், ஒன்றுக்குக் குறைவாக இருப்பின் மக்கள்தொகை குறைந்து செல்கிறதென்றும் குறிப்பிடலாம்.

இந்தியாவின் மக்கள்தொகை வளர்ச்சியை மூன்று விதமாகக் கணக்கிட்டுள்ளார்கள். கோல், ஹூவெர் (Coale & Hoover) என்ற இரு நிபுணர்கள் தங்கள் புத்தகமான "மக்கள் வளர்ச்சியும் குறைவான வருமானமுள்ள நாட்டில் பொருளாதார முன்னேற்றமும்" என்பதில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:

(1) இந்தியாவில் எதிர்கால மக்கள்தொகை பிறப்பு, இறப்பு விகிதங்களை அடிப்படையாகக்கொண்டு உத்தேசமாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. தற்போதுள்ள பிறப்பு விகிதம் தொடருமானால் 1986-ல் 775 மில்லியன்களாகும். அதாவது ஆண்டு தோறும் மக்கள்தொகை வளர்ச்சியின் விகிதம் 2·6 சதவிகிதமாகும் எனக்கூறியுள்ளார்கள்.

(2) தற்போதுள்ள பிறப்பு விகிதம் 50 சதவிகிதம் குறையுமானால் அதாவது பாதி அளவு குறையுமானால் 1956முதல் 1981 வரை மக்கள்தொகை 590 மில்லியன்கள் ஆகும். அதாவது ஆண்டுதோறும் மக்கள்தொகையின் வளர்ச்சி ஒரு சதவிகிதம் உயரும்.

(3) மூன்றாவது கணிப்புமுறையில் 1966-க்குப் பின்னர் பிறப்பு விகிதம் 50 சதவிகிதம் குறையுமானால் அப்போது மக்கள் தொகை 1966முதல் 1981வரை 634 மில்லியன்கள் ஆகும் எனக் கூறியுள்ளார்கள். இந்த மூன்று விதமான கணிப்பில் இரண்டாம் வகையில் வாழ்க்கைத்தரம் உயர்ந்தால் பிறப்பு விகிதம் குறையாமல் அதிகரிக்கும் என்பதுதான் பொருத்தமற்றது. அதற்குப்பதிலாக இறப்பு விகிதம் குறையும். ஏனெனில் நல்ல வாழ்க்கைத்தரத்தின் விளைவால் இறப்பு விகிதம் குறையும். மருந்து வசதிகளினாலும் இறப்பு விகிதத்தைக் குறைக்கலாம். ஆகவே உண்மையான மக்கள்தொகை வளர்ச்சி முதல் கணிப்புக்கும் மூன்றாம் கணிப்புக்கும் இடையேதான் அமையும் எனத்தெரிகிறது. ஆகவே மக்கள்தொகை வளர்ச்சியைப் பிறப்பு இறப்பு விகிதங்களாலும் நிகர இனவிருத்தி விகிதத்தாலும் தீர்மானிக்கலாம். பின்வரும் அட்டவணை பலநாடுகளிலுள்ள மொத்த இனவிருத்தி, நிகர இனவிருத்தி விகிதங்களை எடுத்துக் காட்டுகின்றது.

## அட்டவணை 57

| நாடுகள் | ஆண்டு | இனவிருத்தி விகிதம் | |
|---|---|---|---|
| | | மொத்தம் | நிகரம் |
| இந்தியா | 1941 | 2·76 | 1·30 |
| எகிப்து | 1937 | 3·11 | 1·44 |
| ஜப்பான் | 1937 | 2·14 | 1·44 |
| அமெரிக்கா | 1942 | 1·27 | 1·19 |
| இங்கிலாந்து | 1940 | 0·85 | 0·75 |
| நியூஜிலாந்து | 1942 | 1·30 | 1·21 |

# 21. பொருளாதார அமைப்பு

வருமானத்திற்கு ஏற்றவாறு மக்கள் தொகையை வகைப்படுத்தி சரியான புள்ளிவிவரங்கள் இதுவரை சேகரிக்கப்படவில்லை. வருமானவரி செலுத்துவோரிடமிருந்து சில புள்ளிகளைச் சேகரிக்கலாம். உதாரணமாக 300 மில்லியன் மக்கள் தொகையில் ⅓ மில்லியன் மக்கள் வருமானவரி செலுத்துகிறார்கள். இதில் விவசாய வருமானத்தைச் சேர்ப்பதில்லை. உற்பத்திக்கு ஏற்றவாறும், கூலிகளுக்கு ஏற்றவாறும் மக்கள் தொகையை வகைப்படுத்தி புள்ளி விவரங்களைச் சேகரிப்பதாகத் தெரியவில்லை. வேலையில்லாத் திண்டாட்டம், சமூகநல, சுகாதார நல சம்பந்தப்பட்ட புள்ளி விவரங்கள் சரிவரக்கிடைக்கவில்லை. ஆனால் விவசாய உற்பத்தி, காடுகளின் உற்பத்தி, கனிவளங்களின் உற்பத்தி முதலியவற்றை அரசாங்கம் தீர்மானிக்கிறது. அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களின் வருமானங்கள், சில முக்கிய தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளர்களின் ஊதியங்கள் சம்பந்தப்பட்ட விவரங்கள் கிடைக்கின்றன. இந்தியாவின் வருமானத்தைத் தீர்மானிக்கும் போது விவசாயம், தொழில்கள், வர்த்தகம், வாணிகம் முதலிவற்றினுடைய உற்பத்திகளைக் கொண்டு கணிக்கிறோம்.

1938ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கத்திற்கு நிதி ஆலோசகராகப் பணியாற்றிய சர் ஜேம்ஸ் கிரிஸ் இந்தியாவினுடைய மொத்த வருமானம் ரூ. 1,600 கோடிகள் எனத் தீர்மானித்தார். அப்போது மக்கள்தொகை 285 மில்லியன்கள் என்றும் இந்திய மக்களின் தலாவருமானம் ரூ. 56/-என்றும் குறிப்பிட்டார். 1931-1932ஆம் ஆண்டில் டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் அவர்கள் இந்தியாவின் மொத்த வருமானம் ரூ. 1,689 கோடிகள் எனக் கணக்கிட்டார். அதாவது நபர் ஒன்றுக்குத் தலாவருமானம் ரூ. 62/-என வகுத்தார். மேலும் அவர் கிராமத்தில் உள்ளவர்களின் தலாவருமானம் ரூ. 48/-என்றும் நகரத்திலுள்ளவர்களின் தலா

வருமானம் ரூ. 162/–எனவும் தீர்மானித்தார். இந்திய மைய பாங்கின் விசாரணைக்கமிட்டியின் அறிக்கை இந்தியக் குடியான வனின் சராசரி தலாவருமானம் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 42/-எனக் குறிப்பிட்டது. இதுபோன்ற கமிட்டிகள் வருமானத்தின் ஏற்றத் தாழ்வுகளை எடுத்துக்கூறின. இந்தியா இரண்டாகப் பிரிவதற்குமுன் வருமானப்பிரிவுகளைத் திருவாளர்கள் ஷா, கம்பேட்டா (Shah & Khambatta) என்னும் இரண்டு இந்தியப்பொருளாதார நிபுணர்கள் தொகுத்துக் கூறியதைக் கீழே காணலாம்.

### அட்டவணை 58

| ஆண்டுக்கு சராசரி வருமானம் தீர்மானிக்கப்பட்டது | சம்பாதிப்பவர்களின் எண்ணிக்கை | ஆதரவுக்கு உட்பட்டவர்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1,00,000 | 6,000 | 30,000 |
| 10,000 | 230,000 | 1,150,000 |
| 5,000 | 270,000 | 1,350,000 |
| 1,000 | 2,500,000 | 12,500,000 |
| 200 | 35,000,000 | 100,000,000 |

மொத்த ஜனத்தொகையில் ஒரு சதவிகித மக்கள் மொத்த வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கைப் பயன்படுத்தினுர்கள். மக்கள்தொகையை மூன்று பங்காகப் பிரித்து முதல் பங்கினர்கள் மொத்த செல்வத்தில் மூன்றில் ஒரு பங்கை அனுபவிக்கிருர்கள் என்பது பொருளாகும். இரண்டாவது பங்கினர் மொத்த செல்வத்தில் 35 சதவிகிதத்தை அனுபவிக்கிருர்கள். மாகாணங்களில் உள்ள 60 சதவிகித மக்கள் மொத்த செல்வத்தில் 30 சத விகிதத்தை நுகர்கிருர்கள்.

நாட்டின் வருமானம் என்ருல் ஓர் ஆண்டில் உற்பத்தியாகக் கூடிய மொத்த பண்டங்கள், பணிகள் இவற்றினுடைய மொத்த மதிப்புக்குச் சமமாகும். ஒரு நாட்டின் வருமானம் என்பது ஓராண்டு காலத்தில் அந்நாட்டில் ஆக்கப்படும் பண்டங்கள் பணிகள் ஆகியவற்றின் நிகரமதிப்பாகும். வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டுள்ள இந்தியப் பொருளாதார வளத்தை அறிய தேசிய வருமானத்தைக் கணக் கிடுதல் இன்றியமையாதது. தேசிய வருமானம் ஒரு நாட்டிலுள்ள மக்களின் வாழ்க்கைத்தரத்தை அறிவதற்கு பெரிதும் உதவுகிறது. ஆண்டுக்குஆண்டு கணிக்கப்படும் தேசிய வருமானத்தின் புள்ளி விவரங்களிலிருந்து ஒரு நாடு பொருளாதார வளர்ச்சியில்

முன்னேறிச் செல்கிறதா, இல்லையா என்பதை அறியலாம். இரண்டு நாடுகளின் தேசிய வருமானத்தைப்பார்த்து நாம் அந்நாட்டு மக்களின் பொருளாதார நலத்தை ஒப்பிடமுடியும். திட்டங்கள் தீட்டுவதற்கும், அவற்றை நன்முறையில் செயல்படுத்தவும், நிதி திரட்டவும் தேசிய வருமானம் முக்கியமாக உள்ளது.

1868ஆம் ஆண்டில் திரு தாதாபாய் நௌரோஜி முதன் முதலில் இந்தியாவின் தனி நபரின் தலாவருமானத்தை ரூ. 20/- (ஆண்டு ஒன்றுக்கு) எனக் கணித்தார். பின்னர் 1911ஆம் ஆண்டில் திரு பின்லேசிராஸ் இதனை ஆண்டு ஒன்றுக்கு ரூ. 49/- எனவும், டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் அவர்கள் 1931–32-ல் தனிமனிதனின் தலாவருமானம் ரூ. 65/-எனவும் கணித்தார்கள். பின்னர் 1942–43-ல் ரூ. 114/–எனவும் 1949–50-ல் ரூ. 214/– எனவும் கணக்கிடப்பட்டது. தேசிய வருமானக்கமிட்டி 1951 ஆம் ஆண்டின் அறிக்கையை வெளியிட்டது. 1950-51முதல் 1960–61வரை 10 ஆண்டுகளில் தேசியவருமானம் 42 சதவிகிதமாக உயர்ந்தது. தனிமனிதனின் தலாவருமானமும் 16 சதவிகிதம் உயர்ந்தது. இவ்விதம் மிகக்குறைவான முறையில் தலா வருமானம் அதிகரித்திருப்பதற்குக் காரணம் மக்கள்தொகை வளர்ச்சியின் வேகம் 21 சதவிகிதத்திற்குமேல் அதிகமாகியது தான் எனத் தெரிந்தது. கீழேயுள்ள அட்டவணைகள் மொத்த வருமானமும் தலாவருமானமும் வளர்ந்து வருவதைக் காட்டுகின்றன.

## அட்டவணை 59

| ஆண்டுகள் | மொ. வருமானம் (கோடியில்) | தனிமனிதனின் தலாவருமானம் |
|---|---|---|
| 1960–61 | 13,308 | 306·7 |
| 61–62 | 14,063 | 316·7 |
| 62–63 | 14,891 | 326·8 |
| 63–64 | 17,119 | 367·0 |
| 64–65 | 20,080 | 420·2 |
| 65–66 | 20,586 | 420.5 |
| 66–67 | 23,647 | 471·2 |
| 67–68 | 27,922 | 542·9 |

## அட்டவணை 60

### தேசிய வருமானம்—நடப்பு விலையில்

| ஆண்டு | தேசிய வருமானம் (கோடியில்) | சதவிகிதம் |
|---|---|---|
| 1948–49 | 8,650 | 100 |
| 1960–61 | 14,140 | 164 |
| 1966–67 | 23,120 | 267 |

### தேசிய வருமானம் – நிரந்தரமான விலையில்

| | | |
|---|---|---|
| 1948–49 | 8,650 | 100 |
| 1960–61 | 12,730 | 147 |
| 1966–67 | 14,950 | 173 |

தேசியவருமானம் 1948–49முதல் 1966-67வரையில் எவ்வாறு நிரந்தரமான விலைகளிலும் நடப்பு விலைகளிலும் உயர்ந்து வந்துள்ளது என்பதை மேலேயுள்ள அட்டவணை எடுத்துக் காட்டுகின்றது.

## அட்டவணை 61

### இந்திய வருமானத்தின் முக்கியப் பகுதிகள்

| | வருமானத்திற்குரிய ஆதாயங்கள் | 1948–49 (கோடியில்) | 1964–65 |
|---|---|---|---|
| (1) | விவசாயம் | 4,250 | 10,270 |
| (2) | பெரிய, சிறிய தொழில்கள் | 1,480 | 3,600 |
| (3) | வர்த்தகம், போக்குவரத்து | 1,600 | 2,960 |
| (4) | மற்ற துறைகள் | 1,340 | 3,290 |
| (5) | அந்நியச் செலாவணி | 20 | 110 |
| | மொத்த வருமானம் | 8,690 | 20,230 |

இந்தியாவில் அதிகமான வருமானத்தை விவசாயத்திலிருந்து அடைகிறோம். மேலும், சென்ற சில ஆண்டுகளாகச் சுரங்கம், தொழிற்சாலைகள், வர்த்தகம், போக்குவரத்து இவற்றிலிருந்து கிடைக்கும் வருமானங்கள் உயர்ந்துள்ளன.

மேலும், கீழேயுள்ள அட்டவணையில் தேசிய வருமானத்தில் ஒவ்வொரு துறை யின்முக்கிய பங்கும் சதவிகிதத்தில் காட்டப் பட்டுள்ளன.

## அட்டவணை 62

**தேசிய வருமானத்தில் ஒவ்வொரு துறையின் முக்கிய பங்கு—சதவிகிதத்தில்**

| முக்கிய துறைகள் | 1948–49 | 1964–65 |
|---|---|---|
| விவசாயம் | 49·0 | 51·3 |
| தொழில்கள் | 17·0 | 18·0 |
| வர்த்தகம், போக்குவரத்து | 18·5 | 16·0 |
| ஏனையதுறைகள் | 15·5 | 14·7 |
| மொத்தம் | 100 | 100 |

1964-65ஆண்டுக்கான தேசிய வருமானத்தில் முக்கிய துறைகளின் பங்கு சதவிகிதத்தைப் பொறுத்தவரை இந்தியாவைப் பல்வேறு நாடுகளுடன் ஒப்பிட்டுக்காட்டும் அட்டவணையைக் கீழே காணலாம்.

## அட்டவணை 63

(1964-65)

| முக்கிய துறைகள் | இந்தியா | அமெரிக்கா | இங்கிலாந்து | ஜப்பான் |
|---|---|---|---|---|
| விவசாயம் | 51 | 4 | 4 | 15 |
| தொழில்கள் | 18 | 37 | 48 | 38 |
| வர்த்தகம், போக்குவரத்து | 16 | 23 | 21 | 26 |
| ஏனைய துறைகள் | 15 | 36 | 27 | 21 |
| மொத்தம் | 100 | 100 | 100 | 100 |

முன்னேற்றம் அடைந்த நாடுகளான இங்கிலாந்து, அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளில் தொழில், வர்த்தகம், வாணிகம், போக்குவரத்து செய்தித்துறை ஆகியவற்றிலிருந்து ஏராளமான வருமானத்தைப் பெறுகிறார்கள். அதாவது, விவசாயம் அல்லாத துறைகளில் ஏராளமான வருமானத்தை ஈட்டுகிறார்கள். ஆனால்

இந்தியாவில் விவசாயத்தில்மட்டும் அதிகமான வருமானத்தை அடைகிறோம். காரணம், நாம் விவசாயத்தைப் பெரிதும் நம்பி இருப்பதுதான். இதிலிருந்து நாம் அறிவது, இந்தியா இன்னும் ஏழ்மை நிலையில், பின்தங்கிய நிலையில் உள்ளது; ஆனால் மற்ற நாடுகளில் வருமானங்கள் பெருகிட அவர்களின் செழிப்பும் வாழ்க்கைத் தரமும் உயர்ந்துள்ளன என்பதுதான்.

$$\text{தலா வருமானம்} = \frac{\text{தேசிய வருமானம் (குறிப்பிட்ட ஆண்டில்)}}{\text{மொத்த மக்கள்தொகை (அந்தக் குறிப்பிட்ட ஆண்டில்)}}$$

தலா வருமானம் மிகவும் அவசியமானது. அதனைக் கொண்டுதான் ஒரு நாட்டின் வாழ்க்கைத்தரம், எந்த அளவுக்குப் பொருள்களும் பணிகளும் நுகரப் படுகின்றன, எந்த அளவுக்குப் பண்டங்கள் வாங்க முடியும் என்பதை அறியலாம். இந்திய மக்களின் தலா வருமானத்தைக் கீழேயுள்ள அட்டவணை 1948-49 விலைகளிலும் நடப்பு விலைகளிலும் வைத்துத் தயாரிக்கப்பட்டபடி காண்பிக்கின்றது.

## அட்டவணை 64

| ஆண்டு | நடப்பு விலையில் தொகை | நடப்பு விலையில் சதவிகிதம் | 1948-49 விலையில் தொகை | 1948-49 விலையில் சதவிகிதம் |
|---|---|---|---|---|
| 1948-49 | 250 | 100 | 250 | 100 |
| 1960-61 | 326 | 131 | 293 | 117 |
| 1966-67 | 460 | 185 | 298 | 119 |

1948-49முதல் 1966-67வரை ரூ. 250முதல் ரூ. 460வரை அதாவது 85 சதவிகிதம் உயர்ந்துள்ளது. இந்த உயர்வுக்குக் காரணம் பண்டங்கள், பணிகளின் விலை உயர்வேயாகும். விலை உயராமல் 1948-49 விலையே தொடர்ந்து இருக்குமானால் தலா வருமான உயர்வு 19 சதவிகிதமாகும். உண்மையில், வருமான உயர்வு, வாழ்க்கைத் தரத்தின் உயர்வு 19 சதவிகிதம் எனக் கூறலாம். மேலும், அடுத்துவரும் அட்டவணை தலா வருமானத்தை 1960-61 விலையில் வைத்து உயர்வதைக் காட்டுகிறது.

## அட்டவணை 65

தலா வருமானத்தை ஒப்பிடுதல் 1960-61 விலையில்

| ஆண்டு | தலாவருமானம் | குறியீட்டு எண் |
|---|---|---|
| 1960-61 | 310 | 100 |
| 1964-65 | 339 | 109 |
| 1965-66 | 315 | 102 |
| 1966-67 | 313 | 101 |

## அட்டவணை 66

### தலா வருமானத்தின் அடிப்படையில் மாநிலங்களின் வரிசை—1960–61 விலையில்

| மாநிலங்கள் | தலாவருமானம் | குறியீட்டு எண் |
|---|---|---|
| டெல்லி | 871·61 | 260·5 |
| மகாராஷ்டிரம் | 468·54 | 140·0 |
| மே. வங்காளம் | 464·62 | 138·9 |
| பஞ்சாப் | 451·31 | 134·9 |
| குஜாராத் | 393·39 | 117·6 |
| **இந்தியா (பொதுவாக)** | **334·54** | **1000** |
| சென்னை | 334·09 | 99·9 |
| அஸ்ஸாம் | 333·34 | 99·6 |
| திரிப்புரா | 329·86 | 98·6 |
| இமாசலப்பிரதேசம் | 328·35 | 98·1 |
| கேரளா | 314·86 | 94·1 |
| மைசூர் | 304·71 | 91·1 |
| உத்தரப்பிரதேசம் | 297·35 | 88·9 |
| ஜம்மு-காஷ்மீர் | 289·02 | 86·4 |
| ஆந்திரப்பிரதேசம் | 287·01 | 85·8 |
| மத்தியப்பிரதேசம் | 285·35 | 85·3 |
| ஒரிஸ்ஸா | 276·22 | 82·6 |
| ராஜஸ்தான் | 267·43 | 79·9 |
| பிகார் | 220·69 | 66·0 |

1948–49முதல் 1966–67வரை தேசிய வருமானம் 167 சதவிகிதம் உயர்ந்துள்ளது. அதே சமயத்தில் தலாவருமானம் 85 சதவிகிதம்தான் உயர்ந்துள்ளது. ஏன் இந்த வேறுபாடு என்றால் தலாவருமானம் என்பது மொத்த வருமானத்தை மொத்த மக்கள் தொகையால் வகுத்து வரும் ஈவுக்குத்தான் சமம். தேசிய வருமானமும், மக்கள் தொகையும் ஆகிய இரண்டும் வளர்ந்து வந்துள்ளன. ஆண்டுதோறும் இந்திய மக்களின் தொகை 10 மில்லியன்கள் அதிகரித்து வருகிறது. ஆகவே உயர்ந்த தேசிய வருமானத்தை உயர்ந்த மக்கள்தொகையால் வகுத்து வரும்போது தலாவருமானத்தில் பெருத்த முன்னேற்றம் காணமுடியாது. மொத்த வருமானம் அதிகரிப்பதைப்போல் தலாவருமானம் அதிகரிப்பதில்லை என்பதை நாம் அறியவேண்டும். மக்கள்தொகை

நிரந்தரமாகவும், தேசியவருமானம் உயர்ந்தும் சென்ருல் அப்போது தான் தலாவருமானம் உயரும். கீழேயுள்ள அட்டவணை பல்வேறு மாநிலங்களின் தலாவருமானம் 1955-56-ல் இருந்து 1960-61-ல் எவ்வாறு மாறுபடுகிறது, வளர்ந்து வந்துள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

## அட்டவணை 67

| மாநிலங்கள் | 1955–56 | 1960–61 |
|---|---|---|
| டெல்லி | 780 | 968 |
| மே. வங்காளம் | 363 | 436 |
| பஞ்சாப் | 285 | 368 |
| மகாராஷ்டிரம் | 316 | 335 |
| குஜராத் | 273 | 323 |
| கேரளா | 256 | 281 |
| சென்னை | 243 | 263 |
| அஸ்ஸாம் | 241 | 253 |
| மத்தியப்பிரதேசம் | 228 | 250 |
| ஆந்திரப்பிரதேசம் | 220 | 230 |
| ராஜஸ்தான் | 219 | 229 |
| உத்தரப்பிரதேசம் | 209 | 221 |
| ஒரிஸ்ஸா | 168 | 201 |
| மைசூர் | 188 | 197 |
| பிகார் | 156 | 169 |
| இந்தியாவின் சராசரி | 268 | 294 |

முதல் ஐந்து மாநிலங்களின் தலா வருமானம் தேசத்தின் சராசரி தலா வருமானத்தைவிட அதிகம். டெல்லி தலா வருமானத்தில் உச்சக்கட்டத்தில் உள்ளது. டெல்லி நகர்ப்புற மக்கள் அதிகம் கொண்டதாகும். கிராமத்தைவிட நகர்ப்புற மக்களின் தலா வருமானம் அதிகம். டெல்லியைத் தவிர, மேற்கு வங்காளம், பஞ்சாப், மகாராஷ்டிரம், குஜராத் மாநிலங்களின் தலா வருமானம் நாட்டின் சராசரி தலா வருமானத்தைவிட அதிகம்; மற்ற பத்து மாநிலங்களில் தலா வருமானம் நாட்டின் சராசரி தலா வருமானத்தைவிடக் குறைவாக உள்ளது. பல ஐந்தாண்டு திட்டங்களைச் செயல்படுத்தியதால் தலா வருமானம் உயர்ந்து வருகிறது. இருந்தபோதிலும் முன்னேறிய மாநிலங்கள் முன்னேறிக்கொண்டும், பின்தங்கிய மாநிலங்கள் பின்தங்கியும்,

ஏழ்மையாகவும் உள்ளன. இந்தியாவின் தலா வருமானத்தை மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டால், நம் நாட்டின் தலாவருமானம் குறைவாக இருக்கும். இதைக் கீழேயுள்ள விவரங்களிலிருந்து அறியலாம்.

| நாடுகள் | தலாவருமானம் (ரூபாயில்) |
|---|---|
| அமெரிக்கா | 12,000 |
| ஆஸ்திரேலியா | 6,330 |
| இங்கிலாந்து | 5,590 |
| ஜப்பான் | 1,000 |
| இந்தியா | 460 |

அமெரிக்காவின் தலாவருமானம் இந்தியாவின் தலா வருமானத்தைவிட 30 மடங்கு அதிகம்; அதைப்போலஆஸ்திரேலியாவின் தலாவருமானம் 15 மடங்கும், இங்கிலாந்தினுடையது 13 மடங்கும் பெரியதாகும். ஆகவே இந்தியாவின் தலாவருமானம் மிகவும் குறைவு; அதன்காரணமாக வாழ்க்கைத்தரமும் குறைவு. தலாவருமானம் பல்வேறு நாடுகளிலும் எவ்வாறு உயர்ந்துவருகிறது என்பதையும் கீழேயுள்ள புள்ளிவிவரங்களிலிருந்து அறியலாம்.

| நாடுகள் | தலாவருமானம் — உயர்வு சதவிகிதம் | | |
|---|---|---|---|
| | 1948 | 1955 | 1961 |
| இந்தியா | 100 | 108 | 118 |
| அமெரிக்கா | 100 | 120 | 123 |
| இங்கிலாந்து | 100 | 121 | 135 |
| சுவீடன் | 100 | 124 | 150 |

1948முதல் 1961வரை சுவீடனின் தலாவருமானம் 50 சதவிகிதம் உயர்ந்துள்ளது. அமெரிக்காவில் 23 சதவிகிதமும், இங்கிலாந்தில் 35 சதவிகிதமும், இந்தியாவில் 18 சதவிகிதமும் உயர்ந்துள்ளன. ஆகவே இந்தியாவில் மொத்த வருமானமும், தலாவருமானமும் துரிதமாக வளரவில்லை. துரிதமாக வளராமல் இருந்ததற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று, மக்கள் தொகை துரிதமாக வளர்ந்து வருகிறது. மற்றொன்று, வளர்ந்து வரும் தேசிய வருமானத்தை வளர்ந்துவரும் மக்கள்தொகை சாப்பிட்டு விடுகிறது. ஆகவே ஏழ்மையைப் போக்கிட தேசிய வருமானத்தையும், தலாவருமானத்தையும் உயர்த்திடவேண்டும். இந்த இரண்டும் மக்கள்தொகையைவிட வேகமாக வளர்ந்திட வேண்டும். தேசியவருமானம் ஆண்டுதோறும் 6·5 சதவிகிதம் உயரும் என நான்காவது திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தியா ஒரு பெரிய நாடு, மிகப்பெரிய மக்கள்தொகையைக் கொண்ட நாடு. தலாவருமானம் உலக நாடுகளிலுள்ள மற்ற நாடுகளைவிட இந்தியாவில் மிகக்குறைவாக உள்ளது. அதனால் குறைவான வாழ்க்கைத்தரம் இங்கு உள்ளது. சுதந்திரம் அடைந்த பின்னர் இந்தியாவில் தலாவருமானம் ஒரு சிறிய அளவுதான் உயர்ந்துள்ளது.

| | | |
|---|---|---|
| 1848-49 | ரூ. | 250/- |
| 1960-61 | ரூ. | 293/- |
| 1966-67 | ரூ. | 298/- |

ஐந்தாண்டு திட்டங்களைச் செயல் படுத்தியதால் இந்த முன்னேற்றம் கண்டுள்ளது. இருந்தபோதிலும் இது கணிசமான அளவில் உயரவில்லை.

இந்தியாவில் தேசிய வருமானம் தகாத முறையில் பங்கிடப் பட்டுள்ளது. உதாரணமாக, ஒருசதவிகிதம் கொண்ட பணக்கார மக்கள் தேசிய வருமானத்தில் மூன்றில் ஒருபங்கை எடுத்துக் கொள்கிறார்கள். 66 சதவீதம் கொண்ட ஏழைமக்களுக்கும் தேசிய வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கை கொடுத்துள்ளார்கள். ஆகவே நல்லமுறையில் வருமானத்தையும் செல்வத்தையும் சரியாகப் பங்கிடவேண்டும். மேலும் இந்தியாவில் பொருளாதாரமும் சமநிலையிலில்லை. விவசாயத்திலிருந்து பாதிக்கும் மேலான வருமானம் கிடைக்கிறது. ஆனால் அமெரிக்காவில் விவசாயத்திலிருந்து 4 அல்லது 5 சதவிகிதம் வருமானம்தான் அடைகிறார்கள். அதிகப்படியான வருமானத்தைத் தொழில்கள், போக்குவரத்து இவற்றிலிருந்து அடைகிறார்கள். உதாரணமாக இங்கிலாந்தில் மொத்த வருமானத்தில் 37 சதவிகிதம் தொழில்களிலிருந்து அடைகிறார்கள். ஆனால் இந்தியாவில் மொத்த வருமானத்தில் தொழில்களிலிருந்து 18 சதவிகிதம்தான் அடைகிறார்கள். அடுத்து பல்வேறு வேலைகளின் வருமானத்தையும் ஆராய்ந்து பார்த்தால் விவசாயத்தில் கிடைக்கும் நிகர வருமானம் ஏனைய தொழில்களில் கிடைக்கும் நிகர வருமானத்தைவிடக் குறைவாக உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| விவசாயம் | நிகரவருமானம் | ரூ. | 500/- |
| தொழில்கள் | ,, | ரூ. | 1,700/- |
| ரெயில்வேக்கள் | ,, | ரூ. | 1,600/- |
| செய்தித்துறை | ,, | ரூ. | 1,500/- |
| பாங்குகள் | ,, | ரூ. | 1,100/- |
| அரசாங்க உத்தியோகம் | ,, | ரூ. | 800/- |
| பட்டறைகள் | ,, | ரூ. | 400/- |

விவசாயத்தில் நிகர வருமானம் குறைவாக இருப்பதானது விவசாயத்தின் குறைந்த உற்பத்தித்திறனை எடுத்துக்காட்டுகிறது. மேலும் விவசாயத்தில் அதிகமான மக்கள் ஈடுபடுவதாலும், பழைய கருவிகள், பழைய முறைகள் இன்னும் விவசாயத்தில் பின்பற்றப் படுகின்றன. சென்ற சில ஆண்டுகளாக அரசாங்கத்துறைகளிலும் வருமானம் உயர்ந்து வருகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1948–49 | ஆண்டில் | அரசாங்கத்துறை | வருமானம் | ரூ. 640 | கோடி |
| 1960–61 | ,, | ,, | ,, | ரூ. 1,450 | ,, |
| 1965–66 | ,, | ,, | ,, | ரூ. 2,830 | ,, |

இதே ஆண்டுகளில் தேசிய வருமானம் உயர்ந்தது. அதன் உயர்வு சதவிகிதங்கள் முறையே 7·4%, 10·7%, 12·8% ஆகும். நாட்டின் வருமானம் பொருளாதார முன்னேற்றத்தை எடுத்துக் காட்டும். அமெரிக்காவின் முன்னேற்றத்தை அதனுடைய வருமானத்திலிருந்து நாம் பார்த்தமாத்திரத்தில் அறிந்துகொள் கிறோம். சென்ற மூன்று ஐந்தாண்டு திட்டங்களைச் செயல் படுத்தியதால் இந்தியாவில் வருமானம் உயர்ந்துவருகிறது என்பதில் சந்தேகமில்லை. நாட்டின் வருமான உயர்விலிருந்து ஐந்தாண்டு திட்டங்களின் சாதனைகளை மிக எளிதில் புரிந்து கொள்கிறோம். ஆகவே தேசிய வருமானம் மிக முக்கியமானது. தலா வருமானம் அதைவிட மிக முக்கியமானது.

தேசிய வருமானத்தைஅளப்பதற்கு மூன்று முறைகள் உள்ளன. அவை உற்பத்திமுறை, வருமானமுறை, செலவீட்டுமுறை என்பன ஆகும். பல்வேறு துறைகளின் உற்பத்திகளை அங்காடி விலைக்கு மாற்றி மதிப்பு தீர்மானிப்பதற்கு உற்பத்திமுறை எனவும், பல்வேறு துறைகளில் கிடைக்கக்கூடிய வருமானங்களை ஒன்றுசேர்த்து அறியும் முறைக்கு வருமானமுறை என்றும், பல்வேறு காரணி களுக்குச் செலவு செய்யும் தொகையை ஒன்றுசேர்த்து அறிவதற்குச் செலவீட்டுமுறை எனவும் வழங்குகிறோம்.

1951 ஆம் ஆண்டில் அகில இந்திய கிராமக்கடன் ஆராய்வுக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அதனுடைய அறிக்கையின்படி மொத்த உற்பத்தியில் 35 சதவிதிதம் பணமாக்கப்படுவதில்லை. அதாவது, அங்காடிக்குக்கொண்டு வரப்படுவதில்லை என்பது பொருளாகும். உற்பத்தியாளரின் அறியாமை, கல்வியின்மை இவற்றினால் சரியான முறையில் கணக்கு கொடுப்பதற்கில்லை. மக்கள் நன்முறையில் கணக்குகளைக் கூறுதல் கிடையாது. மேலும் பொருளாதாரப்பணிகளை வகைப்படுத்தவும்முடிவதில்லை. ஏனெனில்

குடியானவன் விவசாயத்தைக் கவனிப்பதுமல்லாமல், மற்ற வேலை களிலும் தொழில்களிலும் ஈடுபடுவதால் வகைப்படுத்துவது தொல்லையாக உள்ளது.

முதல் ஐந்தாண்டுத்திட்டக் காலத்தில் 1-4-51முதல் 31-3-56வரையில் வருமானம் ரூ. 9,000 கோடி முதல் ரூ. 10,480கோடி வரை உயர்ந்தது. உயர்வின் சதவிகிதம் 18 ஆகும். மக்கள்தொகை உயர்வு ஆண்டு ஒன்றுக்கு 1·25 சதவிகிதம் எனக் கணக்கில்கொண்டால் தலா வருமானம் ரூ. 246முதல் 274வரை உயர்ந்தது. அதாவது ஐந்து ஆண்டு களில் 11 சதவிகிதம் உயர்ந்தது. இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் வருமானம் ரூ. 10,800 கோடி முதல் ரூ 13,480 கோடி வரை உயர்ந்தது. அதாவது உயர்வின் சதவிகிதம் 35 ஆகும். தலா வருமானம் ரூ. 281/-முதல் ரூ. 331/-வரை உயர்ந்தது. மக்கள்தொகை உயர்வு ஆண்டு ஒன்றுக்கு 1·33 சதவிகிதமாகக் கொள்ளப்பட்டது.

எனவே வருமானம் என்ற தலைப்பில் பொருளாதாரத்தில் தெரிந்துகொள்ள வேண்டியவை பல உள்ளன. ஆனால் மக்கள் தொகை வளர்ச்சிக்கு ஏற்றவாறு வருமானத்தை உயர்த்திடல் வேண்டும். அதிகமான தலா வருமானம் அடைய மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தியாக வேண்டும். மேலும், வருமானத்தை அதிகரிக்க எல்லோரும் கடினமாக உழைத்திடல் வேண்டும். நாட்டின் வருமானம் உயர்ந்தால் வாழ்க்கைத்தரமும் உயரும்; உற்பத்தித்திறனும் அதிகரிக்கும். நல்லமுறையில் செல்வத்தை, வருமானத்தில் எல்லோருக்கும் சமூகநீதியில் கிடைத்திடுமாறு பங்கிட வேண்டும். ஏற்றத்தாழ்வுகளை அகற்றிடல் வேண்டும். மக்களுக்கு வருமானம் கிடைப்பதால் தேவைகளை உண்டாக்கவும், பொருட்களை நுகரவும் முடிகிறது. அதனால் உற்பத்தி பெருக வாய்ப்புகள் உள்ளன. அதன் காரணமாக மேலும் வருமானம் உயர்கின்றது.

# 22. விவசாயம்

இந்தியாவில் மொத்த மக்கள்தொகையில் 70 சதவிகிதம் விவசாயத்தை நம்பி உள்ளார்கள். மேலும் தேசியவருமானத்தில் 50 சதவிகித வருமானம் விவசாயத்திலிருந்து கிடைக்கிறது. விவசாயம் இந்தியாவினுடைய பெரிய தொழில்களுக்கு மூலப் பொருள்களை அளிக்கிறது. தேயிலை, வேர்க்கடலை, அரக்கு, ஆமணக்கு முதலியவற்றை ஏற்றுமதிசெய்து அந்நியச் செலாவணியைப் பெறுகிறது. மக்களின் வாழ்க்கைத்தரம் ஓங்க, சத்துள்ள பொருள்களை அருந்த பலவிதமான உணவுப் பொருள்களையும் உற்பத்தி செய்கிறது. இந்தியாவில் விவசாயத்தைப் பிழைப்புக்காக நடத்தப்பெறும் பயிர்த்தொழிலாகக் கருதுகிறோம். உற்பத்திசெய்த பொருள்களைக் குடும்பத்திற்குப்போக எஞ்சியதை அங்காடியில் விற்கிறார்கள். இந்தியாவில் மக்கள்தொகைப் பெருக்கத்தினாலும், வாரிசு சட்டங்களினாலும் நிலங்கள் பெருமளவு பிரிக்கப்பட்டு துண்டுபோடப்படுகின்றன. ஆகவே துண்டு போடுதலும் சிதறி அமைந்து வருவதும் நாளுக்குநாள் மக்கள் பெருக்கத்தினால் என்பதை அறியவேண்டும். நிலங்கள் துண்டாகப் பிரிக்கப்படுவதால் இயந்திரங்களைப் பயன்படுத்த முடியவில்லை. ஓர் ஏக்கருக்கான அல்லது ஒரு நபருக்கான சராசரி உற்பத்தி மிகக்குறைவாக உள்ளது. இந்தியாவில்தான் பெரு மளவில் மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். மேல்நாடு களில் அமெரிக்கா, ஜெர்மனி, கனடா, நியூஜிலாந்து போன்ற நாடுகளில் 20 சதவிகிதத்துக்கும் குறைவான அளவு மக்களே விவசாயத்தை நம்பி இருக்கிறார்கள். மக்கள்தொகை அதிகரிப்புக்குத் தகுந்தவாறு உழுவதற்குரிய நிலம் அதிகமான அளவுக்கு எடுத்துக் கொள்ளவில்லை. 1921முதல் 1951வரை 44 சதவிகிதம் மக்கள்தொகை அதிகரித்தது. ஆனால் உழுகின்ற நிலம் 5 சத விகிதம்தான் அதிகரித்தது. நிலமீட்புசெய்து தரிசுநிலங்களை விளை நிலங்களாக மாற்றுதல் வேண்டும். இந்தியாவில் மக்கள்தொகைப்

பிரச்சினையுடன் உணவுப் பிரச்சினையையும் சேர்த்து ஆராய்தல் வேண்டும். 362 மில்லியன் மக்களைக்கொண்ட இந்தியாவில் மொத்த நிலப்பரப்பு 813 மில்லியன் ஏக்கர்கள் (81·3 கோடி ஏக்கர்கள்).

ஒவ்வொருவருக்கும் சாரசரியாக நிலப்பரப்பு 2·25 ஏக்கர். மக்கள்தொகை ஆண்டுதோறும் அதிகரிக்கும்போது உற்பத்தி செய்யக்கூடிய நிலத்தின் பரப்பு குறைகிறது. அதாவது சராசரி விவசாய நிலப்பரப்பு குறைந்துகொண்டே வருகிறது. 1891ஆம் ஆண்டில் 109 சென்ட்டாகவும், 1901–ல் 103 சென்ட்டாகவும் குறைந்தது. (1 ஏக்கருக்கு 100 சென்ட்)

| | | | |
|---|---|---|---|
| 1891ஆம் | ஆண்டில் | 109 | சென்ட் |
| 1901 ,, | ,, | 103 | ,, |
| 1921 ,, | ,, | 101 | ,, |
| 1951 ,, | ,, | 84 | ,, |

மக்கள்தொகைக்கு ஏற்றவாறு விவசாயநிலம் அதிகரிப்பதில்லை. நாளுக்குநாள் உரிமைச்சட்டத்தின்படி நிலங்கள் மேலும் துண்டாக்கப்படுகின்றன, பிரிக்கப்படுகின்றன. அதன் காரணமாக சராசரி நிலம் குறைந்துகொண்டே போகிறது. அத்துடன் மக்கள் தொகை அதிகரிப்பினுல் நிலத்தின்மீது மக்களின் அழுத்தமும் அதிகமாகிக்கொண்டே வருகிறது. இந்திய விவசாயம் பழைய முறைகளுக்குப் பெயர்போனது. நிலங்கள் துண்டாக்கப்படுவதால் எந்திரங்களைப் பயன்படுத்த முடியவில்லை. போதிய அளவுக்கு எந்திரங்களை வாங்குவதற்கும் முதல் கிடையாது. நீர்ப்பாசனக் குறைவு, பருவக்காற்றை நம்பியிருத்தல், அதிகமான மக்களின் அழுத்தம், அதிக மக்கள் விவசாயத்தில் ஈடுபடுதல், சிறிய நிலங்கள் விவசாயத்திற்குப்பயன்படாதது இவை காரணமாக விவசாய உற்பத்தித்திறன் குறைத்துகொண்டேபோகிறது. மேலும் உற்பத்தித் திறன் குறைவதற்குச் பழைய முறைகளைப் பின்பற்றுவது, நாளுக்கு நாள் நிலங்கள் குறைதல், நிலங்களின் செழிப்புத்தன்மையும் குன்றுதல், விவசாயத்தில் சரியான வருமானம் கிடைக்கர்ததால் விவசாயிகள் வெறுத்து வேறுதுறைகளுக்குச் செல்லுதல் போன்ற பல காரணங்களும் உள்ளன.

இவற்றைப் போக்குவதற்குப் பல வழிகள் உள்ளன. எத்தனையோ நிலங்கள் தரிசுநிலங்களாக, குறிப்பாக மொத்த நிலத்தில் 11 சதவிகிதம் தரிசுநிலங்களாக இன்னமும் உள்ளன.

விவசாயத்திற்குரிய 417 மில்லியன் ஏக்கர்களில் 66 சதவிகிதம் தானியங்கள் விளையும் நிலங்களாகும். 11 சதவிகிதம் விவசாயத்திற்குரிய நிலமாக இருந்தாலும் பயன்படுத்துவதில்லை. 1926-ல் இந்தியா பிரிவதற்கு முன் 150 மில்லியன் ஏக்கர், அதாவது, மொத்த நிலத்தில் 22 சதவிகிதம் நிலங்கள் விவசாயத்திற்குப் பயன்படுத்தப்படவில்லை. 1951ஆம் ஆண்டில் விவசாய நிலத்தின் பரப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | மில்லியன் ஏக்கரில் | சதவிகிதம் |
|---|---|---|
| சர்வேயின்படி நிகர நிலப்பரப்பு | 781 | 100 |
| காடுகள் உள்ள இடம் | 109 | 14 |
| விவசாயத்திற்குப் பயன்படாத நிலம் | 255 | 33 |
| விவசாயத்திற்குக் கொண்டுவரக்கூடிய நிலங்கள் | 88 | 11 |
| தரிசு நிலம் | 54 | 7 |
| நிகர விவசாயத்திற்கு | 275 | 35 |

இந்தியாவில் விவசாயத்திற்குரிய நிலம் எல்லாமே பயன்படுத்தப்பட்டதாகப் பொருள் அன்று. இன்னும் சில நிலங்கள் செழிப்பில் குறைவாக இருப்பதால் கொண்டுவரப்படவில்லை. இது வரை விவசாயம் செய்த நிலங்களில் பழைய முறைகளைப் பின் பற்றுவதாலும், செழிப்புத்தன்மை குறைவதாலும், பூமியைத் தண்ணீர் அரிப்பதாலும் குறைவதாக எண்ணுகிறோம். ஆனால் நவீன விஞ்ஞான முறைகளைப் பின்பற்றுவதாலும், அரிப்புகளைத் தடுப்பதாலும், புதிய நிலங்களை மீட்பதாலும் விவசாயத்திற்குரிய நிலங்களின் உற்பத்தியை இரண்டு மடங்காக ஆக்கலாம். உபயோகப்படாத நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டுவந்து லாப நோக்கத்துடன் விவசாயம் செய்யலாம். அத்துடன் விஞ்ஞான உதவியைக்கொண்டு உற்பத்தியை அதிகரிக்கலாம். புதிய நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டுவரலாம். மக்கள் தொகைப் பெருக்கத்தை முழுமையும் கட்டுப்படுத்த முடியாது. எல்லாவற்றையும் விடச் சிறந்த வழி விவசாயத்திலுள்ள, உபரியான அதிகப்படியான மக்களை வேறு தொழில்களில் ஈடுபடுத்தலாம்.

ஏக்கர் ஒன்றுக்கு உற்பத்தியைச் சற்று ஆராய்வோம். உதாரணமாக, நெல் உற்பத்தியை ஆராய்ந்தால் ஏக்கருக்கு இந்தியாவில் 1,100 பவுண்டுகள். ஆனால் மற்ற நாடுகளில் முறையே,

| | | | |
|---|---|---|---|
| மலேயா | — | 2,000 | பவுண்டுகள் |
| அமெரிக்கா | — | 3,200 | ,, |
| எகிப்து | — | 3,333 | ,, |
| ஜப்பான் | — | 3,533 | ,, |
| ஸ்பெயின் | — | 5,200 | ,, |

கோதுமை உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்கு எவ்வளவு என்பதை ஆராய்வோம்:

| | | | |
|---|---|---|---|
| இந்தியா | — | 713 | பவுண்டுகள் |
| இந்தோனேசியா | — | 1,050 | ,, |
| இங்கிலாந்து | — | 2,436 | ,, |
| அமெரிக்கா | — | 1,300 | ,, |
| ஜப்பான் | — | 1,900 | ,, |
| பிரான்ஸ் | — | 2,100 | ,, |
| மேற்கு ஜெர்மனி | — | 2,800 | ,, |

கரும்பு உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்கு எவ்வளவு என்பதைக் கீழே காணலாம் :

| | | | |
|---|---|---|---|
| இந்தியா | — | 30,000 | பவுண்டுகள் |
| இந்தோனேசியா | — | 75,000 | ,, |
| கியூபா | — | 32,000 | ,, |
| எகிப்து | — | 80,000 | ,, |
| ஹவாய் | — | 178,000 | ,, |

பருத்தி உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்கு எவ்வளவு என்பதும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| | | | |
|---|---|---|---|
| இந்தியா | — | 90 | பவுண்டுகள் |
| பாகிஸ்தான் | — | 190 | ,, |
| அமெரிக்கா | — | 390 | ,, |
| எகிப்து | — | 490 | ,, |
| ரஷியா | — | 630 | ,, |

மேலேயுள்ள விவரம் உணவுப்பொருள்களான நெல், கோதுமை, வர்த்தகப் பயிர்களான பருத்தி, கரும்பு இவற்றின் உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்கு எவ்வளவு என்பதையும், பிறநாடுகளில் உற்பத்தி எப்படி உள்ளது என்பதையும் எடுத்துக்காட்டுகிறது. இந்தியா எல்லா உற்பத்தியிலும் பின்தங்கிய நிலையில்தான் உள்ளது. இந்தியா விவசாய நாடாக இருந்தபோதிலும் உற்பத்தித்திறன் குறைவாகத் தான் உள்ளது. ஆண்டுதோறும் மக்கள்பெருக்கத்தினுல் தலா நிலமும் குறைந்துகொண்டே வருகிறது. சிறிய நிலங்களாக மாறுவதால் விவசாயம் செம்மையாகச் செய்ய முடிவதில்லை.

| ஆண்டு | தலா நிலம் (ஏக்கரில்) |
|---|---|
| 1901 | 3·42 |
| 1921 | 3·21 |
| 1941 | 2·53 |
| 1951 | 2·23 |
| 1961 | 1·84 |
| 1971 | 1·44 |
| 1981 | 1·16 (எதிர்பார்க்கப் படுகிறது) |

மேலே எல்லா நிலங்களையும் கணக்கில் எடுத்துக்கொண்டு கணக் கிடப்பட்டுள்ளது. ஆனுல் விவசாயம் செய்யக்கூடிய நிலங்களை மட்டும் எடுத்துக்கொண்டு ஆராய்ந்தால் அப்போது தலா நிலம் 1·1 ஏக்கர் ஆகும். விவசாய உழைப்பு விசாரணைக் கமிட்டி தலா நிலங்களைக் கணக்கிட்டு கீழேயுள்ளவாறு வெளியிட்டது.

17 சதவிகித விவசாய உழைப்பாளர் 1 ஏக்கருக்கும் குறைவு;

21 சதவிகித விவசாய உழைப்பாளர் 1 ஏக்கர் முதல் 2½ ஏக்கர்கள் வரை.

21 சதவிகித விவசாய உழைப்பாளர் 2½ ஏக்கர்கள் முதல் 5 ஏக்கர்கள் வரை

16 சதவிகித விவசாய உழைப்பாளர் 10 ஏக்கர்கள் முதல் 25 ஏக்கர்கள் வரை!

5·6 சதவிகிதம் விவசாய உழைப்பாளர் 25 ஏக்கர்களுக்கு மேல்

நிலங்களை வைத்துள்ளார்கள் எனக் கணக்கிட்டு வெளியிட்டது. சராசரியாகத் தலா நிலம் இந்தியாவில் 1·84 ஏக்கர் எனவும்

ஆனால் ஆஸ்திரேலியாவில் 181·9 ஏக்கர்கள், அமெரிக்காவில் 26·5 ஏக்கர்கள், ரஷ்யாவில் 26·7 ஏக்கர்கள் எனவும் கணக்கிடப் பட்டன. இந்தியாவில் தலா நிலம் ஏனைய நாடுகளைவிட மிகவும் குறைவு. மேல்நாடுகளில் தானிய உற்பத்திக்கு அதிகப்படியான ரசாயன உரங்களை உபயோகப்படுத்துகிறார்கள். அதனால் உற்பத்தி அதிகரிக்கின்றது. மற்ற நாடுகளில் எவ்வாறு உரம் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகிறது, அதனால் உற்பத்தி எவ்வாறு உயர்கிறது என்பதைக் கீழேயுள்ள அட்டவணை புலப்படுத்தும்.

## அட்டவணை 68

| நாடுகள் | ஹெக்டாருக்கு உரம் (கிலோ கிராமில்) | ஹெக்டாருக்கு தானிய உற்பத்தி (கிலோ கிராமில்) |
|---|---|---|
| நெதர்லாந்து | 457·7 | 3,420 |
| பெல்ஜியம் | 372·0 | 3,350 |
| ஜப்பான் | 270·2 | 4,080 |
| மேற்கு ஜெர்மனி | 268·4 | 2,530 |
| இங்கிலாந்து | 190·7 | 3,180 |
| அமெரிக்கா | 39·6 | 2,520 |
| இந்தியா | 2·4 | 930 |

இந்தியாவில்தான் ரசாயன உரம் குறைவான அளவில் பயன் படுத்தப்படுகிறது. மேலும் தானிய உற்பத்தியும் மற்ற நாடுகளை விடக் குறைவாக இருக்கின்றது.

## அட்டவணை 69

நில உரிமையாளர்களின் புள்ளி விவரங்கள்—1951.

| | விவசாயிகளின் எண்ணிக்கை (மில்லியனில்) | விவசாயிகளின் சதவிகிதம் |
|---|---|---|
| 1. சொந்த நிலத்துக்காரர்கள் | 45·7 | 64·4 |
| 2. வாடகை கொடுப்பவர்கள் | 1·6 | 2·3 |
| 3. சொந்த நிலமில்லாமல் விவசாயம் | 8·8 | 12·3 |
| 4 விவசாயத் தொழிலாளர்கள் | 14·9 | 21·0 |

டாக்டர் பல்ஜிட்சிங் அவர்கள் இந்தியாவில் விவசாயிகளின் சராசரி உற்பத்தித்திறனையும் இதர நாடுகளின் உற்பத்தித்திறனையும் டாலரில் கணக்கிட்டுக் கொடுத்துள்ளார்கள்:

| | | | |
|---|---|---|---|
| இந்தியா | — | 105 | டாலர்கள் |
| நார்வே | — | 1,000 | ,, |
| இங்கிலர்ந்து | — | 2,000 | ,, |
| கனடா | — | 2,100 | ,, |
| ஜப்பான் | — | 2,300 | ,, |
| அமெரிக்கா | — | 2,400 | ,, |
| நியூஜிலாந்து | — | 3,500 | ,, |
| மே. ஜெர்மனி | — | 3,500 | ,, |

இந்தியாவில் விவசாயியின் உற்பத்தித்திறன் ஏனைய நாடுகளை விட மிகவும் குறைவு. இதற்குக் காரணம் நிலத்தின்மீது மக்களின் அழுத்தம் இந்தியாவில்தான் உள்ளது. அதிகப்படியான மக்கள் விவசாயத்தில் ஈடுபடுகிறார்கள். ஏனைய நாடுகளில் விவசாயத்தில் ஈடுபடும் மக்களின் சதவிகிதம் கீழேயுள்ளது.

## அட்டவணை 70

விவசாயத்தில் வேலைசெய்யும் மக்களின் சதவிகிதம் 1941—1965.

| | நாடுகள் | சதவிகிதம் |
|---|---|---|
| (1) | இங்கிலாந்து | 5 |
| (2) | அமெரிக்கா | 12 |
| (3) | ஆஸ்திரேலியா | 16 |
| (4) | நியூஜிலாந்து | 18 |
| (5) | கனடா | 19 |
| (6) | பிரான்ஸ் | 27 |
| (7) | இலங்கை | 53 |
| (8) | பிரேசில் | 58 |
| (9) | மலேசியா | 64 |
| (10) | எகிப்து | 65 |
| (11) | இந்தியா | 71 |
| (12) | கொலம்பியா | 72 |

தனிநபரின் உற்பத்தித்திறன் பல்வேறு வேலைகளில் எவ்வாறு உள்ளது என்பதைக் கீழேயுள்ள அட்டவணை புலப்படுத்தும்; 1950-51 ஆண்டில் தயாரிக்கப்பட்டது.

## அட்டவணை 71

| | வேலை செய்யும் மக்களின் சதவிகிதம் | நிகர தேசிய ஆக்கச் சதவிகிதம் | தனிநபரின் உற்பத்தித் திறன் |
|---|---|---|---|
| 1. விவசாயம் | 72·4 | 51.3 | ரூ 500 |
| 2. சுரங்கத்தொழில் | 10·6 | 16·1 | ரூ. 1,000 |
| 3. வர்த்தகம், போக்குவரத்து | 7·7 | 17·7 | ரூ. 1,500 |
| 4. ஏனைய தொழில்கள் | 9·3 | 15·1 | ரூ. 800 |

## அட்டவணை 72

நிலத்தின் உபயோகம்-ஜனத்தொகை நிலவிகிதம்—1964-65

| விவரங்கள் | பரப்பு (ஹெக்டாரில் மில்லியனில்) | சதவிகிதம் |
|---|---|---|
| மொத்த பூவியல் பரப்பு | 326·8 | 100 |
| மொத்தப் பரப்பு | 305·9 | 93·6 |
| நிகரப் பரப்பு | 137·9 | 42·2 |
| காடுகளின் நிலப்பரப்பு | 61·2 | 18·7 |
| தரிசு நிலங்கள் | 20·3 | 6·2 |
| விவசாயம் அல்லாத தரிசு | 36·4 | 11·1 |
| விவசாயத்தில் பயன்படாதது | 50·2 | 15·3 |

விளை நிலங்களின் அடிப்படையில் இந்தியாவில் தலா நிலம் 0·75 ஏக்கர். இதுவும் மற்ற நாடுகளைவிடக் குறைவு. உதாரணமாக,

| | | |
|---|---|---|
| இங்கிலாந்தில் | 0·42 | ஏக்கர் |
| ஜெர்மனியில் | 0·48 | ,, |
| ரஷ்யாவில் | 2·59 | ,, |
| அமெரிக்காவில் | 2·68 | ,, |

மேலும் மக்கள்தொகை பெருகுவதாலும், நிலங்களைத் துண்டு போடுவதாலும், விவசாயத்தைப் பெரும்பாலோர் மேற்கொண்டமை

யாலும் தலா நிலம் குறைவாக உள்ளது. இந்தியாவில் பெரும் பாலும் எல்லா மாநிலங்களிலும் விவசாயத்தைப் பெரிதாகப் போற்றியும் வளர்த்தும் வருகிருர்கள். பெரும்பான்மையான மக்களும் விவசாயத்தில் ஈடுபட்டு வருகிருர்கள். இதனை உணர்த்தும் அட்டவணை கீழேயுள்ளது:

## அட்டவணை 73

| | மாநிலங்கள் | | விவசாய மக்களின் சதவிகிதம். |
|---|---|---|---|
| (1) | மேற்கு வங்காளம் | — | 57·2 |
| (2) | பம்பாய் | — | 61·5 |
| (3) | பஞ்சாப் | — | 64·5 |
| (4) | சென்னை | — | 64·9 |
| (5) | ராஜஸ்தான் | — | 70·9 |
| (6) | அஸ்ஸாம் | — | 73·3 |
| (7) | உத்தரப் பிரதேசம் | — | 74·2 |
| (8) | மத்தியப் பிரதேசம் | — | 76·0 |
| (9) | ஒரிஸ்ஸா | — | 79·3 |
| (10) | பிகார் | — | 86·0 |

# 23. உணவுப் பிரச்சினை

பலகோடி மக்களுக்குக் குறைந்தபட்ச உணவு அளித்திடல் வேண்டும். பல ஐந்தாண்டுத் திட்டங்களையும், பொருளாதார முன்னேற்றங்களையும் செய்தும் சாதாரண மனிதனுக்கு நியாயமான விலையில் உணவுப்பொருள்கள் கிடைக்கவில்லையென்றால் எந்தக் காரியங்கள் செய்தும் பயனில்லை. பசியோடு இருக்கும் மனிதனுக்கு ஜனநாயகம், சமதர்மம் போன்றவை பயனற்ற சொற்களாகும். சுதந்திரம் அடைந்து இருபது ஆண்டுகளுக்கு மேலாகியும் மூன்று ஐந்தாண்டு திட்டங்களைச் செயல்படுத்தியும் இன்னும் நம் நாட்டில் உணவு பற்றுக்குறை தீர்ந்தபாடில்லை. சமீபத்தில் பிகார், உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் கொடிய பஞ்சத்தினால் பாதிக்கப் பட்ட மக்கள் அந்நியநாட்டு உதவியுடன் காப்பற்றப்பட்டார்கள். உணவில்லாமல் மனிதமுன்னேற்றம் காணமுடியாது; சமூக நீதியை யும் அடையமுடியாது. ஜனநாயகத்திற்குப் பொருள் இல்லாமல் போய்விடும். இந்தியாவில் உணவுப்பிரச்சினை நிரந்தரமாகவும், நீண்டகாலமாகவும் இருந்துவரும் பிரச்சினை. இரண்டாம் உலகப் போர் தோன்றும் முன்னரே இப்பிரச்சினை தோன்றியது. மேலும் சென்ற 30ஆண்டுகாலமாகவும் இதுதொடர்ந்து இருந்துவருகிறது. இந்தப்பிரச்சினைக்கு எப்போது தீர்வு காணமுடியும் என்பது யாருக் குமே தெரியாது.

சுதந்திர இந்தியாவுக்கு முன்னர் இந்தப் பிரச்சினை எப்படி இருந்தது? அதன் பின்னர் எப்படி உள்ளது? அரசாங்கம் இதைத் தீர்க்க என்னென்ன முறைகளை மேற்கொண்டுள்ளது? 1937ஆம் ஆண்டுக்குமுன், பர்மா பிரிவதற்குமுன்னர், உணவுதானியத்தைப் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவந்தது. ஆனால் பர்மா பிரிந்த பிறகு, அரிசி விளையும் பகுதிகளை இழந்தது. அதன் காரணமாக 15முதல் 20 லட்சம் டன் அரிசியை இறக்குமதி செய்ய நேரிட்டது. இந்த உணவுப்பற்றுக்குறைக்காக இந்தியா வெளிநாடுகளிலிருந்து அசிரியை இறக்குமதி செய்தது. யுத்தகாலத்தில் பர்மா, ஜப்பான்

கையில் சிக்கியது. அதனால் பர்மாவிலிருந்து அரிசி இறக்குமதி செய்ய முடியவில்லை. 1943ஆம் ஆண்டில் வங்காளத்தில் ஒரு பெரிய பஞ்சம் ஏற்பட்டு எத்தனையோ லட்சக்கணக்கில் மக்கள் மாண்டார்கள். 1947ஆம் ஆண்டில் இந்தியா சுதந்திர மடைந்தது. அதே நேரத்தில் பாகிஸ்தான் பிரிந்தது. அதன் காரண மாக 68 சதவிகிதம் அரிசி விளையும் நிலங்களும், 65 சதவிகிதம் கோதுமை விளையும் நிலங்களும் பாகிஸ்தானுக்குப் போய்விட்டன. மேற்குபஞ்சாபும், சிந்துமாநிலமும் பாகிஸ்தானுக்குப் போய்ச் சேர்ந்தன. இந்த இரண்டு மாநிலங்களும் பாகிஸ்தான் பிரிவதற்கு முன், 10முதல்15 லட்சம் டன் உணவுதானியங்களைப் பிறமாநிலங் களுக்குக் கொடுத்துவந்தது. பர்மா பிரிந்ததும் இந்தியா அரிசியை இறக்குமதி செய்தது. பாகிஸ்தான் பிரிந்ததும் இந்தியா மீண்டும் கோதுமையை இறக்குமதி செய்தது. சுதந்திரம் அடைந்தபின்னர் உணவுப்பிரச்சினைக்கு மூன்று முக்கிய காரணங்கள் உண்டு: (1) பர்மா, பாகிஸ்தான் பிரிந்தாலும் மக்கள்தொகை இந்தியாவில் மிகத்துரிதமாக வளர்ந்தது. (2) பருவக்காற்று மழை தவறியதால் தானியங்களின் விளைச்சல் குறைந்தது. (3) வங்காளத்தில் பெரிய பஞ்சம் ஏற்பட்டது. அதன்காரணமாக உணவு தானியப்பொருள் களுக்குக் கட்டுப்பாடுகள், நகர்ப்புறங்களில் அரிசி, கோதுமைக்கு ரேஷன் முறைகள் புகுத்தப்பட்டன. மேலும் உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கும் பல முறைகள் மேற்கொள்ளப்பட்டன. வர்த்தகப் பயிர்களுக்குப் பதிலாக உணவு தானியங்களைப் பயிரிடு தல் வேண்டும் எனவும் செறிந்த, பரந்த வேளாண்மை முறை களைக் கையாளவேண்டும் எனவும் வற்புறுத்தப்பட்டது. நீர்ப் பாசன முறைகள் அதிகரிக்கப்பட்டன. நல்ல விதைகள், எரு, உரம் முதலியவை அளிக்கப்பட்டன.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் உணவு தானியத்தை 55 மில்லியன் டன் முதற்கொண்டு 69 மில்லியன் டன்கள் வரை உயர்த்தப்பட்டது. அதாவது ஐந்தாண்டில் 29 சதவிகிதம் உயர்ந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 82 மில்லியன் டன்களாக உயர்ந்தது.

உணவுப் பிரச்சினைக்குரிய காரணங்களைத் தேவை, அளிப்பு இவற்றின் அடிப்படையில் ஆராய வேண்டும்.

**தேவையின் பக்கம்:**

(1) மக்கள்தொகை அதிகரிப்பு, அதன் காரணமாக உணவு தானியங்களுக்குத் தேவை அதிகரிப்பு ஏற்பட்டது. 1951ஆம் ஆண்டில் மக்கள்தொகை 361 மில்லியனிலிருந்து 1961ஆம்

ஆண்டில் 439 மில்லியன்களாக உயர்ந்தது. அதாவது 10 ஆண்டுகளில் 78 மில்லியன்கள் உயர்ந்தது. 1970ஆம் ஆண்டில் 550 மில்லியன்களாக உயர்ந்தது. அதாவது 10 ஆண்டுகளில் 110 மில்லியன்கள் அதிகரித்தது. ஆக 1951முதல் 1970வரை இருபது ஆண்டுகளில் 190 மில்லியன் மக்கள் அதிகப்படியாக உள்ளனர். அதனால் உணவுப் பொருள் களுக்குத் தேவை பெருகியது. அதன் காரணமாக விலைகளும் உயர்ந்தன.

(2) மக்களின் வருமான அதிகரிப்பு ஏற்பட்டது. 1950-51 ஆண்டில் மொத்தப் பணத்தின் அளவு 2,000 கோடி ரூபாய்கள்: 1960-61 ஆண்டில் இந்தப் பணத்தின் அளவு 2,870 கோடி ரூபாய்களாக உயர்த்தப்பட்டது. ஆகவே பணத்தின் அளிப்பு மக்க ளிடையே பரவியது. 1966-67ஆம் ஆண்டில் மீண்டும் பணத்தின் அளிப்பை 4,950 கோடி ரூபாய்களாக உயர்த்தப்பட்டது. பணத் தின் அளிப்பு அதிகரித்தபடியால் பண்டங்கள், பணிகளின் தேவை களும் அதிகரித்தன. இவ்வளவு பணப்புழக்கத்திற்குக் காரணம் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் கோடிக்கணக்கான பணங்கள் பல திட்டங்களில், ஆக்க வேலைகளில் மூதலீடு செய்யப்பட்டன.

(3) 1951ஆம் ஆண்டு முதல் பற்றுக்குறை நிதியல் பின்பற்றப்பட்டது. அதாவது தாள்பணம் அச்சடிக்கப்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 420 கோடியும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 950 கோடியும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 1,150 கோடியும் தாள் பணம் அச்சடிக்கப்பட்டன. இதனால் பணத்தின் அளிப்பு அதிகரித்தது.

(4) உணவு தானியங்களின் விலைகள் உயர்ந்ததால் பலர் உணவு தானியங்களை அதிக அளவில் விற்று இலாபம் சம்பாதிக்க வேண்டும் என எண்ணி உணவுத் தானியங்களைப் பதுக்கி வைத்தார்கள். சிலர் கருப்பு மார்க்கெட்டில் அதிக விலையில் விற்று லாபம் சம்பாதித்தார்கள். ஆகவே பதுக்கிவைத்தல், கறுப்பு மார்க் கெட், கள்ள மார்க்கெட் இவற்றில் விற்று லாபம் சம்பாதித்தல் இவைபோன்ற வேலைகளில் ஈடுபட்டார்கள்.

**அளிப்பின் பக்கம்:**

1. முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் உணவு உற்பத்தி அதிகரித்தது. ஆனால் 1965 முதல் பருவக்காற்று மழை தவறிய தால் உணவு தானியங்களின் விளைச்சல் குறைந்தது.

2. அங்காடியில் அதிகப்படியான உணவு தானியங்களை விற்பதற்குக் கொண்டுவரவில்லை. காரணம் யாதெனில் இன்னும் விலைகள் உயரும் என்று பதுக்கிவைத்தார்கள். ஆகவே அங்காடிக்கு வரக்கூடிய தானியங்கள் குறைந்தன.

3. உணவு தானியங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய நேரிட்டது. மேலும் இறக்குமதிக்கு போதிய அளவிற்கு அந்நிய செலாவணி செலுத்தமுடியாத நிலையில் இந்தியா இருந்தது. ஆனால் அமெரிக்கா சற்றுத் தாராளமாக இந்தியாவிற்கு உதவியது. இந்தப் பற்றுக்குறையைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தும், விலைகளைக் கட்டுப்படுத்தியும், ரேஷன் முறைகளை அமுல்படுத்தியும் இந்த உணவுப் பிரச்சினையைச் சமாளித்தது.

மத்திய அரசும் மாநில அரசுகளும் பல்வேறு முறைகளை மேற்கொண்டு உணவுப் பிரச்சினையைத் தீர்த்தது. இதற்காக இரண்டு விதமான திட்டங்களைத் தீட்டியது. ஒன்று, குறுங்காலத் திட்டங்கள், மற்றொன்று நீண்டகாலத் திட்டங்கள் என்பதாகும்.

குறுங்காலத் திட்டங்களின்கீழ் வரக்கூடிய முக்கியச் செய்கைகளில், இறக்குமதியை அதிகரித்தல் ஒன்றாகும். உள்நாட்டில் உற்பத்திக் குறைவின் காரணமாக விலைகள் உயர்ந்தன. மேலும் மக்கள்தொகையின் அதிகரிப்பினால் உணவுக்குத் தேவையும் அதிகமாகியது. ஆகவே வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியை அதிகரிக்க நேரிட்டது. கீழ்க்கண்டவாறு உணவு தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டன.

| | | | | |
|---|---|---|---|---|
| 1961 ஆம் ஆண்டில் | | 35 லட்சம் டன் | உணவு தானியங்கள் | இறக்குமதியாயின |
| 1962 | ,, | 36 | ,, | ,, |
| 1963 | ,, | 46 | ,, | ,, |
| 1964 | ,, | 63 | ,, | ,, |
| 1965 | ,, | 75 | ,, | , |
| 1966 | ,, | 103 | ,, | ,, |

வெளிநாடுகளிலிருந்து உணவு தானியங்களை வாங்குவதற்கு இந்தியாவில் போதிய அளவிற்கு அந்நியச் செலாவணியும் கிடையாது. அப்படியே அந்நியச் செலாவணி இருந்தாலும் அதை எந்திரங்கள், மூலப்பொருள்கள் ஆகியவற்றைத் தொழிற்சாலைகள்

வளர்ச்சிக்காக வாங்கப் பயன்படுத்தப்பட்டது. ஆகவேதான் உணவு இறக்குமதிக்கு அமெரிக்காவைப் பெரிதும் நம்பி இருந்தது. உலக அங்காடிகளிலும் அரிசி பற்றுக்குறையினால் இந்தியாவும் அதிகப்படியான அரிசியை இறக்குமதி செய்யமுடியவில்லை. அரிசிக்கு அதிகத் தேவை மேற்கு வங்காளத்திலும், கேரளாவிலும் இருந்தது. அரிசியை இம்மாநிலங்களில் சிறப்பான உணவாகக் கொண்டிருந்தார்கள். இந்த நெருக்கடியில் அரசு முயற்சிகள் எடுத்து பல நாடுகளிலிருந்து உணவு தானியங்களைத் தருவித்து பற்றுக்குறைப் பகுதிகளுக்கு வினியோகம் செய்தது. இரண்டாவதாக, அரசு உணவு தானியங்களைக் கொள்முதல் செய்தது. எந்த மாநிலங்களில் உபரியாக, அதிகப்படியாக உணவு தானியங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் உணவு தானியங்களைக் கொள்முதல் செய்தது. உதாரணமாகப் பஞ்சாபில் கோதுமை உபரியாகவும், ஆந்திராவில் அரிசி உபரியாகவும் இருந்தன. உபரியை அங்காடியில் விற்கிறார்கள். சில சமயங்களில் பத்திரப்படுத்தியும் பதுக்கி வைத்தும் விலை உயர்ந்தபோது அதிக விலையில் விற்று லாபம் அடைகிறார்கள். அரசு ஒவ்வொரு குடியானவனின் குடும்பத்திற்கும் தேவையானது போக மீதியுள்ள உணவு தானியங்களைக் கொள்முதல் செய்தது. இதனால் விலை உயர்வைக் கட்டுப்படுத்தினார்கள். மேலும் உபரியான தானியங்களைப் பற்றுக்குறைப் பகுதிகளுக்கு வினியோகம் செய்ய முடிந்தது. ஒவ்வொரு மாநிலத்திலும் உபரி மாவட்டங்களில் கிடைக்கும் தானியங்களைச் சேகரித்து, கொள்முதல் செய்து பற்றுக்குறை மாவட்டங்களுக்குக் கிடைக்கும்படி பங்கீடு செய்தது. மேலும் பற்றுக்குறை மாவட்டங்களில் உணவுதானிய ரேஷன் முறைகளினாலும், நியாயவிலைக் கடைகளினாலும் குறைவான விலைகளில் விற்றும் வந்தது. பல ஆண்டுகளில் எவ்வளவுக்குக் கொள்முதல் செய்யப்பட்டன என்பதைக் கீழே காணலாம் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1963-64 | ஆண்டில் | 10 | லட்சம் டன் | கொள்முதல் | செய்யப்பட்டன |
| 1964-65 | ,, | 38 | ,, | | ,, |
| 1965-66 | ,, | 40 | ,, | | ,, |

மேலும் அரசு உணவு தானியங்களுக்கு மொத்த விலையையும், சில்லறை விலைகளையும் நிர்ணயம் செய்தது. விவசாயிகளையும் உபரிதானியங்களை அரசுக்கு விற்கும்படி கட்டாயப்படுத்தியது. இதனால் உணவு தானியங்களின் விலைகள் குறைந்தன. விலைக் கட்டுப்பாடு, ரேஷன் முறைகள் பின்பற்றப்பட்டன. நியாயவிலைக் கடைகள் ஒரு லட்சத்திற்குமேல் திறக்கப்பட்டன. அரசு கொள்முதல் செய்த தானியங்களை இந்தக் கடைகள் மூலமாக விற்று வந்தது. இக்கடைகள் உணவுப் பொருள்களின் விலைகளைக் கீழ்

இறக்க உதவின. குறைந்த வருமானமுடைய மக்கள் நியாய விலைக் கடைகளில் தங்களுக்குத் தேவையான பொருள்களைப் பெற்றுக்கொண்டார்கள். அதுமட்டுமன்றி நகர்ப்புறங்களில் ரேஷன்முறை புகுத்தப்பட்டது. 30 மில்லியன் மக்களுக்கு ரேஷன்மூலமாக உணவுப்பொருள்கள் வினியோகம் செய்யப் பட்டன. ஒவ்வொரு குடும்பத்திற்கும் வேண்டிய குறைந்த அளவு உணவு தானியங்களை இந்த ரேஷன்மூலம் அளித்தார்கள். நியாய விலைக் கடைகளினால் கிட்டத்தட்ட 200 மில்லியன் மக்கள் பயன் பெற்றார்கள். 1962முதல் 1966வரை 44 லட்சம் டன்முதல் 141 லட்சம் டன்வரை உணவு தானியங்கள் மக்களுக்கு நியாய விலைக்கடைகள் மூலமாகவும், ரேஷன் மூலமாகவும் வழங்கப் பட்டன. நான்காவதாக, தனியார் வியாபாரத்துக்குக் கட்டுப் பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. பதுக்கி வைத்தல், ஊகவர்ணிகம் செய்தல் இவற்றைத் தடுப்பதற்காக அரசாங்கம் மொத்த வியாபாரி களுக்கு லைசென்ஸ்கள் வாங்கிக்கொள்ளும்படி சட்டம் விதித்தது. மேலும் லாபம் சம்பாதித்தலுக்கு வரையறையும் நிர்ணயித்தது. அரசாங்க விலைக்குமேல் எந்த வியாபாரியும் உணவு தானியங்களை விற்கக்கூடாது எனவும், வியாபாரிகள் தங்கள் உணவு இருப்புகளை அவ்வப்போது அறிவிக்கவேண்டும் எனவும் உத்தரவு பிறப்பித்தது. பஞ்சப் பகுதிகளைத் தனிமுறையில் கவனித்தது. பிகார், உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான், மத்தியப்பிரதேசம் இவற்றில் பெரும் பான்மையோர் பஞ்சத்தால் அடிபட்டதால் போதிய அளவுக்கு வாங்கும் திறனை இழந்தார்கள். ஆகவே குடியானவர்களுக்குப் பண உதவி மிக அவசியமாக இருந்தது. நிவாரண வேலைகளைச் செய்ய அரசாங்கமும் முயற்சிகளை மேற்கொண்டது. கிணறு வெட்டுதல், குளம் வெட்டுதல், பாதை போடுதல், ஆகியவற்றால் மக்களுக்குக் கூலியும், வருமானமும் கிடைத்தன. அவற்றை உணவு வாங்கவும், நுகரவும் பயன்படுத்தினார்கள். பிகாரில் பஞ்சத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் 30 மில்லியன்களாகும். ஆகவே அரசாங்கம் தாராளமான உதவிகளையும் ஒத்துழைப்பையும் அளித்தது. மேலும் பஞ்சத்தை விரைவில் போக்கியது. இந்தியாவும் பல நாடுகளிலிருந்து உணவை வெகுமதியாகவும், கடன் வசதிகளும் பன்னாட்டு நிதி வசதிகளும் பெற்றது. பாட்டாளி மக்களுக்கு நிதி உதவி அளித்து ஊக்கம் தந்தது. 1969-70-ல் ராஜஸ்தானிலும் குஜராத்தில் சில பகுதிகளிலும் பஞ்சத்தால் மக்கள் பாதிக்கப் பட்டார்கள். அரசாங்கம் எல்லாவிதமான நடவடிக்கைகளையும் மேற்கொண்டு மக்களைத் துன்பத்திலிருந்து மீட்டது.

**நீண்டகால உதவி:** உணவு உற்பத்தியை அதிகரிக்கத் தரமான விதைகள், அதிக உரம், அதிகமான நீர்ப்பாசன முறைகள்

யாவற்றையும் அதிகரிக்கவேண்டும். உணவு உற்பத்தியை அதிகரிக்க மூன்று புதிய முறைகள் வகுக்கப்பட்டன. முதலில் தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் அதிக கவனம் செலுத்தல்வேண்டும். அதற்காக அதிகப் பலன் தரும் விதைகளை வழங்கிடவேண்டும். பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள், ரசாயன உரம், விவசாயக் கருவிகள் யாவும் அளித்தல்வேண்டும். புதிய நுட்பமுறை, நவீன விஞ்ஞான முறைகளைப் பின்பற்றல்வேண்டும். குழாய், கிணறுகளை அமைத்துக்கொடுத்தல் வேண்டும். இந்த முறையில் விவசாயிக்குப் பெரும் உற்சாகம் உண்டானது. இருபோக சாகுபடி முறைகளைக் கையாண்டார்கள். சீக்கிரத்தில் பலன்தரும் விதைகளைப் பயிரிடல்வேண்டும். குறிப்பாக அரிசி, கோதுமை, உருளை இவற்றின் உற்பத்தியைத் துரிதப்படுத்தல்வேண்டும். 15 சதவிகித நிலங்களில் நீர்ப்பாசனப் பகுதிகளில் இருபோக சாகுபடிகள் செய்தார்கள். ஆண்டு ஒன்றுக்கு இருபோகம் அல்லது மூன்று போகம் சாகுபடி முறைகளைப் பின்பற்றினார்கள். அடுத்து சிறிய நீர்ப்பாசன முறைகளை அதிகப்படுத்தல்வேண்டும். ஆரம்ப காலத்தில் பெரிய நீர்ப்பாசன அணைக்கட்டுகளுக்கு முக்கிய கவனம் செலுத்தப்பட்டன; ஆனால் தற்சமயம் சிறிய நீர்ப்பாசன வசதிகளை அதிகரிப்பதற்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டது. ஆறு, ஏரி, குளம், கிணறு முதலியவற்றைச் செப்பனிடல், பழுதுபார்த்தல், புதிய இடங்களில் தோண்டுதல் போன்ற முறைகளைக் கையாண்டார்கள். 1970-71ஆம் ஆண்டில் 10 மில்லியன் ஹெக்டார் நிலங்களைச் சிறிய நீர்ப்பாசனத்தின்கீழ்க் கொண்டுவருதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தண்ணீர் வசதிகள் உள்ள பகுதிகளில் செறிந்த வேளாண்மை முறையைப் பின்பற்றினார்கள். தரமான விதைகள், ரசாயன உரம், பூச்சி மருந்துகள், விவசாயக்கருவிகள், கடன்வசதிகள் யாவும் வேண்டிய அளவுக்கு அரசாங்கம் கொடுத்தது. அதேநேரத்தில் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தவும்வேண்டும். குறிப்பாக, பிறப்பு விகிதத்தைக் குறைக்கவேண்டும். எவ்வளவு உற்பத்திசெய்தாலும் வளர்ந்துவரும் மக்கள்தொகைக்கு இது போதாது. ஆகவே, மக்கள்தொகையை ஓரளவாகிலும் கட்டுப்படுத்தியே தீரவேண்டும்.

# 24. வேலையில்லாத் திண்டாட்டம்

இந்தியாவில் வேலையின்மையும் வேலைக்குறைவும் மிக முக்கியமான பிரச்சினைகள் ஆகும். இந்திய விவசாயத்தில் சிறப்பான அம்சம் அதிக வேலையின்மை. அதிலும் மறைமுக வேலையின்மை பெரிதும் உள்ளது. இந்தியாவைப் பொறுத்த மட்டிலும் மூன்று முக்கியமான வேலையின்மை தெரிகின்றன: 1. விவசாயத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் வேலைக் குறைவி னால் மறைமுக வேலையின்மை ஏற்படுகிறது. 2. நடுத்தர மக்களி டையே, குறிப்பாக, படித்தவர்களிடையே, வேலையில்லாத் திண் டாட்டம். 3. தொழில்களில் வேலையில்லாத் திண்டாட்டம்.

கிராமப்புறங்களில் பிழைப்பு மட்டத்தில் வேலை செய்யும் மக்களின் 25 சதவிகிதம் முதல் 30 சதவிகிதம் வரை நல்ல விதத்தில் வேலையில் பயன்படுத்த முடியவில்லை. ஆகவே இந்தப் பிரச்சினை வேலையில்லாத் திண்டாட்டத்தைவிட மறைமுக வேலையின்மை ஏற்பட்டுள்ளது. இந்தியப் பொருளாதாரத்தில் ஏராளமான உழைப்பு யாதொரு இறுதிநிலை உற்பத்தித்திறனும் இல்லாமல் பயன்படுத்தப்படுகிறது. உபரி உழைப்பு வீணடிக்கப் படுகிறது. விவசாயத்தில் வேலையின்மைக்குக் காரணங்கள் அதிக மான மக்கள் நிலத்தில் வேலை செய்வது, நிலத்தை நம்பி இருப்பது, பருவக்காற்றுமழையை நம்பியிருப்பது, குடிசைத்தொழில்கள் சிறியதொழில்கள் முன்னேற்றம் இல்லாமை போன்ற பலவாகும்.

வேலையில்லாத் திண்டாட்டத்தில் மற்றொருவகை படித்தவர் களிடையே வேலையின்மை. இது ஒரு முக்கியமான பிரச்சினை. அவர்களுடைய குறைகளைக் கவனிக்காவிட்டால் அரசுக்கும், ஜனநாயகத்துக்கும், பாதுகாப்புக்கும், அமைதிக்கும் பேராபத்தை விளைவிக்கும். ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டக்காலத்தின் முடிவி லும் எந்தனையோ மில்லியன் மக்களுக்கு வேலை கொடுக்க முடியா மல் போகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் 5 மில்லி

யன்களும், 2ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் 9 மில்லியன்களும், 3ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் 12 மில்லியன்களும், 4ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் அநேகமாக 23 மில்லியன்களும் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கையாகும். நான்காவது திட்டத்தில் குறைந்த பட்சம் 35 மில்லியன் மக்களுக்கு வேலைவாய்ப்பு அளித்திடல் வேண்டும். அப்போது தான் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியும். இந்தப் பிரச்சினை மிகவும் கொடியது, ஆபத்தானது என்பதில் சந்தேகமில்லை. நாளுக்கு நாள் இந்தப் பிரச்சினை பெரியதாகிக்கொண்டே, வளர்ந்துகொண்டே போகிறது.

இந்தியப் பொருளாதாரத்தில் உருமாறிய வேலையின்மை. இது இந்திய விவசாயத்தில் பேரளவுக்கு வேலையின்மையைக் குறிக்கும். இந்தியாவில் விவசாயத்தை ஏராளமான மக்கள் மேற்கொண்டுள்ளார்கள். ஆனால் பெரும்பாலோருடைய உழைப்பு இறுதிநிலை உற்பத்தித்திறன் இல்லாமல் பயன்படுத்தப்படுகிறது. ஆகவே இந்த உபரியான மக்களை விவசாயத்திலிருந்து நீக்கிப் பிற தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும். பெரும்பாலான மக்கள் உபயோகமற்ற அளவில் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள்; ஏதோ அவர்கள் விவசாயம் செய்கிறோம் என்று எண்ணித் தங்களுடைய உழைப்பைப் பயனற்றதில் ஈடுபடுத்துகின்றனர். மொத்த உற்பத்தியில் இந்த உபரி மக்களினால் யாதொரு பலனும் கிடையாது. வெளிப்படையாகப் பார்க்கப்போனால் இவர்கள் வேலை செய்தபோதிலும் உண்மையில் இவர்கள் வேலையற்றவர்களாகக் கருதப்படுகிறார்கள். மொத்த உற்பத்திக்கு யாதொரு கூடுதலும் இல்லாமல் வெளிப்படையாக வேலை செய்யும் மக்களைக் குறிக்க மறைமுகமான வேலையின்மை அல்லது உருமாறிய வேலையின்மை என்கிறோம். இந்த உபரியான மக்கள் தங்கள் நேரங்களையும், சக்திகளையும் வீணடிக்கிறார்கள். யாதொரு பலனும் இல்லாமலிருக்கும் இப்பேர்ப்பட்ட மக்களை விவசாயத்திலிருந்து நீக்கி வேறு பலனுள்ள தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும். உருமாறிய வேலையின்மைக்குக் காரணம் யாதெனில், அதிகப்படியான மக்கள்தொகை வளர்ச்சியினால் விவசாயத்தில் ஈடுபடுகிறார்கள்; அத்துடன் மாற்று வேலைகளும் கிடைக்காத காரணத்தாலும், நிலங்கள் யாவும் சிறிய அளவில் உள்ளதாலும், விவசாயத்தில் மறைமுகமான வேலையின்மை ஏற்பட்டுள்ளது.

நிலங்கள் சிறிய அளவில் உள்ளதால், விவசாயத்தில் அத்தனை பேர்களையும் பயன்படுத்த முடியவில்லை; குடும்ப விவசாயம் சிறியதாக இருந்தபடியால் போதிய வசதிகள் இல்லாமையாலும்,

எல்லோருமே விவசாயத்தில் ஒருமுகமாக ஈடுபட்டுள்ளார்கள். அதனுடைய எண்ணிக்கை அளப்பதற்கும் கடினம். ஐக்கிய நாடுகளின் அறிக்கைப்படி பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தின் அளவுகள் என்ற தலைப்பில் குறிப்பிட்டுள்ளது யாதெனில் இந்தியா, பாகிஸ்தானின் பல பகுதிகளிலும், பிலிப்பைன்ஸ், இந்தோனேஷியா பகுதிகளிலும் உபரியான விவசாய மக்கள்தொகை 20முதல் 25 சதவிகிதம்வரை உள்ளனர். இந்த மறைமுக வேலையில்லாதவர்களின் தலா வருமானம் மிகக் குறைவாக உள்ளது. அத்துடன் இந்தக் குறைவான வருமானத்தில் யாதொரு சேமிப்பும் செய்யமுடிவதில்லை. குறைவான சேமிப்பு குறைவான முதலுக்குக் காரணமாகும். குறைவான முதல் குறைவான வருமானத்திற்குக் காரணமாகிறது. இப்படியே இந்தச்சுழல் சுற்றிக் கொண்டே இருப்பதால் பொருளாதாரமும் நிரந்தரமாக உள்ளது.

**வேலையில்லாத் திண்டாட்டத் திற்குரிய காரணங்கள்:**

1. பொருளாதார முன்னேற்றம் குறைவு: இந்தியாவின் பொருளாதாரம் பின் தங்கிய நிலையிலிருப்பதால் இவ்வளவு பெரிய, வளரும் மக்கள்தொகையைக் கிரகித்துக்கொள்ள முடியாத நிலையில் உள்ளது.

2. பொருளாதார வளர்ச்சியின் விகிதக் குறைவு: முன்னேற்றத்தின் விகிதம் நம் நாட்டில் மிகக்குறைவாகவும், மெதுவாகவும் செல்கிறது. மக்கள்தொகை வளர்வதற்கு ஏற்றவாறு வேலை வாய்ப்புகள் அந்த அளவில் வளர்வதில்லை.

3. அதிகமான மக்கள்தொகை வளர்ச்சி: சென்ற பத்தாண்டு காலமாக மக்கள்தொகை தாவுவேகத்தில் வளர்ந்துவருகிறது. இது வேலையில்லாப் பிரச்சினையைப் பெரிதுபடுத்துகிறது. தொடர்ந்து மக்கள்தொகை பெருகிவளருவதால் முன்பே உள்ள வேலையில்லாப் பிரச்சினை பெரியதாக வளருகிறது. ஒவ்வொரு ஐந்தாண்டுத்திட்ட முடிவிலும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி வளர்கிறது.

4. மாற்றுவேலைகள் கிடையாது: விவசாயத்தைத் தவிர இந்தியாவில் மாற்று வேலை வாய்ப்புகள் இல்லாத காரணத்தால் ஏராளமான மக்கள் விவசாயத்தில் ஈடுபடுகின்றனர். ஆகையால் நிலத்தின்மீது மக்களின் அழுத்தம் அதிகரிக்கிறது. 70 சதவிகித மக்கள் விவசாயத்தில் ஈடுபடுகின்றனர். நிலத்தின்மீது மிதமிஞ்சிய கூட்டம். மொத்த வேலையாட்களில் 30 சதவிகித

மக்கள் வேலைக்குறைவினுல் உள்ளனர். அதற்குத்தான் உருமாறிய வேலையில்லாத் திண்டாட்டம் என்கிறேம்.

5. விவசாயம் பருவக்காலத்தைப் பொறுத்தது: இந்திய விவசாயம் பருவக்காற்று மழையைப் பொறுத்ததாகும். மழையில்லாமல் விவசாயம் பெரிதும் பாதிக்கப்படும். பருவமழை குறிப்பிட்ட காலங்களில் பெய்வதால் அந்தக்காலங்களில் மட்டும் விவசாயம் நடைபெறும். பருவமழை இல்லாத காலங்களில் விவசாயிகள் வீண்பொழுது போக்குகிருர்கள்.

6. கூட்டுக் குடும்பமுறை: இந்தியாவில் சமுதாயத்தில் கூட்டுக்குடும்பம் மிகவும் பெருமை வாய்ந்தது. இது மறைமுக வேலையின்மையை அதிகரிக்கச்செய்கிறது. குடும்பத்தில் உள்ள எல்லா அங்கத்தினர்களும், குடும்பப்பண்ணை அல்லது விவசாயத்தில் ஈடுபடுகிருர்கள்.

7. பல்கலைக்கழகங்களின் அதிகப்படியான உற்பத்தி: இந்தியாவில் ஏராளமான பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள் வேலைக்குரிய பட்டப்படிப்பு கல்லூரிகள் உண்டு. இவை ஆண்டுதோறும் ஏராளமான பட்டதாரிகளை உற்பத்தி செய்கின்றன. இந்தியாவில் படிப்புத்திறமையையும், நுட்பத்தையும் வளர்க்கவில்லை. பட்டதாரிகள் எதிர்காலத்தில் உயர்ந்த வேலைக்குப் போகவேண்டும். அதிகப் பணம் சம்பாதிக்கவேண்டும் என்ற எண்ணத்தினுல் சாதாரணவேலைகளுக்குப் போவதில்லை. அதன் காரணமாக வேலையின்மை அதிகரிக்கிறது.

8. தொழில் முன்னேற்றம் குறைவாய் உள்ளது: இந்தியாவில் தொழில் முன்னேற்றம் துரிதமாக வளரவில்லை. ஆகவே வேலை வாய்ப்புகள் அதிக அளவில் பெருகுவதும் கிடையாது.

9. பொருளாதாரத்தில் இறக்கவாட்டம்: இறக்கத்தின் காரணமாக எத்தனையோ நிறுவனங்கள் மூடப்படுகின்றன. இது எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோல் ஆகும். விலைகள் சரிந்தால் புதிய நிறுவனங்கள் தோன்ருது. பழைய நிறுவனங்கள் மேலும் உற்பத்திசெய்யாது. ஆகவே வேலையின்மை பெருகும்.

10. மக்கள் நகரமுடியாத நிலை: இந்தியாவில் மக்கள் தாராளமாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல முடியாத நிலை உள்ளது. மக்கள் குடும்பப்பற்றினுல் தங்கள் ஊரை விட்டு வெளியிடத்திற்குப் போக விருப்பமில்லாமல் இருக்கிருர்கள்.

மக்கள் நகரமுடியாமைக்கு இன்னும் மொழி, சாதி, மதம், பழக்க வழக்கங்கள் போன்ற பலவும் காரணங்களாகும்.

வேலையின்மை சமூகப்பிரச்சினைகளில் மிகவும் கொடுமை யானது. இது இந்தியாவிற்கு ஓர் அவசரப் பிரச்சினையுமாகும். இதை எளிதில் தட்டிக்கழிக்கமுடியாது. இந்தியாவின் பொருளா தாரத் திட்டங்களின் முக்கிய நோக்கங்களில் வேலை வாய்ப்பு களை அதிகரித்தல் ஒன்றாகும். இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாணுதல் நான்காவது திட்டக்காலத்தில் குறிப்பாக மனித சக்தியை நன்முறையில் பயன்படுத்தி வேலைவாய்ப்பினை அதிகரித்தல்வேண்டும். இந்தியாவில் திட்டம் தயாரிப்பவர் களுக்கு, எந்த அளவிற்கு வருகிற திட்டங்களில் வேலை யின்மையைப் போக்கமுடியும், எப்படி வேலைவாய்ப்புகளை அதிகரிக்கமுடியும் என்பதுதான் கடினமான வேலையாகும்.

முதல் ஐந்தாண்டுத்திட்டத்தில் வேலையின்மையைப் போக்கு வதற்கு பதினோர் அம்சத்திட்டம் மேற்கொள்ளப்பட்டது. வேலைப் பயிற்சி நிலையங்கள் ஏற்படுத்தினார்கள். குடிசைத்தொழில்களை அதிகரித்தல், பயிற்சிவசதிகள், சிறிய தொழில்களுக்கு ஆக்க மளித்தல், முதியோர் கல்வி நகரங்களிலும், தனியாசிரியர் பள்ளி கிராமங்களிலும் தேசிய மீட்சிப்பணிகள், சாலைப் போக்குவரத்து, குடிசைகளைச் சுத்தப்படுத்துதல், வீடு கட்டிக்கொடுத்தல், தனியார்கட்டடங்களை அதிகரித்தல், அகதிகளுக்கு வசதியளித்தல், திட்டத்தை அவ்வப்போது மாற்றி அமைத்தல் போன்ற பல அம்சங்களைக் கொண்ட திட்டத்தை நிறைவேற்றினார்கள். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலையின்மையை ஓர் அளவுக்குதான் தீர்க்கமுடிந்தது. மேலும் முதலீட்டைத் துரிதப்படுத்தவில்லை. சமூகத்திற்குத் தேவையான முதலீடும் இல்லை. பதினோர் அம்சத் திட்டத்தை முழுஅளவில் செயல்படுத்த முடியவில்லை. எனவே இத்திட்டத்தின் முடிவில் வேலையில்லாத்திண்டாட்டம் அதிகரிக்க ஆரம்பித்துவிட்டது.

இரண்டாவது திட்டக்காலத்தில் எதிர்பார்த்த அளவுக்கு வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை. ஆரம்பத்தில் 5 மில்லியன்கள் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை. இரண்டாவது திட்டக் காலத்தில் 10 மில்லியன் அல்லது 15 மில்லியனுக்கு வேலை வாய்ப்புக்களை அதிகரிக்கவேண்டியதாகிவிட்டது. இரண்டாவது திட்டக்காலத்தில் 6·5 மில்லியன்கள் வேலைவாய்ப்பு அதிகரித்தது. ஆகவே 9 மில்லியன் வேலையில்லாமல் இரண்டாவது திட்ட முடிவில் இருந்தனர்.

மூன்ருவது திட்டக்காலத்தில் இப்பிரச்சினை பயங்கரமாக வளர்ந்துவிட்டது. புதிதாக வேலை தேடுவோரின் எண்ணிக்கை மக்கள்தொகை வளர்ச்சியினுல் 17 மில்லியன்களாக உயர்ந்தது. முன்னதாகவே 9 மில்லியன்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின் முடிவில் இருந்தனர். ஆக மூன்ருவது திட்டக் காலத்தில் வேலை இல்லாதவர்களின் எண்ணிக்கை 26 மில்லியனுக உயர்ந்தது. ஆனுல் திட்டத்தில் 16 மில்லியனுக்கு வேலை அளிக்கப்பட்டது. மூன்ருவது திட்டக்கால முடிவில் 12 மில்லியன்கள் வேலையில்லாமல் இருந்தனர். வேலை வாய்ப்புகள் அதிகரிக்க அதிகரிக்க வேலையில்லாதவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது. இதற்குக் காரணம் 'மக்கள் வெடிப்பு'. விவசாயத்தை மேலும் நவீனப்படுத்துவதாலும், செம்மைப்படுத்துவதாலும், நடைமுறையிலுள்ள மறைமுக வேலையில்லாதவர்கள் வெளிப்படையாக வேலைகளைத் தேடிச்செல்லுவார்கள். இதனுல் வேலை இல்லாதவர்களின் படை அதிகரித்தது.

## அட்டவணை 74

### திட்டக்காலத்தில் வேலையின்மையை எடுத்துக்காட்டும் அட்டவணை

| காலம் | உழைப்பின் சக்தி அதிகரிப்பு (மில்லியன்கள்) | வேலைவாய்ப்பு உண்டாக்கியது (மில்லியன்கள்) | தேங்கி நிற்கும் வேலையின்மை (மில்லியன்கள்) |
|---|---|---|---|
| திட்டக்காலத்திற்குமுன் | — | — | 3·3 |
| முதல் ஐந்தாண்டுத் திட்டம் | 9·5 | 7·5 | 5·3 |
| 2-வது ஐந்தாண்டுத் திட்டம் | 11·3 | 9·5 | 7·1 |
| 3-வது ஐந்தாண்டுத் திட்டம் | 17·0 | 14·5 | 9·6 |
| 1967—69 | 13·8 | (0·4—1·4) | (22—23) |

இந்தியாவில் பொருளாதாரத் திட்டங்களை மேலும் மேலும் செயல்படுத்தியும் வேலை இல்லாதவர்களின் எண்ணிக்கை குறையாமல் அதிகரித்து வருவது வியப்பாக உள்ளது. நான்காவது திட்டக்காலம் ஆரம்பிக்குமுன் 17 மில்லியனுக்கு வேலையில்லாமல் உள்ளனர். இத்துடன் வேலைக்குறைவு, மறைமுக வேலையின்மை

இவற்ருல் பாதிக்கப்பட்டவர்களுடைய எண்ணிக்கையைச் சேர்க்கும்போது வேலையில்லாதவர்களின் எண்ணிக்கையின் உச்சத்தைக் காட்டும். மத்திய அரசாங்கத்தின் தொழிலாளர்கள் வேலைவாய்ப்பின் பிரிவு 1971ஆம் ஆண்டில் வேலை இல்லாத மக்களின் எண்ணிக்கை மொத்தத்தில் கிட்டத்தட்ட 28 மில்லியன் கள் ஆகும் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

வேலையில்லாதவர்களின் பிரச்சினைக்குப் பொருளாதாரத் திட்டத்திஞல் தீர்வுகாண முடியாத நிலைமைக்குரிய காரணங்கள் யாவை? இந்தியப் பொருளாதாரத் திட்டங்கள் வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்க்கத் தவறிவிட்டது. அவ்வாறு ஐந்தாண்டுத் திட்டங்கள் தோல்வியடைவதற்குக் காரணங்களைக் கீழே காணலாம்:

1. மக்கள்தொகை வெடிப்பு: ஆண்டுதோறும் மக்கள் தொகையின் வளர்ச்சி 2·5 சதவிகிதமாகும். இதை முன்னதாக உள்ள வேலையில்லாத மக்களுடைய தொகையோடு சேர்க்கும் போது அதிக அளவில் தென்படுகிறது. திட்டமிட்ட முன்னேற்றம் வளரும் மக்கள் தொகைக்கு ஏற்றவாறு வேலைவாய்ப்புகளை அதிகப் படுத்த முடியவில்லை. ஆகவேதான் ஒவ்வொரு திட்ட முடிவிலும் வேலையில்லாதவர் எண்ணிக்கை தேங்கி நிற்கிறது.

2. மந்தமான பொருளாதார முன்னேற்றம்: வளர்ந்துவரும் மக்கள்தொகையைக் குறைவானப் பொருளாதார முன்னேற்றத்திஞல் சரிக்கட்ட முடியவில்லை. பொருளாதார வளர்ச்சியின் முன்னேற்றம் திட்டக்காலத்தில் மிகக்குறைவாக இருந்தது.

3. தவருகத் திட்டமிடுதல்: சரியான வேலை வாய்ப்புக் கொள்கையை உருவாக்க முடியவில்லை. தொழில் வளர்ச்சியின் வேகத்திஞல் இந்தியாவில் திட்ட மிடுபவர்கள் முதலில் செறிந்த தொழில்கள், உழைப்புச் செறிந்த தொழில்களில் அதிக கவனம் செலுத்திஞர்கள். இரண்டாவது திட்டத்தில் அடிப்படையான கனரகத் தொழில்களுக்கும் ஏராளமான முதலீடு செய்தனர். அதன் காரணமாகப் போதிய அளவிற்கு வேலை வாய்ப்பைப் பெருக்க முடியவில்லை.

4. பயிற்சி இல்லாமை: வேலையில்லாத மக்கள் சரியானப் பயிற்சி பெற்றவர்களும் அல்லர். நுட்ப அறிவு, பயிற்சிமுறை, திறமை யாதும் வேலையில்லாத மக்களிடையே கிடையாது. தகுதியான வேலைக்கு ஆள் கிடைப்பது அரிது. மக்கள் நகர முடியாத தன்மை, சாதிக் கட்டுப்பாடு, பிடிவாதம், வீட்டிலேயே

இருப்பது போன்ற குணங்களால் இந்திய மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லமுடியாத நிலை உள்ளது. எனவே நல்ல வேலைகளை இழக்கின்றனர். அதனால் வேலையில்லாமல் உள்ளனர். ஆகவேதான் இந்தப் பிரச்சினை நம் நாட்டில் மிகவும் பயங்கரமானது. பல திட்டங்களைச் செயல்படுத்தியும் இதற்குத் தீர்வு காண முடியவில்லை.

கிராமப்புறத்திலுள்ள மறைமுக வேலையின்மை அல்லது வேலையில்லாத் திண்டாட்டத்தை முதலில் போக்கவேண்டும். அதே சமயத்தில் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தவேண்டும். உற்பத்தியைப் பெருக்க வேண்டும். அப்போதுதான் பொருளாதார வளர்ச்சி துரிதமாக வளரும். இதற்குத் தேவையானவை: (a)விவசாயப்புரட்சி, முன்னேற்றமான நுட்பம், விஞ்ஞானம், நீர்ப்பாசனம், இயந்திரங்களைப்பயன்படுத்தல், நிலத்தின் அளவை அதிகரித்தல், கூட்டுப்பண்ணை முறை, நிலச்சீர்திருத்தம் போன்றவற்றைக் கையாளவேண்டும். (b) துரிதமான தொழில் முன்னேற்றம், அதற்குண்டான உபதொழில்களின் வளர்ச்சி வேலை வாய்ப்பை அதிகரிக்கும். (c) குடிசைத்தொழில், சிறிய தொழில்களின் முன்னேற்றம் உழைப்பைச் சிறப்பாகக்கொண்ட நுட்ப முறைகள் வேலை வாய்ப்பை அதிகரிக்கும். (d) கிராம, சமூக நலத்திட்டங்களால் உபரியான மக்களைப் பயனுள்ள வேலைகளில் ஈடுபடுத்த வேண்டும். திட்டமிடுவோர் இந்த நிலைமைகளை நன்குணர்ந்து செயல்படுத்தியுள்ளார்கள். இருந்தபோதிலும் நிலைமைகளை நன்றாகப் புரிந்துசிந்தித்துச் சரியான வேலை வாய்ப்புக் கொள்கையை உருவாக்கி மறைமுகமான வேலையின்மையைப் போக்கிடுதல் வேண்டும்.

கிராமப்புறத்தில் உள்ள உபரிமக்களை நல்லமுறையில் செயல்படுத்தினாலொழிய சிறப்பான சமுதாய அமைப்பை நாம் அடைய முடியாது. ஏராளமான மக்களை நன்முறையில் வேலையில் அமர்த்திடல் வேண்டும். மேலும், சேமிக்கவும் வேண்டும். பொருள்களை வாங்கி நுகர்வு செய்திடல் வேண்டும். அப்போதுதான் தொழிலின் முன்னேற்றம் காணமுடியும்; பொருளாதாரம் வலிமை பெறும். நம்முடைய திட்டக் கமிஷனும் இந்தப் பிரச்சினையை உண்மையான முறையில் அணுகினார்கள். அத்துடன் சமூக நலத்திட்டங்கள், ஆக்கப்பணிகள், குடிசைத் தொழில்கள், சிறியதொழில்களை அதிகப்படுத்தல் இவற்றினால் மறைமுக வேலையின்மையைத் தவிர்க்க முடியும். எல்லாவற்றையும்விட, வேலையின்மையை நீக்க, இதற்குத் தீர்வுகாண மக்கள்தொகையைக் கட்டுப்படுத்துவதுதான் சிறப்பான வழியாகும்.

பொருளாதார வளர்ச்சியின் வேகத்தைத் துரிதப்படுத்துவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளவேண்டும். திட்டக் கமிஷன் அதிக நேரத்தைச் செலவிட்டு வேலைவாய்ப்புக்குரிய வழிகளையும் உற்பத்தியின் இலக்குகளையும், இவற்றினை அடைவதற்கு எந்த அளவிற்கு உண்மையான வளங்கள், வசதிகள் உள்ளன என்பதையும் மனதிற்கொண்டு எதிர்காலத்தில் திட்டங்களைத் தயாதல் வேண்டும். நான்காவது திட்டம் ஆரம்பிக்கும்போது 12 மில்லியன் வேலையில்லாத மக்களை வைத்துக்கொண்டு ஆரம்பிக்க வேண்டியுள்ளது. ஏனெனில் 1966–71வரை மூன்ருவது திட்டக்காலத்தின் மொத்தமாக வேலையில்லாத மக்களின் எண்ணிக்கை 23 மில்லியன்கள் எனத் தீர்மானிக்கப்பட்டது. அநேகமாக 4-வது திட்டக்காலத்தில் 35 மில்லியனுக்கு மேலும் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும் எனத் தெரிகிறது. ஆனல் 4-வது திட்டக்காலத்தில் செயல்படுத்தும்போது 20 மில்லியனுக்கு வேலைவாய்ப்புகளை உண்டுபண்ணும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகவே 4-வது திட்டத்தின் கடைசியில் 15 மில்லியன் மக்கள் வேலையில்லாமல் தேங்கிநிற்பார்கள். நான்காவது திட்டக்காலத்தில் வேலைவாய்ப்புகளைப் பெருக்கிட பல திட்டங்களை மேற்கொள்ளவேண்டும். உழைப்பு செறிந்த திட்டங்கள், விவசாய முன்னேற்றம், போக்குவரத்து, செய்தித்துறை, கிராம மின்சாரம், தொழில்கள், தண்ணீர் வசதிகள், வீடுகட்டுதல் போன்றவற்றை மேம்படுத்தவேண்டும். கிராமப்புறத்தில் உருமாறிய வேலையின்மை அதிகம் என்ருல் நகர்ப்புறத்தில் படித்தவர்களிடையே வேலையின்மை அதிகமாக உள்ளது. இவர்களில் 15 சத விகிதம் பள்ளி இறுதி ஆண்டுவரை படித்தவர்கள். மொத்தத்தில் நகர்ப்புறத்தில் 40 சதவிகித மக்கள் வேலையில்லாமல், வேலைதேடித் திரிகிருர்கள்.

உலக நாடுகளில் இன்று 60 சத விகிதம் பொருளாதாரத் திட்டங்களைச் செயல்படுத்திப் பொருளாதார நிலையை உயர்த்தி வருகின்றன. இந்தியாவில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களைச் செயல்படுத்தியும் வேலையின்மை தீர்ந்தபாடில்லை. இந்தியாவில் பல சமூகப் பிரச்சினைகள் உள்ளன. குறிப்பாக தீண்டாமை, வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள், குறைந்த வாழ்க்கைத்தரம், ஏழ்மை, அறியாமை போன்ற பல உண்டு. இவற்றில் வேலையின்மை மிக முக்கியமானது; உடனடியாகக் கவனிக்கவேண்டிய அவசரப் பிரச்சினையும் ஆகும். இந்தியாவில் மக்கள்தொகை அதிக வேகமாக வளர்ந்துவருகிறது. குறிப்பாக தற்போதுள்ள மக்கள்தொகை 543 மில்லியன்கள். இது இரண்டு கண்டங்களான தென் அமெரிக்கா, ஆஃப்ரிக்கா ஆகியவற்றின் மொத்த மக்கள்தொகைக்குச் சமம். ஆண்டுதோறும் வளர்கின்ற மக்கள்

தொகை ஓர் ஆஸ்திரேலியாவுக்குச் சமம். சுருங்கக் கூறின் ஒரு விநாடியில் 2 குழந்தைகள் வீதம் இந்தியாவில் மக்கள்தொகை வளர்கிறது. இது ஒருபுறம் இருக்க, மற்றொருபக்கம் பல்கலைக் கழகங்கள் ஆண்டுதோறும் 2 லட்சம் பட்டதாரிகளை உற்பத்தி செய்கிறது. வேலையின்மை படித்தவரிடையே அதிகமாகப் பரவி வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம். தற்போது வேலையில் இருப்பவர்களின் எண்ணிக்கை 16 மில்லியன்கள். வேலையில் இல்லாதவர்களின் எண்ணிக்கை 15 மில்லியன்கள். அதாவது கிராமப் பகுதியில் 8 மில்லியன்களும், நகர்ப்பகுதிகளில் 7 மில்லியன்களும் ஆகும். படித்தவருக்கு ஆண்டு ஒன்றுக்கு 1 மில்லியன் அளவில் வேலைவாய்ப்பு பெருகவேண்டும். இல்லையெனில் 4-வது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் வேலையின்மையின் எண்ணிக்கை 28 மில்லியன்களாக உயரும். தரமான மக்கள்தொகை ஒரு நாட்டின் செல்வமாகும். இந்திய நாட்டில் மக்கள்வளம் வீணடிக்கப்படுகிறது. மக்களின் வளத்தை நன்முறையில் பயன்படுத்தி உற்பத்தியை அதிகரிக்கலாம். தேசிய வருமானத்தை உயர்த்தலாம். இதனால் வருமானமும் வாழ்க்கைத்தரமும் உயரும். படித்தவர்களுக்கு வேலையில்லையேல், அவர்களுடைய நுட்ப அறிவியலையும், சமூக அறிவியலையும் வீணடிப்பதாகும். ஒருவனுக்குத் தக்க சமயத்தில் வேலை கிடைக்கவில்லையென்றால் அவன் நாளடைவில் வேலையே செய்யமுடியாத நிலையை அடைகிறான். அதன் காரணமாக அவன் ஆற்றல், அறிவு, ஒழுக்கம், உடல்நலம் எல்லாமே குறைகின்றன. ஆகவேதான் இதை ஒரு கொடிய வியாதியாகக் கருதப்படுகிறது. படித்தவருக்கு வேலைவாய்ப்பு இல்லாத காரணத்தால் சிலர் தங்களின் மதிப்பையும், படிப்பையும் பாராமல் குறைந்த ஊதியம் உள்ள வேலைகளை ஒப்புக்கொள்கிறார்கள். வேலை வாய்ப்பு பெருக பல காரியங்களை மேற்கொள்ளுதல் நலமாகும். முதற்கண் வேலை தேடித்தரும் நிறுவனங்கள் பல இடங்களில் ஏற்படுத்தி வேலையில்லாதவர்களின் குறைகளைக் கவனிக்கலாம். அவர்களுக்கு வேலை தேடியும் தரலாம், தகுந்த வழி வகைகளையும் கூறலாம். அடுத்து விவசாயக் கருவிகள், தொழிற்சாலைக்கு வேண்டிய உபகரணங்கள், கருவிகள், போர்க் கருவிகள் இவற்றுக்குத் திட்டக்காலத்தில் முக்கியத்துவம் கொடுத்து அதற்குண்டான தொழிற்சாலைகளை அதிகரித்தால் பலருக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும். எல்லோருமே அரசாங்க வேலையை நாடி நிற்காமல் செல்வம், வசதி படைத்தோர்கள் சிறிய தொழிற்சாலைகள், நிறுவனங்கள், குடிசைத்தொழில்கள் ஏற்படுத்தி அதன்மூலமாகப் பலருக்கு வேலைகள் கொடுக்க முன்வரவேண்டும். குடிசைத் தொழிலைச் சிறப்பாகக் கொண்டு முன்னேறிய ஜப்பானை மறக்கமுடியாது. மக்களுக்கு நல்ல வருமானம் கிடைப்பு

தல்லாமல் எல்லோரும் ஓய்ந்த நேரங்களில், முழு நேரங்களில் தொழில்களில் ஈடுபடுகின்றனர். பெரிய திட்டங்களைச் செயல் படுத்தல், குறிப்பாக கங்கை காவேரியை இணைத்தல், கிழக்கு கடற்கரையில் கல்கத்தாவையும் திருவனந்தபுரத்தையும் இணைத் தல், மேற்கு கடற்கரையில் பம்பாய் திருவனந்தபுரத்தை இணைத் தல், மீட்டர்கேஜ் இருப்புப் பாதைகளை பிராட்கேஜ் இருப்புப்பாதை களாக மாற்றுவது, நீண்டசாலைகள் கால்வாய்கள் அமைத்தல் இவற்றின் மூலமாகப் பலருக்கு வேலை தேடித்தருவதுடன், இந்தியா வில் ஐக்கியம், ஒற்றுமை இவற்றை நிலைநாட்ட முடியும். தனியா ருக்கும், தொழில் அதிபர்களுக்கும் சிலகாலம் வரையில் லாபத்தின் மீது வரி போடாமல் இருத்தல் அல்லது கம்பெனி லாபத்தில் 30 சதவிகிதம்வரையில் வரிச்சலுகை அளித்திடல் வேண்டும். மேலும் அரசாங்கம் தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய உதவிகளை யும், உற்சாகத்தையும் அளித்திடல்வேண்டும். சேமிப்பு முறை களைத் துரிதப்படுத்தல், பாங்குகளை மேலும் திறந்திடுதல், முதலீடு அதிகரிப்பு போன்ற நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவேண்டும். சமூகநலத் திட்டங்களைப் பின்பற்றுதல்வேண்டும். குறிப்பாக வேலையில்லாதவர்களுக்கு நிவாரணம் அளித்தல். க்ஷேமநல நாடு களான இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் வேலையில்லா தவர்களுக்கு நிவாரண நிதி அளிக்கிறார்கள். பட்டப் படிப்புக்குத் தகுந்தவாறு சில துறைகளை வகைப்படுத்தல்வேண்டும். உதாரண மாக, பொருளாதாரம், வாணிகம் படித்தவர்களுக்கு பாங்குகள் இன்சூரன்ஸ் கம்பெனிகள், தமிழ் முதற் பாடமாகக் கொண்ட பட்டதாரிகளுக்கு அறநிலைய இலாகாவில் வேலைகள் கொடுத்திடல் வேண்டும். அப்போது தான் திறமை, உற்சாகம், அதிக உற்பத்தி இவற்றினைக் காணமுடியும். எனவே, வேலையின்மையைப் போக்க வேண்டுமானால் அதைப் பல கோணங்களிலிருந்துதான் தாக்க வேண்டும். அன்றுதான் வளமை பொங்கும், தொழில் ஓங்கும்; வருமானம் பெருகும்; வாழ்க்கைத்தரமும் உயரும்.

# 25. இந்தியா—ஒரு பின்தங்கிய பொருளாதாரம்

இந்தியா பின்தங்கிய நாடு என்பதைக் கீழ்க்கண்ட காரணங்களைக் கொண்டு நிரூபிக்கலாம்:

1. இந்தியாவின் தலா வருமானம் உலகிலேயே மிகக்குறைவு: ஐக்கிய நாடுகளின் அறிக்கையின்படி இந்தியாவின் தலா வருமானம் 60 டாலர்கள். ஆனால் அமெரிக்காவில் 1,870 டாலர்கள், இங்கிலாந்து 780 டாலர்கள். அமெரிக்கா, கனடா, இவற்றின் தலா வருமானம் இந்தியாவின் தலா வருமானத்தைப்போல் முறையே 30 மடங்குகள், 20 மடங்குகள் பெரியதாகும். ஏழை நாடுகளில் கூட இந்தியாவின் தலா வருமானத்தைவிட அதிகமாக உள்ளது. உதாரணமாக, இந்தியாவின் தலா வருமானம் இஸ்ரேலின் தலா வருமானத்தில் எட்டில் ஒரு பங்கு; ஜப்பானின் வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு; இலங்கை வருமானத்தில் பாதியாகும். பின்தங்கிய நாடு எனக் கூறுவதற்கு 500 டாலருக்குக் குறைவாகத் தலாவருமானம் இருந்தால் கூறலாம்.

1958ஆம் ஆண்டின் ஐக்கிய நாடுகளின் அறிக்கைப்படி ஏழு நாடுகளின் தலா வருமானம் 1,000 டாலருக்குமேல் உள்ளன. அவையாவன: அமெரிக்கா, நியூஜிலாந்து, கனடா, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, சுவீடன், சுவிட்சர்லாந்து. 100 டாலருக்குக் குறைவாக உள்ள நாடுகள் தாய்லாந்து, பிலிப்பைன்ஸ், பொலிவியா, காங்கோ, சீனு, இந்தியா பாகிஸ்தான், இந்தோனேஷியா, பர்மா முதலியன. 1958-ல் நம் நாட்டின் தலா வருமானம் 57 டாலர்கள் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. 1965-66 ஆண்டில் சமீப காலத்தில் இந்தியாவின் தலா வருமானம் 73 டாலர்கள்; பாகிஸ்தான் 108 டாலர்கள்; இலங்கை 132 டாலர்கள்; அமெரிக்கா 3,303 டாலர்கள்;

இங்கிலாந்து 1,560 டாலர்கள்; ஜப்பான் 921 டாலர்கள்வளமான நாடுகள் உலகில் பெரும்பாலும் மிதமான சீதோஷ்ணப் பகுதியில் உள்ளன. ஆனால் பின்தங்கிய நாடுகள் பெரும்பாலும் அதிக உஷ்ணப் பகுதி அல்லது அதிகமான குளிர்ப்பகுதிகளில் உள்ளன. செழுமையான பிரதேசங்களில் மொத்த உற்பத்தியின் விகிதம் 2·5 சதவிகிதம் முல் 3 சதவிகிதம்வரை உயர்ந்துள்ளன. ஆனால் ஏழ்மை நாடுகளில் மொத்த உற்பத்தியின் விகிதம் 1·5 சதவிகிதத்திற்குக் குறைவு. தலா வருமானத்தை வைத்துக்கொண்டு வளர்ந்த பொருளாதாரம், பின்தங்கிய பொருளாதாரம் என்பதை அறிந்து கொள்ள முடியும்.

2. இந்தியா முதன்மையான பொருள்களை உற்பத்திசெய்யும் நாடு: விவசாயம்தான் பெரிய தொழிலாக உள்ளது. 70 சதவிகித மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். ஆனால் அமெரிக்காவில் மொத்த மக்கள்தொகையில் 12 சதவிகிதம் விவசாயத்தில் ஈடு பட்டுள்ளார்கள். அதேபோல் இங்கிலாந்தில் 5 சதவிகித மக்கள் தான் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். அதே நேரத்தில், அவர் களின் தலா உற்பத்தித்திறன் விவசாயத்தில் அதிகம். விவசாயப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டமையால் இந்தியா பின்தங்கிய நாடாகும். விவசாயப் பிற்போக்கு பின்தங்கிய பொருளா தாரத்திற்கு முக்கிய அறிகுறியாகும். மக்கள்தொகை வளர்ச்சியால் சென்ற 20 ஆண்டுகளாக நிலத்தின்மீது மக்கள்அழுத்தம் அதிக மாகிறது. உபரி மக்கள்தொகையை வேறு திசைகளில் திருப்ப மாற்று தொழில்வசதிகள் கிடையாது. உச்ச நில உழைப்பு விகிதம், துண்டாக்கப்படுதல், பங்கிடப்படுதல், நிலங்களைச் சிறு துண்டுகளாகச் சிதறுவதால் யந்திரங்களைப் பயன்படுத்த முடியவில்லை. விவசாயம் திறமையற்ற முறையில் நடை. பெறுகிறது. இன்றும் பழங்கால முறைகளைப் பின்பற்றுவதைக் காண்கிறோம். டிராக்டர்கள், உரங்கள், அதிக அளவில் பயன் படுத்தவில்லை. திரு கால்பிரெய்த் (Galbraith) அவர்கள் சரியாகச் சொல்லிப் போந்தார்: “சுத்தமான முழு அளவில் விவசாயத்தை நம்பியிருக்கும் நாட்டில் விவசாய முன்னேற்றமில்லை.”

விவசாய உற்பத்தியில் மற்றநாடுகளைவிட இந்தியா சற்றுத் தேவலாம். இருந்தபோதிலும் தானியங்களின் உற்பத்தி ஹெக்டார் ஒன்றுக்கு போதிய அளவில் திருப்தி தரக்கூடிய அளவில் இல்லை; குறைவான பலனைத்தான் தருகிறது. டாக்டர் கிளவுஸ்டோன் (Dr. Cloustone) குறிப்பிடுவது யாதெனில், “இந்தியாவில் பின் தங்கிய மக்கள் உள்ளனர். அதனுடைய தொழில்களும் பின்தங்கிய நிலையில் உள்ளன. ஆனால் துரதிருஷ்டவசமாக விவசாயம் மட்டும் தப்பித்துக்கொண்டது.” முக்கிய தானியங்களின் உற்பத்தி

ஹெக்டார் ஒன்றுக்கு 33சதவிகிதம் முதல் 25 சதவிகிதம் வரை உள்ளது. ஆனால் முன்னேறிய நாடுகளில் உற்பத்தியின் அளவு 50 முதல் 33 சதவிகிதம்வரை உள்ளது. இந்தியாவில் தனி விவசாயியின் உற்பத்தித்திறன் நியூஜிலாந்து விவசாயியின் உற்பத்தியைவிட 34 மடங்கும், இங்கிலாந்தின் விவசாயியைவிட 20 மடங்கும், ஜப்பான் விவசாயியைவிட 22 மடங்கும் குறைவாக உள்ளது.

விவசாயத்தை மேற்கொண்டிருக்கும் மக்களின் தலா வருமானம் மற்ற தொழில்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கும்போது மிகக்குறைவாக உள்ளது. விவசாயத்தில் ரூ. 500/-, சுரங்க வேலையில் ரூ. 1,700/-,ரயில்வே வேலையில் ரூ. 1,600/-எனக்கணக் கிடப்பட்டுள்ளது. நிலங்களை நல்ல முறையில் பயன்படுத்தவில்லை. பல தடைகளின் காரணமாக நிலவளங்களை முழுஅளவில் பயன் படுத்தமுடியவில்லை. நிலத்தின் செழிப்புத்தன்மையும் குறைவாக உள்ளது. நிலத்தின் அளவு மிகச்சிறியது; பொருளாதார அளவுக்கும் குறைவானது.

விவசாயிகளின் நிலம் 5 முதல் 8 துண்டுகளாகப் பல இடங்களில் பரவி இருக்கின்றன. இதனால் நேரம், சக்தி ஆகியவை பயனற்றமுறையில் உபயோகப்படுத்தப்படுகின்றன. நீண்ட தூரமும் நடக்கவேண்டியுள்ளது. குறிப்பாக மூலப்பொருள்கள், உணவு தானியங்கள்தான் இந்திய விவசாயத்தால் கிடைக்கக் கூடியவை. அதிலும் ஏக்கர் ஒன்றுக்கு உற்பத்தித்திறன் மிகவும் குறைவு. நிலம் விவசாயிகளின் விகிதம், மட்டமான நிலங்கள் திறமையற்றமுறைகள், விவசாயிகளின் குறைவான தரம், குறைவான முதல் உபயோகித்தல், குறைவான நுட்பம் ஆகியவை உற்பத்தித்திறன் குறைவுக்குக்காரணங்கள்.

3. **அதிக மக்கள்தொகை வளர்ச்சி:** 1961ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கின்படி மக்கள்தொகை 439 மில்லியன்கள். சமீப காலத்தின் கணக்கின்படி 55கோடிக்கு மேல் இந்தியா அதிக மான மக்கள்தொகையைக் கொண்டதுமல்லாமல் அதனுடைய வளர்ச்சியும் அதிகம். மக்கள்தொகை வளர்ச்சி விகிதம் 1941-42 ஆண்டுக்கு 1·25 சதவிகிதத்திலிருந்து 1951–60 ஆண்டுகளுக்கு 2·15 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. மக்கள் தொகை வெடிப்பு பொருளாதாரப் பளுவை அதிகரிக்கிறது. பல பிரச்சினைகளைப் பொதுத்துறைகளில் உண்டுபண்ணும். அதிகரிக்கும் உற்பத்தியை அதிகரிக்கும் மக்கள்தொகை சாப்பிட்டுவிடும். அதனால் பொருளாதாரம் இந்தியாவில் முன்னேறாமல் நிரந்தரமாக உள்ளது. மக்கள்தொகை வளர்ச்சி ஆண்டுக்கு 2·4 சதவிகிதம்

விவசாய உற்பத்தி ஆண்டுக்கு 1 சதவிகிதம் எனக் கணக்கிடப் பட்டுள்ளது. பின்தங்கிய நாடுகளில் மொத்த மக்கள்தொகையில் அதிகமான பகுதியினர் இளம்வயதில் உள்ளவர்கள், குறிப்பாக 15 வயதுக்கும் குறைவாக இருப்பவர்கள். 15 வயதுக்குக் குறைவாக உள்ளவர்களின் சதவிகிதம் மொத்த மக்கள்தொகையில் 40 சதவிகிதம். ஆசியா, ஆஃப்ரிக்கா, லத்தீன்அமெரிக்கா போன்ற நாடுகளில் இப்படி உள்ளன. அமெரிக்காவில் 25 சதவிகிதம், இங்கிலாந்தில் 23 சதவிகிதம். சராசரி ஆயுட்காலம் அமெரிக்காவில் 66 ஆண்டுகள், இங்கிலாந்தில் 67, எகிப்தில் 35, இந்தியாவில் 45 ஆகவும் உள்ளன. மக்கள்தொகை பிரமிடு பின்தங்கிய நாடு களில் அகலமான அடித்தளத்தைக் கொண்டும் உச்சியில் குறுகியும் அமையும். ஆனால் முன்னேற்றம் அடைந்த நாடுகளில் மக்கள் தொகை பிரமிடு அடித்தளம் குறுகலாகவும், உச்சியில் டூம் அமைப்பிலும் அமையும்.




பின்தங்கிய நாடுகளின் மக்கள்தொகை பிரமிடு

முன்னேற்றம் அடைந்த நாடுகளின் மக்கள்தொகை பிரமிடு

4. வேலையின்மை, வேலைக்குறைவு ஆகியவை இந்தியப் பொருளா தாரத்தின் சிறப்பு அம்சங்கள்: மக்கள்தொகை வளர்ச்சியால், உழைப்பின் அளிப்பு அதிகம். வளர்ந்துவரும் மக்கள்தொகைக்கு ஏற்றவாறு பயனுடைய வேலைவாய்ப்புகளை ஏற்படுத்துவது கடினமா கும். மூன்றாவது திட்டக்காலத்தில் 17 மில்லியன் அதிகப்படியான மக்கள் வேலையில்லாமல் இருந்தனர். இன்றைக்கு இந்தியாவில் வேலையின்மையும் வேலைக்குறைவும் கொடிய பிரச்சினைகளாக உள்ளன. இந்தியாவில் விவசாயத்தில் உபரி மக்களால் உற்பத்தி உயரவில்லை. இவர்களை விவசாயத்திலிருந்து நீக்கி வேறு தொழில் களில் ஈடுபடுத்தவேண்டும். அதிகமான மக்கள் விவசாயத்தில் இருப்பதால் பொருளாதார முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை களாக உள்ளன. பேராசிரியர் லிபின்ஸ்டன் (Prof. Liebenstein)

பின்தங்கிய நாடுகளில் மக்கள்தொகை சம்பந்தப்பட்டபண்புகளை விளக்கியுள்ளார்.

1. அதிகப் பிறப்புவிகிதம், வழக்கமாக 1000க்கு 40க்குமேல்.
2. அதிக இறப்பு விகிதம், குறைவான ஆயுட்காலம்.
3. போதிய போஷிப்பு இன்மை, சத்துணவு இல்லாமை.
4. சுகாதார, ஆரோக்கிய வசதிகள் குறைவு.
5. கிராமப்புறங்களில் அதிக மக்கள்தொகை.

இந்தியா அதிக மக்கள்தொகை, அதிக மக்கள்அழுத்தம் கொண்டது. ஆனால் பின்தங்கிய நாடுகளில் சில அதிக மக்கள் தொகை கொண்டவை அல்ல: ஸிபாவில் மக்கள் நெருக்கம் ஒரு சதுர மைலுக்கு 1, பிரேசில் 7, சிசிலி 9, எகிப்து 24, பர்மா 29, இந்தோனேஷியா 56, பிலிப்பைன்ஸ் 74 எனவாகும். சில பின் தங்கிய நாடுகளில் இந்தியாவைவிட மக்கள்நெருக்கம் அதிகம்: இலங்கை 136, டெய்வான் 257, இந்தியா 384. சில பின் தங்கிய நாடுகள் அதிகமான மக்கள்நெருக்கத்தைக் கொண்டதால் அது பின்தங்கிய நாடுகளுக்கு அடையாளம் எனக் கூறிவிட முடியாது. ஆசியாவில் சில நாடுகளில் அதிக ஜன அடர்த்தி இருந்தாலும், மக்கள்தொகை வளர்ச்சி விகிதம் கனடா, ஆஸ்திரேலியாவை விடக் குறைவு. மக்கள்தொகை வளர்ச்சிக்கு ஏற்றவாறு நாடுகளை மூன்று வகையாகப்பிரித்துள்ளார்கள்:

1. குறைவான வளர்ச்சி மக்கள்தொகை கொண்டவை.
2. அதிகமான வளர்ச்சி மக்கள்தொகை கொண்டவை.
3. மாற்ற நிலையில் உள்ளவை.

ஐரோப்பா, வடஅமெரிக்கா குறைவான மக்கள்தொகை; ஏனெனில் இறப்பு விகிதம்குறைவானது. ஆஃப்ரிக்கா, ஆசியா அதிக மான வளர்ச்சி மக்கள்தொகை. மாற்ற நிலையில் உள்ள நாடுகள் ரஷ்யா, கிழக்கு ஐரோப்பா, லத்தீன்அமெரிக்கா, ஜப்பான் இங்கு இறப்பு விகிதங்கள் குறைய ஆரம்பித்து விட்டன. இந்தியா இரண்டாவது வகையைச்சேர்ந்தது. 1960-61 ஆம் ஆண்டில் மக்கள் வளர்ச்சி விகிதம் 2·7 சத விகிதம், இந்தியாவில் பிறப்பு விகிதம்

அதிகம். 1,000 பேர்களுக்கு 42 பிறப்பு. அதைப்போல் பின் தங்கிய நாடுகளில் பிறப்பு விகிதம் 40முதல் 45வரை உள்ளது. ஆனால் இறப்பு விகிதம் குறைந்துவிட்டது. 1911முதல் 1921வரை இறப்பு விகிதம் 1,000 பேர்களுக்கு 48·6 சதவிகிதம். 1961முதல் 1966வரை இறப்பு விகிதம் 1,000 பேர்களுக்கு 17·2 சதவிகிதம். அதன் காரணமாக உச்ச பிறப்பு விகிதத்திற்கும். தாழ்ந்த இறப்பு விகிதத்திற்கும் இடைவெளி அதிகமாகும். அதிகமான மக்கள்தொகை வளர்ச்சியின் கட்டத்தை எடுத்துக் காட்டுகிறது. பின்தங்கிய நாடுகளில் பெரும்பாலும் மக்கள் தரக் குறைவு. பெரும்பாலோர் பின்தங்கிய நிலையில் உள்ளார்கள். மருத்துவ வசதிகள் குறைவு, அற்ப ஆயுட்காலம், மக்கள்தொகை பிரமிட்டில் அந்திய காலத்தில் வாழும் மக்கள் மிகச்சொற்பம், வேலைசெய்யும் மக்களின்தொகையில் விகிதாசாரம் குறைவு. மேலும் எத்தனையோ பேர்களை ஆதரிக்க வேண்டியுள்ளது. பலபேர் ஒருவரின் வருமானத்தை நம்பி இருக்க வேண்டியுள்ளது. கிராமப் புறங்களில் வசிக்கும் மக்கள்தொகை 83%; நகர்ப்புறங்களில் வசிக்கும் மக்கள்தொகை 1901ஆம் ஆண்டில் 11 சதவிகிதம்; இப்போது 17 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. அறியாமை விகிதம் அதிகம். இந்தியாவில் தற்சமயம் 82 சதவிகிதம் அறியாமை உலகில் உள்ளனர். இந்தோனேஷியாவில் 92 சதவிகிதம், எகிப்தில் 75 சதவிகிதம் அறியாமையில் உள்ளார்கள்.

5. **முதல் பற்றுக்குறை:** பின்தங்கிய நாடுகளில் முதல் பற்றுக் குறை உண்டு. தலா முதலீட்டின் தொகை மிகவும் குறைவு. ஐக்கிய நாடுகளின் பொருளாதாரத்துறைக் குறிப்பின்படி 1949-ல் உண்மையான முதல் நபர்ஒன்றுக்கு ஆசியாவில், கிழக்குநாடுகளில் அமெரிக்காவின் முதலீட்டில் 10சதவிகிதமாகும். முதாலாக்கம் குறைவாகவுள்ளது: பல பின்தங்கிய நாடுகளில் முதலாக்க விகிதம் 5 முதல் 10 சதவிகிதம்வரை உள்ளது; ஆனால் முன்னேற்ற நாடுகளில் 15 முதல் 20 சதவிகிதம் வரை உள்ளது. பாகிஸ்தான், இந்தியா முதலீட்டின் விகிதம் மொத்த வருமானத்தில் 6 சதவிகிதம் முதல் 8 சதவிகிதம் வரைதான் இருக்கிறது. ஆனால் அமெரிக்கா, கனடா, மேற்கு ஐரோப்பா முதலிய நாடுகளில் 15 முதல் 18 சதவிகிதம் வரையும், ஜப்பானில் 28 சதவிகிதமும் உள்ளன. குறைவான முதலாக்கத் திற்கு இரு காரணங்கள் உண்டு. மக்கள் முதலீடு செய்ய விருப்பம் இல்லாமல் இருப்பது, குறைவான துய்ப்பின் நாட்டம், குறைவான சேமிப்புசக்தி. குறைவான வருமானம் உள்ளபடியால் அதிகமான இறுதிநிலை துய்ப்பின் நாட்டம். அதன் காரணமாகக் குறைவான சேமிப்பு ஏற்படுகிறது. முதலீடு செய்யத் தூண்டுதலும் குறைவு,

அங்காடியின் அளவும் குறைவு என்பது புலனுகிறது. மொத்த நாட்டு வருமானத்தில் சேமிப்பு 5 சவிகிதத்திற்கும் குறைவாக உள்ளது. குறைவான சேமிப்பு விகிதத்தால் புதிய தொழில்களுக்கு அதிக முதலீடு செய்ய முடியாது. முதல் பற்ருக்குறை குறைவான சேமிப்பை உண்டுபண்ணும். சேமிப்பு வருமான விகிதம் குறைவுக்குக் குறைவான தலா வருமானம், செல்வத்தில் வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள், உச்ச வரிவிதிப்பு போன்றவை சிறப்பான காரணங்களாகும். மேலும் இந்திய மக்கள் கீழ்க்கண்ட குறைகளையும் பெற்றுள்ளனர். உழைப்பின் திறன்குறைவு, நகர முடியாதத் தன்மை, வேலைகளின் பகுப்புமுறை, குறைவான வியாபாரம், தொழில் துணிவோர் இல்லாமை, பொருளாதாரம் அறியாமை, கல்வி இல்லாமை, பிடிவாதம், எதிர்காலத்தைக் குறைவாக எண்ணுதல் போன்ற பல.

6. **மக்களின் தரக்குறைவு:** பெரும்பாலான மக்களுக்குக் கல்வி இல்லை. பிடிவாதம், அறியாமை அதிகம் குடிகொண்டுள்ளன. 1961ஆம் ஆண்டில் படித்தவர்களின் எண்ணிக்கை மொத்த மக்கள்தொகையில் 24 சதவிகிதமாகும். ஆனுல் இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் படித்தவர்களின் எண்ணிக்கை 95 சதவிகிதமாகும்.

7. **குறைவான நுட்ப அறிவு:** மக்கள் இன்னமும் பழைய உற்பத்தி முறைகளைப் பின்பற்றுகிருர்கள். புதிய நுட்பமுறைகள், நவீன விஞ்ஞான முறைகளைப் பின்பற்றவில்லை. போதிய பயிற்சி முறைகளும் குறைவாக உள்ளன. குறைவான உற்பத்திக்கு நுட்பக் குறைவுதான் காரணமாகும். அதனுல் விவசாயம், தொழில் இவற்றில் பேரளவு உற்பத்தி இல்லை.

8. **சரியான விஞ்ஞான ரீதியில் பொருளாதார அமைப்பு இல்லை:** நவீன பாங்கு வசதிகள் கிடையாது. பண்டமாற்று இன்னமும் பின்பற்றப்படுகிறது. விவசாயத்தைப் பெரும்பாலோர் நம்பியுள்ளார்கள். நீண்டகால, குறுங்காலத் தவணைகளில் நிதி வசதிகள் தேவை. கிராமக்கடன் வசதிகளை அதிகரிக்கவேண்டும். சமூகப் பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் உள்ளது. உலகில் சில நாடுகள் முன்னேறிவருகின்றன. 1967-ல் உள்ள பிரேசிலைப் பிடிக்கவும், ஜப்பானைப் பிடிக்கவும் இந்தியாவிற்கு முறையே 20 ஆண்டுகள், 44 ஆண்டுகள் பிடிக்கும். 1948ஆம் ஆண்டில் இருந்த இங்கிலாந்தை எட்டிப்பிடிக்கவும் அமெரிக்காவைப் பிடிக்கவும் இந்தியாவிற்கு முறையே 47 ஆண்டுகள், 55 ஆண்டுகள் பிடிக்கும்.

பின் தங்கிய நாடுகளின் அடிப்படையான அம்சங்கள் கீழே வரிசைப்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளன:

1. முதன்மையான பொருள்கள் உற்பத்தி.
2. விவசாயத்தைப் பெரிதாகக் கொண்ட பொருளாதாரம்.
3. விவசாயத்தில் குறைவான உற்பத்தித்திறன்.
4. குறைவான வருமானம்.
5. அதிகமான மக்கள்தொகை வளர்ச்சி, உயர்ந்த பிறப்பு இறப்பு விகிதங்கள்.
6. இயற்கை வளங்களை நன்முறையில் பயன்படுத்தாமை.
7. குறைவான முதலாக்க வீதம்.
8. பரந்த அளவில் கல்வி இல்லாமை.
9. போதுமான போக்குவரத்து, செய்தித்துறை வசதிகள் இன்மை.
10. குறைவான உழைப்பின் திறன்.
11. தொழில் முன்னேற்றமின்மை.
12. பழைய நுட்ப முறையைப் பின்பற்றுதல்.
13. மூலப்பொருள்கள் ஏற்றுமதி, முடிவடைந்த பொருள்கள் இறக்குமதி.
14. செம்மையற்ற பண அங்காடி.
15. நுட்ப அறிவு, பயிற்சிவசதிகள் இல்லாமை.
16. தொழில்துணிவோரின் திறமைக்குறைவு, ஆற்றல் குறைவு.
17. பின்தங்கிய சமூக, அரசியல் அமைப்புகள்.
18. கண்டிப்பான, பிடிவாதமான சமூக நிலையங்கள், சாதி முறை, கூட்டுக்குடும்பமுறை.
19. பொருளாதார வாழ்வில் ஜாதி, மதம் தாண்டவம் புரிதல்.
20. இயந்திரங்கள், நவீனமுறைகள் இல்லாமை.

# 26. இந்தியா—வளரும் பொருளாதாரம்

இந்தியா எல்லாவிதமான பின்தங்கிய நாட்டின் அம்சங்களைப் பெற்றிருந்தபோதிலும், அது நிரந்தரமான, தேங்கி நிற்கும் பொருளாதாரத்தைப் பெற்றிருக்கவில்லை. 1951 ஆம் ஆண்டு முதல், அதாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் செயல்பட ஆரம்பித்தது முதல் இந்தியப் பொருளாதாரம் முன்னேற்றப் பாதையை நோக்கி வளர்ந்துவருகிறது. ஆகவே இந்தியாவை வளரும் பொருளாதாரம் எனக் கூறுவது ரொம்பவும் பொருத்தமாக உள்ளது. கீழேயுள்ள காரணங்களைக் கொண்டு இந்தியா பொருளாதாரத்தில் முன்னேறுகிறது எனக் கூறலாம்.

1. **தேசிய வருமான வளர்ச்சி:** தேசிய வருமானம் வளர்ந்து கொண்டே வருகிறது. கடந்த பதினைந்து ஆண்டு காலமாக திட்டக்காலத்தில் நம்முடைய தேசிய வருமானம் 64 சதவிகிதம் அதிகரித்துள்ளது. அதாவது தேசிய வருமானவளர்ச்சி ஆண்டு ஒன்றுக்கு 4·3 சதவிகிதமாகும்.

2. **முதலீட்டின் அதிகரிப்பு:** வளர்ந்து வரும் தேசிய வருமானத்திற்கு ஏற்றவாறு முதலீட்டு விகிதமும் அதே விகிதாசாரத்தில் திட்டக்காலத்தில் வளர்ந்துள்ளது. தேசிய வருமானத்தின் முதலீட்டின் விகிதம் 1950-51–ல் 5·6 சதவிகிதத்திலிருந்து 1962-63-ல் 12·7 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

3. **விவசாய உற்பத்தியின் அதிகரிப்பு:** இந்தியப் பொருளாதாரத்தில் விவசாயப்பொருளாதாரம் வளர்ந்துவருகிறது என்பதில் சந்தேகமில்லை. விவசாய உற்பத்தியின் குறியீட்டு எண் விகிதம் 1950-51 ஆம் ஆண்டில் 95·6 சதவிகிதத்தில் இருந்தது. (ஆரம்பம் ஜூன்மாதம் 1950-ல் 100) ஆனால் 1964-65-ல் 157 6 சதவிகிதமாக உயர்ந்தது ஏறக்குறைய 62 சதவிகிதம் உயர்ந்துள்ளது. ஆகவே திட்டக்காலத்தில் விவசாய உற்பத்தி அதிகரித்துக் கொண்டு வந்துள்ளது.

4. **விவசாயத்தை நவீனப்படுத்தல்:** திட்டக்காலத்தில் விவசாயம் மேன்மைப்படுத்தப்பட்டுள்ளது. பல நீர்ப்பாசனத் திட்டங்கள் பெரியஅளவிலும் சிறிய அளவிலும் மேற்கொள்ளப் பட்டன. அதிகப்படியான ரசாயனஉரங்களை உற்பத்தி செய்து குடியானவர்களுக்கு வினியோகம் செய்யப்பட்டது. மேலும் விவசாயத்தில் நாளுக்கு நாள் ரசாயனஉரத்தை அதிகமாகப் பயன் படுத்தி உற்பத்தியை அதிகரித்தார்கள்: டிராக்டர்கள், எந்திரங் களையும் விவசாயத்தில் உபயோகித்தார்கள். முன்னேற்றமுறை களும், நவீனமுறைகளும், இருபோக மூன்றுபோக சாகுபடித் திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டன.

5. **தொழில் முன்னேற்றம்:** தொழிற்சாலைகளிலும் உற்பத்தி அதிகரித்தது தொழில் உற்பத்தி பொருளாதார முன்னேற்றத்தின் சிறப்பு அம்சமாகும். மேலும் இந்தியாவில் இதன் உற்பத்தி அதிக மாகவும், துரிதமாகவும் செயல்பட்டது. தொழில் உற்பத்தியின் குறியீட்டுஎண் 1951 ஆம் ஆண்டில்73 5சதவிகிதமாக இருந்தது. ஆனால் 1965-ல் 185 சதவிகிதமாக உயர்ந்தது. அதாவது 152 சதவிகிதம் உற்பத்தியில் கூடுதல் கண்டது.

6. **சமூக முன்னேற்றம்:** சமுதாய நலனுக்கு அதிகச்செலவு கள் செய்யப்பட்டன. மேலும் போக்குவரத்து, செய்தித்துறை, வர்த்தகம், வாணிகம், இயக்குச்சக்தியின் அளிப்பு, மனிதனின் சக்தி யாவற்றிலும் முன்னேற்றம் கண்டனர். மேலேயுள்ள துறை களில் நல்ல முன்னேற்றமும் ஏற்பட்டது. பொருளாதார வளர்ச்சித் திட்டம் செயல்பட்ட நாள்முதல் பொருளாதாரம் முன்னேறி வருகிறது. இந்தியா பின்தங்கிய நாடாக இருந்தபோதிலும் அது தேக்கமானப் பொருளாதாரத்தைக் கொண்டிருக்கவில்லை.

பின்தங்கிய நாடுகளின் பொருளாதாரத்தை நான்கு விதமாக வகைப்படுத்தலாம்:

1. **தொடர்ந்துவளரும் பொருளாதாரம்:** நாடுகள் இன்னும் வளங்களை நன்முறையில் பயன்படுத்தியும், தலாவருமான உயர் வுக்கு பாடுபட்டும் வருகின்றன. இலங்கை, பிரேசில், பிலிப்பைன்ஸ் கொலம்பியா போன்ற நாடுகள் இதற்கு உதாரணங்களாகும். இத்தாலி, துருக்கி போன்ற நாடுகளில் போதுமான அளவுக்குச் சேமிப்பு, வரிகளின்மூலம் வருமானம், வெளிநாட்டு உதவிகள் யாவும் உள்ளன. முதலாக்கம், திறமையான நுட்ப உழைப்பு இவை தேவைப்படுகின்றன.

**2. துரிதப்படுத்தும் வளர்ச்சியைக்கொண்ட பொருளாதாரம்:** கீழ்க்கண்ட தேசங்களில் போதிய அளவுக்கு, மக்கள்தொகைக்கு ஏற்றவாறு இயற்கை வளங்கள் கிடையாது. ஆகவே வளர்ச்சியைத் துரிதப்படுத்தவேண்டியுள்ளது. இந்தியா, பாகிஸ்தான், பர்மா, சீனு போன்ற நாடுகளில் தலாவருமானம் ஆண்டுக்கு 100 டாலருக்கும் குறைவானதாக உள்ளது. மக்கள்தொகைக்கு வேண்டிய இயற்கை வளங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே வருமானத்தைத் துரிதப்படுத்த வேண்டும்.

**3 ஒன்றுசேர்ந்து விருத்தியடைகிற வளர்ச்சி:** ஏழ்மையான, நிலையான பொருளாதாரத்தைக் கொண்டது. தலா வருமானம், வளருவதற்கு வாய்ப்புகள் இல்லை. ஆனல் நல்ல வளங்களைப் பெற்றிருக்கும் இந்தோனேஷியா இந்தியாவைவிட, பாகிஸ்தானைவிட அதிகமான தலாவருமானம் பெற்றிருந்தபோதிலும், தலா வருமானம் வளர்வதில்லை. சில சமயங்களில், குறையவும் நேரிடுகிறது. ஆகவே வளர்ச்சியை இடைவிடாமல் விருத்தி செய்ய வேண்டும்.

**4. ஏழ்மையான பொருளாதாரம்:** சில நாடுகள் இயற்கையாகவே ஏழ்மையானவை. நல்ல வளங்கள் கிடையாது. ஆகவே தேக்கமான பொருளாதாரம் உள்ளது. இருக்கப்பட்ட வளங்களை வைத்துப் பொருளாதாரம் முன்னேற்றம் அடையச் செய்யவேண்டும். லிபியா, ஜார்டன் இதற்கு உதாரணங்களாகும்.

181

# 27. அபரீத மக்கள்தொகை

ஒரு நாடு எந்த அளவுக்கு மக்கள்தொகையைச் சமாளிக்கும் என்பது அந்த நாட்டில் கிடைக்கும் இயற்கை வளங்களையும், உற்பத்தியில் பின்பற்றும் முறைகள், வேலை செய்யும் மக்களின் திறமை இவற்றையும் பொறுத்ததாகும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் இந்தியாவிற்கு 800 மில்லியன் மக்கள் போதும்; 550 மில்லியன் மக்கள் தேவையில்லை. ஆகவே இது அதிகப்படியான மக்கள்தொகை என நமக்குத் தெரிகிறது. இதை அபரீத மக்கள்தொகையாகக் கருதுகிறோம். இன்னும் மக்கள் பெருகிச் சென்றால், ஆண்டு ஒன்றுக்கு 12 மில்லியன்முதல் 15 மில்லியன் வரை அதிகரித்தால் பல தொல்லைகளுக்கு ஆளாக நேரிடும். சமூகச் சீர்திருத்தவாதிகள், பொருளாதார நிபுணர்கள் பெரும்பாலோர் இந்தியா அதிக மக்கள்தொகை கொண்டதாகும் என நம்பிக்கை தெரிவித்துள்ளார்கள். ஆனால் இந்தியா அபரீத மக்கள் தொகையைக் கொண்டதல்ல என்று சிலர் இன்னமும் நம்புகிறார்கள். இந்தியா ஒரு பரந்ததேசம் பல்வேறு வளங்களைக்கொண்டது; ஆனால் இந்த வளங்கள் யாவற்றையும் முழு அளவில் இன்னும் உபயோகப்படுத்தவில்லை; இந்த வளங்களை நன்முறையில் உபயோகித்தால், எல்லா மக்கள்வளத்தையும் முழு அளவில் பயன்படுத்தினால் இப்போதுள்ள இந்த அதிகப்படியான மக்கள் தொகையை நல்லமுறையில் பராமரிக்க முடியும்; சௌகரியமான முறையில் பேணிக்காக்க முடியும் என்பதுதான் இவர்களின் கருத்தாகும். இந்த விளக்கத்தில் சற்று உண்மையும் உள்ளது.

ஆனால் அதே நேரத்தில் கீழ்க்கண்ட காரணங்கள் மறுக்க முடியாத உண்மையாகும். தற்போதுள்ள மக்கள்தொகை அதிகம் என்பதில் ஐயமில்லை. மக்கள்தொகை வளர்ச்சி விகிதம் அதிகமாக உள்ளது. ஆண்டுக்கு 2·5 சதவிகிதம் வளர்கிறது. அதாவது கிட்டத்தட்ட ஆண்டு ஒன்றுக்கு 13 மில்லியன் மக்கள்தொகை அதிகரிக்கின்றது. இருக்கப்பட்ட மக்களுக்கு நன்முறையில்

உணவு, இருக்க இடம், உடை இல்லாமல் மிகவும் வருந்தத்தக்க வாழ்க்கையை நடத்தி வருகிருர்கள். திட்டமிட்ட பொருளாதாரம் செயல்பட்டும், அதனுல் எவ்வளவு தேசவருமானம் உயர்ந்தபோதிலும் வளர்ந்துவரும் மக்கள்தொகை அதைச் சாப்பிட்டு வருகிறது. ஆகவே யாதொரு முன்னேற்றமும் காணமுடியவில்லை. துரிதமாக வளர்ந்துவரும் மக்கள்தொகை பல கொடுமையான பிரச்சினைகளை உண்டுபண்ணுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் இன்று எங்கும் வியாபித்துள்ளது. படித்தவர்களிடையே வேலையின்மை பெருகி வருகிறது. இளைஞர்களுக்கு மேலும் கல்வி வசதிகளை அதிகரிக்க முடியவில்லை. சட்டம், ஒழுங்கு இவற்றினை நிலைநிறுத்த முடியவில்லை. தலா வருமானம் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே செல்கிறது.

இந்தியா அதிக மக்களைக் கொண்டதா அல்லது குறைவான மக்களைக் கொண்டதா? இன்னும் இதனைச் சர்ச்சைக்குரிய விஷயமாகச் சிலர் கருதிவருகிருர்கள். கடந்த 60ஆண்டுகளில் மக்கள் தொகை வளர்ச்சி 70 சதவிகிதம் வளர்ந்து வந்துள்ளது. அதிலும் 1921ஆம் ஆண்டுக்குமுன் வளர்ச்சியின் வேகம் குறைவாக இருந்தது. சென்ற 30 ஆண்டுகளில் மக்கள் வளர்ச்சியின் வேகம் துரிதப்பட்டது. சராசரி பிறப்பு இறப்பு விகிதங்கள் அதிகம். ஏதோ கொஞ்சம் பிறப்புவிகிதம் குறைந்தது. ஆனுல் இறப்பு விகிதம் கணிசமாகக் குறைந்துள்ளது. மக்கள் தொகை வளர்கின்ற வேகத்தில் உணவு உற்பத்தியின் அளவு அதிகரிக்கவில்லை. மக்களின் வாழ்க்கைத் தரமும் உயரவில்லை. இந்தியா அபரீத மக்கள்தொகையைக் கொண்டது என்பதை உயர்ந்த பிறப்புவிகிதம், உயர்ந்த இறப்புவிகிதம், உணவு பற்ருக்குறை, பின்தங்கிய வாழ்க்கைத்தரம், குறைவான தலா வருமானம், அதிகப்படியான வேலையின்மை போன்ற பல காரணங்களைக்கொண்டு கூறலாம்.

1901ஆம் ஆண்டு முதல் 1951ஆம் ஆண்டுவரை மக்கள் தொகை வளர்ச்சி 52 சதவிகிதமாகும். அப்போது மக்கள் தொகை சற்றுக் குறைவாகவும் இருந்தது. மேலும் ஐரோப்பிய நாடுகளின் வளர்ச்சியின் விகிதத்தைவிடக் குறைவு. 1880 முதல் 1930 வரை மக்கள்தொகை வளர்ச்சி 39 சதவிகிதம்தான். இங்கிலாந்தில் 54 சதவிகிதம், ஜப்பானில் 74சதவிகிதம், அமெரிக்காவில் 186 சதவிகிதம். இந்த இடைப்பட்ட காலத்தில் ஏனைய நாடுகளின் மக்கள்தொகை வளர்ச்சியின் வேகம் இந்தியாவைவிட அதிகம் எனத் தெரிகிறது. மேலும் ஜன அடர்த்தி மற்ற நாடுகளைவிடக் குறைவானது. அதிலும் இங்கிலாந்து, பெல்ஜியம் போன்ற நாடுகளின் ஜன அடர்த்தியைவிட இந்தியாவில் குறைவாக

இருந்தது. தலா வருமானம் பல்வேறு காலங்களில் தயாரிக்கப் பட்டதாக இருந்தாலும் மற்ற நாடுகளைவிடச் சற்றுக் குறைவாக இருந்தது. அடுத்து இந்தியாவிலும் இயற்கை வளங்கள் அதிகம் இருந்தன. ஏனைய நாடுகளில் உள்ளதைப்போல் இந்தியாவிலும் வளங்கள் இருந்தன. ஆகவே சென்ற 30 ஆண்டுகளில் வளர்ந்த வேகம்தான் நம்மைப் பயத்திற்கு ஆளாக்கிவிட்டது. வளர்ச்சியின் விகிதம் நமக்குப் பெரியது அல்ல.

மக்களின் எண்ணிக்கையில் உண்மையான அதிகரிப்பு எவ்வளவு? எவ்வளவு மக்களுக்கு உணவு அளித்து காப்பாற்ற வேண்டும்? மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், மக்கள்தொகை வளர்ச்சி சதவிகிதம் ஐரோப்பிய நாடுகளின் விகிதத்தைவிடக் குறைவாக இருந்தாலும், இந்தியாவில் ஏற் கெனவே மக்கள்தொகை அதிகம். வளர்ச்சியின் விகிதம் சிறிய தாக இருந்தாலும், அது அதிகமான மக்களின் எண்ணிக்கையை எடுத்துக் காட்டுகிறது. அதிகமான மக்கள்தொகை மேலும் அதிகமாகி உள்ளது என்பதுதான் இதன் பொருளாகும். நம்மை நோக்கி இருக்கும் முக்கியமான பிரச்சினை யாது என்றால் வளர்ந்து வரும் மக்கள்தொகையைச் சமாளிக்க முடியுமா; இருக்கும் படியான வளங்களை வைத்துக்கொண்டு, வாழ்க்கைத் தரத்தை மேலும் குறைக்காமல், கட்டிக்காக்க முடியுமா என்பதுதான்.

ஐரோப்பாவில் மக்கள்தொகை அதிக விகிதத்தில் இருந்தாலும் அங்கு பொருளாதார முன்னேற்றம் இருப்பதால் மக்களின் வாழ்க் கைத்தரம் குறைவதில்லை. ஆகவே மக்கள்தொகையைப் பொரு ளாதார முன்னேற்றத்துடன் ஒப்பிடுகிறோம். சென்ற 50 ஆண்டு களாகத் தலா வருமானம் குறைந்துள்ளது. மேலும் வாழ்க்கைத் தரம் உயர்ந்ததாகத் தெரியவில்லை. பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றவாறு மக்கள்தொகை வளரவில்லை. உணவுதானியங்கள் விளையும் நிலப்பரப்பு தலாநிலம் நபர் ஒன்றுக்கு 1913–14 ஆம் ஆண்டில் ·87 ஏக்கரிலிருந்து 1942–43ஆம் ஆண்டில் ·61 ஏக்கராவாக குறைந்துவந்தது. 1921முதல் 1941வரை 20 ஆண்டுகளில் மக்கள்தொகை 27 சதவிகிதம் உயர்ந்தது. அதே நேரத்தில் விளைநிலம் 5·8சதவிகிதம் குறைந்தது. தொழில், வர்த்தகம், வாணிகம் இவற்றின்வளர்ச்சியினால் வேலை வாய்ப்புகள் அதிகரித்தும், பெருகிவரும் மக்கள்தொகைக்கு ஏற்றவாறு வேலை வாய்ப்புகளை அதிகரிக்க முடியவில்லை. சில தொழில்கள், குறிப்பாக இரும்பு, எஃகு, பருத்தி, சணல், சர்க்கரை அதிகரித்த போதிலும் தொழில்களில் வேலை வாய்ப்பு அதிக அளவில் உயர்ந்ததாகத் தெரியவில்லை. கிராமப்புறங்களில் மக்களின் அழுத்தம் அதிகரித்துக் கொண்டே போகிறது.

1951 மக்கள்தொகைக் கணக்கின்படி வேலை வாய்ப்பின் அடிப்படையில் பங்கீட்டு அளவில் மக்கள்தொகையில் அதிகமான சதவிகிதம் விவசாயத்தை நம்பியுள்ளார்கள். இருந்தபோதிலும் வளர்கின்ற மக்கள்தொகைக்கு ஏற்றவாறு உணவு அளித்திட முடியவில்லை. போதுமான உணவு அளித்திடவும், வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தியாக வேண்டும். இன்னும் குடும்பக் கட்டுப்பாடு இன்றியமையாதது என்பதை மக்கள் அறிந்தபாடில்லை. மக்கள் சிறிய குடும்பங்களின் அருமையையும், பெருமையையும் அறியவேண்டும். அதற்கான வகையில் அரசும் நல்லமுறையில் அறிவுறுத்தல்வேண்டும். தற்போது அரசும் இதனைச் செய்துவருகிறது. ஆனால் கொஞ்ச காலம் பிடிக்கும். மக்களை திருப்திபடுத்தவும், குடும்பக் கட்டுப் பாட்டின் உபயோகத்தை மக்கள் அறிவதற்கும் ஆவன செய்ய வேண்டும். அபரீத மக்கள்தொகையை நான்கு முறைகளில் தீர்க்கலாம். அவையாவன: பிறநாடுகளுக்கு மக்களை அனுப்புதல், உள்நாட்டிலேயே மக்களை மீண்டும் பங்கிட்டுப் பரவலாக்குதல், பிறப்புக் கட்டுப்பாடு, துரிதமான பொருளாதார முன்னேற்றம்.

1. **பிறநாடுகளுக்கு மக்களை அனுப்புதல் :** அதிக மக்கள்தொகையைக் குறைப்பதற்கு இது ஒரு வழியாகும். பல ஐரோப்பிய நாடுகளில் இவ்வழியைக் கடைப்பிடிக்கிறார்கள். உதாரணமாக அயர்லாந்து தன் நாட்டில் உள்ள அதிக மக்கள்தொகையை அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளுக்கு அனுப்பித் தன் பிரச்சினையைத் தீர்த்துக்கொண்டது. ஆதிகாலத்தில்கூட இந்தியாவிலிருந்து மக்கள் பல்வேறு நாடுகளுக்குச் சென்றனர். உதாரணமாக மலேயா, இலங்கை, சிங்கப்பூர், தென் அமெரிக்கா போன்ற இடங்களுக்குச் சென்றனர். ஆனால் இந்த முறையைத் தற்காலத்தில் பின்பற்ற முடியாது. ஏனெனில் பிற நாடுகளில் இந்தியர்கள் வருவதை அங்குள்ளவர்கள் விரும்புவதில்லை. அதற்கு மாறாகச் சில நாடுகளிலிருந்து இந்தியர்களை இந்தியாவிற்கு அனுப்பி வருகிறார்கள். உதாரணமாக பர்மா, இலங்கை, பாகிஸ்தான் இவற்றிலிருந்து ஏராளமான இந்தியர்கள் இந்தியாவுக்கு வந்த வண்ணமாக இருக்கிறார்கள். வெளிநாடுகளுக்குச் செல்வது என்பது தற்சமயம் இயலாத காரியம். சாதாரணமாக மனிதனின் போக்குவரத்துச் செலவு அதிகம் இருப்பதாலும் பிற நாடுகளுக்குப் போக முடியவில்லை. ஆகவே அதிகப்படியான மக்களைப் பிற நாடுகளுக்கு அனுப்பி பிரச்சினைக்குச் சரியான வழி காண முடியாது.

**2. மக்கள்தொகையை மறு பங்கீடு செய்தல்:** ஒரே நாட்டில் ஜனஅடர்த்தி அதிகமுள்ள பகுதிகளிலிருந்து ஜனஅடர்த்தி குறைவான பகுதிகளுக்கு மக்களை அனுப்பலாம். இது நம்நாட்டில் செய்யப்படும் சுலபமான வழியாகும் இந்தியாவில் சில பகுதி களில் சதுரமைலுக்கு 1,000 மக்களுக்குமேல் வாழ்கிறார்கள். அதே நேரத்தில் சதுரமைலுக்கு 50 மக்களுக்கும் கீழ் உள்ள பகுதிகளும் உள்ளன. இவ்வாறு மக்களை ஒரு பகுதியில் இருந்து மற்றொரு பகுதிக்கு அனுப்புவதால் மக்கள்தொகையின் எண்ணிக் கையில் குறைவு ஏற்படாது. மக்கள் எங்கிருந்தாலும் அவர்கள் ஒரே நாட்டில்தான் உள்ளனர் என்பதை அறியவேண்டும். ஆகவே அவ்வாறு மக்களை மறுபங்கீடு செய்தால், மக்களின் எண்ணிக்கையில் மாறுதல் ஒன்றும் ஏற்படாது. அது நிரந்தர மாகவே இருக்கும். மேலும் மக்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போகத் தூண்டுவதும் கடினமாக உள்ளது. ஏனெனில் அவர்கள் இருக்கும் இடத்தில் அந்த இடத்திற்குரிய பழக்க வழக்கங்களுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர். ஆகவே புதிய இடங்களுக்குப் போக விரும்புவதில்லை. இந்தியாவில் மக்கள் தாராளமாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகரமுடியாது. ஏனென்றால், இந்தியா பல்வேறு வெப்பதட்ப நிலைகளையும், பல்வேறு மொழி, மதம், நாகரிகம், கலாசாரம், பழக்க வழக்கங்களையும் கொண்டதாகும். ஆகவே மக்கள் இந்தியாவில் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகரமுடியாத நிலையில் உள்ளனர். மக்கள் தொகையின் அளவைக் குறைக்காவிட்டாலும், மக்களைப்பரவலாக் கவும் முடியவில்லை. ஆகவே இரண்டாம் முறையும் நமக்கு ஒத்து வராது.

**3. குடும்பத்தின் அளவைக் குறைத்தல்:** மக்கள்தொகையைக் கட்டுப்படுத்துவதற்குப் பிறப்பின் விகிதத்தைக் கட்டுப்படுத்தல் வேண்டும். ஒவ்வொருவரும் பெரிய குடும்பத்திற்குப் பதில் சிறிய குடும்பத்தை வைத்துக்கொண்டால் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணலாம். குடும்பத்தின் அளவைக் குறைத்தலுக்கு குடும்பக் கட்டுப்பாடு என்பர். இது ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள பிறப்புகளின் எண்ணிக்கைகளைக் குறைப்பதால் அடையமுடியும். ஆதிநாளில் பெரிய குடும்பங்களை வைத்திருப்பது நல்லதாகக் கருதப்பட்டது. ஏனெனில் சொத்து, நிலம் இவற்றைப் பிரித்துக் கொள்ள அதிகப்படியான குழந்தைகள் தேவைப்பட்டன. ஆனால் தற்பொழுது ஒவ்வொரு குடும்பத்திலும் 4 அல்லது 5 அல்லது அதற்கும் மேல் குழந்தைகள் உள்ளன. பொதுவாக, பெரிய குடும்பங்களை வைத்திருக்கவேண்டும் என்னும் எண்ணமே மக்கள்

தொகையை அதிகப்படுத்தியுள்ளது. அதன்காரணமாக அதனுடைய வளர்ச்சி விகிதமும் துரிதப்படுத்தப்பட்டுள்ளது.

குடும்பக்கட்டுப்பாடு என்பது ஒவ்வொரு குடும்பமும் எத்தனை குழந்தைகளை வைத்துக்கொள்ளலாம் என்று திட்டமிடுவதாகும். கடவுள்மீதோ, இயற்கையின்மீதோ பாரத்தைப் போடாமல் ஒவ்வொருவரும் தங்களுடைய குடும்பங்களின் அளவுகளை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும் இதுபோன்று தற்காலிகமாகக் குடும்பங்களின் அளவை நிர்ணயிப்பதற்கு பிறப்புகளின் விகிதத்தைக் குடும்பங்களில் இரண்டு விதத்தில் கட்டுப்படுத்தலாம். ஒன்று ஒழுக்கக் கட்டுப்பாடு. அதாவது ஒருவன் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்வது இதைப் பல்வேறு வகையில் செய்து கொள்ளலாம். கல்யாணத்தைத் தள்ளிப்போடுதல், திருமண வயதை உயர்த்துதல், திருமணம் செய்துகொள்ளாமல் இருத்தல் போன்ற பலவாகும். மற்றொன்று பிறப்புக் கட்டுப்பாடு முறைகளைப் பின்பற்றுதல். உதாரணமாக மருந்துவகைகள், இரசாயனங்கள், மற்ற சாதனங்களைக் குழந்தை பிறக்காமல் தடுப்பதற்குப் பயன்படுத்தலாம். மேலே சொன்ன முறைகளில் முதல்முறை மிகவும் கடினமானது. அப்படிப் பின்பற்றுபவர்கள் கத்தோலிக்கர்கள் மகாத்மா காந்தியைப் போன்ற தலைவர்களால் முடியும். இவர்களின் கருத்துப்படி மனிதன் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். மக்கள் அதிகமான குழந்தைகளை வைத்துக்கொள்ள விரும்பாமல் இரண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டு சிறிய குடும்பம் நடத்தலாம். திருமணம் செய்து கொள்ளாமல் இருத்தல், அல்லது திருமணத்தைத் தள்ளிப்போடுதல் வேண்டும். தம் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். இந்த முறை மிகவும் சிறப்பான முறையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் சாதாரண மனிதன் நடைமுறையில் கடைப்பிடிப்பது கடினமாக உள்ளது இரண்டாவது முறையில் பிறப்புகளைக் கட்டுப்படுத்துவதற்கு மருந்துவகைகள், மாத்திரைகள், கரு உண்டாகாமல் தடுத்தல், கருசிதைத்தல், இந்த முறைகளைப் பல்வேறு வடிவில் செய்யலாம். மருந்துகளையும் இரசாயனப்பொருள்களையும் பயன்படுத்திக் கரு உருவாகாவண்ணம் தடுக்கலாம். அல்லது கரு சிதைத்தலையும் பின்பற்றலாம். கருத்தடை சிகிச்சை செய்து கொண்டு குழந்தை பிறக்கா வண்ணம் செய்துகொள்ளலாம். இம் முறைகளை இந்தியாவில் பின்பற்றி வருகிறார்கள். இதற்காக அரசும் குடும்பக்கட்டுப்பாடு நிலையங்களைத் திறந்து, அவை பணியாற்றி வருகின்றன.

ஒரு சமயம் குடும்பக்கட்டுகளை பின்பற்றுவதற்கு மக்கள் விரும்பவில்லை; அலட்சியப்படுத்தினர். ஏனெனில் அரசினை ஏற்று நடத்தும் மக்கள் காந்தியைப் பின்பற்றுபவர்கள். ஆகவே அவருடைய தத்துவம், ஒழுக்கக்கட்டுப்பாடு ஆகியவை பின்பற்றப்

பட்டன. இந்தக் கருத்துகள் மாறச் சிறிதுகாலம் பிடித்தது. தற்போதுள்ள அரசு மக்கள்தொகையைக் கட்டுப்படுத்துவதற்குக் குடும்பக்கட்டுப்பாடு மிக அவசியம் என உணர்ந்தது. பொதுவாக, குடும்பக் கட்டுப்பாட்டைப் பின்பற்றுவதற்கு பெரும்பான்மையான மக்களுக்கு அறியாமை, தெரியாமை, ஆசாரம் போன்றவை தடைகளாக இருந்தன. இன்னும் பல மக்களுக்கு இந்த முறைகளைப் பற்றி நன்ருகத் தெரியவில்லை. நகர்ப்புற மக்களுக்கு இம்முறைகள் தெரிந்திருந்தாலும் இதை உபயோகப்படுத்த மிகவும் ஐயப் படுகிருர்கள். குறிப்பாக, ஆண்கள் கருத்தடை செய்துகொள் வதற்கு அச்சப்படுகிருர்கள். சாதாரணமான ஒரு சிறிய ஆபரேஷன் செய்துகொள்வதால் குழந்தைகள் பிறக்கா வண்ணம் தடுக்கப்படுகிறது. மக்கள் ஏதோ இல்லாத கற்பனைகளையும், விளைவு களையும் எண்ணிக்கொண்டு ஆபரேஷன் செய்துகொள்ள ஐயப் படுகிருர்கள். மேலும் மக்களும் இதற்காக உண்மையான முயற்சி யும் எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில் நாணம், வெட்கம், அறியாமை, ஏழ்மை இவைகளே தடைகளாக உள்ளன. எல்லா வற்றையும்விட ஏழ்மை ஒரு சிறப்பான காரணம். மக்களுக்கு மருந்து, சாதனங்கள் வாங்குவதற்குப் பணவசதிகள் கிடையாது. மேலும் அவற்றைப் பயன்படுத்துவதற்கு ஓரளவுக்கு அறிவும் தேவை. ஏழை மக்களுக்கு இவ்விரண்டும் கிடையாது. நகர்ப் புறத்தில் வாழும் நடுத்தர மக்கள் இதன் முக்கியத்துவத்தை உணர ஆரம்பித்துவிட்டார்கள். ஏழை மக்களுக்கு இது பெரிதும் தேவைப் படுகிறது. இன்னும் அவர்கள் சரியான முறையில் உணரமுடிய வில்லை. எப்படியும் இந்தக் குறைபாடுகளும் கஷ்டங்களும் மெதுவாக நீக்கப்பட்டுவருகின்றன. சிறிதுகாலம் பிடிக்கும். ஏனெனில் பல்லாண்டு காலமாக மக்கள் ஏழ்மை, அறியாமை இருளில் வாழ்ந்தவர்கள். ஆகவே இவர்களைப் பத்து அல்லது இருபது ஆண்டுகளில் மாற்றிவிட முடியாது.

4. **துரிதமான பொருளாதார வளர்ச்சி:** மக்கள்தொகைப் பிரச்சினைக்குத் தீர்வுகாணுவதற்கு இதுவே கடைசி வழியாகும். ஐரோப்பிய நாடுகளில் தேசிய வருமானம் உயர்ந்ததாலும், மக்க ளின் வாழ்க்கைத்தரம் உயர்ந்ததாலும் பிறப்புவிகிதம் குறையக் கண்டனர். அதிகமான வாழ்க்கைத் தரத்திற்கும் குறைவான பிறப்பு விகிதத்திற்கும் நேரடியான தொடர்பு இல்லாவிட்டாலும், ஐரோப்பிய நிபுணர்கள் குறிப்பிடுவதாவது, மக்களின் வாழ்க்கைத் தரம் உயர ஆரம்பித்தவுடன் பிறப்பு விகிதம் குறைய ஆரம்பிக் கிறது. ஆகவே இது போன்று நாமும் நமது நாட்டில் கொண்டு வரலாம். அதற்கு நம் நாட்டினுடைய பொருளாதார வளர்ச்சியை விரைவாக வளர்க்க வேண்டும். தொழில், வர்த்தகம், வியாபாரம்,

போக்குவரத்து இவற்றை வேகமாக முன்னேற்றவேண்டும். தற் சமயம் இதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஏழை மக்கள் 'ஏழ்மையைப்போக்க முடியும்; பணக்கார மக்கள் அனுபவிக்கக் கூடியதை தாமும் அனுபவிக்க முடியும்' என்பதை அறிந்து கடினமாக உழைக்கவேண்டும். மேலும் உச்சவாழ்க்கைத் தரத்தை அடைவதற்கு இடையேயுள்ள இடர்ப்பாடுகளைத்தன்னால் ஆனமட்டும் நீக்குவதற்கு முயற்சிப்பான். அதே நேரத்தில் சிறிய குடும்பத்தை வைத்துக்கொள்ள விரும்புவான். அதிகக் குழந்தைகள் இருக்குமானால் ஏழ்மைக்குள்ளாவான் என்பதையும் உணர்வான். ஆனால் இம்முறையில் ஒரு குறையும் உள்ளது. ஆரம்பத்தில் பிறப்புவிகிதமானது உயர்ந்து செல்லும் அல்லது நிரந்தரமாக இருக்கும். ஆனால் இறப்புவிகிதமானது குறைந்து செல்லும். இப்படி ஏற்படுமானால் அதற்கு மாற்றுவழி பொருளாதார முன்னேற்றம் அடையும்போது குடும்பக்கட்டுப்பாட்டையும் அதே சமயத்தில் செயல்படுத்தவேண்டும். இந்த நேரத்தில் கல்வியினுடைய பங்கைப்பற்றி, குறிப்பாக பெண்களின் கல்வியைப் பற்றி அதிகக் கவனம் செலுத்திடல் வேண்டும். மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த எந்த முறையை மேற்கொண்டாலும் மக்களின் ஒத்துழைப்பு இல்லையேல் வெற்றி காணமுடியாது; நல்லமுறையில் செயல் படுத்தவும் முடியாது; அதனுடைய பலனையும் காணமுடியாது. அதற்கு மக்கள் நல்லமுறையில் படித்தாலன்றி ஒத்துழைப்பு கிடைக்காது. ஆகவேதான் பெண் கல்வி மிக அவசியம் என்பதில் சந்தேகமில்லை. இந்தியப் பெண்மணிகள் அதிகமான தொல்லைகளுக்கு ஆளாக்கப் படுகிறார்கள். அவர்களுக்குப் போதிய அவகாசம், பொழுது போக்கு, ஓய்வு கிடையாது. மாலைநேரங்களில் ஆண்கள் தங்கள் நேரங்களைக் குடிப்பதிலும், விளையாடுவதிலும் ஏனைய பொழுது போக்குகளிலும், கழிக்கின்றார்கள். ஆனால் பெண்களோ சமைப்பதும், குழந்தைகளைப் பார்த்துக்கொள்வதுமாக உள்ளார்கள். மேலும் அவர்கள் அடிக்கடி குழந்தைகளைப் பெற்றுக்கொள்வதால் குழந்தைகளைக் கவனிப்பதற்கே போதிய நேரங்கள் கிடைப்பதில்லை. ஆகவே குடும்பத்தின் அளவை நிர்ணயிப்பது ஆண்கள் கையில் இல்லை. அது பெண்களின் உரிமையெனக்கொள்ளலாம். படிக்காத பெண்களிடம் எவ்வாறு இந்த உரிமையைத் தெளிவு படுத்துவது? எந்தஅளவுக்குப்பயன்படுத்த வேண்டும் என்பதைத் தான் எதிர்ப்பார்ப்பது? ஆகவேதான் நம் நாட்டில் பெண்கள் படிக்கவேண்டும் என்பதை வலியுறுத்தவேண்டியுள்ளது. படித்த பெண்கள் இதற்கு வழிகாட்டவேண்டும். அதன் பின்னர் படிக்காத பெண்களும் எளிதில் பின்பற்றுவார்கள்.

ஆகவே பொருளாதார முன்னேற்றத்தைத் துரிதப்படுத்த வேண்டும். விவசாயத்தில் மேலும் நவீன முறைகளைக்கையாண்டு உணவுப் பொருள்களை உற்பத்தி செய்திடல் வேண்டும். ஏக்கர் ஒன்றுக்கு மற்ற தானியங்களின் உற்பத்தியையும் அதிகப்படுத்த வேண்டும். தொழிலாளி, முதலாளி இருவரும் ஒத்து நாட்டின் ஆக்கவேலைகளில் ஈடுபடவேண்டும். மேலும் தொழிற்சாலைகள் பெருகிடவேண்டும். பொருள் அதிக அளவில் உற்பத்தியாக்க வேண்டும். கனிவளங்களை மேலும் ஆராய்ந்திடல் வேண்டும். அதன்காரணமாக பெரும்பாலான மக்களுக்கு உயர்வான வாழ்க்கைத்தரத்தை அளித்திடலாம் என்பதில் ஐயமில்லை. இப்போது இருக்கக்கூடிய நிலையில் இயற்கை வளங்களைப் பயன் படுத்தும் முன்னேற்ற விகிதம் மக்கள்தொகை வளர்ச்சியின் விகிதத்தைவிடக் குறைவாக உள்ளது. மேலும் நிலங்களில் மக்களின் அழுத்தம் அதிகமாகி வருகிறது. அதிகப்படியான பிறப்பு இறப்பு விகிதங்கள், பரந்த அளவில் போஷாப்புக்குறைவு, ஏராளமான மக்கள் போதிய அளவுக்கு—குறைந்தபட்ச அளவுக்குக் கூட—வசதிகள் இல்லாமல் உள்ளனர். இந்தியாவில் சிலர் இன்னமும் மக்களின் அழுத்தம் நிலங்களில் குறைவு என வாதாடி வருகிறார்கள். மேல்நாடுகளை ஒப்பிட்டுப்பார்க்கையில் நம் நாட்டில் அதிகம் என்பது தெரிகிறது. மேல்நாட்டு நிபுணர் களும் இந்தியா அதிக மக்கள்தெகையைக் கொண்டுள்ளது என்பதை ஏற்றுக்கொண்டுள்ளார்கள். மேலும் வளரும் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தினாலன்றி இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியாது எனக்கூறி வருகிறார்கள். இதுவும் சரியான முடிவு அல்ல. ஏனெனில் வளரும் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தி னாலும் நமது பொருளாதாரப் பிரச்சினைகள் இன்னமும் நிரந்தரமாக உள்ளன. ஒரு பக்கம் இந்தியா அதிக மக்கள்தொகையைக் கொண்டது அல்ல என்று கூறும் நிபுணர்கள் பொருளாதார முன்னேற்றத்தின் விகிதத்தைத் துரிதப்படுத்தினால் மக்கள் தொகைப்பிரச்சினை தானாகவே தீர்ந்துவிடும் என வாதாடுகிறார்கள். இதுவும் சரியான முடிவு அல்ல. ஏனெனில் அதிகப்படியான வாழ்க்கைத் தரத்தை மக்களுக்கு எளிதில் ஏற்படுத்தித் தரமுடி யாது. இரண்டு முனைகளில் ஒரே சமயத்தில் அடித்தாலொழிய இந்தியாவின் வாழ்க்கைத்தரம் உயராது. அதாவது ஒன்று இயற்கை வளத்தை முன்னேற்றுவது; மற்றொன்று மக்கள் வளர்ச்சியைக் குறைப்பது. வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தி அதே நேரத்தில் பொருளாதார முன்னேற்றத்திற்கும் வழி வகுத்திடல் வேண்டும்.

ஒவ்வொரு நாட்டிற்கும் நியாயமான எண்ணிக்கையுடைய மக்கள்தொகை அவசியம். இது ஆரோக்கியத்தையும், திறமையையும் வளர்க்கும். அந்த எண்ணிக்கை நிரந்தரமானதுமல்ல. பொருளாதார வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் ஏற்றவாறு மாறுபடலாம். இயற்கை வளங்களை நன்முறையில் பயன்படுத்தாவிட்டால் சிறிய மக்கள்தொகையும் அதிகமாகத்தான் தெரியும். ஆகவே வளங்களை நன்ருகப் பயன்படுத்திஞல் அதிகமான மக்களையும் சமாளிக்கலாம். வளங்களைப் பயன்படுத்தி மக்களுக்கு வேண்டிய பண்டங்களையும் பொருள்களையும் உற்பத்தி செய்யலாம். அப்பொழுது மக்கள்தொகை பளுவாகத் தெரியாது. அதிக மக்கள்நெருக்கம் உள்ள தேசங்கள் செழிப்பாகவும், வசதியாகவும் இருப்பதை நாம் இன்றும் காண்கிருேம். இந்தியாவில் ஏக்கர் ஒன்றுக்கு அதிக உணவு உற்பத்தி செய்திடல் வேண்டும். மேலும் கனிவளங்களைக் கண்டுபிடித்து அவற்றையும் உற்பத்திக்குப் பயன்படுத்த வேண்டும். அப்படிச்செய்தால் நம் நாட்டிலும் அதிகமான மக்கள்தொகையையும் உயர்ந்த வாழ்க்கைத்தரத்தில் வைத்துக் கட்டிக்காக்கலாம். இன்றைக்கு 300 மில்லியன் மக்களுக்குக் குறைந்தபட்சம் உணவு 1,400 கலோரிகள் வீதம் ஒவ்வொருவருக்கும் அளிக்க முடியும். மீதமுள்ள மக்களுக்கு உணவு அளிக்க முடிவதில்லை. மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தாமல் மேலும் வளர்ந்துகொண்டே சென்ருல் அப்போது நிச்சயமாக அபரீத மக்கள்தொகையின் நிலையை அடையும். இதற்காகத்தான் மால்தஸ் அவர்கள் இரண்டு தடைகளைக் குறிப்பிட்டுள்ளார். மேலைநாடுகளில் திருமணம் ஆகாதவர்கள் ஏராளமாக உள்ளனர். ஆஞல் இந்தியாவில் இளம்வயதிலேயே சீக்கிரத்தில் எல்லோரும் செய்துகொள்கிருர்கள். பிறப்புவிகிதத்தைக் கட்டுப்படுத்துவதற்கு திருமணத்தைத் தள்ளி வைத்தல், திருமண வயதை உயர்த்தல் போன்ற வழிமுறைகளைப் பின்பற்றுகிருர்கள். இந்தியாவில் பெரும்பான்மையான மக்கள் அதிகக் குழந்தைகளை வைத்துள்ளனர். 'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்ற நம்பிக்கையைக்கொண்டுள்ளார்கள். மால்தஸ் சொன்ன தடுப்பு முறைகளில் செயற்கைமுறை செயல்படாமல் இயற்கை முறைகள் பயன்படுவதைக் காண்கிருேம். பஞ்சம், பட்டினி நோய்போன்றவற்றை இன்றும் காண்கிருேம். அதிகமான பிறப்புவிகிதம், குறைவான இறப்புவிகிதம் மக்கள்தொகையை அதிகப்படுத்தும். தாய்மார்களின் இறப்பு, குழந்தைகள் சாவு, குறைவான ஆயுட்காலம், குறைவான தலாவருமானம், தீராத வேலையின்மை, போஷிப்புக் குறைவு, பல மக்களுக்குக் குறைந்தபட்ச வசதிகள் இல்லாமை இவை காரணமாக இந்தியா அபரீத மக்களைக்கொண்டது, மக்கள்தொகை வெடிப்பு ஏற்பட்டுள்ளது எனலாம்.

# 28. திறமையான உழைப்பின் அளிப்பு

மக்கள்தொகையில் மாற்றம் ஏற்பட்டால், அதே அளவுக்கு உழைப்பின் அளிப்பிலும் மாற்றம் நிகழும். மேலும் திறமையான உழைப்பின் அளவும் மக்கள்தொகையின் விகிதத்திற்கு ஏற்றுற் போல் வளரும். ஒரே விதமான மக்கள்தொகையைக் கொண்ட பல்வேறு நாடுகளில் ஒரே விதமாக உழைக்கும் மனிதர்களையும், வேலைசெய்யும் மக்களையும் காண முடியவில்லை. காரணம் சமூகத்தில் வேறுபாடுகள், மக்கள்தொகையின் வளர்ச்சியின் வேகம், அதனுடைய உண்மையான விளைவுகள், முதலுக்கு ஏற்றவாறு திறமையான உழைப்பின் அளவை எந்த அளவுக்கு உயர்த்த முடியும் என்பனபோன்ற பலவாகும். மொத்த மக்கள்தொகைக்கும், திறமையான உழைப்பின் அளிப்புக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை, விகிதாசாரங்களையும் ஆராய்தல் நலமாகும். எப்படி மக்கள்தொகை வளர்வதால் உண்மையான, திறமையான உழைப்பின் அளவு மாறுபடுகிறது? எந்த விகிதத்தில் இந்த விகிதாசாரம் பாதிக்கப்படுகிறது? மேலும் உழைக்கும் சக்தி எந்த அளவுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது? தரமான, திறமையான மக்கள்தொகை பொருளாதார முன்னேற்றத்தில் பல்வேறு அம்சங்களை நல்லமுறையில் செயல்படுத்த உதவுகிறது. உதாரணமாக கல்வி பயிற்சி, நுட்பம், அமைப்பு, உற்சாகம், திறமை, வேலையில் நகரும்தன்மை, சரியான முறைப்படி பங்கிடுதல் போன்றவை திறமையை வளர்க்கின்றன.

மேலும் உழைப்பின் சக்தியை தரத்தின் மேன்மையை எவ்வாறு சுகாதாரம், உணவு, வீட்டுவசதிகள் அதிகப்படுத்தும் என்பதையும் அறிய வேண்டும். எண்ணிக்கையும் தரமும் ஒன்றுக்கொன்று தொடர்பு உடையவை. இரண்டும் ஒரேதிசையில் பாதிக்கப்படுகின்றன. முன்னேற்றம் அடைந்த ஆரோக்கியம், இழந்த நேரங்களை மீண்டும் வலிவுபடுத்துவதால், ஒருமணிக்கு மனிதனின் உழைப்பு அதிகரிக்கும். தொழில் முன்னேற்றத்திற்கு

உழைப்பின்திறன் மிகவும் சாதகமாக அமையும். அதனுல் தலா உற்பத்தியும் வளரும். கீழே கொடுக்கப்பட்டுள்ள காரணங்களிஞல் உழைப்பின் திறனை அதிகப்படுத்தலாம்:

**I மக்கள்தொகையின் எண்ணிக்கையின் அம்சங்கள் :**

(1) மக்கள்தொகையின் அளவு.

(2) மக்கள்தொகையின் வயது அமைப்பு.

(3) ஆண், பெண் விகிதங்களின் அமைப்பு.

(4) வேலையின் அடிப்படையில் மக்களின் பங்கீடு.

(5) பிறப்பு விகிதம்.

**II மக்கள்தொகைக்கு சம்பந்தமில்லாத அம்சங்கள்:**

(1) ஒவ்வொரு வயதுபிரிவிலும் வேலைசெய்யும் மக்களின் எண்ணிக்கை வழக்கங்கள், சட்டம், வருமானம், சமூக அமைப்புஇவை எவ்வாறு பல்வேறு பிரிவுகளை பாதிக்கின்றன.

(2) வேலைநேரம், ஓய்வுநேரம் அமைவதற்குரிய காரணங்கள்.

(3) ஆரோக்கியக்குறைவிஞல் எவ்வளவு காலம்வீணுகிறது.

(4) வேலையின்மை, வேலைக்குறைவு.

(5) நுட்பம், பொருளாதார அமைப்பு எவ்வாறு ஆண்,பெண் விகிதாசாரத்தையும், வயதின் அமைப்பையும் பாதிக்கின்றன.

**III மக்களின் தரத்தின்அம்சங்கள்:**

(1) வேலைசெய்யும் மக்களின் ஆண், பெண் விகிதாசாரப் பிரிவுகள்.

(2) உணவுமுறை, சுகாதாரவசதிகள், ஆரோக்கியவாழ்வு

(3) கல்வி, பயிற்சி முறைகள்.

(4) முதல் நுட்பம் தரம், பரிணுமம்.

(5) வேலைக்கு ஏற்றவாறு பங்கீடு, நகர வளர்ச்சி.

(6) உற்சாகம் மற்ற காரணங்கள், பொருளாதாரத்திட்டம்

மேல்நாடுகளில் மனிதன் உழைப்பைக்குறைத்து யந்திரங்களின்மூலம் பலன்களைக் கண்டுவருகிருர்கள். உழைப்பைக்

குறைக்கும் யந்திரங்களை உற்பத்தி முறையில் பயன்படுத்துகிறார்கள். உதாரணமாக நியூஜிலாந்தில் பால்பண்ணைகளில் முதலில் பெண்கள், குழந்தைகள் ஆகியவர்களின் உழைப்பைப் பயன்படுத்தினார்கள். தற்சமயம் யந்திரங்களைப் பயன்படுத்தி இவர்களின் உழைப்பைக் குறைத்து வருகிறார்கள்.

நம் நாட்டில் சுகாதாரம், உணவுமுறையில் முன்னேற்றங்கள் இவற்றினால் எவ்வாறு திறமையை வளர்க்கமுடியும், எவ்வாறு வேலையில்லாத மக்களை முழு அளவில் பயன்படுத்த முடியும் என்பவற்றைப்பற்றி விரிவாக ஆராய்வோம். சுகாதாரமுறையில் முன்னேற்றம், ஆரோக்கியமான வாழ்க்கை, சத்துள்ளஉணவு இவற்றை மக்களுக்கு அளிப்பதால் மக்களின் திறமை ஓங்கிவளரும். கீழேயுள்ள அட்டவணையில் பின்தங்கிய நாடு, முன்னேறியநாடு ஆகியவற்றில் மக்களின் அம்சத்தை வயதின் அடிப்படையில் ஆராய்வோம்.

## அட்டவணை 75

**உலக மக்கள்தொகை பிராந்தியங்களில்-வயது பங்கீடு. தீர்மானிக்கப்பட்டவை 1947 (ஐக்கிய சங்கம் வெளியீடு)**

| பிராந்தியங்கள் | 15 வயதுக்குக் கீழ் | 15 முதல் 59 வயதுவரை | 60-க்கு மேல் |
|---|---|---|---|
| உலக மொத்தம் | 36 | 57 | 7 |
| ஆப்பிரிக்கா | 40 | 55 | 5 |
| அமெரிக்கா | | | |
| (1) வட அமெரிக்கா | 25 | 64 | 11 |
| (2) லத்தீன் அமெரிக்கா | 40 | 55 | 5 |
| ஆசியா | | | |
| (1) கிழக்கு ஆசியா | 40 | 54 | 6 |
| (2) தெற்கு, மத்திய ஆசியா | 40 | 56 | 4 |
| (3) ஜப்பான் | 37 | 55 | 8 |
| (4) மீதமுள்ள கிழக்குநாடுகள் | 40 | 55 | 5 |
| ஐரோப்பா | | | |
| (1) வடமேற்கு, மத்திய ஐரோப்பா | 24 | 62 | 14 |
| (2) தென் ஐரோப்பா | 30 | 59 | 11 |
| (3) கிழக்கு ஐரோப்பா | 34 | 59 | 7 |
| ஆஸ்திரேலியா | 28 | 62 | 10 |

ஆப்பிரிக்கா, இலத்தீன் அமெரிக்கா, மீதமுள்ள கிழக்கு ஆசியா போன்ற பிராந்தியங்களில் ஒரே மாதிரியான புள்ளிவிவரங்களை 15 வயதுக்குக்கீழ் காணலாம். பெரும்பான்மையான புள்ளி விவரங்கள் ஊகம், கற்பனை அடிப்படையில் தீர்மானிக்கப்படு கின்றன. அதே நேரத்தில் மற்ற நாடுகளில் அதே வயதின்கீழ் மாறுபடுவதைக் காண்கிறோம். பல்வேறு நாடுகளின் வயது பிரிவு களை ஒப்பிட்டுப் பார்க்கையில் வித்தியாசங்கள் நன்கு புலனாகிறது. எப்போதும் 15 வயது முதல் 59 வயதுவரை ஆக்க வேலையில் ஈடுபடும் மக்களாகக் கருதப்படுகிறார்கள். அதன் அடிப்படையில் தான் மக்கள்தொகையில் உழைக்கும் மக்கள் சதவிகிதத்தை எடுத் துக் காட்டுகிறது. வடஅமெரிக்கா, ஐரோப்பா, ஆஸ்திரேலியா போன்ற கண்டங்களில் உழைக்கும் மக்கள்தொகை 52முதல் 62 சதவிகிதம்வரை ஆகும். உலகில் ஏனைய பகுதிகளில் இதனுடைய விகிதம் 54முதல் 56வரை உள்ளது. முதல் இரண்டு வயதுப்பிரிவுகளை ஒன்றாக இணைத்துப் பார்க்கும்பொழுது முன்னேற்ற மடைந்த நாடுகளில் இது மிகவும்அதிகமாக உள்ளது. 60 வயதுக்குமேல் உள்ள மக்களின் சதவிகிதம் முன்னேற்ற மடைந்த நாடுகளில் அதிகமாகவும், 15 வயதுககுக் குறைவாய் உள்ள மக்களின் சதவிகிதம் வெகுக் குறைவாகவும் உள்ளன. பின்தங்கிய நாடுகளில் 60 வயதுக்கு மேலுள்ளவர்களின் மக்கள் சதவிகிதம் குறைவாக உள்ளது.

கீழேயுள்ள அட்டவணையில் பல்வேறு வயதுப் பிரிவில் மக்கள் தொகையின் சத விகிதம் காட்டப்பட்டுள்ளது.

## அட்டவணை 76

| பிராந்தியங்கள் | குழந்தைகள் | 5வயதுக்குக் கீழ் | 15 வயதுக்குக் கீழ் | 55 வயதுக்கு மேல் |
|---|---|---|---|---|
| ஐரோப்பா | 2·0 | 9·8 | 26·9 | 17·2 |
| வட அமெரிக்கா | 2·2 | 10·9 | 27·6 | 16·5 |
| ஆஸ்திரேலியா | 2·5 | 10·5 | 26·0 | 17·8 |
| தெ. கிழக்கு ஆசியா | 3·3 | 15·1 | 40·9 | 7·3 |
| தெ. மேற்கு ஆசியா | 3·1 | 16·7 | 40·6 | 9·5 |
| தென் அமெரிக்கா | 3·1 | 14·6 | 40·1 | 7·4 |
| ஆப்பிரிக்கா | 2·9 | 13·7 | 39·1 | 8·5 |

மேற்கண்ட அட்டவணையில் சிறுவர்களின் சதவிகிதம் பின் தங்கிய நாடுகளில் அதிகம். 5 வயதுக்குக் குறைவாய் உள்ள

மக்களின் சதவிகிதம் 13·7முதற்கொண்டு 16·7வரை பின்தங்கிய நாடுகளில் உள்ளது. ஆனால் முன்னேறிய நாடுகளில் 9·8 முதல் 10·9 சதவிகிதம் வரை உள்ளது. பின்தங்கிய நாடுகளில் 5 வயது முதல் 15 வயதுவரை ஏராளமான குழந்தைகள் இறந்து விடுகின்றன. கீழேயுள்ள அட்டவணை பின்தங்கிய, முன்னேறிய நாடுகளில் வயதின் அமைப்பை எடுத்துக் காட்டுகின்றது.

## அட்டவணை 77

தாய்லாந்து - பின்தங்கியநாடு
இங்கிலாந்து - முன்னேறியநாடு } வயது அமைப்பு

| வயது பிரிவுகள் | தாய்லாந்து 1947 கணக்கின்படி சத விகிதம் | | இங்கிலாந்து 1950 கணக்கின்படி சத விகிதம் | |
|---|---|---|---|---|
| 1 வயதுக்குள் | 3·5 | 42·3 | 1·6 | 22·0 |
| 1 வயது முதல் 4 வயதுவரை | 11·6 | | 6·9 | |
| 5—9 | 14·2 | | 7·0 | |
| 10—14 | 13·0 | | 6·5 | |
| 15—19 | 11·1 | 55·2 | 6·2 | 67·2 |
| 20—24 | 8·9 | | 6·8 | |
| 25—29 | 7·2 | | 7·7 | |
| 30—34 | 6·6 | | 7·0 | |
| 35—39 | 5·8 | | 7·8 | |
| 40—44 | 4·8 | | 7·8 | |
| 45—49 | 4·0 | | 7·2 | |
| 50—54 | 2·9 | | 6·3 | |
| 55—59 | 2·3 | | 5·5 | |
| 60—64 | 1·6 | | 4·9 | |
| 65-க்கு மேல் | 2·7 | | 10·9 | |

உழைக்கும் மக்கள்தொகை இங்கிலாந்தில் தாய்லாந்தைவிட 15 வயது முதல் 65 வயது வரை உள்ளவர்களின் சதவிகிதத்தை விட 12 சதவிகிதம் அதிகம். முந்திய நாட்டில் ஒவ்வொரு ஐந்தாண்டுக் காலத்திலும் அதிகமாகக் குறைந்துகொண்டே செல்கிறது. ஆனால் இங்கிலாந்தில் 20 முதல் 65 வரை இதனுடைய சதவிகிதம் அதிகரித்துக்கொண்டே செல்கிறது. அதாவது தாய்லாந்தில் 44·1 சதவிகிதம் என்றால் இங்கிலாந்தில் 61 சதவிகிதமாகும். 10 வயதுக்குக் குறைவாய் உள்ளவர்கள் பெரும்பாலும் பிறரை நம்பி வாழ்பவர்கள். அவர்கள் உற்பத்திக்கு யாதொரு தொண்டும் செய்வதில்லை. இந்த விஷயத்திலும் இங்கிலாந்து அதிகமான நன்மைகள் அடைந்துள்ளது.

இங்கிலாந்தில் இதற்கு 15·5 சதவிகிதம் என்றால் தாய்லாந்தில் 29·3 சதவிகிதமாகும். வயதான மக்கள் இங்கிலாந்தில் தாய்லாந்தைவிட அதிகம். மேலும் சில காரணிகள் வயதின் அமைப்பை மாற்றிஅமைக்கின்றன. பின்தங்கிய நாடுகளில் இளம் வயது மக்கள் இளமையிலேயே வேலைசெய்ய ஆரம்பிக்கின்றார்கள். மேல்நாடுகளில் உற்பத்திக்குத் தொண்டு செய்யும் மக்கள் நீண்ட நாட்கள் பயிற்சிபெற்று, வேலைக்குத் தயார் செய்துகொண்டும், உடல் ஆரோக்கியத்தை வளர்த்துக்கொண்டும் கல்வியை நன் முறையில் பயின்ற பின்னரும் வேலையை ஒப்புக்கொள்கிறார்கள்; நீண்டகாலம்வரையில் பணியாற்றுகிறார்கள்; மேலும் வேலைகளைத் துரிதமாகவும், திறமையாகவும் செய்து முடிப்பார்கள். உதாரண மாக, இங்கிலாந்தில் ஒரு மனிதன் செய்யக்கூடிய உற்பத்தியை இந்தியாவில் மூன்று மனிதர்களால் செய்துமுடிக்க முடியும். பின் தங்கிய நாடுகளில் சரியாகப் பயிற்சி பெறாமையாலும், உடல் போஷிப்பு இல்லாத காரணத்தாலும் துரிதமாகவும், திறமையாகவும் உற்பத்தி செய்ய முடியவில்லை. பின்தங்கிய நாடுகளில் வளர்ந்து வரும் மக்கள்தொகையை வீணடிக்கிறார்கள். அதாவது நுகர்வில் போதுமான தரத்தை அடையும் முன்னர் பயன்படுத்தப் படுகின்றனர். இது எப்படி இருக்கிறதென்றால் தானியங்கள் முற்றுவதற்கு முன்னர் பசியின் கொடுமை தாங்கமுடியாமல் குடியானவர்கள் ஆண்டுதோறும் முன்னதாகவே அறுவடை செய்வதைப்போல் உள்ளது. நல்ல வளர்ச்சி அடைவதற்கு முன்னரே மக்கள் உண்டுவிடுகிறார்கள். பொருளாதாரத்தில் முன்னேறிய நாடுகளில் வேலைசெய்யும் மக்கள் நல்ல ஆரோக்கிய மாகவும், திடகாத்திரமாகவும் வலிமை பொருந்தியும் உள்ளார்கள். பின்தங்கிய நாடுகளில் பயனுள்ள வேலைகளில் ஈடுபடும் பெண் களின் சதவிகிதம் சிறியதாகவே உள்ளது. கணக்கெடுப்பில் பலவிதமான வேறுபாடுகளும், இலக்கணங்களும் உள்ளன. பண்ணை, குடிசைத்தொழில், சிறிய விவசாயம் இவற்றில் பெண் களின் உதவியைச் சரியானபடி பதிவு செய்யவில்லை. வேலைகள் என்ற தலைப்பில் பின்தங்கிய நாடுகளில் சரியாக, தெளிவாக விளக்கப்படாத காரணத்தால் பெண்களின் எண்ணிக்கை வேலைக்கு ஏற்றவாறு பதிவு செய்யப்படவில்லை. அப்படிப்பார்க்கும் போது ஆண்களைவிட பெண்கள் வேலையில்லாமல் இருக்கும் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். பெரும்பங்கு பெண்கள் விவசாயத்தில், குடிசைத்தொழில்களில் ஈடுபாடு உடையவர்கள் என்பதை மனதில் கொள்ளவேண்டும். பின்வரும் அட்டவணை ஐக்கிய நாடுகளின் அறிக்கைப்படி வயதுக்குத் தகுந்தாற்போல் வேலைசெய்யும் மக்களைப் பிரித்துக்காட்டுகிறது.

## அட்டவணை 78

| நாடுகள் | ஆண்டுகள் | எல்லா வயதுகள் | 10—14 | 15—19 | 20—64 | 65க்கு மேல் |
|---|---|---|---|---|---|---|
| அமெரிக்கா | 1940 | 60·5 | 1·2 | 40·4 | 91·8 | 41·8 |
| சுவீடன் | 1940 | 69·3 | 1·9 | 82·2 | 94·5 | 42.6 |
| ஆஸ்திரேலியா | 1933 | 63·7 | 3·1 | 73·4 | 95·8 | 34·3 |
| நியூஜிலாந்து | 1936 | 66·8 | 3·7 | 80·3 | 96·3 | 40·4 |
| ஜப்பான் | 1930 | 58·8 | 14·1 | 78·5 | 95·3 | 63·0 |
| பர்மா | 1940 | 59·5 | 19·7 | 77·6 | 97·5 | 82·9 |
| பெரு | 1940 | 53·3 | 22·8 | 63·0 | 95·9 | 82·6 |
| போர்ச்சுகல் | 1940 | 63·9 | 26·2 | 75·4 | 96.4 | 88·1 |
| துருக்கி | 1945 | 58·8 | 48·7 | 79·9 | 92.4 | 79.0 |

ஒவ்வொரு வயதுப் பிரிவுகளிலும் சில நாடுகளில் மொத்த மக்கள்தொகையில் பொருளாதாரத்தில் செயல்படும் ஆண்களின் சதவிகிதம் எடுத்துக்காட்டப்படுகிறது.

மேலேயுள்ள அட்டவணை எந்த அளவுக்கு ஆண்களின் உழைப்பு பயன்படுகிறது என்பதை எடுத்துக்காட்டுகிறது. பல்வேறு நாடுகளில் ஆண்களின் உழைக்கும் சக்தியை சதவிகிதத்தில் காண்பிக்கிறது. பின்தங்கிய நாடுகளில் வயதுப் பிரிவுகள் 10 முதல் 14 வயது வரையிலும், 65 வயதுக்கு மேல், மக்களின் சதவிகிதம் முன்னேற்றமடைந்த நாடுகளைவிட அதிகமாக உள்ளன. மீதமுள்ள இரண்டு வயதுப்பிரிவுகளைப் பொறுத்தமட்டில் பெருத்த மாறுதல் நாட்டிற்கு நாடு மாறுபடும் என்பதை அறியலாம். பொருளாதார முன்னேற்றத்தில் அதிக வேறுபாடுகள் கிடையாது. பின்தங்கிய நாடுகளில் பெரிதும் சுறுசுறுப்பான மக்களின்தொகை அதிகமிருந்தாலும், உற்பத்தித்திறன் மிகவும் குறைவாக இருக்கிறது. எண்ணிக்கையில் அதிகமிருந்தாலும் திறனில் குறைவாகவே இருக்கின்றது. அமெரிக்காவிலும் மற்ற முன்னேற்றம் அடைந்த நாடுகளிலும் எல்லாப் பிரிவுகளிலும் உள்ள மக்களின் எண்ணிக்கை அந்த நாடுகளுக்குச் சாதகமாகவே இருக்கின்றன. மற்றவர்களை நம்பியிருத்தல், குறைவான உழைப்பு இவை யாவும் திறனைப் பெரிதும் பாதிக்கும். மக்கள்தொகை வளர்ச்சிவீதம் துரிதமாகவும்,

வேகமாகவும் வளர்கின்றது. அதிகமான பிறப்பு விகிதங்கள், அதிகமான இறப்பு விகிதங்கள் பல்வேறு வயதுப் பிரிவுகளில் காணலாம். இந்தியா நியூஜிலாந்தின் மக்கள்தொகையைவிடக் குறைவான விகிதத்தில் சென்றாலும் வேலைசெய்யும் மக்கள் மொத்த மக்கள்தொகையில் குறைவான விகிதாசாரத்தில் உள்ளனர். ஏனெனில் வேலைசெய்யும் பருவத்தை அடையும் முன்னரே ஏராளமான மக்கள் இந்தியாவில் இறக்கிறார்கள். வேலை செய்யும் மக்களின் ஆயுட்காலமும் மிகவும் குறைவு. இறப்பு விகிதம் முன்னேற்றமடைந்த நாடுகளைவிட பின்தங்கிய நாடுகளில் அதிகமாக உள்ளது. காரணம் சுகாதாரம், ஆரோக்கியம், சமூக நிலைகளின் முன்னேற்றம் ஆகியவை கணிசமான அளவில் முன்னேற்றம் அடையவில்லை.

குழந்தைகளின் இறப்பு விகிதத்தில் தாய்மார்களின் இறப்பு விகிதத்தைவிட அதிகமான விளைவுகள் உள்ளன. குழந்தைகளின் இறப்புவிகிதம் சரியான அளவுகோல் ஆகும். அதிகமான இறப்பு விகிதம் என்றால் அதிகமான குழந்தைகள் இறப்பு விகிதம் என்பது தான் பொருத்தமாகும். குழந்தைகளின் இறப்பில் பெருத்த வேறுபாடு கீழேயுள்ள நாடுகளில் வரிசைப்படுத்திக் கொடுக்கப் பட்டுள்ளது. ஓர் ஆண்டில் 1,000 பிறப்பில் எவ்வளவு குழந்தைகளின் இறப்பு என்பதைக் கீழே காணலாம்:

**அட்டவணை 79**

| நாடுகள் | ஆண்டு | குழந்தைகளின் இறப்பு விகிதம் |
|---|---|---|
| நியூஜிலாந்து | 1952 | 21·8 |
| நெதர்லாந்து | 1952 | 22·5 |
| அமெரிக்கா | 1952 | 28·5 |
| ஜப்பான் | 1951 | 57·5 |
| தாய்லாந்து | 1950 | 62·4 |
| இலங்கை | 1950 | 81·6 |
| பிலிப்பைன்ஸ் | 1951 | 104·2 |
| இந்தியா | 1951 | 115·9 |
| எகிப்து | 1950 | 129·6 |

ஆரோக்கியத்தின் அளவை ஆயுட்காலத்தை வைத்துக் கணக்கிடலாம். இதைப் பல்வேறு நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்

போது எவ்வளவு மக்கள் நல்ல ஆரோக்கியத்தை அடைந்து நீண்ட ஆயுட்காலத்தைப் பெற்றுள்ளார்கள் என்பது விளங்கும்.

## அட்டவணை 30

ஆயுட்காலம்

| நாடுகள் | ஆண்டு | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|---|
| அமெரிக்கா | 1950 | 66·6 | 72·4 |
| இங்கிலாந்து | 1951 | 65·8 | 70·9 |
| நெதர்லாந்து | 1947–49 | 69·4 | 71·5 |
| நியூஜிலாந்து | 1950–52 | 68·29 | 72·43 |
| டைவான் | 1936–40 | 41·08 | 45·73 |
| இந்தியா | 1921–31 | 26·91 | 26·56 |
| தாய்லாந்து | 1947–48 | 48·7 | 51·9 |

இந்தஅட்டவணை அதிகமான மக்கள் இளமையில் உள்ளதைக் குறிக்கும். அதிகப் பிறப்பு விகிதங்கள் அதிகப்படியான இளம் மக்களை விருத்தி செய்யும். ஆனால் அதிக இறப்பு விகிதம் வேலை செய்யும் மக்களின் எண்ணிக்கையைக் குறைக்கும். அதனால் மொத்த மக்கள்தொகையில் வேலைசெய்யும் மக்களின் எண்ணிக்கையின் சதவிகிதம் குறையும். அதிகமான இறப்புகள் குறிப்பாக இளமைக்கும், சமூகப்பொருளாதார நஷ்டத்தையும் உண்டாக்கும். அதிகப்படியான மக்களின் சேதாரம் ஏற்படும். இளமையில் அதிகம் இறப்பினால் மொத்த, நிகர இனவிருத்தி விகிதங்களிலும் மாறுபாட்டைக் காணலாம்.

## அட்டவணை 31

ஆயுட்காலம் (1951) கணக்கு

| ஆண்டுகள் | ஆயுட்காலம் பிறப்பில் | 10 வயதில் |
|---|---|---|
| 1921–30 | 26 வரு + 11 மாதங்கள் | 36 வரு + 3 மாதங்கள் |
| 1941–50 | 32 வரு + 5 மாதங்கள் | 39 வரு |
| அதிகரிப்பு | 5 வரு + 6 மாதங்கள் | 2 வரு + 9 மாதங்கள் |

| நாடுகள் | ஆண்டு | இனவிருத்தி விகிதங்கள் மொத்தம் | நிகரம் |
|---|---|---|---|
| இந்தியா | 1941 | 2·76 | 1·30 |
| எகிப்து | 1937 | 3·11 | 1·44 |
| ஜப்பான் | 1937 | 2·14 | 1·44 |
| அமெரிக்கா | 1942 | 1·27 | 1·19 |
| இங்கிலாந்து | 1940 | 0·85 | 0·75 |
| நியூஜிலாந்து | 1942 | 1·30 | 1·21 |

எகிப்து, இந்தியா போன்ற நாடுகளில் ஏராளமான எண்ணிக்கையில் மக்கள் பிறக்கிருர்கள். நியூஜிலாந்தில் அமெரிக்காவைவிட மக்களின் வளர்ச்சியின் வேகம் அதிகம். ஆகவே இந்த நாடுகளில் பெரிய மக்கள்தொகையை வைத்துச் சமாளிக்கவேண்டியுள்ளது. அதன்காரணமாகப் பொருளாதாரச் செலவு அதிகரிக்கும். பொருளாதாரத்தில் ஏற்படக்கூடிய வீண்செலவையும் திடமாகக் கணக்கிடுவதும் கடினமாகும். உற்பத்தி செய்யும் முன்னரே ஏராளமான மக்கள் இறக்கிருர்கள். குறிப்பாக இளமையில் இறப்பதுதான் அதிகம். முதலாண்டில் இறப்பு ஏற்பட்டால் நேரடியான பொருளாதார வீண்சேதாரம் குறைவு. பின்தங்கிய நாடுகளில் எல்லா வயதுப் பிரிவுகளிலும் மக்கள் இறப்பு அதிகமாக உள்ளன. தாய்மார்களுக்கு ஓய்வு நேரமும் சலுகைகளும் அளித்திடல் வேண்டும். குறிப்பாக, குழந்தை பிறக்கும்போதும், குழந்தைகளுக்கும் ஆரம்ப ஆண்டுகளில் தாய்மார்கள் அதிக கவனம் செலுத்தவும், உற்சாகப்படுத்தவும் வேண்டும். சில கணிப்புகள் பெரும்பாலும் பொருளாதார நஷ்டத்தை இளமை இறப்பில் கணக்கிட்டுள்ளன. 1946ஆம் ஆண்டில் டாக்டர் D. கோஷ் (Dr. Ghosh) அவர்கள் இங்கிலாந்து, இந்தியர் இரண்டு நாடுகளையும் ஒப்பிட்டு உலக மகாயுத்தத்திற்கு முன்பு இந்திய மக்கள்தொகையில் 45 சதவிகிதம் 15 வயதை அடையும் முன்னரே இறக்கிருர்கள். இந்த இளம் குழந்தைகள் உற்பத்திக்கு யாதொரு தொண்டும் செய்யமுடியாது. ஆனல் இந்தக் குழந்தைகளை நன்முறையில் போஷிக்கவும், வளர்க்கவும், மொத்த தேசிய வருமானத்தில் $22\frac{1}{2}$ சதவிகிதம் தேவைப்படுகின்றது. அதே நேரத்தில் இங்கிலாந்தில் மொத்த தேசிய வருமானத்தில் $6\frac{1}{2}$ சதவிகிதம்தான் தேவைப்படுகிறது. இதற்காக யாதொரு சிறப்பு அம்சமும் அவர்கள் அளிப்பதும் கிடையாது. மேலும் 15 வயதுக்குள் பிறந்து வளர்ந்து இறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையும் இருநாடுகளில் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியாவில் இங்கிலாந்தைவிட அதிகமாக உள்ளது. அத்துடன் ஆயுட்காலமும் முன்னேற்றம் அடைந்த நாடுகளைவிட இந்தியாவில் குறைவு. எல்லா வயதுக்கும் இது பொருந்தும். உற்பத்தி செய்யக்கூடிய வயதை வந்து அடையும்போது குறுகிய காலத்திற்குத்தான் மக்கள் உழைக்க முடிகிறது. உற்பத்திக்குத் தொண்டாற்றவும் முடிகிறது. மொத்த வாழ்வில் வேலைசெய்யும் காலம் குறைவாக உள்ளது. பல்வேறு வயதுப் பிரிவுகளில் இரு நாடுகளில் ஆண்கள் 1 லட்சத்திற்கு எத்தனை பேர்கள் உயிருடன் இருக்கிருர்கள் என்ற புள்ளிவிவரங்கள் பின்வரும் அட்டவணையில் கொடுக்கப் பட்டுள்ளன.

## அட்டவணை 82

### இந்தியா, நியூஜிலாந்து இருநாடுகளையும் ஒப்பிடுதல்.

| வயது | இந்தியா 1921-31 | நியூஜிலாந்து 1934-38 |
|---|---|---|
| 5வயது | 60,161 | 95,212 |
| 10 ,, | 56,467 | 94,576 |
| 15 ,, | 54,112 | 94,069 |
| 20 ,, | 51,203 | 93,217 |
| 30 ,, | 43,931 | 91,084 |
| 40 ,, | 34,563 | 88,365 |
| 50 ,, | 24,348 | 83,328 |
| 60 ,, | 14,933 | 73,472 |
| 70 ,, | 7,036 | 54,184 |

நியூஜிலாந்தில் 70 வயதில் அடையும் விகிதாசாரம் இந்தியாவில் 15 வயதில் அடையும் விகிதாசாரத்திற்குக் கிட்டத்தட்டச் சமமாக உள்ளது. நியூஜிலாந்தில் ஒரு லட்சம் ஆண்கள் பிறந்தால் 40,000 பேர்களுக்குமேல் உயிருடன் இருக்கிறார்கள். அவர்கள் உழைப்பின் சக்திக்குப் பயன்படுகிறார்கள். 15 வயதுக்கு இந்தியாவில் 54,000 பேர்கள் உள்ளனர். ஆனால் இவர்களில் 60 வயதில் 15,000 பேர்கள்தான் உயிருடன் வாழ்கிறார்கள். நியூஜிலாந்தில் 94,000 பேர்களில் 60 வயதில் 73,000 பேர்கள் உயிருடன் வாழ்கிறார்கள். மேலும் திறமையிலும் இவர்கள் மாறுபடுகிறார்கள். உற்பத்திக்கு தனி மனிதனின் தொண்டும் தன் வாழ்நாட்களில் அதிகமாக உள்ளது. பிறரை நம்பும் காலத்தைவிட தான் உழைக்கும் காலம் பெரியதாக உள்ளது. 1921முதல் 1931 வரையான கணக்கின்படி இந்தியாவில் 15 வயதிலிருந்து ஓர் ஆண் மேலும் 33 வயது வாழமுடியும்; ஒரு பெண் மேலும் 30 வயது வாழமுடியும் எனத் தீர்மானிக்கப்பட்டது.

ஆனால் நியூஜிலாந்தில் அதே வயதில் வாழும் ஆண்கள் மேலும் 54 ஆண்டுகளும், பெண்கள் மேலும் 57 ஆண்டுகளும் வாழ்கிறார்கள் எனத் தீர்மானிக்கப்பட்டது. டாக்டர் கோஷ் அவர்கள் இதேமாதிரி 1931 கணக்கின்படி இந்தியர்வையும் இங்கிலாந்தையும் ஒப்பிட்டுப் பேசியுள்ளார்கள். சராசரி உற்பத்திக்குத் தொண்டு புரியும் காலம் இந்தியாவில் 30 ஆண்டுகள், இங்கிலாந்தில் 40 ஆண்டுகள் என மக்களின் உழைப்பின் காலத்தை கணித்துள்ளார்கள். இதற்குக் காரணங்கள் நோய், ஆரோக்கியக்குறைவு, போஷிப்பு குறைவு போன்றவற்றைச்

சுட்டிக் காட்டியுள்ளார்கள். மக்கள் நோயினுல் இறப்பதும், அல்லல்படுவதும், அதிலிருந்து மீள்வதும் கடினமாக இருக்கிறது. ஆண்டுதோறும் இந்தியாவில் மக்கள் 3 மில்லியன்கள் மலேரியாவினுல் இறக்கிருர்கள். அதேநேரத்தில் பாதிக்கப்படுபவர்களும் கிட்டத்தட்ட 30 மில்லியன் மக்கள் ஆவார்கள். இதனுல் ஓர் ஆண்டில் 20 முதல் 40 நாட்கள்வரை வேலைசெய்ய முடியாமல் போகிறது. மேலும் மக்கள் நாற்று நடும்போதும், அறுவடை செய்யும் காலத்திலும் இதுபோன்ற வியாதிகளால் பாதிக்கப்பட்டு எத்தனையோ வேலைகள் கெடுகின்றன. குடியானவர்கள் நோயினுல் பாதிக்கப்படுவதால் தம் வலிமையையும் இழக்கின்றுர்கள். பாகிஸ்தானில் தனியொரு மலேரியா ஒழிப்பு முகாமின் மூலம் கிழக்கு வங்காள அரசினுல் உற்பத்தியின் அளவை 15 சதவிகிதம் உயர்த்த முடிந்தது. நோய்களை ஒழிப்பதாலும், கட்டுப்படுத்துவதாலும் உற்பத்தியை அதிகரிக்க முடியும். 1946ஆம் ஆண்டில் பிலிப்பைன்ஸ் நாட்டில் ஆரம்ப, உயர்நிலைப்பள்ளிகளுக்கு ஏராளமான மாணவர்கள் வாராமைக்கு, சுமாராக 40 முதல் 50 சதவிகிதம்வரை வாராமைக்குக் காரணம் மலேரியாதான் எனத் தெரிவித்தார்கள். பெரும்பாலான மாணவர்கள் மலேரியாவினுல் பாதிக்கப்பட்டார்கள்.

1946ஆம் ஆண்டில் பல்வேறு நிலையங்களின் நிர்வாகிகள் பல தொழிலாளர்கள் வேலைக்கு வாராமைக்கு, குறிப்பாக 35 சதவிகிதத் தொழிலாளர்கள் வேலைக்கு வராமைக்கு மலேரியாதான் பொறுப்பு என உணர்ந்தார்கள். 1949-ன் சர்வேயின்படி மொத்த மக்கள்தொகையில் 2 முதல் 4 வரையான சதவிகித மக்கள் வேலைக்கு வாராமைக்குக் காரணம் மலேரியா எனத் தெரிவித்தார்கள். மேலும் விவசாயத்திற்கு நிலங்களைப் பயன்படுத்தாமைக்குக் காரணம் மலேரியாதான் என்றும் உணர்ந்தார்கள். இன்னும் பல்வேறு வியாதிகளால் இந்தியாவில் நூற்றுக்கணக்கான மில்லியன் மக்கள் மாண்டு மடிகிருர்கள். போதிய போஷிப்பு இன்மை, சத்துள்ள உணவு இல்லாமை, நோயினுல் மக்களின் சக்தி குறைதல், புதிய கருத்துகளுக்கு இடம் அளிக்காமை இவையனைத்தும் மக்களின் தரத்தையும், ஆயுட்காலத்தையும் குறைத்தன. பிறப்பு விகிதம் குறைவாகவும், இறப்பு விகிதம் குறைவாகவும் இருப்பின் மக்கள்தொகை வளர்ச்சி நிரந்தரமாக இருக்கும், அதனுல் சேதாரமும் குறையும்; நன்மைகள் உண்டாகும். பிறப்பு விகிதம் குறையும் முன்னரே இறப்பு விகிதம் குறையும். மக்கள் தொகை வளர்ச்சியும் துரிதப்படுத்தப்படும். எல்லா வயது பிரிவுகளிலும் பிறப்பு, இறப்பு ஒரேமாதிரியாக இருந்தாலும் மக்கள் தொகை வளரும். பிறப்பு இறப்பு விகிதங்கள் குறைந்தால்தான்

அதிக ஆயுட்காலம் உண்டாகும். பின்தங்கிய நாடுகளில் பல்வேறு சமூக, சுகாதாரத் திட்டங்களைப் பின்பற்றினல் இளமையில் ஏற்படும் இறப்பு விகிதங்களைக் குறைக்க முடியும். குறிப்பாக, குழந்தைகளின் இறப்பு, தாய்மார்களின் இறப்பு இவை பெரிதும் குறையும். மேலும் ஆரம்ப வயதுப் பிரிவுகளும், பிறரை நம்பி வாழும் மக்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கும். அதன் காரணமாக உயிர்வாழ்பவர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கும், வேலை செய்யும் பிரிவிலுள்ள மக்களின் எண்ணிக்கையும் உயரும். நுகர்வின் மட்டத்தில் முன்னேற்றமான ஆரோக்கியம் ஒரு முக்கியப் பகுதியாகும். தொழிலாளர்கள் நோயினல் பீடிக்கப்பட்டு அதனல் ஏற்படும் பொருளாதார நஷ்டத்தைக் குறைக்கவேண்டும். உழைப்பின் சக்தியின் தரத்தை உயர்த்தவேண்டும். நோயும், போஷிப்புக் குறைவும் இருக்குமானல் பொருளாதார முன்னேற்றம் காண முடியாது. தலா உற்பத்தியும் உயராது. தலா உற்பத்தி சத்துள்ள உணவு, ஆரோக்கிய நிலைகளைப் பொறுத்ததாகும். சுறுசுறுப்பு, உற்சாகம், புதிய கண்டுபிடிப்புகள், அதற்குரிய நாட்டம், கண்டுபிடிப்பை ஒத்துக்கொள்ளுதல் இவை ஆரோக்கியத்திற்கு உகந்தவையாகக் கருதப்படுகின்றன. மேலும் திட்டங்களில் உணவு, சுகாதாரம், ஆரோக்கியம் இவற்றுக்குச் சிறப்பிடம் அளித்தல்வேண்டும். பொருட்சார்நலம், நுகர்வின் மட்டத்தை உயர்த்தல் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாதவை. முதலாக்கத்தின் விகிதம் அதிகரிப்பு, நுட்ப இயல் முன்னேற்றம், மக்கள் தொகைக்கு ஏற்றவாறு நிகர முதலீடு அதிகரிப்பு, தொழிலாளர் முதல் விகிதம் அதிகரிப்பு, கண்டுபிடிப்புகள், தொழில் திறமை கிராமநலத் திட்டங்கள் இவையாவும் மக்களின் ஆரோக்கியத்தையும், ஆயுட்காலத்தையும், பொருளாதார முன்னேற்றத்தையும் அதிகரிக்க உதவும் காரணிகளாகும். இந்தியா, இலங்கை இந்நாடுகளில் கிராமநலத் திட்டங்களுடன் சுகாதாரத் திட்டங்களையும் இணைத்திடல்வேண்டும். நுட்ப உணர்வு, நுட்ப உதவி, கல்வி, பயிற்சி முறைகளை அதிகரித்தல், மக்கள் சக்தியைத் திறமையாகப் பயன்படுத்தல் ஆகியவை நடைமுறை உற்பத்திக்கு மேலும் முதலாக்கம் தரும். இவைபோன்ற திட்டங்களைப் பின்பற்றுவதால் வளரும் மக்கள்தொகைக்கு வேலை வாய்ப்புகளுக்கு பயம் இல்லாமல் பொருளாதாரத்தை உயர்த்த முடியும்.

வேலையின்மை, வேலைக்குறைவு இவற்றைப் போக்கி, உழைப்புக்கும், மக்கள்தொகைக்குமுள்ள விகிதத்தை அதிகரிக்கலாம். வேலையின்மை, வேலைக்குறைவு இவை இரண்டுக்கும் தெளிவான இலக்கணம் கிடையாது. இவற்றின் எல்லைகளையும் புரிந்துகொள்ள முடியாது. திரு சியாங்சிஸ் (Chiang Hsish)

அவர்கள் வேலையின்மையை மூன்று வகைகளாகப் பிரித்துள் ளார்கள்:

(1) தெரியக்கூடிய வேலையின்மை.

(2) உருமாறிய வேலையின்மை.

(3) நிலையான வேலையின்மை.

இவற்றுடன் வேலைக்குறைவையும் சேர்த்துக்கொள்ளலாம். வேலைக் குக் குறைவான நேரத்தைச் செலவிடுதல் அதிகநேரம் வேலை செய்ய முடியுமானாலும் குறைவான நேரத்தை வேலையில் செலவிடுவது. பருவக்காலத்தில் ஒரு வேலையை ஏற்றுக்கொள்ளுதல், முழுவேலை அல்லது பாதிவேலை ஒப்புக்கொள்ளுதல் இவை தெரியக்கூடிய வேலையின்மை எனக் கருதப்பட்டது. உருமாறிய வேலையின்மை முழுநேரம் வேலை செய்தாலும், திறமை, பயன் அதிகமில்லை. முறைப்படி சட்டம், பழக்கத்திற்கு ஏற்றவாறு முழுநேரமும் வேலை செய்தாலும் வேலை நேரங்களில் பேசி நேரத்தைப் போக்குதல் இந்த வகையைச் சார்ந்தது. விவசாயத்தில் தானியங்கள் மாறி மாறி பயிரிடுவதால் எல்லா நாட்களுக்கும் உழைக்க முடியும். நீர்ப்பாசனவசதிகளை அதிகப்படுத்தல், புதிய முதலீட்டை அதிகப்படுத்தல் இவற்றினால் விவசாயம் பெருகிப் பல நாட்களுக்கு உழைக்க முடியும். கிராமப்புறங்களில் பொதுநல நன்மையைக் கருதி ஒன்றாகச் சேர்ந்து பொதுப் பணிகளில் ஈடு படலாம். முதலாக்கத்தைக் கூட்டாக அதிகரித்தால் நாடு வளரும். நிதி வசதிகளை ஒன்றாகச் சேர்த்து பொது வேலைகளில் ஈடுபடுத்துவதாகும். தனியாரின் முதலாக்கத்தையும் பெருக்க லாம். உதாரணமாக, குடியானவன் தன் வீடு, பண்ணை, யந்திரம், கருவிகள் இவற்றில் முன்னேற்றம் செய்யலாம். கூட்டாக முத லாக்கம் கிராமத்திலும் செய்யலாம். குளம், ரோடு, கிணறு, நீர்ப் பாசன வசதிகள் மொத்தமான கட்டடங்கள், கிராமச் சுகாதாரம் இதன்மூலமாக அதிகரிக்கலாம். இலங்கை, இந்தியா இந்நாடு களில் கிராமநலத் திட்டங்கள் நல்ல முன்னேற்றம் அடைந் துள்ளன. 1951ஆம் ஆண்டில் 4 ஆண்டுகளில் 5,118 கிராம முன்னேற்றம் செய்தார்கள். இலங்கையில் தன்னிறைவு செய்கைகள் முன்னேற்றப்பட்டன. 1951-ல் இலங்கையில் முத லாக்கத்தின் மதிப்பையும், அரசாங்க நிதி உதவியையும் பின்வரும் அட்டவணை எடுத்துக்காட்டும்.

## அட்டவணை 83

| திட்டங்கள் | எண்ணிக்கை | உள்நாட்டில் முயற்சியின் மதிப்பு (ரூபாய், ஆயிரத்தில்) | அரசாங்க நிதி உதவிகள் (ரூபாய், ஆயிரத்தில்) |
|---|---|---|---|
| 1 பொதுக் கட்டடங்கள், மண்டபங்கள் | 915 | 509 | 18·5 |
| 2 பள்ளிக்கூடங்கள் | 467 | 328 | |
| 3 தொழில் நிலையங்கள் | 300 | 115 | |
| 4 மற்ற கட்டடங்கள் | 30 | 25 | |
| 5 சாலைகள் புதியவை—மைல்கள் | 1,870 | 694 | 50·5 |
| 6 சாலைகளைச் செப்பனிடுதல் | 610 | 151 | |
| 7 கக்கூஸ் வசதிகள் | 5,781 | 313 | 262·6 |
| 8 கிணறுகள் | 1,750 | 391 | |
| மொத்தம் | | 2,526 | 331·7 |

பிகார் மாநிலத்தில் இதுபோன்றத் திட்டங்கள் பின்பற்றப் பட்டன. சென்னையிலும் 1951-ல் இதுபோன்று மேற்கொள்ளப் பட்டன.

1951ஆம் ஆண்டில் செய்த வேலைகளின் மொத்த மதிப்பு ரூ. 67,33,000. இவற்றில் கிராம மக்கள்உழைப்பாகவும் பணமாக வும் கொடுத்தவற்றின் மதிப்பு ரூ. 33,48,000. ஐந்து ஆண்டு களில் 1,076 கிணறுகள் வெட்டினார்கள்; 11 அணைகள், குளங் கள்ஏற்படுத்தினார்கள்; நூற்றுக்கணக்கான மைல்களுக்கு சாலைகள் பழுதுபார்த்துச் செப்பனிடப்பட்டன; 1 மில்லியன் மரங்கள் நடப் பட்டன; 6,230 ஏக்கர் நிலங்கள் விவசாயத்திற்குக் கொண்டு வரப்பட்டன. 228 பள்ளிக்கூடங்கள், 73 வாசகச்சாலைஅறைகள், 3,060 கக்கூஸ் வசதிகள் ஏற்படுத்தப்பட்டன. ஆகவே இலங்கை, சென்னை இரண்டு உதாரணங்களும் எவ்வாறு மக்களின் உழைப்பு நாட்டின் நற்பணிக்கு பயன்படுத்தப்பட்டது என்பதை விளக்கும். ஐக்கிய மாகாணத்திலும் எட்டாவா என்ற இடத்தில் கிராம நலத் திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டன. தானாக வரும் முத லாக்கம் ரூபாய் 2,000 மில்லியன். அதாவது இது தேசிய வருமா னத்தில் $2\frac{1}{2}$ சதவிகிதமாகப் போற்றப்படுகிறது. இதனால்

அரசாங்கச் செலவும் குறையும்; நாட்டுக்கும், மக்களுக்கும் நன்மையும் ஏற்படும். உபயோகமற்ற உழைப்பு கிராமப்புறங்களில் புறக்கணிக்கப்படுவதைத் தடுக்கலாம். நுட்ப உதவிகள், பொறியியல் வல்லுநர்களின் உதவிகள் அரசாங்கமே முன்வந்து அளித்திடல் வேண்டும். இவற்றை நன்முறையில் செயல்படுத்த பொறுப்பு உள்ளவர்களிடத்தில் இந்த வேலைகளை ஒப்படைக்கவேண்டும்: அரசாங்கமும் பண உதவியும் கொடுக்கவேண்டும். சிறிய தொழில்களின் முன்னேற்றத்திற்குக் குறைவான முதல் போதும். இந்தொழில்களை எங்கும் எப்போதும் ஏற்படுத்தலாம். உபரி உழைப்பையும் நன்முறையில் பயன்படுத்தலாம். சிறிய, பெரிய தொழிற்சாலைகளின் போட்டியைத் தவிர்த்தல்வேண்டும். கிராம உழைப்பை முழு அளவில் பயன்படுத்த கைவினைஞர் கைவேலைகள், பொம்மை செய்தல், கைத்தறி ஆடைகள் போன்ற தொழில்களை அதிகரிக்கவேண்டும்.

# 29. குழந்தைகளின் இறப்பு

குழந்தைகளின் ஆரோக்கியமும் நல்வாழ்வும் நாட்டிற்கு மிக அவசியமாகும். ஏனெனில் அவர்களே வருங்காலக் குடிமக்கள். இந்தியாவில் குழந்தைகள் அதிகம் பிறந்தாலும், இறப்பும் அதிகமாக உள்ளது. குறைவான போஷிப்பு உள்ள தாய்மார்களின் குழந்தைகள் குறைவான எடையுள்ளதாக உள்ளன. அதன் காரணமாக அவை வெகு விரைவில் இறந்துவிடுகின்றன. சரியான முறைப்படி போஷிப்பு தரமுடியாத பின்தங்கிய நாடுகளில் குழந்தைகளின் இறப்புக்குரிய புள்ளிவிவரங்கள் சரியாகக் கிடைப்பதில்லை. 1953-ல் பூவிருந்தவல்லியில் குழந்தைகள் ஆய்வு ஒன்று நடத்தப்பட்டது. கணக்கெடுக்கப்பட்ட தாய்மார்கள் மொத்தம் 1,555 பேர்; இந்தத் தாய்மார்கள் பெற்றெடுத்த குழந்தைகள் மொத்தம் 1,563. இதில் 838 ஆண் குழந்தைகள், 725 பெண் குழந்தைகள் இவற்றில் 8 இரட்டைப் பிறப்புகளும் சேர்ந்துள்ளன. சரியான முறையில் பிறந்த குழந்தைகள் 1,506; அதாவது 807 ஆண் குழந்தைகளும் 699 பெண்குழந்தைகளும் ஆகும். 57 குழந்தைகள் சரியான முறைப்படி பிறக்காதவை. அவற்றில் 31 ஆண்குழந்தைகள், 26 பெண் குழந்தைகள். ஆக, கணக்குக்கு உகந்தபடி எடுத்துக் கொள்ளப்பட்டவை சரியான குழந்தைகள் 1,506. இவற்றில் 186 குழந்தைகள் இறந்தன. சில குழந்தைகள் இடத்தைவிட்டுப் போய்விட்டன. அதனால் அவற்றை மேற்கொண்டு கவனிப்பதற்கு இல்லை. ஆக, 1951 ஆகஸ்டு முதல் 1952 ஆகஸ்டு வரை குழந்தைகளின் இறப்பு விகிதம் 1,000 குழந்தைகளுக்கு 137·5 முதல் 347·8 வரை இருந்தது என உண்மையில் கண்டுபிடிக்கப் பட்டது.

1,000 குழந்தைகளுக்கு 140·7 குழந்தைகளின் இறப்பு விகிதத்தை வயதுக்கு ஏற்றவாறு கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

| | | |
|---|---|---|
| 1 மாதத்திற்குள் 1,000 பிறப்பில் | 45·70 | குழந்தைகள் இறந்தன |
| 1 முதல் 6 மாதத்திற்குள் ,, | 63·40 | ,, |
| 6 முதல் 12 மாதத்திற்குள் ,, | 31·63 | ,, |
| மொத்த இறப்புகள் | 140·73 | |

குழந்தைகள் மரணத்திற்கு மயக்க மருந்தை உள்ளுக்குக் கொடுப்பதனுல் 42 குழந்தைகள் இறந்தன. இவற்றில் 32 குழந்தைகள் 3 மாதம் முதல் 12 மாதத்திற்குள் இறந்துவிட்டன. மூச்சடைப்பின் காரணமாக 26 குழந்தைகள் இறந்தன. அதில் 21 குழந்தைகள் 1 மாதத்திலேயே இறந்துவிட்டன. சில குழந்தைகள் 10 மாதம் முடிவதற்குள், முன்னதாகவே பிறந்து விரைவில் இறந்துவிடுகின்றன. அதைப்போல 23 குழந்தைகள் இறந்துவிடுகின்றன. போஷிப்புக் குறைவு, தோல் சம்பந்தப் பட்டவைகள், மற்ற வியாதிகளினுல் 37 குழந்தைகள் இறந்து விட்டன. 3 குழந்தைகளுக்கு இறப்புக்குரிய காரணம் கண்டு பிடிக்க முடியவில்லை. சாதாரணமாக ஒரு குறிப்பிட்ட கிராமத்தைத் தேர்ந்தெடுத்து ஆராயும்போது ஏராளமான குழந்தைகள் இந்தியாவில் மடிகின்றன என்பதை உணர்த்துகிறது. குழந்தைகளின் இறப்புவிகிதம் மதம், சாதி இவற்றுக்கு ஏற்றவாறு மாறுபடும். கிறித்தவர்களிடையே குறைவான இறப்பு விகிதத்தைக் காணலாம். முஸ்லிம் மதத்தினர்களிடையே அதிகமான இறப்பு விகிதத்தைக் காணலாம். இந்துக்களிடத்தில்தான் இறப்புவிகிதம் உச்சக்கட்டத்தில் உள்ளது என்பதைப் பின்வரும் அட்டவணை காட்டும். இந்தியாவில் இந்துக்கள், முஸ்லீம்மத மக்கள் அதிகம். அதன் காரணமாக ஏராளமான குழந்தைகளின் இறப்பு இந்தியாவில் அதிகம்.

## அட்டவணை 84

**குழந்தைகளின் இறப்பு பல்வேறு மதத்தினர்களிடையே பம்பாய் நகரத்தில் 1938—47-ல் கணிக்கப்பட்டவை.**

| காலம் | இந்து தாழ்த்தப் பட்டவர்கள் | இந்துக்கள் | முஸ்லிம்கள் | இந்தியக் கிறிஸ்து வர்கள் | பார்சியர்கள் | ஐரோப்பி யர்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1938-39 | 332 | 272 | 247 | 236 | 111 | 174 |
| 1939-40 | 257 | 217 | 182 | 197 | 100 | 68 |
| 1940-41 | 232 | 209 | 187 | 169 | 95 | 39 |
| 1942-43 | 245 | 196 | 179 | 190 | 92 | 55 |
| 1943-44 | 261 | 193 | 181 | 193 | 84 | 53 |
| 1944-45 | 253 | 204 | 199 | 189 | 68 | 47 |
| 1945-46 | 286 | 186 | 166 | 164 | 80 | 26 |
| 1946-47 | 308 | 185 | 189 | 179 | 72 | 37 |

மேலேயுள்ள அட்டவணையில் இந்துக்கள், அதிலும் குறிப்பாக தாழ்த்தப்பட்ட இந்துக்கள், முஸ்லீம் மதத்தினர்களிடையேதான் அதிகமான இறப்பு விகிதத்தைக் காண்கிறோம். மக்கள் தாழ்த்தப் பட்ட நிலையில் இருக்கும் குடும்பங்களில் இறப்பு விகிதம் அதிகமாக உள்ளது. கீழேயுள்ள அட்டவணையில் குழந்தைகளின் இறப்பு விகிதத்தை (1900-52) பல்வேறு நாடுகளில் காணலாம்.

## அட்டவணை 85

| ஆண்டு | இந்தியா | இலங்கை | ஜப்பான் | அமெரிக்கா | இங்கிலாந்து | ஆஸ்திரேலியா | நியூஜிலாந்து | ஹாலந்து | சுவீடன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1900 | 232 | 178 | 151 | — | 154 | 104 | 71 | 153 | 94 |
| 1910 | 209 | 176 | 160 | — | 105 | 75 | 56 | 108 | 75 |
| 1920 | 195 | 182 | 163 | — | 80 | 66 | 48 | 50 | 65 |
| 1930 | 181 | 175 | 142 | — | 60 | 47 | 32 | 39 | 60 |
| 1940 | 160 | 149 | 124 | — | 57 | 38 | 30 | 39 | 39 |
| 1950 | 127 | 84 | 60 | 29 | 30 | 24 | 23 | 25 | 20 |
| 1951 | 116 | — | 57 | 29 | 30 | 25 | 23 | 25 | 21 |

மேலும் 1951ஆம் ஆண்டில் பல்வேறு நாடுகளில் குழந்தைக்கான விகிதத்தைக் கீழே வரைபட மூலமாக அறியலாம்.




1951ஆம் ஆண்டின் கணக்கின்படி குழந்தைகளின் இறப்பு விகிதத்தின் அடிப்படையில் நான்கு வகையாக நாடுகளைப் பிரிக்கலாம் :

1. 1,000 பிறப்புகளுக்கு 35 அல்லது அதற்கும் குறைவான இறப்பு விகிதத்தைக்கொண்ட நாடுகளைக் குறைவான நாடுகளாகக் கருதலாம்.

2. 1,000 பிறப்புகளுக்கு 35 முதல் 75 வரை இறப்பு விகிதத்தைக்கொண்ட நாடுகளை நடுத்தரமான நாடுகள் எனலாம்.

3. 1,000 பிறப்புகளுக்கு 75 முதல் 125 வரை இறப்பு விகிதத்தைக்கொண்ட நாடுகளை உயர்வான நாடுகளாகக் கருதலாம்.

4. 1,000 பிறப்புகளுக்கு 125க்கு மேல் இறப்பு விகிதத்தைக் கொண்ட நாடுகளை மிக உச்ச நாடுகள் என வகை செய்யலாம்.

1. முதல்வகையைச் சார்ந்த நாடுகள், அவற்றின் இறப்பு விகிதங்கள்—1951 கணக்கின்படி.

| | | |
|---|---|---|
| சுவீடன் | — | 21 |
| ஹாலந்து | — | 25 |
| நியூஜிலாந்து | — | 23 |
| ஆஸ்திரேலியா | — | 25 |
| இங்கிலாந்து | — | 30 |
| நார்வே | — | 26 |
| டென்மார்க் | — | 29 |
| சுவிட்ஸர்லாந்து | — | 30 |
| அமெரிக்கா | — | 29 |
| ஃபின்லாந்து | — | 35 |

2. இரண்டாம் வகையைச் சார்ந்த நாடுகள் (நடுத்தரம்).

| | | |
|---|---|---|
| பெல்ஜியம் | — | 58 |
| ஸ்காட்லாந்து | — | 37 |
| கனடா | — | 38 |
| அயர்லாந்து | — | 45 |
| பிரான்ஸ் | — | 51 |
| ஜெர்மனி | — | 53 |
| ஜப்பான் | — | 51 |
| இத்தாலி | — | 67 |
| ஸ்பெயின் | — | 70 |

3. மூன்றும் வகையைச் சார்ந்த நாடுகள் (உயர்வு).

| | | |
|---|---|---|
| இலங்கை | — | 82 |
| போர்ச்சுகல் | — | 89 |
| இந்தியா | — | 116 |
| மெக்ஸிகோ | — | 100 |
| பிரேசில் | — | 107 |

4. நான்காம் வகையைச் சார்ந்த நாடுகள் (மிக உச்சம்).

| | | |
|---|---|---|
| சிசிலி | — | 149 |
| எகிப்து | — | 166 |

கீழேயுள்ள புள்ளிவிவரங்கள் குழந்தைகளின் சராசரி இறப்பு விகிதத்தை 5 ஆண்டுகளின் அடிப்படையில் 1,000-க்கு எத்தனை பேர்கள் என்று காட்டுகின்றன.

| ஆண்டுகள் | 1,000-க்கு இறப்புகள் |
|---|---|
| 1900–1905 | 215 |
| 1906–1910 | 228 |
| 1911–1915 | 204 |
| 1916–1920 | 219 |
| 1921–1925 | 174 |
| 1926–1930 | 178 |
| 1931–1935 | 174 |
| 1936–1940 | 161 |
| 1941–1945 | 161 |
| 1946–1950 | 134 |

1951 கணக்கின்படி குழந்தைகளின் இறப்பு விகிதம்பற்றி முக்கிய நகரங்களில் தயாரித்த புள்ளிவிவரங்கள்.

| நகரங்கள் | | 1,000-க்கு இறப்புகள் |
|---|---|---|
| நாக்பூர் | — | 239 |
| கல்கத்தா | — | 205 |
| ஆமதாபாத் | — | 170 |
| சென்னை | — | 167 |
| பூனு | — | 154 |
| லக்னோ | — | 133 |
| அலகாபாத் | — | 100 |
| பம்பாய் | — | 95 |
| டெல்லி | — | 92 |

எல்லா ஜாதியினர்களிடையேயும் ஆண் குழந்தைகள் பெண் குழந்தைகளைக் காட்டிலும் அதிகம். பெண் குழந்தைகள், ஆண் குழந்தைகளைக் காட்டிலும் சீக்கிரத்தில் வளரும். நகர்ப்புறத்தில் எல்லா மருத்துவ வசதிகள் இருந்தும், கிராமப்புறத்தைவிட இறப்பு விகிதம் அதிகம். இந்த மருத்துவ வசதிகள் கிராமப்புறத்தில்

அளித்தால் இறப்பு விகிதம் சற்றுக் குறையும். கிராமப்புறத்தில் குறைவான இறப்பு விகிதத்திற்குக் காரணம் காற்றுவசதி, இட வசதி, குறைவான மக்கள்நெருக்கம் போன்றவையாகும் குடிசை வாழும் மக்கள், தாழ்த்தப்பட்டோர்கள் இடையே பின்தங்கிய மக்களைவிட இறப்பு விகிதம் அதிகமாக உள்ளது. வீட்டுவசதிகள் வருமானம், கல்வி இவற்றின்காரணமாகக் குழந்தைகளின் இறப்பு விகிதம் மாறுபடுகிறது. வீடு எங்கே அமைந்துள்ளது, எப்படிப் பட்ட வசதிகள் உள்ளன, அடிப்படையான வசதிகள் எப்படி, ஏழ்மை, சுகாதாரமின்மை இவற்றின் அடிப்படையில்தான் இறப்பு விகிதம் அமைகிறது. குழந்தைகளின் இறப்புக்குப் பெரும்பாலும் ஏழ்மை, சுகாதாரமின்மை, நகரவளர்ச்சி ஆகியவையே காரணங்க ளாகும் எனப் பேராசிரியர் டிட்மஸ் (Prof. Titmus) அவர்கள் வலியுறுத்தியுள்ளார்கள்.

பொதுவாக, குழந்தைகளின் இறப்புக்குரிய காரணங்களை நான்கு வகையாகப் பிரித்து ஆராயலாம்:

(1) உயிரியல் காரணங்கள் (2) பொருளாதாரக் காரணங்கள் (3) சமூக, கலாச்சாரக் காரணங்கள் (4) மருத்துவ, வியாதிக் குரிய காரணங்கள்.

இந்தியாவிலுள்ள மொத்த மக்கள்தொகையில் 70 சதவிகிதம் கிராமப்புறங்களில் வாழ்கிறார்கள். அங்கே யாதொரு மருத்துவ மனைகளும் மருந்து வசதிகளும் கிடையாது. தகுதியுடைய, பயிற்சி பெற்ற டாக்டர்களில் 80 சதவிகிதம் நகர்ப்புறத்தில் இருந்துதான் பணியாற்றுகிறார்கள். கிராமப்புறங்களுக்கு டாக்டர்கள் விரும்பிச் செல்வதில்லை.

(1) **உயிரியல் காரணங்கள்:** கர்ப்பம் தரித்தவுடன் டாக்டர் ஆலோசனையைக்கேட்டு நல்லமுறையில் கர்ப்பத்தை வளர்த்தும், பாதுகாத்தும் வரவேண்டும். மேலும் சத்துள்ள சமவிகித உணவு களையும், பால், பழம் இவற்றையும் நன்முறையில் கர்ப்பப் பெண் களுக்கு அளித்திடல் வேண்டும். நோய்கள் இல்லாமல் நல்ல சுகாதாரமான, காற்றோட்டமுள்ள இடங்களில் பாதுகாத்து வர வேண்டும். பிரசவக்காலத்தில் சகல உதவிகளையும் அளித்திடல் வேண்டும். இதன் காரணமாக குழந்தைகளின் இறப்பு விகிதத் தைக் குறைக்கலாம். ஐக்கிய நாடுகளின் அறிக்கையின்படி அதிக மான தாய்மார்கள் முதல் பிரசவத்தின்போது இறக்கிறார்கள். முதல் பேறு சற்றுக் கடினமானதாகும். அடுத்து அடிக்கடி குழந்தைகள் பெறுவதாலும் தாய்மார்கள் இறக்கிறார்கள். அடிக்கடி குழந்தை களைப் பெறுவதால் தாய்மார்கள் பலவீனமாகப் போய்விடுகிறார் கள். அவர்களுக்கு போஷிப்புக் குறைவாக உள்ளது. கவனிப்பும்

மருத்துவ வசதிகளும் இல்லாத காரணங்களால் ஏராளமான தாய் மார்கள், குழந்தைகள் இறக்கிறார்கள். அதிகமான இறப்புக்கும் ஐந்து காரணங்களை டாக்டர் சந்திரசேகரன் குறிப்பிட்டுள்ளார்கள். அதிகப் பிறப்பு, அதிக இறப்பு, தாயின் வயது, பிறப்பின் ஒழுக்க முறை, பிறப்புகளுக்கு இடைவெளிக்காலம் குறைவு ஆகியவை. பின்தங்கிய நாடுகளில் அதிகமான குழந்தைகளின் இறப்பைக் காண்கிறோம். மேலும் பிறப்பு விகிதமும் உச்சக்கட்டத்தில் உள்ளது. ஆனால் மேல் நாடுகளில், முன்னேற்றமடைந்த நாடு களில் குறைவான இறப்பு விகிதம், குறைவான பிறப்பு விகிதங்கள் உள்ளன. இந்தியாவில் தாய்மார்கள் இளமையிலேயே திரு மணத்தை முடித்துக்கொள்கிறார்கள். இனவிருத்திக் காலமும் இந்தியாவில் ஏனைய நாடுகளைவிட அதிகமாக உள்ளது. ஒரே தாய் பல குழந்தைகளைப் பெற்றெடுப்பதற்கு விரைவில் திருமணம் செய்து கொள்ளுதல், இளமையில் திருமணம் முடித்துக்கொள்ளு தல், குழந்தைகள் பெற்றெடுக்க வேண்டும் என்ற ஆர்வம் போன்றவை சிறப்பான காரணங்களாகும். முதல் குழந்தைக்கும் இரண்டாவது குழந்தைக்குமிடையே போதிய இடைக்காலம் கிடையாது. ஒரு குழந்தை கையில் இருக்கும்போதே மறு குழந்தை கர்ப்பத்தில் உண்டாக்குவதால் தாய்மார்கள் மெலிந்து வலிமையை இழக்கிறார்கள். மேலும் குழந்தையை நன்முறையில் கவனிக்க முடிவதில்லை. இடைவெளி அதிகமிருந்தால் குழந்தை களின் இறப்பும் குறையும்.

(2) **பொருளாதாரக் காரணங்கள் :** குழந்தைகளின் இறப்புக்குப் பொருளாதாரக் காரணங்களையும் அறிவோம். ஏழ்மை, குறைவான வருமானம், குறைவான வாழ்க்கைத்தரம் இவை அதிகக் குழந்தை கள் இறப்புக்கு முக்கியக் காரணங்களாகும். அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பிய நாடுகளில் குழந்தைகளின் இறப்பு பெரும்பாலும், 90 சதவிகிதம் ஏழைக் குடும்பங்களில்தான் ஏற்படு கின்றன. திரு. வுட்பரி (Mr. Woodbury) அவர்களின் ஆராய்ச்சி யின்படி குழந்தைகளின் மொத்த இறப்பில் 10இல் 9 பாகம் ஏழைக்குடும்பங்களில், குறிப்பாக 30 சதவிகிதம் மிக ஏழ்மையான குடும்பங்களில் நிகழ்கின்றன என முடிவு செய்துள்ளார். குழந்தை களின் இறப்பு இங்கிலாந்தில் பணக்கார, உயர்வான குடும்பங் களில் குறைவாக உள்ளன. உயர்திரு டையினி (Mr. Tyne) அவர்கள் நியூகாசிலில் 1,000 குடும்பங்களை ஆராய்ந்து சர்வே ஒன்றும் நடத்தினர். குழந்தைகளின் இறப்புக்குக் காரணங்கள் நோய், பிணி, மோசமான வீட்டுவசதிகள், சுகாதாரக்குறைவு எனச் சுட்டிக்காட்டினர். பிரான்ஸ், கனடா போன்ற நாடுகளில் குழந்தைகள் இறப்புக்கு ஏழ்மை, தாய் தந்தைகளுக்குக் கல்வி

இல்லாமை, மோசமான குடும்ப, சமூக நிலைகள் எனத்தெரிகிறது. குறிப்பிட்ட வருமானத்தைக்கொண்ட குடும்பங்களில் அதிகமான குழந்தைகளை வைத்துக் கட்டிக் காப்பாற்ற முடிவதில்லை. உத்தியோக உயர்வு இல்லாத நிரந்தரமான வருமானத்தைக் கொண்ட குடும்பங்களில் குழந்தைகளின் இறப்பு அதிகமாக உள்ளன. உத்தியோக உயர்வையும் உயர்ந்த வருமானத்தையும் கொண்ட குடும்பங்கள், பணக்காரக் குடும்பங்கள் இவற்றில் குழந்தைகளின் இறப்பு குறைவாக உள்ளது. குடிசைவாழ்மக்களிடையேயும் சேரிப்புறங்களில் வாழும் மக்களிடையேயும் அதிகப்படியான குழந்தைகளின் இறப்புகளைக் காணலாம். குடும்பங்களுக்கு உணவின்அளவு வருமானத்தைப் பொறுத்ததுதான். வருமானம் இல்லாமையால், உணவு எல்லோருக்கும் குடும்பத்திலுள்ள அத்தனை பேருக்கும் அளிக்க முடியவில்லை. பசி, பிணி, நோய், வருமானக் குறைவு, நிரந்தரமான வருமானம், குடிசைவாழ் மக்களுக்கு சௌகரியக் குறைவு இவற்றினால் ஏராளமான குழந்தைகள் இறக்கின்றன. டாக்டர் லெஸ்லீ பாங்க்ஸ் (Dr. Leslie Banks) அவர்களின் ஆராய்ச்சியின்படி உணவு முறைகள்தான் தாய்மார்களைப் பெரிதும் பாதிக்கும். கர்ப்பக்காலத்தில் சத்துள்ள உணவு கிடையாது; பிரசவக் காலத்தில் போதிய கவனிப்பும் கிடையாது; குழந்தை பிறந்தவுடன் போஷிப்பும் கிடையாது; குழந்தைகளின் உடம்பும் மெலிந்து போகிறது. போதிய சத்து இல்லாமையால், தாய்ப்பால், செயற்கைப் பால் வசதிக்குறைவால் மடிகின்றன. பால், முட்டை, பழவகைகள், வைட்டமின் உள்ள சத்துள்ள உணவு இவையாவும் கர்ப்பம்தரித்த காலத்தில் தாய்மார்களுக்கு அளிக்கப் படாத காரணத்தால் பல நோய்களுக்கும், வியாதிகளுக்கும், சோம்பல், தளர்ச்சி முதலியவற்றிற்கும் ஆளாக்கப்படுகிறார்கள். 1949ஆம் ஆண்டில் மக்கள்தொகையைப்பற்றி நன்முறையில் அறிய ஆங்கிலேய ராயல் கல்லூரி ஒரு கமிட்டியை ஏற்படுத்தியது. மக்கள்தொகையைப்பற்றி விசாரித்து பல அம்சங்களைப்பற்றி ஆராய்வதற்காக இந்த கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. பிரசவத்திற்கு முன் 2 ஆண்டுகளில் 40 சதவிகிதத் தாய்மார்கள் சௌகரியக் குறைவாகவும், முடியாத நிலையிலும் உள்ளார்கள். மேலும் அல்லல் படுகிறார்கள். பிரசவம் முடிந்த பின்னர் 2 ஆண்டுகளுக்கு 26 சதவிகிதத் தாய்மார்கள் அல்லல்படுகிறார்கள். ஆக, கர்ப்பிணிக்கு முன்னும், பின்னும் கவனம் தேவை. அப்படி இல்லாத காரணத்தால் ஏராளமான தாய்மார்களும் குழந்தைகளும் இறக்கிறார்கள். ஆங்கிலேயப் பிரபு பாய்டு ஓர் (Boyd Orr) அவர்கள் குறிப்பிடுவது யாதெனில் உயிருள்ள குழந்தைகள் மெலிந்த உடல் வலிமையினாலும், ஆரோக்கியக் குறைவினாலும், ஏழ்மையினாலும் அல்லல் படுகின்றன. எங்குக் குழந்தைகள் அதிகம் இறக்கின்றனவோ அங்

கெல்லாம் உயிருடன் இருப்பவர்களின் ஆயுட்காலமும் குறைவு. ஊட்ட உணவு, சத்துள்ள உணவு தாய்மார்களுக்கும், குழந்தை களுக்கும் மிக அவசியமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். தமிழ் நாட்டில் குழந்தைகளுக்கு புரோட்டின்சத்துள்ள ரொட்டிகளை வழங்கிடுதல், பால்பவுடர் வினியோகம்செய்தல் போன்ற செய்கை கள் குழந்தைகளை வலிமைப்படுத்தும்; மேலும் இறப்பு விகிதங்களை யும் குறைக்கும். குழந்தைகள் அதிகமாக உள்ளதை வருமானக் குறைவான குடும்பங்களில் காண்கிறோம். இந்தியாவில் இது போன்ற நிலைமைகளைக் காண்கிறோம். ஆனால் இங்கிலாந்தில் அதிக வருமானமுள்ள குடும்பங்கள் குறைவான குழந்தைகள் என்ற நிலையை அங்கு காண்கிறோம். சுவீடன் நாடுதான் நடுத்தர மானது. அங்கு அதிகமான ஏழ்மையானவர்கள் கிடையாது. உச்சமான செல்வத்தைப்பெற்றிருப்பவர்களும் கிடையாது. மேலும் வருமானத்திற்கு ஏற்றவாறு குழந்தைகளைப் பெற்றிருக்கும் நாடு சுவீடனாகும். இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் குழந்தை களின் இறப்பு விகிதத்தைக் கீழே காணலாம். இவை 1,000 குழந்தைகளுக்கு எவ்வளவு இறக்கின்றன என்பதை அறிவிக்கின்றன.

| | | |
|---|---|---|
| மத்தியப் பிரதேசம் | — | 194 |
| ஒரிஸ்ஸா | — | 189 |
| உத்தரப் பிரதேசம் | — | 129 |
| பஞ்சாப் | — | 123 |
| சென்னை | — | 119 |
| பம்பாய் | — | 116 |
| மே. வங்காளம் | — | 110 |
| மைசூர் | — | 91 |
| அஸ்ஸாம் | — | 89 |
| பீகார் | — | 89 |

திரு. ஆல்வா மிர்டால் (Alva Myrdal) அவர்கள் இரண்டு வெவ்வேறு வருமானமுள்ள குடும்பங்களின் இறப்பு விகிதங்கள் முறையே 4·89, 1·43 எனவும் குழந்தைகளின் இறப்பு ஏன் இவ்வாறு பல்வேறு வருமானங்களைக் கொண்ட குடும்பங்களில் மாறுபடுகின்றன என்பதையும் விளக்கியுள்ளார்கள். குழந்தை களின் இறப்புக்கு அடிப்படையான காரணம் தவறான முறையில் வருமானப் பங்கீட்டுமுறை எனத் தெரிவித்துள்ளார்கள். வருமானத்தில் வேறுபாடு என்றால் எல்லாவற்றிலும் வேறுபாடு என்பது பொருளாகும். உணவு முறைகள், வீட்டு வசதிகள், மருத்துவ வசதிகள் எல்லாவற்றிலும் மாற்றம் காண்கிறோம்.

ஆகவே மனித சமுதாயத்தில் வருமானம், செல்வம் இவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்கிடல் வேண்டும். திறமையான மக்கள் தொகையை அடையவும், இறப்பு விகிதங்களைக் குறைக்கவும் வருமானத்தைச் செவ்வனே பங்கிடல் வேண்டும். ஆகவேதான் அரசாங்கமும் வருமானம், வீட்டுவசதிகள், குடிதண்ணீர் வசதிகள், சுகாதார முறைகள், ஆரோக்கியத்தை வளர்த்திடல்போன்ற நலத்திட்டங்களை மேற்கொண்டு மக்களுக்கு மேலும் வசதிகளை அளித்திடல் வேண்டும். பெற்றோர்களுக்கும், தாய் தந்தையருக்கும் போதிய கல்வியைப் புகட்டிடவேண்டும். குழந்தை வளர்ப்பு முறைகளை அறிவுறுத்தல் வேண்டும். எவ்வாறு குழந்தைகளைச் சுத்தமாக வைத்திருப்பது, நோய், பிணிகளிலிருந்து காப்பாற்றுவது, ஆகார முறை முதலியவற்றைச் சொல்லிந்தர வேண்டும். தாய்மார்களை ஓய்ந்த நேரங்களில் இதரத் தொழில்களில், பயன்படக்கூடிய தொழில்களில் ஈடுபடுத்தவேண்டும். துணிதைத்தல், பூக்கட்டுதல், குடிசைத்தொழில்கள் போன்ற பலவற்றை அளித்திடல் வேண்டும். வருமானம் பெருகிட வாய்ப்புகள் அளித்திடல் வேண்டும்.

(3) **சமூக, கலாச்சாரக் காரணங்கள்:** சிசுவதை செய்வதும் குழந்தைகளின் இறப்புக்குரிய காரணங்களில் ஒன்றாகும். தான் செய்த குற்றத்தை யாரும் தாராளமாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ராஜபுதனத்தில் குஜராத்தில் இதுபோன்ற காரியங்கள் பழக்கத்தில் உள்ளன. ஆனால் நிரூபிக்க முடியாது, மிகக்கடினம் எனத்தெரிகிறது. சிந்துவில் சில பழங்கால வம்சத்தினர்களும், கட்சுவில் ராஜபுத்திரர்களும் இதுபோன்ற பழக்கங்களைக் கையாண்டார்கள் என்று 1901 மக்கள் கணக்குப் படித் தெரிகிறது. திருவாளர்கள் யுதோவன், பர்ன் (Euthoven & Burn) அவர்கள் குறிப்பிடுவது யாதெனில் இம்முறைகள் எங்கும் பின்பற்றப்படவில்லை. மிகவும் அரிதான முறையாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். இதுபோன்ற முறைகளைத் தடுக்கவும் ஐக்கிய மாகாணத்தில் சட்டம் செய்யப்பட்டது. பரோடாவில் மக்கள்தொகைக் கணிப்பு அதிகாரி குலின் கிராமத்தில் பெண் பிள்ளைகளைச் சிசுவதை செய்திருப்பதைத் தெளிவாகக் கூறியுள்ளார். இந்தியாவில் ஏற்கெனவே பெண்கள் பற்றாக்குறை என்பது தெரிந்த விஷயம். இந்த நிலையில் பெண் குழந்தைகளைச் சிசுவதைசெய்தால் நிச்சயம் எதிர்காலத்தில் பெண்கள் குறைவாக இருப்பார்கள். ஆண், பெண் இவர்களைப்பற்றித் தனித்தனியே நல்ல முறையில் கணித்திடல் வேண்டும். கர்ப்பிணிகள் இந்த வேலைகள்தான் செய்யவேண்டும், இந்த வேலைகள் செய்யக் கூடாது என்று வகைப்படுத்திடல் வேண்டும். கர்ப்பிணிகளை

பரிசுத்தமற்றவர்களாக இந்து மதத்தில் கருதுகிறார்கள். அவர்கள் சுப காரியங்களில் கலந்துகொள்ளக் கூடாது. அப்படிக் கலந்து கொண்டால் காரியங்கள் தூய தன்மையை இழக்கின்றன என்ற நம்பிக்கைகளும் கருத்துக்களும் இந்தியாவில் நிலவி வருகின்றன. கர்ப்பிணியைச் சூழ்ந்து பல ஆரோக்கியமற்ற நிலைகள் உள்ளன. டாக்டர் B. C. போஸ் (Dr. B. C. Bose) அவர்கள் 1912ஆம் ஆண்டில் வங்காளத்தில் உள்ள கர்ப்பிணிகளின் நிலைமைகளை நன்முறையில் விளக்கியுள்ளார்கள். மார்வாரிகள் இம்முறையை அப்படியே பின்பற்றுகிறார்கள். 45 ஆண்டுகளாக யாதொரு மாற்றமும் இல்லை. கர்ப்பிணிகள் எப்போதும் படுத்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற நிபந்தனையால் நோய்களுக்கும், வியாதிகளுக்கும் ஆளாக வேண்டியுள்ளது. மருத்துவமனைக்கு அனுப்பாமல் வயதான பெண்களின் புத்திமதிக்கேற்றவாறு நடப்பார்கள். பயிற்சி பெறாத ஆயாக்களின் உதவியால் பிரசவத்தை கவனிக்கச் சொல்லுவார்கள். இருட்டு அறையில் தான் பிரசவம் நடைபெறும். காற்று, வெளிச்சம் வராமல் அறைகளை மூடிபோட்டு மறைத்து விடுவார்கள். இயற்கையே நமக்கு நல்ல வெளிச்சமும் காற்றும் கொடுத்தும் அதை உபயோகிக்க மாட்டார்கள். தாய்மாருக்குக் கிழிந்த துணியும், கிருமிகள் நிறைந்த துணியும் கொடுப்பார்கள். தாதிக்குக் காற்றோட்டமுள்ள பெரிய அறையையும் குழந்தையைப் பெற்றெடுத்த தாய்க்குச் சிறிய அறையையும் கொடுப்பார்கள். பிரசவத்திற்குப்பின் ஐந்து நாட்களுக்கு எந்த விதமான உணவும் அளிக்க மாட்டார்கள். தூங்கவும் விடமாட்டார்கள். அப்படியே தூங்கினால் இரண்டு மணிகளுக்குமேல் அனுமதிக்கமாட்டார்கள். தாயும், குழந்தையும் கிழிந்த பாய்களில் தூங்க விடுவார்கள். மது, சாராயம், மருந்து வகைகளைத் தாய்மார்களுக்குக் கொடுப்பார்கள். குழந்தை கத்தினால்தான் சுகம் என எண்ணுவார்கள். குழந்தைக்கு ஊசியைக் காய்ச்சி சூடு போடுவார்கள். கழுதையின் பால் கொடுப்பார்கள். பக்கத்து வீட்டுக்காரர்கள் தூங்க விடமாட்டார்கள். அப்போதுதான் வெடி போடுவார்கள்; கூச்சல் போடுவார்கள். இந்த மாதிரியான சூழ்நிலைகளில் பிரசவம் இந்தியாவில் நடைபெறுகிறது என டாக்டர் போஸ் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இதுபோன்ற கடுமையான சுகாதாரக் குறைவான இடத்தில் வாழ்வதால், தாயும் குழந்தையும் வலிமையாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பார்கள் என எப்படி எதிர்பார்க்க முடியும். சுத்தம் சுகம் தரும். கடவுளுக்கு அடுத்தபடியாகச் சுத்தத்திற்கு மதிப்பு அளிக்கிறார்கள். ஆனால் இங்கு பிறந்த குழந்தையைக்கூட சரிவர குளிப்பாட்டமாட்டார்கள். தண்ணீரைக் கொஞ்சம் எடுத்து தலையிலிருந்து கால் வரை தெளித்துவிட்டால் குளித்த மாதிரி கருதவேண்டியதுதான்.

தண்ணீர் பட்டால் குழந்தைக்கு ஆபத்து எனவும், புதுக் காற்று பட்டால் குழந்தைக்கு ஆபத்து எனவும் கூறுவார்கள். குழந்தை பெறுவதால் வீடு தூய தன்மையை இழக்கிறது என்பது போன்ற மூடநம்பிக்கைகள் மக்களிடையே அதிகமாக உள்ளதை இன்றும் காண்கிறோம். வங்காளத்தில் ஒரு சிறிய துவாரம் இல்லாமல் வீட்டை அடைத்து மூடிவிடுவார்கள். அதற்குக் கிழிந்த சாக்குகளை வைத்து அடைப்பார்கள். பிரசவக் காலத்தில் கர்ப்பிணியின் பக்கம் தன் சொந்தத்தாய் வரக்கூடாது. அப்படியே தாயை அனுப்பினுல் சில நிபந்தனையின்பேரில்தான் அனுப்புவார்கள். பெரும்பாலும் தாய்மார்களை அனுமதிக்க மாட்டார்கள். இன்னும் பழைய கெட்டபழக்கங்கள், அறியாமை, கொடுமையான மருந்து முறைகளைப் பின்பற்றுதல், சரியான கவனிப்பு இல்லாமை இவை நோய்களுக்குக் காரணமாகி ஏராளமான குழந்தைகள் இந்தியாவில் இறக்கின்றன. தாதிமார்கள் பெரும்பாலும் மருத்துவ வம்சத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தாழ்த்தப்பட்ட வம்சத்தைச் சார்ந்தவர்கள்; படிக்காதவர்கள்;. மருத்துவமுறையில். பயிற்சி பெருதவர்கள்; பழக்கத்தின் அடிப்படையில்தான் இந்த வேலையில் ஈடுபடுகிருர்கள். கிராமப்புறங்களில் மருத்துவ வசதிகள் இல்லாத காரணத்தால் தாதிமார்களுக்குப் பெருத்தத் தேவை ஏற்பட்டுள்ளது. அவர்களை அடியோடு சமூகத்திலிருந்து நீக்கிவிட முடியாது. அவர்கள் கையைக் கழுவிக்கொண்டு சாதாரணமாக வேலைகளைக் கவனிக்கிருர்கள். தாதிமார்களால் எவ்வளவு குழந்தைகள், தாய்மார்கள் இறக்கிருர்கள் என்பதை எளிதில் கணக்கிட முடியவில்லை. கர்ப்பிணிகள் அமைதியாகவும், மனத்திடமாகவும் இருக்கவேண்டியதுதான். அதிலும் திருமணம் ஆகாமல் குழந்தைகளைப் பெறும் தாய்மார்கள் பயந்து இருக்க வேண்டியுள்ளது. இதற்கு உண்டான சட்டபூர்வமற்ற பிறப்புகளுக்குத் தகுந்த புள்ளிவிவரங்கள் கிடையாது. இந்த மாதிரி குழந்தைகளின் இறப்பு அதிகம். அப்படிப்பட்ட தாய்மார்களை உறவினர்களும் பெற்றோர்களும் கொடுமைப்படுத்துவார்கள். இதற்கான குழந்தை விடுதிகளை ஏற்படுத்தி அனுதைக் குழந்தைகளை அங்கு சேர்த்து விடுகிருர்கள். தாய்ப்பால் அந்தக் குழந்தைகளுக்குக் கிடையாது. சமுதாயமும் அரசாங்கமும் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண வழி வகுக்கவில்லை.

ஸ்காண்டிநேவியாவில் உள்ள நார்வே, சுவீடன் போன்ற நாடுகளிலும் பின்லாந்து, டென்மார்க், ஐஸ்லாந்து போன்ற நாடுகளிலும் ஆண் பெண் இருவருக்கும் சம உரிமைகள் உண்டு; சரிநிகராக வாழ்கிருர்கள். பொருளாதார, சமூக வாழ்வில் பெண்களுக்குச் சம பங்கு, சம உரிமையும் வழங்கியுள்ளார்கள்.

மனிதன்தான் குடும்பத் தலைவன் என்பது பழங்காலக் கருத்து ஆகி விட்டது. பெண் தானுகவே சுதந்திரமாகச் சம்பாதிக்கவும், வாழவும் உரிமைகள் உண்டு. குடும்ப வேலைகளில் கணவன் மனைவி இருவருக்கும் சம உரிமைகள் சமப் பங்குகள் உள்ளன. ஆண்களுக்கும் பெண்களுக்கும், குடும்பப்பொருளாதாரம், குடும்பக்கலை போதிக்கப்படுகின்றன. சுவீடனில் ஆண், பெண் சுதந்திரம் அதிகமாக உள்ளது. பெண்களுக்கு உயர்நிலைக் கல்வி படிக்கும் போதே இனப்படிப்பு (Sex education) சொல்லித் தரப்படுகிறது. மக்கள்தொகை, இனவிருத்தி, குடும்பக்கட்டுப்பாடு, குடும்ப அளவைக் குறைத்தல் போன்ற பல அம்சங்களைக் கொண்ட இனப்படிப்பு எல்லாப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் போதிக்கப் படுகின்றது. கல்யாணம் ஆகாமல் காதலில் ஈடுபடுவதும், சிசுக் குலைவும் அனுமதிக்கப்படுகின்றன. கல்யாணமாகாத தாய்மார்கள் சமூகத்தில் அனுமதிக்கப்படுகிருர்கள். அதற்காக அவர்களுக்கு யாதொரு தடையும் கிடையாது. பெற்றோர்களும் தொந்தரவு செய்யமாட்டார்கள். கல்யாணம் ஆகவில்லையென்ருலும் தனியாக சுதந்திரமாக குடும்பம் நடத்தலாம் அல்லது பெற்றோர்களுடன் சேர்ந்தும் வாழலாம்.

விவாக ரத்து பொதுவாக தாராளமாக அனுமதிக்கப்படும். இதன் பொருள் குடும்ப வாழ்க்கை உடைகிறது என்பது அல்ல. 90 சதவிகிதக் குடும்பங்கள் சாதாரணமாக அமைதியாகவும், நிரந்தரமாகவும் வாழ்கிருர்கள். குடும்பம் முறிந்தால் அரசாங்கம் குழந்தைகளுக்கு எல்லாப் பொறுப்புகளையும் மேற்கொள்ளும். அத்துடன் எல்லா வசதிகளும் அக் குழந்தைகளுக்கு அளிக்கும், தவறுதலான, சட்ட ரீதியான குழந்தைகள் என்ற பேச்சுக்கே இடம் கிடையாது. ஆனல் இந்தியாவில் இவற்றை ஒழுக்கக் குறைவாகக் கருதுகிருர்கள். ஆண், பெண் சுதந்திரம் இங்குக் கிடையாது. குடும்பம் முறிந்தால் அதனுல் பாதிக்கப்படும் குழந்தைகளை அரசாங்கம் ஏற்றுப் பாதுகாக்கும். சமூக நலப் பாதுகாப்பு, சட்ட முறைகள் முன்னேறியுள்ளன. குழந்தைகள் படி, மாணவர்கள் படி போன்ற நிதிவசதிகள் அளிக்கப்படுகின்றன. இனப் படிப்பு, சுகாதாரப்பணிகள், தாய்மார்கள் குழந்தைகளை வளர்க்கும் முறைகள், ஓய்வு, வேலையில்லாத்திண்டாட்டத்திற்குப் பாதுகாப்புகள் அளிக்கப்படுகின்றன. 67 வயதுக்குப் பின் பென்ஷன் திட்டம், உதவி பென்ஷன் அளிக்கப்படுகின்றன. ஓய்வுபெற்ற பின்னரும் அதே விதமான வாழ்க்கைத்தரத்தை நடத்துவதற்கு இதுபோன்ற திட்டங்களை மேற்கொண்டுள்ளார்கள். பொருளாதாரப் பாதுகாப்புகள் அளிக்கப்படுகின்றன. பெண்கள் யாரையும் நம்ப வேண்டியதில்லை. குழந்தைகளும் அதைப்போல்

பெற்றோர்களை நம்பவேண்டியதில்லை. சுவீடன் பொருளாதாரத்தில் முன்னேறிய நாடுகளில் ஒன்றுனாலும் மக்கள்தொகை அம்சத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் நாடு என்பதை மறக்கக்கூடாது.

(4) **மருத்துவ, வியாதிக்குரிய காரணங்கள் :**

**வீட்டுப் பிரசவம்:** போதுமான மருத்துவமனைகளும், மருந்து வசதிகளும் மருத்துவர்களும் கிடையாது. இந்தியாவில் 75 சத விகிதப் பிரசவங்கள் வீட்டில் நடைபெறுகின்றன. மருத்துவமனை களுக்குச் செல்வது கடைசியாகத்தான் இருக்கும். மருத்துவ மனைக்குச் செல்வது என்றால் வெறுப்பாக உள்ளது. சொந்த வீட்டைவிட்டு வெளியே செல்லச் சிலருக்கு விருப்பம் கிடையாது. எது சுகமான இடம், மருத்துவமனையா; வீடா? என்ற சர்ச்சை தோன்றுகிறது. மருத்துவமனை நல்ல இடம்தான். ஆனால் அங்கு பயிற்சி பெறாத பணியாளர்கள் இருக்கிறார்கள். பேராசிரியர் டுகால்டு பேர்ட் (Dugald Baird) அவர்கள் வீட்டில் பிரசவம், மருத்துவமனையில் பிரசவம் என்ற தலைப்பில் ஆராய்ந்து குறிப்பிட் டுள்ளதாவது குழந்தைகள் பிறப்பு இயற்கையானது, அது வீட்டில் பிறந்தால் எந்தவிதமான பாதுகாப்பும் கிடையாது. அதாவது அதன் உயிருக்கு உறுதியளிக்க முடியாது. அதனால் வரக்கூடிய துன்பங்களுக்கு ஆளாகவேண்டும். ஆரோக்கியமும், வலிமையும் குன்றிய தாய்மார்களுக்கு என்ன நடக்குமோ என்று ஒன்றும் தெரியாது. ஆகையால் சிலவீடுகளில் சாதாரண வசதிகள் கூடக் கிடையாது. மருத்துவமனைகளுக்குச் செல்வது நலம் பயக்கும் என வலியுறுத்தியுள்ளார்கள். குழந்தைகள் தூங்குவதற்குப் புடவையைக் கட்டித் தொங்கவிடுதல், போர்வையைக் கட்டிப் போடுதல், மரத்தொட்டில், பிரம்புத்தொட்டில் கட்டி அதைக் கயிற்றால் இழுப்பார்கள். தொட்டிலை வேகமாக இழுக்கும்போது குழந்தை முகத்தைத் திருப்பிக்கொள்ளும். தடிப்பான துணியால் தொட்டில் கட்டப்பட்டுள்ளதால் குழந்தைக்கு மூச்சு போகாது. வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் நீண்டநேரம் குழந்தைகளைத் தொட்டிலில் போட்டுவிட்டுப் போய்விடுவார்கள். திரும்பி வந்து பார்க்கும்போது குழந்தைகள் இறந்து கிடக்கும். இந்நிலையை நம் நாட்டில் காண்கிறோம்.

பெற்றோர்களுக்கு நல்ல முறையில் அறிவுபுகட்டல் வேண்டும். தாய்மார்களுக்குப் போதிய கல்வி இல்லாமையால் குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்ற முறைகள் தெரிவதில்லை. குழந்தை களை எப்படி நோய்களிலிருந்து காப்பாற்றவேண்டும் என்பதும் தெரியவில்லை; சாதாரணமாக ஒரு பறவை அல்லது பூனை எவ்வாறு தன்னுடைய குஞ்சுகளைப் பாதுகாக்கின்றன; அதைப்போல்

தாய்மார்கள் தங்களுடைய குழந்தைகளைப் பாதுகாப்பது கிடையாது. தாய்மார்களுக்கு போதிய அறிவு இல்லாமையால் என்ன உணவு குழந்தைகளுக்குக் கொடுப்பது, எந்தத் துணியை உடுத்துவது, எப்படிப் பாதுகாப்பது என்பதைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. இது ஒரு கடினமான கலையாகும். ஒன்று அல்லது இரண்டு குழந்தைகளைப் பறிகொடுத்த பின்னர்தான் இதனை அறிவார்கள். குடும்பக்கட்டுப்பாட்டு முறைகள் கிராம மக்களிடத்திலும், நகர்ப்புறங்களிலும், குறைவான வருமானம் உடையவர்கள் பின்பற்றுதல் கிடையாது. பிறப்பு விகிதங்களைக் கட்டுப்படுத்துதல் வேண்டும். இரண்டு குழந்தைகளுக்கிடையே நீண்ட இடைக் காலம் தேவைப்படுகிறது. கிராம மக்கள் நன்கு புரிந்து கொள்ளும் வகையில் குடும்பக்கட்டுப்பாட்டு முறைகளைத் தெளிவு படுத்துதல் வேண்டும். இது சம்பந்தப்பட்ட முறைகளை அடுத்த அத்தியாயத்தில் காணலாம். இந்தியாவில் இறக்கும் மக்களை நல்ல முறையில் பதிவு செய்தல் கிடையாது. இந்தியாவில் மொத்த இறப்பில் 70 சத விகிதம் மருத்துவ கவனிப்பு கிடையாது. குழந்தைகளின் நோய்களைச் சரியானமுறையில் ஆராய்ந்து கண்டுபிடிக்கக் கடினமாக உள்ளது. திரு மில்லர் (F. W. Miller) அவர்கள் குழந்தைகளின் நோய்களைக் கண்டுபிடிப்பது கடினமாகும்; 272 குழந்தைகளில் 15 சதவிகிதக் குழந்தைகளுக்கு என்ன நோய் என்று கண்டுபிடிக்க முடியவில்லை என்றார். அவர் நியூகாஸில் என்ற இடத்தில் குழந்தைகளின் இறப்பிற்குரிய ஆய்வு ஒன்று நடத்தினார். நோய்களின் காரணங்களைக் கண்டு பிடிப்பதற்கும் குணப்படுத்துவதற்கும் போதிய ஆராய்ச்சிசாலைகளை ஏற்படுத்துதல் வேண்டும். குழந்தைகளின் இறப்புக்குக் காரணம் வைத்திய வசதிகள், மருந்து வசதிகள், மருத்துவ வசதிகள் இவற்றை நாடாமல் இருப்பதாகும். 272 குழந்தைகளில் 27 குழந்தைகள் இறந்ததற்குக் காரணம் மருத்துவ வசதியை நாடாமல் இருந்ததுதான். குழந்தைகள் இறப்பதை இருவகையாகப் பிரித்தார். ஒருவகை ஒரு மாதத்திற்குள் இறக்கும் குழந்தைகள். மற்றொருவகை ஓர் ஆண்டிற்குள் இறக்கும் குழந்தைகள். ஒரு மாதத்தில் இறக்கும் குழந்தைகளுக்குக் கர்ப்ப காலத்தில் ஏற்பட்ட கோளாறும், ஓர் ஆண்டில் இறக்கும் குழந்தைகளுக்குத் தொத்து நோய், தவறான போஷிப்பு முறை, சூழ்நிலை, சுகாதாரக் குறைவு ஆகியவையும் காரணங்களாகும். முதல் வகைக்குச் சரியான மருத்துவ ஆலோசனை கிடையாது. அடிக்கடி குழந்தை பெறுவதாலும், போஷிப்புக் குறைவாலும் சுகாதாரம் இன்மையாலும், பயிற்சியற்ற தாதிகள் கவனிப்பாலும் இறப்புகள் ஏற்படுகின்றன. இரண்டாம் வகைக்குக் காரணங்கள் மலேரியா, விஷக்காய்ச்சல், கழிச்சல், சீதபேதி, அம்மை, மக்கள்

நெருக்கம் போன்ற பலவாகும். இந்த இறப்பு விகிதத்தைப் பொறுத்தமட்டில் இன்னும் சரியான புள்ளி விவரங்கள் தேவைப் படுகின்றன. பயிற்சி பெற்ற, திறமையான, செம்மையான பதிவு செய்யும் நிலையங்களை ஏற்படுத்துதல் வேண்டும். நல்ல பணியாளர்களை கிராம, நகர்ப்புறங்களில் அமர்த்திடல் வேண்டும். ஒவ்வொரு குழந்தையும் பள்ளிக்குச் செல்லும்போதும் பிறப்புச் சான்றிதழ் கொண்டுவருமாறு பெற்றோர்களை நிபந்தனை செய்ய வேண்டும். அப்போதுதான் குழந்தைகளின் பிறப்பைப் பெற்றோர்கள் பதிவு செய்வார்கள். தாய்மார்கள் கர்ப்பிணியாக இருக்கும்போது மருத்துவர்களிடம் காண்பித்துப் பரிசோதனை செய்துகொள்ளவேண்டும். தாயாவதற்குத் தகுதியுண்டா இல்லையா என்பதைத் தீர்மானிக்க உடல்நலம், ஆரோக்கியம், சமூக, பொருளாதார நிலைமைகள் இவற்றை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். ஆகவே, மேற்சொன்ன முறைகளைப் பின்பற்றினால் குழந்தைகள், தாய்மார்கள் இறப்பு விகிதங்களைக் குறைக்கலாம்.

# 30. குடும்பக் கட்டுப்பாடு

பெரிய மக்கள்தொகையைக் கட்டுப்படுத்த திட்டங்களைச் செயல்படுத்துவது அரசாங்கத்தின் முக்கிய நோக்கம். பிறப்பு விகிதத்தைக் குறைக்க 1000 பேருக்கு 39 முதல் 29 வரை குறைக்க முன்கூட்டியே திட்டம் தீட்டி விரைவாகச் செயல் படுத்தி வருகிறோம். இந்தக் கொள்கை சென்ற 15 ஆண்டு காலமாகச் செயல்முறையில் இருந்த போதிலும் சென்ற சில ஆண்டுகளாகப் புதிய விரைவாக முகாம்கள் நடத்தி மக்கள் பிறப்பு விகிதத்தை 1975-76க்குள் குறைத்திடல் வேண்டும். பல்லாண்டுகளாகப் பழக்க வழக்கங்கள் நிறைந்த சமுதாயத்தில் மக்கள்தொகைத் திட்டத்தைத் திறமையாகவும் வெளிப்படை யாகவும் செயல்படுத்தவேண்டும். இந்தியா உலகில் மிகப்பெரிய ஜனநாயகம். 70 சதவிகித மக்கள் கல்வியறிவு இல்லாதவர்கள். சிறிய குடியானவர்கள் 80 சதவிகிதம் மக்கள்தொகை உள்ளனர். இம்மக்கள் 5,64,000 கிராமங்களில் வாழ்கிறார்கள். 14 பெரிய மொழிகளைக் கொண்டது. 200 மொழிகள் வழக்கத்தில் உள்ளன. படிப்பின் தரம் இந்தியாவில் மாறுபடுகிறது. நோபல் பரிசு பெற்றவர்முதல் கல்வி அறிவு இல்லாத விவசாயிகள் வரையில் உள்ளனர்.

மிகப்பெரிய பிரச்சினை அரசாங்கத்தின் முன் உள்ளது. புதிதாகத் திருமணமான தம்பதிகளை அணுகி அவர்களை வழிப்படுத்தவேண்டி யுள்ளது. சென்ற 20 ஆண்டுகளாக 30 சர்வேக்கள் செய்து, மக்களின் மனப்பான்மையையும் போக்கையும் அறிந்து கொள்ள கிராம, நகர்ப்புறங்களில் பல்வேறு சாதி, மதம், கலாசாரம், வருமானப் பிரிவு போன்ற ஆய்வுகள் நடத்திய பின்னர் கண்ட முக்கிய முடிவுகள்: 70 சதவிகிதத் தாய்மார்கள் 66 சதவிகிதக் கணவன்மார்கள் 3 பிள்ளைகளுக்குமேல் பொருளாதார ஆரோக்கிய காரணங்களை முன்னிட்டு குடும்பக்கட்டுப்பாடு செய்துகொள்ள விரும்புகிறார்கள். பெரும்பான்மையோர் இந்தியப் புதுத்தம்பதிகள்

கொள்கை அளவில் குடும்பக் கட்டுப்பாட்டுக்குச் சாதகமாக உள்ளனர். 105 மில்லியன்கள் திருமணம் முடித்த தம்பதிகள் இந்தியா முழுமையிலும் தற்சமயம் சதிபதிக்குரிய வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். 90 மில்லியன் தம்பதிகள் மறு இனவிருத்தி பக்குவத்தில் உள்ளார்கள். நம்முடைய திட்டம், இந்த 90 மில்லி யன் தம்பதிகள் சிறிய குடும்பத்தின் அம்சத்தை ஒத்துக்கொள்ளச் செய்திடல் வேண்டும் என்பதே. இவர்கள் பல்வேறு மாகாணங் களில் பரவி வாழ்கிறார்கள். மொழியை அடிப்படையாகக்கொண்ட பல்வேறு மாநிலங்கள் இந்தியாவில் உள்ளன. ஒவ்வொரு மாநில மும் ஒவ்வொரு நாடுபோல் உள்ளது. மக்கள்தொகை வரிசையில் உலக நாடுகளில் இந்தியா 7-வது இடத்தில் உள்ளது. நகரங்களும் பட்டணங்களும் நல்லவிதத்தில் தொடர்புடையன. மக்களை அணுக யாதொரு சிரமமும் கிடையாது. நகரங்களில் அரசாங்க மருத்துவமனைகள், கிளினிக், பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் உள்ளன. நகரங்கள் யாவும் இரயில் பாதையாலும், ஆகாய மார்க்கத்தாலும் இணைக்கப்பட்டுள்ளன. படிப்பின் தரம் அதி கரித்து வருகிறது. செய்தித்தாள்கள், வாரஇதழ்கள் எங்கும் எப்பொழுதும் கிடைக்கின்றன.

மக்கள் வானொலியில் பல்வேறு நிகழ்ச்சிகளைக் கேட்கிறார்கள். செய்தித் திட்டங்களைத் தயாரிக்கும்போது கலை, கலாசாரம், மதம், மொழி, பழக்கவழக்கம் இவற்றில் உள்ள பல்வேறு வேற்றுமை களைக் கணக்கில் கொள்ளவேண்டும். இந்தத் திட்டத்தைப் பரப்புவதற்குக் குடும்ப–சுகாதார அமைச்சரவைத் திட்டத்தில் தனி ஒரு பிரிவை ஏற்படுத்தியுள்ளனர். அடிப்படை நோக்கம் யாதெனில் எளிய செய்திகள், சிறுவார்த்தைகள் மூலமாகவும் மக்களுக்கு அவ்வப்போது எடுத்துக்கூறுவதற்கு இது பெரிதும் பயன்படும். இந்த நோக்கத்தின் உபயோகத்தை உதாரணத்தால் விளக்கலாம். ஒரு குடும்பம் இன்பமாக வாழ்வதற்கு 4 பேர்கள் போதும்; இரண்டு அல்லது மூன்று குழந்தைகள் போதுமானவை. சிவப்பு முக்கோணம் எங்கு இருக்கிறதோ அங்குக் குடும்பக் கட்டுப் பாட்டு நிலையம் அமைக்கப்பட்டுள்ளது. எந்த இடத்தில் அந்தத் திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன என்பதை விளக்கும். மேலும் இந்தச் செய்தியைத்திரைப்படம், வானொலி,குடும்பக்கட்டுப்பாட்டுப் பாடல்கள், செய்தித்தாள்கள், சுவரொட்டிகள், திரைப்பட விளம் பரங்கள்மூலமும், பஸ்களில் இருபுறங்களிலும் விளம்பரப்படுத்தலாம். கிராமத்திற்கு இந்தப் பிரச்சினை கடினம். ஏனெனில் 50 மில்லியன் கிராமத் தம்பதிகள் படிக்காதவர்கள்; மேலும் ஏழைகள். அவர் களுக்குத்தான் இந்தக் குடும்பத்திட்டம் அவசியமாகும். சொற் பொழிவுகள், கருத்தரங்குகள், சேர்ந்து பேசுதல், குடும்பக் கட்டுப்

பாடு சம்பந்தப்பட்ட கதா காலக்ஷேபம் செய்தல், கிளினிக் ஏற் படுத்தல் ஆகியவை கிராமப்புறங்களில் மிக அவசியமாகும். விளம்பரத்திற்கு வானொலி சிறந்த கருவி என்றால் ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்திற்கும் ஒரு வானொலியை வழங்குவது நன்மை பயக்கும். உலகில் இந்தியா திரைப்பட உற்பத்தியில் இரண்டா வது இடத்தைப் பெற்றுள்ளது. வர்த்தகப் படங்கள் பெரும்பாலும் மத சம்பந்தப்பட்ட பொருள்களைப்பற்றியும், கதைகளைப்பற்றியும் காண்பிக்கப்படுகின்றன. குடும்பக் கட்டுப்பாட்டிற்கு அவை அதிக கவனம் செலுத்துவதில்லை. ஆகவே மத்திய அரசாங்கம் பல்வேறு மொழிகளில் திரைப்படம் எடுத்து பல்வேறு மாகாணங்களுக்குக் காண்பித்தல் வேண்டும். அப்போது மொத்த மக்களில் 20 சத விகித மக்களுக்குப் பயன் அளிக்க முடியும். மக்களுக்கு இது போன்று உணர்ச்சியைத் தூண்டுவதற்குச் சரியான தூண்டுகோல் கள் இல்லை. எல்லோருக்கும் பொதுவாக ஒரு தனி முறையும் கிடையாது. ஏனெனில் இந்திய மக்கள் பல்வேறு மொழி, மதம், இனத்தைச் சார்ந்தவர்கள். ஆகவே கருத்தடைச் சாதனங்களை விஞ்ஞான ரீதியில் உற்பத்திசெய்து மக்களுக்கு அளித்திடல் வேண்டும். இவற்றினைக் குடும்ப நல நிலையங்களின்மூலம் வினியோகம் செய்தல் வேண்டும். மக்கள் உபயோகத்திற்கு மூன்று முறைகள் உள்ளன. அவையும் செயல்படுத்தப் படுகின்றன.

1. கருத்தடை சிகிச்சைமுறை (Sterilization).
2. லூப் பொருத்தல் (I. U. C. D.)
3. கருத்தடைச் சாதனங்கள் (Condoms).

1. **கருத்தடை சிகிச்சை முறை:** நாம் இதுவரையில் சாதித்தது என்ன? 1970ஆம் ஆண்டு ஆரம்பிக்கும்வரை 7 மில்லியன் மக்கள் ஆபரேஷன் செய்து கொண்டனர். தற்சமயம் 7 மில்லிய னுக்கு மேல் சற்று அதிகமாக இருக்கும். இதில் 82 சதவிகிதம் வாசக்டமி (Vasectomy) ஆபரேஷன் செய்துகொண்டுள்ளார்கள். மீதியுள்ளவர்கள் டியூபெக்டமி (Tubectomy) ஆபரேஷன் செய்து கொண்டவர்கள். இவை யாவும் நகர்ப்புறத்தையே சேர்ந்தவை அல்ல. கிராமப்புற மக்கள்தான் அதிகமான அளவில் ஆபரேஷன் செய்து கொண்டுள்ளார்கள். சென்ற சில மாதங்களாக வாசக்டமி ஆபரேஷனைவிட டியூபெக்டமி ஆபரேஷன் மிகச் சிறப்பாக உள்ளது. இது அதிகமான செலவு பிடிக்கும்; மேலும் அறுவை முறைகளும் அதிகமாகும். தற்சமயம் பெண்கள் இதுபற்றி நன்கு உணர்ந்து வருகிறார்கள். அவர்களுடைய கணவர்கள் வாசக்டமி

ஆபரேஷன் செய்துகொள்ளத் தீர்மானிக்குமுன், மனைவிமார்கள் காத்திராமல் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாண விரும்புகிறார்கள். இது ஒரு நல்ல திட்டம். எனவே நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வாசக்டமி ஆபரேஷனைவிட டியூபெக்டமி ஆபரேஷன் அதிகமாக நடைபெறும் என எதிர்பார்க்கப்படுகிறது.

2. **லூப் பொருத்தல்:** லூப் பொருத்தல் என்றால் என்ன? குடும்பக் கட்டுப்பாட்டுக்கு இதுவும் ஒரு சிறந்த முறை. இம்முறை 1965 முதல் பின்பற்றப்பட்டு வருகிறது. இதுவரை 3½ மில்லியன் மக்களுக்கு லூப் பொருத்தப்பட்டுள்ளது. இந்த முறை சிறப்பாக இல்லை; ஏனெனில் பல காரணங்கள் இதற்கு உண்டு. இந்தக் காரணங்களைச் சுலபமாக தவிர்க்கலாம். எப்படி என்றால் போதுமான அளவுக்குப் பணியாற்றக்கூடிய பெண்கள், மருத்துவப் பணியாளர்கள் கிராமப்புறத்தில் விருப்பத்தோடு பணியாற்றவும், மேலும் அவர்கள் சிறிது நாட்கள் பேச்சுவாக்கு நடத்தவும், லூப் பொருத்தப்பட்ட மக்களுக்குச் சில நாட்கள் இருந்து பணியாற்றுவதற்கும் பணியாளர்கள் இருந்தால் இது செய்யமுடியும்.

3. **கருத்தடைச் சாதனங்கள்:** இது ஆண்களுக்கு எளிய முறை. இதற்காக மருத்துவர்களின் பரிசோதனையும், ஆலோசனையும் தேவையில்லை. மொத்தத் தேவையாக ஆண்டு ஒன்றுக்கு 300 மில்லியன் நிரோத் தேவைப்படுகின்றன. அரசு இதனை உற்பத்தி செய்வதற்கு ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தி நிரோத்தை உற்பத்தி செய்கிறது. அரசு அதற்காக ஏராளமான விளம்பரமும் செய்து வருகிறது. ஒவ்வொரு திருமணத் தம்பதிகளுக்கும் நிரோதினுடைய உபயோகத்தை நன்கு உணர்த்தவேண்டும். இந்தப் பிரச்சினைக்கு மூன்று முக்கிய முயற்சிகள் தேவைப்படும்: (1) தூண்டுதல் (2) செய்தி (3) சுகமான கருத்தடைச் சாதனங்கள். இந்த மூன்று பிரச்சினைகளையும் ஆராயவேண்டும்.

1. **தூண்டுதல் :** எப்படி கணவன் அல்லது மனைவியை அல்லது தம்பதிகளைக் குடும்பக் கட்டுப்பாட்டை விரும்புவதற்குத் தூண்டவேண்டும்? கேள்வி கேட்பது எளிது; பதில் வருவது கடினம். ஆகவே எவ்வாறு இந்தத் தம்பதிகளிடம் எடுத்துக் கூறுவது? பெரிய குடும்பங்களை வைத்துக்கொண்டு எவ்வாறு உச்ச வாழ்க்கைத்தரத்தை அடைய முடியும்? எப்படி அவர்களைச் சமாதானப்படுத்துவது? குடும்பத்தில் ஏழ்மையைப் போக்குவதற்குக் குறைவான குழந்தைகள் வைத்துக்கொள்வது சுலபமான வழியாகும். அவர்களுக்கு வீடு வசதி, நல்ல உணவு வசதி,

துணிமணிகள். கல்வி, மருத்துவ வசதிகள் இரண்டு குழந்தைகளுக்கு மேல் இல்லாமலிருந்தால் இந்த வசதிகளை அடைய முடியும். இந்த வாசகம் பார்ப்பதற்கு எளிதாக உள்ளது. குடிசைவாழ் பகுதிகளில் உள்ள மக்கள், திண்ணையில் வாழும் மக்கள் இவர்களிடம் போய்ச் சொன்னால் கல்யாணத்தைத் தள்ளிவை, அப்படித் திருமணம் செய்திருந்தால் ஒன்று அல்லது இரண்டுக்கு மேல் குழந்தைகள் வேண்டாம் என்று சொன்னால் அதற்குப் பதில் என்னவாக இருக்கும் என்றால், பாதகமாகவே இருக்கும். உலக மக்கள்தொகையின் வெடிப்பைப்பற்றிப் பேசுவதும், இந்திய மக்கள்தொகைப் பிரச்சினையைப்பற்றிப் பேசுவதும், இயற்கை வளங்களின் பற்றாக்குறையைப்பற்றிப் பேசுவதும் சம்பந்தமில்லாதவை. சாதாரணமாக, தனிப்பட்ட குடும்பங்களில் ஏழ்மைப் பிரச்சினை எங்கும் தலைவிரித்தாடுகிறது. ஆகவே குடும்பக் கட்டுப்பாட்டை உற்சாகப்படுத்தினால் பலன் கிடைக்கும்; நாம் இதுவரையில் உற்சாகத்தினுடைய பயனைப்பற்றி விஞ்ஞான ரீதியில் சிந்தித்தது கிடையாது.

பண உற்சாகம், பணி உற்சாகம், பரிசுகள் அளித்தல் போன்றவற்றைப் பின்பற்றினால் மருத்துவர்களுக்குத் தங்கள் தொழில்களில் அக்கறை உண்டாகும்; மேலும் திறமையாகச் செயல்படுவார்கள்; குடும்பக் கட்டுப்பாட்டை வெற்றிபெறச் செய்வதற்கும் பாடுபடுவார்கள். இதைச் சிலர் லஞ்சமாகக் கருதுகிறார்கள். அது தவறாகும். இந்தக் கேள்வியைத் தகுந்த முறையில் ஆராய்ந்து தகுந்த முறையில் பதில் அளித்திடல் வேண்டும். ஏழை மக்கள் அல்லது குறைவான வருமானத்தைக் கொண்ட குடும்பத்தினர் குடும்பக் கட்டுப்பாட்டைப் பின்பற்றினால் அல்லது ஆபரேஷன் செய்து கொண்டால் அவர்களுக்கு ஊதிய உயர்வு அளித்திடல் வேண்டும். வெகுமதிப் பணம் அளித்திடல் வேண்டும்.

2. **செய்தி :** சாதாரணமாக இந்தியாவில் செய்தித்துறை மிகவும் மோசமான நிலையில் உள்ளது. தற்போதுள்ள, இருக்கக் கூடிய செய்தி பரப்பும் சாதனங்கள் 25 சதவிகித மக்களுக்குத் தான் பயன்படும். கிராமப்புறங்களில் அறியாமையில் இருக்கும் மக்களுக்கு இன்னும் செய்திகள் எட்டியபாடில்லை.

3. **கருத்தடைச் சாதனங்கள் :** மூன்றாவது பிரச்சினை, நல்ல முறையில் கருத்தடை சாதனங்கள் உற்பத்தி செய்தல். கருத்தடைச் சாதனங்களைப்பற்றி மேல் நாடுகளில் ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. இங்கிலாந்து, அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகள் இதில் முனைந்துள்ளன. மேற்கத்திய விஞ்ஞானிகள் இதற்காக ஆராய்ச்சிகள் நடத்தி முன்னேற்றங் கண்டுள்ளார்கள். மேலும்

தங்கள் நாடுகளில் உள்ள பிரச்சினைக்கும் தங்கள் அறிவு, ஆற்றலை நன்முறையில் பயன்படுத்திவருகிறார்கள். மனிதனுடைய உடற்கூறு உலகம் எங்கும் ஒரே மாதிரியாக இருக்கிறது. ஆனால் அவர்களின் நிலைமைதான் நாட்டிற்கு நாடு மாறுபடுகிறது. மேற்கத்திய நாடுகளில் சாதாரண ஏழைக் குடும்பங்களில்கூட குளிக்கும் அறை, வெந்நீர், குளிர்ந்த நீர் வசதிகள், இரகசிய அறை, மின்சாரம், மருந்து வகைகள், மருத்துவர் வசதிகள், தாதிகள், படிப்பு வசதி, இனவிருத்திக்கான போதுமான அறிவு ஆகியவற்றைப் பெற்றுள்ளார்கள். ஆனால் இந்தியாவில் இவற்றில் ஒன்றுமே இல்லை. நாம் உபயோகப்படுத்தும் கருத்தடைச் சாதனங்கள் விலை மலிவாகவும், நம்பிக்கைக்குப் பாத்திரமாகவும் இருத்தல் வேண்டும். மேலும் உபயோகப்படுத்த சுலபமாகவும், எந்தவித நோய் உண்டாக்காமலும், எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய அளவில் செய்து தரவேண்டும். எல்லாவற்றையும்விட மக்களுக்கு அறிவுறுத்தும் முகாம்களைப் பெரிய அளவில் ஏற்படுத்தி இனவிருத்தி செய்யும் உரிமை தங்கள் கையில் உள்ளது என்பதைப் புலப்படுத்தவேண்டும். எவ்வாறு திருமணம் செய்துகொள்வதற்கும் குழந்தைகளை வைத்துக்கொள்வதற்கும் உரிமைகள் இருக்கின்றனவோ அதைப்போல் திருமணத்திற்கும் குறைந்த பட்ச வயதை உயர்த்த வேண்டும். திருமண வயதை உயர்த்துவதால் மக்கள்தொகை குறைவதற்கும் வாய்ப்புகள் உண்டு. இன்னும் ஒரு படி அதிகம் போனால் அதிகமான குழந்தைகளை வைத்திருப்பவர்களைச் சட்டபூர்வமாக தண்டிக்கவும் சட்டம் கொண்டு வரலாம். குடும்பம் ஒன்றுக்கு மூன்று குழந்தைகளுக்கு மட்டும் சலுகைகள் பள்ளிகளில், கல்லூரிகளில் அளித்திடல்வேண்டும். அரசும் மருத்துவச் செலவுகளை ஏற்கச் சம்மதிக்கலாம். நான்காவது குழந்தைக்குச் செலவுகளையும், சலுகைகளையும் அரசு நிறுத்தி விடலாம், ஒன்று அல்லது இரண்டு குழந்தைகள் வைத்திருப்பவர்களுக்குச் சம்பளச் சலுகை அளிக்கலாம்.

திருமணத் தம்பதிகளுக்கு இனி எதிர்காலத்தில் அடிப்படையான தத்துவங்களை விளக்கிடல்வேண்டும். குடும்பத்தின் அளவை மூன்று குழந்தைகளுக்குக் கட்டுப்படுத்திடல் வேண்டும். மேலும் நான்காவது குழந்தையை எந்தவிதத்திலும் அனுமதிக்கக் கூடாது. தேவையற்ற குழந்தைகள் எந்தச் சூழ்நிலையிலும் அனுமதிக்கப்படமாட்டா. எக்காரணத்தை முன்னிட்டும் அரசியல் தேவைகளுக்கும், வரலாறு, கலாச்சார நிபந்தனைகளுக்கும், மதச் சடங்குக்கும் உட்பட்டு அதிகக் குழந்தைகளை உற்பத்தி செய்யக் கூடாது. எக்காரணத்தை முன்னிட்டும் உடல் வலிமை குன்றியவரும் மூளை குழம்பிய இயல்பினரும் குழந்தைகள் உற்பத்தி

செய்ய அனுமதிக்கக் கூடாது. எந்தத் தம்பதியும் ஏழையாக இருந்தாலும், செல்வந்தர்களாக இருந்தாலும் அந்த மூன்று குழந்தைகளுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது.

**குடும்பக் கட்டுப்பாடு மக்கள்தொகை திட்டத்திற்கு ஒரு மார்க்கம்:** ஒவ்வொரு குடும்பமும் குடும்பக் கட்டுப்பாட்டைப் பின்பற்றினால் தான் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்த முடியும். தேசிய மட்டத்தில் குடும்ப திட்டத்தைப் பின்பற்றி மக்களை நம்ப வைக்க வேண்டும். மொத்தம் 105 மில்லியன் தம்பதிகளில் 90 மில்லியன் தம்பதிகள் இனவிருத்தி செய்யும் பருவநிலையில் உள்ளனர். குடும்பக் கட்டுப்பாடு திட்டம் வெற்றி அடைய இந்த 90 மில்லியன் தம்பதிகள் சிறிய அளவு குடும்பத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். இதில் 60 மில்லியன் தம்பதிகள் படிக்காதவர்கள்; ஏழைகள்; கிராமப்புறத்தைச் சார்ந்தவர்கள். இவர்களுக்கு இரண்டு அல்லது மூன்று குழந்தைகள் போதும் என்ற தத்துவத்தை ஒப்புக் கொள்ளச் செய்தல் வேண்டும். இதற்கான திட்டங்களை மேற்கொள்ளுதல்வேண்டும்.

(1) குடும்ப நலத்திட்டம்பற்றி நல்ல முறையில் விளம்பரம் செய்தல் வேண்டும். அரசாங்கம் எத்தனையோ முறைகளைப் பின்பற்றி விளம்பரம் செய்தாலும் இன்னும் தகுந்த அளவிற்கு இது சூடு பிடிக்கவில்லை. ஒவ்வொரு பட்டணம், நகரம்,கிராமம் முதலிய இடங்களில் நன்முறையில் இதை விளம்பரம் செய்தல் வேண்டும். கிராமத்திற்குச் சிறப்பிடம் அளித்தல் வேண்டும். அது அறியாமை, ஆசாரம், பிடிவாதம் இவற்றிற்கு இருப்பிடமாகும். பொது மக்களைக் கவரும் வண்ணம் விளம்பரக் கருவிகளைப் பயன்படுத்தல் வேண்டும். வானொலி, திரைப்படங்கள், செய்தித்தாள்கள், பத்திரிகைகள், வார, மாத இதழ்கள், சுவரொட்டிகள் முதலியவற்றை அதிக அளவில் பயன்படுத்தவேண்டும். சமூக நலத்திட்டங்களுடன், குடும்பநலத்திட்டங்களை இணைத்திடல்வேண்டும். கிராமப்புறத்தில் மிக அவசியமாகும் சமூகநல போர்டுகள், ஆரம்ப சுகாதார நிலையங்கள், விவசாய மீட்சிப்பணிகள், குடும்ப நலத்திட்ட உணர்வை உண்டு பண்ணுவதுதான் இதன் தலையாய நோக்கமாகும். குழந்தைகள் கட்டாயத்தின் பேரில் அல்லாமல் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற எண்ணம் உருவாக்கப்படவேண்டும்.

(2) கருத்தடைச் சாதனங்கள்: கிராம, நகர்ப்புற மக்களுக்கு அளித்தல் வேண்டும். குடும்பக்கட்டுப்பாட்டுக்கு மிகவும் முக்கியமாகக் கருத்தடைச் சாதனங்களைக் குறைந்த விலை

யில் வினியோகம் செய்திடல் வேண்டும். கிராம மக்கள் அதிக விலை கொடுத்து இந்தச் சாதனங்களை வாங்க முடியவில்லை. அவர்கள் விரும்பினாலும் இந்த முறைகளைப் பயன்படுத்த முடியாத நிலையில் உள்ளனர். அப்படியே கருத்தடைச் சாதனங்கள் இலவசமாக மக்களுக்கு அரசு வினியோகம் செய்தாலும், அரசு இதற்காகச் செலவிட்ட பணத்திற்குப் பலன் இருக்க வேண்டும். மக்கள் உபயோகப்படுத்தாமல் வீணடித்தால், பொதுப்பணத்தை வீணடிப்பதாகும். அரசு ஏராளமான அளவு கருத்தடைச்சாதனங்களை உற்பத்தி செய்திடல் வேண்டும்; தனியார் உற்பத்தி செய்தால் உதவிப் பணம் அளித்திடல் வேண்டும். எந்த முறையைத் தேர்ந்தெடுத்தாலும் அரசு அதற்குண்டான சாதனங்கள் எளிதில் கிடைக்கும்படியாகவும், மலிவாகக் கிடைக்கும்படியாகவும் செய்திடல் வேண்டும்.

(3) மருத்துவமனை, தாய் சேய் நல விடுதிகள், குடும்பக் கட்டுப்பாட்டு நிலையங்கள் ஏற்படுத்தி மக்களுக்கு இதை விளக்க வேண்டும்; கிராம மக்கள் இதுபோன்ற நிலையங்களுக்கு வருவதும் இல்லை. மருத்துவமனைகளுக்கு வந்தாலும் மருந்து வாங்கிக் கொண்டு திரும்பி விடுகிறார்கள். இது போன்ற விஷயங்கள் அவர்களுக்குத் தெரிவதில்லை. ஆகவே ஒவ்வொரு மருத்துவமனையுடனும் இணைத்தல் நல்லது. கிராம, நகர்ப்புறமாக இருந்தாலும் சரி, மருத்துவர்கள். தாதிகள், ஆயாக்கள், குடும்பக் கட்டுப்பாட்டின் முறைகளை அவர்களுக்குச் சாதாரண முறையில் விளக்கி அவர்களின் நம்பிக்கையைப் பெறவேண்டும். நம்பிக்கையை அடைந்த பின்பு அங்கு வரும் மக்களுக்குக் கருத்தடைச் சாதனங்களைப்பற்றி விளக்கி சொல்லித்தருதல் வேண்டும். வெட்கத்தைத் தவிர்த்தல் வேண்டும். இந்தத் தடையை மீறிவிட்டால் மற்ற விளக்கங்கள் எளிதாக முடியும். பிறப்பு விகிதத்தைச் சுலபமாகவும், சுமுகமாகவும் தடை செய்யலாம்.

(4) போதுமான உற்சாகம் அளித்திடல் வேண்டும். குடும்பக் கட்டுப்பாட்டை நல்ல முறையில் செயல்படுத்துவோருக்கு உற்சாகம் அளித்திடல் வேண்டும். ஒருவர் அறுவை சிகிச்சை செய்துகொண்டால் பணம் ரூ. 30 வெகுமதியாகக் கொடுக்கப்படுகிறது. மேலும் ஏழைகளுக்கும் போதிய வசதியற்றவர்களுக்கும் அதிகமான வெகுமதி அளித்திடல் வேண்டும். பலரைத் தூண்டுதல் வேண்டும். அறுவை சிகிச்சை செய்துகொள்ள முன்கூட்டியே ஒரு மாதச் சம்பளமும் ஒரு சம்பள அதிகரிப்பும் கொடுத்தல் வேண்டும்.

(5) அறுவை சிகிச்சை அதிக அளவில் செய்திடல் வேண்டும். கருத்தடை சாதனங்கள் கருத்தரிக்காமல் தடுக்கும்; ஆனால் அறுவை சிகிச்சை கடைசி வரைக்கும் கருத்தரிக்காமல் குணப்படுத்தும்; நிரந்தரமான முறையுமாகும். ஆண்களும், பெண்களும் அறுவை சிகிச்சை செய்து கொள்ளலாம். ஆண்களுக் கான அறுவை சிகிச்சை மிகவும் எளிது. வாசக்டமி (Vasectomy) எனப்படும். இது மிகவும் புகழ்பெற்றது. இதற்கு அறுவைக் கருவி களும் அதிகம் தேவைப்படாது. இதற்குக் கிராமப்புறத்தில் அறுவை முகாம் அமைத்துப் பலருக்கு இதனை எளிதில் நடத்தலாம்.

(6) பயிற்சி, படிப்பு, ஆராய்ச்சி முறைகளை த்துரிதப்படுத்த வேண்டும். ஆராய்ச்சியை மேலும் மேலும் வளர்த்து மக்களை எந்த முறையில் கட்டுப்படுத்தலாமோ அதற்குப் பயன்படக் கூடியவகை யில் ஆராய்ச்சிகள் அமைய வேண்டும். போதுமான கருத்தடைச் சாதனங்களை உற்பத்தி செய்து வினியோகம் செய்தல் வேண்டும். நாட்பட உழைக்கும், திறமையான கருத்தடைகளை அதிகரிக்க வேண்டும். உடற்கூறு சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிகளை மேற் கொள்ள வேண்டும்.

(7) நீண்ட நாட்களுக்குப் பின்னர் பலன் அளிக்கக்கூடிய மாற்று முறைகளையும் கையாளுதல் வேண்டும். கல்வி வசதிகளை அதிகரிப்பதால் பிறப்பு விகிதத்தைக் குறைக்கலாம். படித்தவர்க ளிடையே முதலில் கருத்தடைச் சாதனங்களை உபயோகப்படுத் தல் வேண்டும். பின்னர் பாமர மக்களுக்கும் பரப்பிடவேண்டும். பொருளாதார வசதிகள் படைத்தவர்கள் முதலில் கருத்தடை செய்துகொள்ளுதல் வேண்டும்.

மக்கள் மனதை முதலில் மாற்ற வேண்டும். அவர்கள் குடும் பத்தின் அளவை நிர்ணயிக்க முன்வரவேண்டும். மக்களுடைய ஒத்துழைப்பும், ஆதரவும் இல்லாமல் இம்முறையில் வெற்றி பெறுவது கடினம், பொருளாதார நிபுணர்கள், டாக்டர்கள் சமூக வாதிகள், மக்கள்தொகை கணிப்பாளர்கள், மதத்தலைவர்கள் அனைவருடைய ஒத்துழைப்பும் குடும்பக் கட்டுப்பாடு வெற்றி பெற அவசியமாகும்.

**குடும்பக் கட்டுப்பாடு—ஒழுக்கம், மதம் சம்பந்தப்பட்ட அம்சங்கள்:** இந்தியாவிற்கு மக்கள்தொகைக் கொள்கையை J. M. கீன்ஸ் அவர்கள் 35 ஆண்டுகளுக்கு முன்னரே ஒவ்வொரு நாட்டிற்கும் எந்த அளவிற்கு மக்கள்தொகை வைத்துக்கொள்ள வேண்டும்; இப்போது உள்ளதை விட குறைவாகவா, அதிகமாகவா, அதே

அளவாகவா? அதற்குரிய தேசியத் திட்டம் என்ன? என்பதை உணர்வதற்குக் காலம் வந்துவிட்டது என்று கூறியுள்ளார்கள். இந்தியாவின் மக்கள்தொகைக் கொள்கை என்ன? இந்தியாவின் உத்தம மக்கள்தொகையின் அளவு என்ன? மக்கள்தொகைக் கொள்கை பெரிய அளவில் அல்லது சிறிய அளவில் தீர்மானிப்ப தால் எது நாட்டிற்கு சிறப்பான, தகுதியான அளவு? அந்தத் தகுதியை இராணுவத்தினுடைய தேவைக்கு ஏற்றவாறும், தொழில் களுக்கு வேண்டிய தாராளமான, மலிவான உழைப்பின் அளவையும் உத்தம சமூக நலன்களுக்கு ஏற்றவாறும் அமைத் திடல் வேண்டும். மக்கள் எண்ணிக்கையின் அளவு தொடர்ந்து இன்னமும் பெரிய பிரச்சினையாக உள்ளது. அதாவது தகுதியான எண்ணிக்கையை விரும்பக் கூடியது எப்போது என்றால் உற்பத் தியின் உச்சக்கட்டத்தை அடைதல், வாழ்க்கைத்தரத்தினுடைய உச்சக் கட்டம், அரசியல் அமைப்பு, சமூகப் பாதுகாப்பு பொரு ளாதாரப் பாதுகாப்பு, போதுமான சுதந்திரம், கலாசார மதிப்புகளை உணர்வதற்குப் போதிய அவகாசம் இவை உள்ள போது உத்தம மக்கள்தொகைக்கு இலக்கணத்திற்கு கொள்கை அளவில் எத்தனையோ மாறுபாடுகள் உள்ளன. இருந்தபோதிலும் ஒரு நாட்டிற்கு உத்தம மக்கள்தொகை அவசியமாகும்.

இந்தியாவிற்கு தற்சமயம் உள்ள மக்கள் உத்தம மக்கள் தொகையைவிட அதிகம். அதாவது மக்களின் எண்ணிக்கைதான் மக்களின் தரத்திற்கு வழியாகவும் அதிக அடித்தளமாகவும் உள்ளது. மக்கள்தரத்தின் முன்னேற்றத்தை மையமாகக் கொண்டு பார்க்கும்போது அதிகமாகவும் வரலாம், குறைவாகவும் வரலாம். தரத்தைத் தீர்மானிப்பதானது பொதுச் சுகாதாரம், ஆரோக்கியம், நோயின்மை, கல்வி வசதி முதலியவற்றையும் பொறுத்தது. இந்தியாவில் தரக்குறைவுக்கு கல்வியின்மையும், ஆரோக்கியமின்மையுமே காரணமாகும். தற்போதுள்ள மக்க ளுக்கு நாகரிகமாக வாழ்வதற்குரிய நம்முடைய வளங்கள் எவ் வளவோ தூரத்தில் உள்ளன! உணவு உற்பத்தியை ஆராய்ந்தால் எல்லாவிதமான முயற்சிகளும் இத்துறையில் நாம் தன்னிறைவு அடைவதற்காகச் செலுத்தப்பட்டுள்ளது. ஆனால் தற்போதைய நிலையில் மிகக் குறைவான போஷிப்பில் உள்ளது. எப்படித் தன் னிறைவையும், உயர்வான வாழ்க்கைத்தரத்தையும் அடைய முடியும்? மக்கள்தொகை வளர்ந்து கொண்டே செல்கிறது. நாம் உணவு உற்பத்தியைத் துரிதப்படுத்தவில்லை என்றால் இந்த வளரும் மக்களுக்குக் குறைகளை நீக்க முடியாது. அதைவிட இல்லையெனில் குறைவான வாழ்க்கைத்தரத்திற்குச் செல்ல வேண்டும். ஆகவே மக்கள்தொகைக் கோட்பாட்டுக்கு எண்ணிக் கையையும் தரத்தையும் இருகோணங்களில் ஆராயவேண்டும்.

**பிறப்புக் கட்டுப்பாடு :** நம்முடைய மக்கள்தொகையில் பிறப்புக் கட்டுப்பாடு அவசியம். அதாவது திட்டமிட்ட குடும்பத்தைப் பற்றி இப்போதுபோய் வழிகளையும், மார்க்கங்களையும்பேசுவது காலங்கடந்தது. கருத்தடையைப்பற்றிச் சாதகமாகவும் பாதக மாகவும் வாதங்கள் நடந்து வருகின்றன. பெரிய அறிவாளிகள் கருத்தடைக்குச் சாதகமாகவே தங்களுடைய விஞ்ஞான முடிவைத் தெரிவித்துள்ளனர். இருந்தபோதிலும் நம்முடைய மக்கள் செய்தித்தாள்கள், இதைப்பற்றி ஏதோ புதியதாகக் கண்டுபிடித்துவிட்டதாகச் சொற்போர் நடத்திவருகிறார்கள்; அறியாமையினால் இன்னும் மக்களுக்குப் புரியவில்லை. இருந்த போதிலும் இது மிகவும் உபயோகப்படக் கூடியது. அப்படி யாராவது இதற்கு மறுப்பும் வாதமும் அளிப்பார்களானால் கீழே அதற்கு விடைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

பிறப்புக் கட்டுப்பாடு என்றால் என்ன? மனிதப் புத்தாக்கங் களில் புரட்சிகரமானது; மனிதஉணர்ச்சிகளில் சந்தோஷத்தையும் உண்டுபடுத்துகிறது. இது புதிய இன்றியமையாதது. தனிக் குடும்பங்கள், அவற்றின் சந்தோஷம், நாட்டினுடைய புன்னகை, மக்களின் நலம், உலக அமைதிக்கும், ஒற்றுமைக்கும் சிறந்தாக விளங்குகிறது. இந்தப் பிரச்சினை இரண்டு விதமான மக்கள் உணச்சிகளைத் தூண்டுகிறது. ஒன்று திருமணம் செய்து கொள்வது, மற்றொன்று திருமணம் செய்யாதிருப்பது. குடும்பக் கட்டுப்பாடு சந்தோஷமானது அன்று. அதற்காக எல்லாப் பிறப்புகளையும் கருத்தரிக்காமல் கட்டுப்படுத்தவில்லை. முன்னேற்ற மடைந்த எல்லா நாடுகளிலும் பிறப்புக் கட்டுப்பாடு பின்பற்றப் படுகிறது. கருத்தரிக்காமல் அதே நேரத்தில் சிசுகுலைத்தல் (abortion) கோட்பாட்டையும், செயல்முறைகளையும் எதிர்க் கிறார்கள். கத்தோலிக்கர்கள் குடும்பக் கட்டுப்பாட்டைக் கரு குலைப்பு என வாதாடுகிறார்கள். கருத்தரிக்கவில்லையென்றால் கருகுலைப்பு கிடையாது. திரு. மார்கரட் சான்கிர் (Mrs. Margaret sanger) அவர்கள் பிறப்புக் கட்டுப்பாடு என்ற சொல்லை, உருவாக்கினார்கள். நடைமுறையில் இன்று புழக்கத்திலும் வந்துள்ளது. பிறப்புக் கட்டுப்பாடு அல்லது திட்டமிட்ட குடும் பத்தைத் தாற்காலிமாகக் கட்டுப்படுத்தினால் திட்டமிட்டக் குடும்பத்தை நடைமுறையில் கொண்டுவர முடியும். "Parenthood should be regarded as a fine commission, a noble trust and a splendid assignment and it can be so considered only when it becomes conscious responsibililty" என்று டாக்டர் சந்திரசேகர் அவர்கள் தம் புத்தகத்தில் வலியுறுத்துகிறார் கள். சுயஉணர்ச்சியுடன் நினைத்து குடும்பத்தின் அளவை நிர்ண

யித்துக்கொள்ளவேண்டும். விஞ்ஞான உலகில் விஷக்கிருமிகளைக் கட்டுப்படுத்துவதைப்போல, நோய்க்கிருமிகளை ஒழித்துக்கட்டுவதைப்போல, வலியை அமிர்தாஞ்சனத்தால் போக்குவதைப் போல, பரவக்கூடிய நோய்களைத் தடுப்புமருந்துகளால் கட்டுப் படுத்துவதைப்போல, குடும்பக் கட்டுப்பாடு குடும்பத்தின் அளவைத் தீர்மானிக்க உதவுகின்றது. கண்மூடித்தனமாக மனித சமுதாயத்தில் இருப்பதைவிட ஒருபடி அதிகமான, சிறப்பான முறை குடும்பக்கட்டுப்பாடு முறையாகும். நாகரீகத்தின் அளவு கோலாகவும், பொருளாதார வளர்ச்சியின் தூண்டுகோலாகவும் குடும்பக் கட்டுப்பாடு விளங்குகிறது. இந்த முறை தற்சமயம் திருமணத்தைப்பற்றிச் சற்று சிந்திக்கச் செய்துள்ளது. நிதி, அமைதி, போர், மதம் எல்லா உலகிலும் ஒரு புரட்சியை உண்டுபண்ணியுள்ளது. கல்யாணம் ஆன தம்பதிகளும் இதை நன்றாக உணர ஆரம்பித்துள்ளார்கள். இரண்டுக்குமேல் எப்போதும் வேண்டாம் என்பதை அறிவார்கள்.

டாக்டர் ஜூலியன் அக்சிலி (Dr Julian Huxley) அவர்கள் மனித சமுதாயத்திற்கு நெருப்பும், எழுத்தும் முதன்மையானதும் இன்றியமையாததுமான கண்டுபிடிப்புகள் ஆகும். இவை எவ்வாறு சமூக, பொருளாதார, அரசியல் மாற்றங்களுக்கு அடித்தளமாக விளங்கினவோ அதைப் போல் குடும்பக் கட்டுப்பாடு மனித சமுதாயத்திற்கு முதன்மையாகும். நாடுகளுக்கிடையே போர்களைத் தவிர்க்கும்; அமைதியாகவும், உயர்ந்த வாழ்க்கைத்தரத்துடனும் வாழ வகை செய்கிறது. மேலும் மக்களை நீண்ட நாட்களுக்கு வாழ வைக்கிறது. இதனைப் பின்பற்றி மேல் நாடுகள் தங்கள் பொருளாதாரத்தில் முன்னேற்றம் கண்டுள்ளன. ஆனால் இன்னும் இந்தியாவில் அறியாமை, பிடிவாதம், ஏழ்மை போன்ற காரணங்களால் தவறாகப் புரிந்துகொண்டு பேசுவதைக் காண்கின்றோம். கத்தோலிக்கர்களும் சில அரசுகளும் இன்னும் இதற்கு மறுப்பு தெரிவித்துவருகிறார்கள். இதற்கு உற்சாகமூட்டுவதும் ஆதரவு அளிப்பதும் கிடையாது. சட்டத்திற்குப் புறம்பானது என எதிர்ப்பும் தெரிவித்து வருகிறார்கள். எதையும் விஞ்ஞான ரீதியில் ஆராய்வது கிடையாது. எந்தப் புத்தாக்கத்திற்கும், கண்டுபிடிப்புக்கும், சீர்திருத்தத்திற்கும் எதிர்ப்பு தெரிவிக்கின்றார்கள். எது நல்லது, எது கெட்டது என்பதைச் சீர்தூக்கி ஆராய்ந்து பார்க்கும் பழக்கமும் கிடையாது. மக்கள்தொகையைக் கட்டுப் படுத்துவதற்குக் குடும்பக் கட்டுப்பாடு மிக முக்கியமானது. 3,500 ஆண்டுகளாகக் குடும்பங்களைக் கட்டுப்படுத்துவது தெரிந்து வந்துள்ளது. எப்படிக் கருத்தரிக்காமல்

செய்வது என்பதையும் அறிவார்கள். பண்டை நாளில் கல்யாணம் செய்துகொள்ளாமல் இருத்தல், பொறுத்துத் திருமணம் செய்துகொள்ளுதல், துறவிகளாக மாறுதல், சிசுகுலேவு செய்தல், சிசுவதை செய்தல் போன்றவற்றை நீண்ட நாட்களாகப் பின்பற்றி வந்துள்ளார்கள். பிறப்புக்கட்டுப் பாட்டைக் கடந்த நூறு ஆண்டு காலமாகத்தான் பின்பற்றி வரு கிறுர்கள். அதிலும் சென்ற 50 ஆண்டுகளாகத்தான் திருப்தியான முறையில் செயல்பட்டு வளர்ந்து வந்துள்ளது. இருந்தபோதிலும் செம்மையான நிலேயை அடையவில்லே. தற்சமயம் இதுவே பாது காப்புக்குரிய, திறமையான சாதனமாக விளங்கி வருகிறது.

பிறப்புக் கட்டுப்பாடு ஒழுக்கம் தவறியதா? இது ஒழுக்கக் குறை வானது அன்று. ஒழுக்கம் என்பது பழக்க வழக்கங்கள், சம்பிரதா யங்கள், காலம் இவற்றுக்கு ஏற்றவாறு மாறுபடும்; ஒரு நாகரிக முறைக்கும் மற்றெரு நாகரிக முறைக்கும் மாறுபடும். ஒரு சமு தாயத்தின் ஒழுக்கம் எதைப்பொறுத்தது என்ருல் முன்னேற்றத்தை யும் அதன் நிலேயையும் பொறுத்தது. நாட்டின் நன்மைக்கும், காலத்திற்கும் ஏற்றவாறு அது அமையும். ஒழுக்கங்களே உண்டு பண்ணுவது மனிதர்கள்தான் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அது ஒன்றும் நிரந்தரமானது, முழுமையானது என்றும் கூறிவிட முடியாது. ஒழுக்கங்களின் விதிகள்யாவும் மக்களின் தேவைகளுக் கும், நோக்கத்திற்கும் ஏற்றவாறு அமையும். ஒருவரின் ஒழுக்கம் மற்றெருவருக்கு ஒழுக்கம் கெட்டதாக இருக்கும். ஒரு காலத்தில் எதை ஒழுக்கம் என்று கூறினுர்களோ அதை மற்றெரு காலத்தில் ஒழுக்கக் குறைவு எனக் கூறுவார்கள். இன்றைக்கு எது ஒழுக் கமோ அது எதிர்காலத்தில் தொன்மையானதாகவும், பழங்காலத் திற்குரியது என்றும் மக்கள் ஒதுக்கி விடுவார்கள் என்பதை இன் றும் காண்கிறேம். பண்டை நாளில் கணவன் இறந்தால் மனைவி யும் உடனே இறக்க வேண்டும்; விதவைகள் மீண்டும் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என 'சதி' திட்டம் இருந்துவந்தது. அதை அப்போது ஒழுக்கமாக நினைத்தார்கள். இன்று, கணவன் இறந்தால், மனைவி உடன் இறப்பது கிடையாது. கண்மூடித்தன மாகச் சில முறைகளேத் தொன்றுதொட்டு செய்துவருவது தவருனதாகும். காலப்போக்கில் 'சதி' திட்டம் நீங்கியது. இதை உணர்ந்து தான் பெர்ல் பக் (Pearl Buck) என்பவர் பழக்கம், சட்டம் யாவும் உண்டாக்க வேண்டியதுதான். ஆனுல் அது காலத் திற்கு ஏற்றவாறு செயல்படவேண்டும் என்றுர். (Convention and laws must be made and unmade as times require) நம் மூதாதைகள் வகுத்த வழிப்படி நம்மால் இன்றைய உலகில் வாழ முடியாது. நாம் அதை விரும்பவில்லே என்பது

பொருள் அல்ல; வாழ்க்கை நாளுக்கு நாள் மாறி வருகிறது; ஆகவே பழைய முறைப்படியானுல் தற்காலத்திற்கு ஏற்றவாறு வாழ முடிவதில்லை. மேலும் எது நமக்கு நன்மையை உண்டாக்குகிறதோ அதைத் தலை சிறந்த ஒழுக்க மாகக் கொள்வதில் தவறு இல்லை. குடும்பக் கட்டுப்பாடு ஒழுக்க மானது. ஒழுக்க விதிகளில் சில அம்சங்கள் காலத்திற்கு ஏற்ற வாறு மாறுபடுகின்றன. சமுதாய, அரசியல், சமூக, பொருளாதார தேவைகளுக்குரிய முறைக்கு எதிர்ப்பு என்ருல் நல்ல ஒழுக்கத் திற்கே மறுப்பு எனப்பொருளாகும். இந்தக் கண்டுபிடிப்பு சமுதா யத்திற்கு உபயோகமானது என்பதை யாராலும் மறுக்க முடியாது. அது ஒழுக்கமுறைக்குக் குறைவாக இருக்கலாம்; ஆனுல் நன்மை பயக்கும் எதையும் ஒழுக்க உயர்வாகக் கருதலாம். இதனை வலியுறுத்தி அமெரிக்காவில் ஒரு வழக்கறிஞர் கூறியதைக் கீழே காணலாம்: "Ofcourse it is immoral; but it is socially useful therefore we propose to make it moral."

குடும்பக் கட்டுப்பாட்டை எதிர்ப்பவர்கள் இன்னும் நம் நாட்டில் பலர் உள்ளனர். அது ஒழுக்கத்திற்கு பங்கம் விளைவிக்கும் எனவும் கூறுகிருர்கள். இளமையான பெண்கள், கல்யாண மாகாத பெண்கள் இம்முறையைப் பின்பற்றினுல் குழந்தைகள் பிறக்காது என்று பயம் தெளிந்து தவருன முறைகளில் ஈடுபடு வார்கள் எனக் கூறுகிருர்கள். தவருனக் கருத்துகளையும் சமு தாயத்தில் பரப்பி வருகிருர்கள். பயத்தினுல் வரும் விளைவுகளையும், ஒழுக்கக் கேடுகளையும்பற்றி அதிகம் பேச வேண்டியதில்லை. குற்றம் செய்வதைவிட பயத்தைப் பெரியதாகப் பேசி வருகிருர்கள். குடும்பக்கட்டுப்பாடு ஒழுக்க நிலையை மேம்படுத்தும். தவறுதலாகப் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையையும் இம்முறை குறைக்கும். தவறுதலாக உள்ள பெற்ருேர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைக்க முடியும், மறைமுகமான தொடர்புகளுக்கும், தேவையில்லாத விரும்பத்தகாத குழந்தைகள் பிறப்பதினுல் மீண்டும் ஏழ்மையான நிலையில் கொண்டுபோய் நிறுத்தாமல் தடுக்கலாம். குடும்பக் கட்டுப் பாட்டுக்குரிய சாதனங்கள் அதிகமாகக் கிடைப்பதாலும், உபயோகிப்பதாலும், தேவையற்ற குழந்தைகளை அடியோடு நீக்கி விடலாம். சமுதாயத்தில் மிக அவசியமான முறையைச் சிறு பான்மை மக்கள் தூற்றத்தான் செய்வார்கள். சமுதாயத்திற்கு உபயோகமானதைத் தவருகப் பேசுவதாலும், குறைகூறுவதாலும் பயனில்லை. யாரோ ஒரு சிலர் தவறுதலாக நடப்பார்கள் என்று எண்ணி அதற்காகப் பெரும்பாலோர்களின் நலனை உதறித் தள்ளிவிட முடியாது. ரேசரினுல் ஒரு சிலர் கழுத்தை அறுத்துக்

கொண்டால் அதற்காக முகச்சவரம் செய்வதற்குரிய ரேசரை நீக்கிவிட முடியுமா? சிலபேர் குளத்தில் வீழ்ந்து சாகிறார்கள் என்பதால் குளங்களையும், கிணறுகளையும் மூடிவிட முடியுமா என்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

பிறப்புக் கட்டுப்பாடு முறை செயற்கை; அது இயற்கை அல்ல. இயற்கை அல்லாதது என்றால் இயற்கையோடு உள்ள முறையில் வெளியார் தலையிடுவதைக் காட்டும். மனிதனின் முழுவாழ்க்கையும் தொட்டில் முதல் சுடுகாடு வரை எல்லாம் இயற்கை அல்ல. எல்லா நாகரிகமும் துணிச்சலோடு இயற்கையுடன் தலையிடுவதைத்தான் குறிக்கிறது. காலையில் எழுந்தவுடன் முகச்சவரம் செய்து கொள்ளல், ஷவர் பாத்தில் குளித்தல், நகங்களை வெட்டுவதற்குக் கருவியைப் பயன்படுத்துதல், தலைசீவுதல் எல்லாமே இயற்கையுடன் தேவையான அளவு தலையிடுதலாகும். நாகரீகமே தலையீட்டினால்தான் நடைபெறுகிறது, வளர்ந்து வருகிறது என்பதை நினைத்து நாம் பெருமை கொள்ள வேண்டியுள்ளது. இயற்கையின் குருட்டுத்தனமான சக்திகளைச் செம்மைப் படுத்தி, பதப்படுத்தி, மனித சமுதாயத்திற்கு நலன் பயக்கும் வண்ணம் கொண்டு வருதல் வேண்டும். அப்படி நாம் இயற்கையோடு போராடி அதை நம் உபயோகத்திற்குக் கொண்டுவராவிட்டால், மீண்டும் நாம் காட்டுமிராண்டி காலத்திற்குப் போக வேண்டியதுதான்.

மக்கள்தொகைக் கட்டுப்பாட்டைப் பின்பற்றினால் சுயமாக அனுபவித்தல் என்ற எண்ணத்தை உண்டாக்கும். தானே அனுபவித்தல் என்ற தன்னிச்சையை வளர்க்கும். பிறப்புக் கட்டுப்பாடு என்பது சுயமாக அனுபவிக்கும் ஓர் உண்மையை எடுத்துக் காட்டும். இந்த நாட்களில் முன்னேறிய நாடுகளில், இளம் ஆண்கள், வாலிபர்கள், பெண்கள் பொருளாதாரக் காரணத்தைக் காட்டிக் கல்யாணம் வேண்டாம் என்று கூறுகிறார்கள். அவர்கள் தங்களின் பண நெருக்கடி, குடும்ப நிலை, வருமான வசதிகள் இவற்றை உணர்ந்து திருமணத்தால் குழந்தைகள் பிறப்பதை ஆலோசித்து கல்யாணம் வேண்டாம் என மறுக்கிறார்கள், கல்யாணம் என்றால் குழந்தைகளைப் பெறுவது என்பதுதான் நினைவுக்கு வரும். அதனால்தான் இவர்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் மறுவிதத்தில் தங்களின் இன்பத்தை நுகர்கிறார்கள். விபசாரத்தை மேற்கொண்டுள்ளவர்கள் இதுபோன்ற இளம் வாலிபர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கிறார்கள். இந்த மாதிரியான சூழ்நிலையிலும் குடும்பக் கட்டுப்பாடு மிகச் சிறந்த உதவியாக உள்ளது. இளம் வாலிபர்கள் திருமணத்தை முடித்துக்

கொண்டு அமைதியாக சந்தோஷமான வாழ்க்கையை நடத்த முடியும். குழந்தைகளைத் தங்கள் இஷ்டம்போல், பொருளாதார வசதிகளுக்கு ஏற்றவாறு பெற்றுக் கொள்ளலாம். மேலும் அவற்றின் எண்ணிக்கையையும் கட்டுப்படுத்தலாம். தவருன முறையில் செல்லாமல், உடம்பை நன்முறையில் பேணிக் காக்கலாம். குடும்பக் கட்டுப்பாடு பரந்த அளவில் பயன்படுத்தப்படுவதால் சட்டபூர்வமான, இயல்பான, சந்தோஷமான திருமணங்கள் அதிகரிக்கும். குற்றங் குறைகளையும், தவருன முறைகளையும் தவிர்க்கலாம். எந்த அளவிற்கு வேண்டுமாஞலும் மனைவியுடன் நெருங்கிப் பழகலாம். கருத்தடைச் சாதனங்களைப் பயன்படுத்திஞல் கருத்தரிக்காமல் இன்பமாக வாழலாம்.

கருத்தடை சர்தனமில்லாமல் ஆண்டு ஒன்றுக்கு ஒரு தடவை தம்பதிகள் புணர்ந்தாலும், ஆண்டு ஒன்றுக்கு ஒரு குழந்தை பிறக்கும். ஆகவே தம்பதிகள் எந்தவிதமான கட்டுப்பாடுமில்லாமல் புணர்ந்தால் நிச்சயமாக பிறப்பு விகிதம் அதிகரிக்கும். அப்படி ஆண்டு ஒன்றுக்கு ஒரு குழந்தை பிறந்தால் பிறர் கேலி செய்வதையும் காண்கிறேம். இவர்கள் குழந்தைகளை அதிகரிப்பதை விட வேறு ஒன்றும் செய்யவில்லை எனப் பேசுவார்கள். ஆகவே தான் குடும்பக் கட்டுப்பாடு மிகவும் அவசியமானது.

குடும்பக் கட்டுப்பாடு மதச் சார்பற்றது. ஆனுல் சில மதங்கள், மதத் தலைவர்கள் இதை எதிர்த்தும் குறைத்தும் கூறிவருகிருர்கள். கல்யாணம் ஒரு புனிதமான காரியம். ஒவ்வொருவரும் சீக்கிரத்தில் திருமணம் செய்துகொள்ள வேண்டும். கூடுமாஞல் அதிவிரைவில் அதிகமான குழந்தைகளைப் பெற்றெடுத்தல் வேண்டும். குறிப்பிட்ட இனத்தில் இனவிருத்தி செய்திடல் வேண்டும். அதிகமான எண்ணிக்கை அம்மதத்தைப் பரப்பவும், இனத்தைப் பெருமைப்படுத்தவும் தேவைப்படுகிறது. ஆனுல் சில மதங்கள் தற்காலத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுக்குச் சிறப்பிடம் தந்துள்ளன. தங்கள் கொள்கையில் மாற்றங்களை ஏற்றுக் கொண்டன. குடும்பக் கட்டுப்பாடு சமுதாயத்திற்கு மிகவும் தேவையானது, உபயோகமானது எனச் சாதகமாகப் பேசி வருகின்றன. 1930ஆம் ஆண்டு வரை பழங்கால யூதர்கள் குடும்பக் கட்டுப்பாட்டை வெறுத்து வந்தார்கள். பின்னர் அவர்களே அதை ஆதரித்தார்கள். புராட்டஸ்டண்ட் கிறிஸ்தவர்கள் இதை எதிர்க்காமல் உற்சாகம் அளித்து ஆதரித்து வருகிருர்கள். 1908ஆம் ஆண்டில் லெம்பத்தில் கிறிஸ்தவர்களின் மகாநாட்டில் குடும்பக் கட்டுப்பாடு ஆரோக்கியத்திற்கும் உலக அமைதிக்கும் தேவை எனப் பேசினுர்கள்.

இந்தக் கூட்டத்தில் கிறிஸ்தவர்கள் குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரித்தனர். மேலும் குடும்பத்தினுடைய அளவைக் குறைத்தால்

சமுதாயத்திற்கு நலம் பயக்கும் என்றும் கூறினர்கள். கிறிஸ்தவத் தத்துவத்தின்படி கடவுள் மனிதர்களுக்குச் சில பணிகளைச் செய்வதற்குச் சில உறுப்புகளை அளித்துள்ளார். அந்த உறுப்பினுடைய நோக்கம் அந்தக் குறிப்பிட்ட பணியைச் செய்தாக வேண்டும். கடவுள் இந்த உறுப்புகளைக் கொடுத்துள்ளபடியால் கடவுளுடைய இச்சையைப் பூர்த்திசெய்வதற்கு ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கடமையைச் செய்திடல் வேண்டும். அதாவது ஒவ்வோர் உறுப்பும் தன்னுடைய பணியைச் செவ்வனே செய்ய வேண்டும். கண்கள் பார்ப்பதற்கும், காதுகள் கேட்பதற்கும், இதைப்போல் மற்ற உறுப்புகளும் தத்தம் பணியைச் செய்ய வேண்டும். அப்படி அந்தப் பணியைச் செய்யாவிட்டால் அது பாவமாகும். இருவரிடையேயுள்ள நட்பை அல்லது உறவைச் சிரிப்பதாலும், கை கொடுத்துக் கொள்வதாலும், முத்தமிடுவதாலும் புரிந்துகொள்ள முடியும். அதைப்போல் தம்பதிகள் புணர்வதால் சதை ஒற்றுமையும் நட்பும் வளர்கின்றன. மறு கல்யாணம் செய்து கொள்வது பாலில் தண்ணீர் கலப்பதாகும். அதனுல் அதன் தரம் குறைகிறது. அதைப் போல் தம்பதிகள் திருமணம் செய்து கொண்டால் அவர்கள் எக்காரணத்தைக் கொண்டும் ஒருவரை ஒருவர் பிரியக் கூடாது. அப்படிப் பிரிந்தால் ஏமாற்றம். உண்மைக்குத் துரோகம் செய்வதாகும். ஒருவரை ஒருவர் உயிருள்ளவரையில் நேசிக்க வேண்டும்.

ரோமாபுரிக் கத்தோலிக்கர்கள் கல்யாணத்தைக் கட்டுப்படுத்தல், அப்படி கல்யாணம் செய்துகொண்டவர்கள் பத்திரமான காலத்தில் புணர்ச்சியை மேற்கொள்ளுதல்போன்ற முறைகளைப் பின்பற்றிக் குடும்பத்தின் அளவை மேற்கொண்டார்கள். 1931ஆம் ஆண்டில் போப்பு புஸ் பதினென்று அவர்கள் பொருளாதார, சுகாதாரக் காரணங்களை முன்னிட்டுக் கருத்தடைச் சாதனங்களைப் பயன்படுத்துமாறு அழைப்பு விடுத்தார்கள். அக்காலத்தில் வீட்டுத் தூரம் வந்த சில நாட்களில் புணர்வதால் கருத்தரிக்காது என்ற நம்பிக்கையும் நிலவி வந்தது. ஆனல் இந்த முறையில் வீட்டுத் தூரம் பெண்களுக்குப் பெண்கள் காலத்திலும் மாறுபடும். ஆகவே இது சரியான, நிலையான முறை அன்று. இந்த முறையில் இயற்கையுடன் யாருடைய தலையீடும் கிடையாது என உயர்வாகப் பேசி வந்தார்கள். அமெரிக்காவில் 20வயது முதல் 35வயது வரையில் உள்ள 70 சதவிகிதக் கத்தோலிக்கப் பெண்கள் குடும்பக் கட்டுப்பாடு முறைகளை அறியவும், ஆதரவு அளிக்கவும் விரும்பினர்கள். பிரான்ஸ் தேசத்தில் குடும்பக் கட்டுப்பாடு சாதனங்களுக்கும், அவற்றை உபயோகப்படுத்துவதற்கும் யாதொரு தடையும் கிடையாது. இந்தியாவில் 1951 கணக்கின்படி மொத்த

சாதனங்களின் முறையில் அல்ல. கூடுமானவரையில் புணர்ச்சியைத் தவிர்த்தல் வேண்டும், ஒழுக்கக் கட்டுப்பாடுகளை மேற்கொள்ளுதல் வேண்டும் என வலியுறுத்தினார்கள். ஒருவருக்கு 6 முதல் 8 வரை குழந்தைகள் பிறந்தாலும் கடைசியாக உயிருடன் வாழ்வது மூன்று குழந்தைகள்தான் எனக்கூறினர். திருமதி மார்கரட் சான்சர் அவர்கள் கோடிக்கணக்கான மக்களை எப்படி ஒழுக்கக் கட்டுப்பாடுகளை மேற்கொள்ளச் செய்யமுடியும். காந்தி அவர்களே இம் முறையினை மேற்கொள்ள 30 ஆண்டுகள் பிடித்தன. அப்படி இருக்கும்போது பாமர மக்களை இந்த முறைகளை மேற்கொள்ளச்சொல்வது நியாயம் அல்ல என வாதாடினார்கள்; இளம் தம்பதிகள் நீண்ட நாட்களுக்கு எப்படிப் புணராமல் இருக்க முடியும்? பொருளாதாரக் காரணங்களுக்காகக் குழந்தைகள் வேண்டாம் என்று எண்ணி எப்படிப் புணர்ச்சியைத் தவிர்க்க முடியும்? தாகம் உடையவன் பக்கத்தில் தண்ணீரை வைத்துவிட்டுத் 'தண்ணீரைக் குடிக்காதே' என்பதைப்போல் உள்ளது. இது ஒன்றும் செம்மையான முறை அல்ல. பசியைப் போக்க வயிற்றை அறுத்துக்கொள்ளும் உதாரணத்திற்குச் சமமாகும். ஒழுக்கக்கட்டுப்பாடு பாமர மக்களுக்குக் கடினமானது. நீண்ட நாட்களுக்குப் புணர்ச்சியைத் தவிர்ப்பதால் இது தம்பதிகளுக்குள் உள்ளத்தாலும், உடலாலும் விரும்பத்தகாத விளைவுகளை உண்டுபண்ணும். இந்து மதத்தின் சிறப்பான அம்சம் சமூக மாற்றம். சமூகத்தில் ஏற்படக்கூடிய மாற்றங்களைப் பெரும்பாலும் இந்து தர்மம் ஏற்றுக்கொள்ளும். இந்து வேதம் நான்கு முக்கிய கடமைகளைக் கொண்டது. அவை முறையே தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்பன. இந்து மதத்தில் ஒவ்வொருவரும் கல்யாணம் செய்துகொண்டு சிறந்த வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. குறிப்பாக, பெண்கள் 16 வயதிலும், ஆண்கள் 25 வயதிலும் திருமணத்தை முடித்துக் கொள்ளவேண்டும். ஆனால் வேதங்களில் சீக்கிரமாகத் திருமணத்தை முடித்துக்கொள்ளச் சொல்லவில்லை. இந்தியாவில் இந்து மதத்தைப் பின்பற்றக்கூடியவர்கள் ஏராளம். இவர்கள் ஆதி நாட்கள் முதற்கொண்டே சில நிபந்தனைகளை, விதிகளை வாழ்க்கையில் மேற்கொண்டுள்ளார்கள். குறிப்பாக, இனவிருத்திக் காலத்தில் பல நிர்ப்பந்தங்களையும் விதிமுறைகளையும் பின்பற்ற வேண்டும். முக்கிய நாட்களிலும், மத சம்பந்தப்பட்ட நாட்களிலும் புணர்ச்சியைக் கட்டுப்படுத்தினார்கள். பெண்களுக்கு வீட்டுதூரம் வந்த நாட்கள்வரையில் புணருதல் கூடாது. 8, 14, 15 நாட்களிலும், பெரியவர்கள் இறந்த நாட்களிலும், சில முக்கிய நாட்கிழமைகளிலும் புணருதலை நிறுத்திவந்தார்கள். கல்யாணத்தின்போது மணமகளை 10 குழந்தைகளைப் பெற்றெடுத்துக்

கொண்டு, கணவனைப் பதினோராவது குழந்தையாக ஆக்க வேண்டும் என வாழ்த்துவார்கள். இந்து தர்மத்தின் இந்த முக்கிய கருத்து ஆங்கிலச் சொற்களில் கீழே கொடுக்கப்பட்டுள்ளது: "Oh Indra - Make the bride the mother of good and lucky children. Bless her to get ten children and make the husband the eleventh one." தன்னுடைய கணவனைப் பதினோராவது குழந்தை யாக மதிக்கும்போது குடும்பத்தின் அளவை அப்போது நிர்ண யித்தார்கள். ஆனால் தற்சமயம் ஒரு குடும்பத்திற்கு 10 குழந்தை கள் அதிகம். ஆகவேதான் குறைந்த பட்சம் ஒரு குடும்பத்திற்கு ஒரு குழந்தை அல்லது ஒரு மகன் இருந்தால் போதுமானது. இறந்தவர்களின் ஈமச்சடங்கை முடிக்க சந்ததி ஒரு மகன் இருந் தால் போதுமானது எனத் தற்கால மதத்தலைவர்கள் வலியுறுத்திவரு கிறார்கள். பிள்ளைகள் இல்லாமல் இருக்கக்கூடாது. அதற்காக அதிகம் தேவையில்லை. குடும்பக்கட்டுப்பாட்டுக்கு எதிர்ப்பு ஒன்றும் இந்து மதத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. "Hinduism is not opposed to planned parenthood." திட்டமிட்ட குடும் பத்திற்கு இந்துமதம் எதிர்க்கவில்லை. திரு. ராஜா ராம்மோகன் ராய் முதற்கொண்டு திரு. இராதாகிருஷ்ணன் வரை பல்வேறு இந்து மதச் சமூகச் சீர்திருத்தவாதிகளைக் கண்டது. திட்டமிட்ட குடும்பத்தை இந்தியாவில் செயல்படுத்த இன்றைய உலகில் நல்ல ஆதரவு உள்ளது. விஞ்ஞானக் கருத்துகளும், மதக்கருத்துகளும் முரண்பாடாக இருந்தபோதிலும் கடைசியில் விஞ்ஞானக் கருத்துக் கள் தான் வெற்றி பெறும். ஆனால் இதற்குச் சில காலம் பிடிக்கும். ஆகவேதான் இந்தியர்கள் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை, சகிப்புத்தன்மை, வேற்றுமையில் ஒற்றுமை, சமூகச்சீர்திருத் தங்கள், புதியக் கருத்துகளுக்கு இடம் கொடுத்தல் போன்ற நற் பண்புகளை வளர்த்துக்கொண்டுள்ளார்கள்.

மேலே நாம் கிறிஸ்தவ மதம், இந்துமதம் இவற்றின் கருத்து வேறுபாடுகளை ஆராய்ந்தோம். இப்போது முகம்மதியர்களின் கருத்துக்களையும் அறிவோம். பாகிஸ்தான் பிரிந்த சமயத்தில் இந்தியாவில் 36 மில்லியன் முஸ்லீம் மக்களை விட்டுச்சென்றார்கள். மேலும் உலகத்தில் மொத்தத்தில் 320 மில்லியன்கள் முகம்மதிய மக்கள் உள்ளார்கள். இவர்களுடைய பிறப்பு, இறப்பு விகிதங்கள், நோய் முதலியவை மாறுபட்டுள்ளன. சமூகத்தில் சம வாய்ப்பு, சம அந்தஸ்துதான் சிறப்பான அம்சமாகும். பெரிய குடும்பங்களை விரும்புவார்கள், உற்சாகப்படுத்துவார்கள். சமூகப் பழக்க வழக் கங்களை என்றும் பின்பற்றுவார்கள். முகம்மதியர் ஒருவருக்குத் திருமணம் ஆகிவிட்டால் அவர் மதத்தில் பாதிஅளவு நிலையை அடைந்து விட்டார் எனப் பொருள். மணம்முடித்துக்கொண்டு

மக்களைப் பெருக்கவேண்டும் என்பதும் தலைசிறந்த உண்மை, மேலும் அதனால் மதமும் மேன்மைப்படுத்தப்படும். நல்ல கணவன்மார்களைத்தான் சிறந்த மனிதர்களாகப் போற்றினார்கள். முகம்மதியர்கள் தங்களுக்கெனச் சட்டங்கள், பிறப்பு, திருமணம், வரதட்சணை, விவாகரத்து போன்ற முறைகளை வகுத்துக் கொண்டுள்ளார்கள். அதிகமான குழந்தைகளைப் பெற்றெடுப்ப தால் தாய்மார்களின் உடல்நலம் குறையும் எனவும், ஒரு குழந்தைக்கும் மற்றொரு குழந்தைக்கும் இடையே நீண்டகாலம் இடைவெளி தேவை எனவும், தாய்மார்களுக்கு ஓய்வு தேவை எனவும் உணர்ந்தார்கள். தாய்மார்களுக்கு ஓய்வு அவசியம். தகப்பன்மார்களும் கஷ்டத்தைப் போக்குவதற்கு அடிக்கடியும், அதிகப்படியாகவும் குழந்தைகளைப் பெறுவதை விரும்பவில்லை. அதற்கான கருத்தடைச் சாதனங்களை இயற்கையாகவும், செயற்கையாகவும் பயன்படுத்தினார்கள். இந்தக் குடும்பக் கட்டுப்பாடு முறைகளில் சிசு குலைத்தலையும் சேர்க்கப்பட்டுள்ளது. ஒரு குழந்தை மடியிலும், மறு குழந்தை வயிற்றிலும் இருந்தால் மடியிலுள்ள குழந்தைக்கு எப்படி தாய் பால்கொடுக்க முடியும். இதற்காக சிசுகுலைத்தலும் சேர்க்கப்பட்டதுபோல் தெரிகிறது. பல்வேறு மதத்தினர்களின் கருத்துகளையும் ஆராய்ந்தோம் மக்கள் நல்லமுறையில் வாழவும், வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவும் குடும்பக் கட்டுப்பாடு இன்றியமையாதது என்பதில் ஐயமில்லை.

இன்னும் குடும்பக்கட்டுப்பாட்டின் நிர்வாகப்பிரச்சினையையும் சற்று ஆராய்வோம். பம்பாய் மாநிலத்தில் 1951ஆம் ஆண்டில் பரோடாவில் ஒரு சர்வே குஜராத்தி, மராத்தி ஆகிய இரு மொழி களிலும் நடத்தப்பட்டது. 15 வயது முதல் 45 வயது வரையுள்ள கல்யாணம் ஆன தாய்மார்களை அணுகிப் புள்ளி விவரங்கள் சேகரிக் கப்பட்டன. குஜராத்தியில் 63 சதவிகிதம், மராத்தியில் 77 சதவிகிதம் குடும்பக் கட்டுப்பாட்டுக்குச் சாதகமான பதில் கொடுத்தார்கள். குஜராத்தில் 18 சதவிகிதம் மராத்தியில் 5 சதவிகி தம் ஒழுக்கக் கட்டுப்பாட்டை விரும்பினார்கள். குஜராத்தில் 19 சதவிகிதம், மராத்தியில் 18 சதவிகிதம் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு எதிர்ப்பு தெரிவித்தார்கள். மைசூர் மாநிலத்தில் ராமநகரம் என்ற கிராமத்தில் நடத்திய சர்வே ஒன்றின் அறிக்கைப்படி கல்யாணம் செய்துகொண்ட 78 சதவிகிதத் தம்பதிகள் கருத்தரித்தலைத் தள்ளிப்போடவும், தவிர்க்கவும் விரும்பினார்கள்; குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் ஆதரவு அளித்தார்கள். குடும்பநலத் திட்டங்களை முன்னோடித் திட்டங்களை லக்னோ

மீரட் போன்ற நகரங்களில் அமைக்க விரும்பினுர்கள். காரணம், 62 சதவிகிதத் தாய்மார்கள், 57 சதவிகிதக் கணவன் மார்கள் கிராமப்புறங்களில் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு ஒப்புதல் அளித்தார்கள். மேலும் அதன் முறைகளையும் அறியவும் விரும்பினுர்கள். பூனு நகரில் நடத்திய மற்ருெரு சர்வேயின் அறிக்கையின்படி 1,705 ஆண்கள் 751 பெண்கள் கருத்தடைக்குரிய கேள்விகளுக்குப் பதில் அளித்தார்கள். இதில் கல்யாணம் ஆன 64·8 சதவிகித ஆண்கள், 53·2 சதவிகிதப் பெண்கள் குடும்பக் கட்டுப்பாடு சம்பந்தப்பட்ட செய்திகளை அறிய ஆவல் உள்ளவர்களாகவும், ஆதரவு தரத் தயாராகவும் இருந்தார்கள். ஆகவே மேலே காணப்பட்ட சர்வேக்களின் அறிக்கைகளின்படி குடும்பக் கட்டுப்பாட்டுக்கு நல்ல ஆதரவும், வரவேற்பும் இருந்தன. மக்கள் பெரும்பாலோர் விரும்பினுர்கள்.

இந்தியாவில் மக்கள் குறைவான வாழ்க்கைத்தரத்தில் வாழ்கிருர்கள். பொறுப்புகள் மிக அவசியமாகும். குடும்பக் கட்டுப்பாடு நிலையங்களை எங்கும் அமைத்து அது நல்ல முறையில் செயல்பட்டால் நமக்கு அது வரவாகும். செலவு என்ருல் அதனைச் செயல்படுத்தும்போது வரக்கூடிய தொல்லைகளைத்தான் குறிக்கும்.

குடும்பக் கட்டுப்பாடுமுறை பெரும்பாலும் அதிகமான வாழ்க்கைத்தரத்துடன் தொடர்புகொண்டது. ஏனெனில் மக்கள் ஒரு தரம் உச்ச வாழ்க்கைத்தரத்தை அனுபவித்த பின்னர், அதை விடச் சம்மதிக்கமாட்டார்கள். அதன் காரணமாகக் குடும்பத்தின் அளவைக் குறைக்க முன்வருவார்கள். அதற்காக வாழ்க்கைத் தரம் உயரும்வரையில் காத்திருக்கவேண்டியதில்லை. குடும்பக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்த தேசிய முன்னேற்றத் திட்டங்களைப் பொருளாதாரத் திட்டங்களுடன் இணைத்து செயல்படுத்தவேண்டும். இப்போதுள்ள பொருளாதார நிலையில் துரிதமான மக்கள்வளர்ச்சியும், வாழ்க்கைத்தர உயர்வும், இரண்டையும் ஒரே சமயத்தில் செயல்படுத்த முடியாது. ஆகவே நமக்கு முன் இந்தப் பிரச்சினை குழப்பத்தை உண்டாக்குகிறது. குடும்பக் கட்டுப்பாடு மிக அவசியம். ஏனெனில், மக்கள் முன்னுடியே குறைவான வாழ்க்கையில் வாழ்ந்துவருகிருர்கள். மேலும் மக்கள்தொகை பெருகினுல் இன்னமும் வாழ்க்கைத்தரம் குறையும். குடும்பக் கட்டுப்பாட்டின் வெற்றி உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப்பொறுத்தது. ஆகவே, தற்போதுள்ள வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும். அதற்காகத்தான் குடும்பக்கட்டுப்பாடு முன்னேற்றத்திட்டங்களுடன் இணைக்கப்பட்டுள்ளது. இதை

நாம் தவிர்க்கமுடியாது. தொடர்ந்து செயல்படுத்தவேண்டும். ஒரு பக்கம் குடும்பத்தின் அளவைக் குறைத்திடல் வேண்டும், மறுபக்கம் முன்னேற்றத்திட்டங்களினுல் வாழ்க்கைத்தரத்தை உயர்த்திடல் வேண்டும். ஆகவேதான் பொருளாதாரத்திட்டங்களும், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களும் ஒரே சமயத்தில் செயல்படவேண்டும். பொருளாதாரத் திட்டங்களைமட்டும் செயல்படுத்தினுல், திட்டங்களின் வளர்ச்சியை, பலனை, முன்னேற்றத்தை பெருகி வரும் மக்கள்தொகை சாப்பிட்டுவிடும்; மக்கள் யாதொரு பலனும் காணமுடியாது. ஆகவேதான் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தக் குடும்பக் கட்டுப்பாடு இந்த நேரத்தில் அவசியப் படுகிறது.

அடுத்து இந்த இயக்கம் கிராமப்புறத்தில் முதலில் ஆரம்பிக்க வேண்டும். கிராமங்கள் சமூக, பொருளாதார அமைப்புக்கு அடித்தளமாக விளங்குகின்றன. ஆனுல் இந்தியாவில் நகர்ப்புறங்களில், உச்சியிலிருந்து இந்த முறைகளை ஆரம்பித்துள்ளார்கள். குடும்பக் கட்டுப்பாடு பெரிய நகரங்களில் அமைவதால் உயர்தர, நடுத்தர மக்களுக்குத் தேவைகளைப் பூர்த்திசெய்கிறது. பாமரமக்கள் அதிகமாக வாழ்வது கிராமங்களில்தான். இதனுல் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்குப்பதில் பிரச்சினை மீண்டும் மேலும் வளர்கிறது. கிராம, நகர்ப்புறங்களில் பிறப்புவிகிதங்கள் மாறுபடுகின்றன. நீண்ட காலத்தில் மக்களின் தரம் பாதிக்கப்படும். கிராமப்புறத்தில் ஏற்கெனவே பொருளாதாரக்குறைவில் உள்ள மக்கள் ஏராளம். மேலும் மக்களுக்கு ஆரோக்கியம், படிப்பு வசதிகள் குறைவு. ஏழ்மையாக உள்ள மக்கள்தொகை பெருகி, தரம் குறைவாக உள்ள மக்கள்தொகை அதிகரிக்கும். சரியான போஷிப்பின்மை, ஆற்றல் குறைவு எல்லாம் ஏற்படும். அடுத்தத் தலைமுறையில் அதிகச்சுமையை உண்டாக்கும். படித்தவர்கள் முன்வந்து தங்களின் குடும்பங்களின் அளவுகளைக் குறைத்துக்கொள்வதால் எதிர்காலத்தில் படித்தவர்களின் நுட்பம், அறிவு, ஆற்றல் படைத்த மக்கள்தொகை குறைய நேரிடும். ஏனெனில் கிராமப் புறத்தில் படிக்காத மக்கள் மீண்டும் மக்கள்தொகையை அதிகரிக்கும்போது அதனுல் மேலும் தரக்குறைவான மக்கள் தொகை பெருகும். கிராமப்புறங்களில் குடும்பக்கட்டுப்பாடு சொல்வதைவிடச் செயல்படுத்துவதுதான் மிகவும் கடினம். கிராமங்களில் அடிப்படையான சுகாதாரம், ஆரோக்கியம், மருந்து வசதிகள் குறைவு. சுத்தமான தண்ணீர் கிடையாது. சுகாதாரமின்மை, படிப்பின்மை, அறியாமை, ஏழ்மை நிறைந்த மக்களைக் கொண்டவைதான் கிராமங்கள். பெரிய ஆஸ்பத்திரிகள் பிரத்தியேகமான, சிறப்பான கிளினிக்குகள் பெரும்பாலும் பெரிய நகரங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றன. சிறுபான்மை மக்கள் வாழக்

கூடிய நகர மக்களுக்குத்தான் இவை பயன்படுகின்றன. கிராமத்தில் உள்ள தாய்மார்கள் நகரங்களுக்கு வருவது என்ருல் எளிதல்ல. ஆகவே கருத்தடைச்சாதனங்களைக் கிராமப்புறத்திற்கு எடுத்துச்செல்லவேண்டும். சாதாரணமான, செலவில்லாத கிளினிக்குகள் ஏற்படுத்தல் வேண்டும். 10முதல் 20பேர்கள் வரையான கிராம மக்களுக்கு உதவக்கூடியதாக இருத்தல் வேண்டும். மாதந்தோறும் நகரும் மருத்துவமனைகளை கிராமப் புறங்களுக்குக் கொண்டுவருதல்வேண்டும். ஆகவே கிராம மக்களுக்கு முதலில் குடும்பக் கட்டுப்பாட்டின் வசதிகளை அளித்திடல் வேண்டும்.

பெரிய பொருளாதார, சமூக நலத்திட்டங்களைத் தயாரித்து அதற்கு அதிகமான முதலீடுசெய்து செயல்படுத்துகிருேம். ஆனுல் இன்னமும் கிராமப்புறங்களில் டாக்டர்களின் ஆலோசனை, மருத்துவமனை, மருந்துவசதிகள் கிடைக்கவில்லை. போதிய அளவுக்கு மருத்துவர்களின் பணிகள் கிராமப்புறங்களில் கிடைப் பதில்லை, இறக்குமதி செய்யக்கூடிய கருத்தடைச் சாதனங்கள் அதிக விலையில் விற்கின்றன. ரசாயன பேஸ்ட், மாத்திரைகள், கருத்தடைச் சாதனங்கள் கிராம மக்களால் வாங்கமுடியாத நிலையை நாம் காண்கிருேம். ஆகவே செஞ்சிலுவைச் சங்கங்கள் தாய், சேய் நல விடுதிகள், மகப்பேறு நிலையங்கள் இவற்றின் மூல மாகக் கருத்தடைச் சாதனங்களைத் தாய்மார்களுக்கு இனமாக தேவையுள்ளவர்களுக்கு வழங்கிடல் வேண்டும். அரசாங்கம் இதைத் தாராளமாக வினியோகம் செய்ய முன்வரவேண்டும். இதற்கு நிதி தேவைப்படுகிறது. தேசியக் கருத்தடைப் பணி களுக்கு முதலீடு செய்துவந்தால், நாட்டின் மற்ற மருந்து இதரச் செலவுத் தொகையைக் குறைக்கும். அடுத்து அறியாமை, கல்வி யின்மை பெரும் தடைகளாக உள்ளன. தாய்மார்களிடம் கருத் தடைச் சாதனங்களின் பலன்களை அச்சடித்து விளம்பரத்தாள்களை கொடுத்தால் போதாது. பெரும்பான்மையோர் படிக்காதவர்கள்; பிடிவாதகுணம் படைத்தவர்கள். அவர்களுக்கு இதன் பலன் ஒன்றும் தெரியாது. தாள்களை வாங்கி மூலையில் போட்டுவிட்டு தொடர்ந்து இனவிருத்தி செய்வார்கள். ஆண்களுக்கும் பெண் களுக்கும் நல்ல முறையில் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை விளக்க வேண்டும். ஆகவேதான் உயர்நிலைப் பள்ளி முதல் கல்லூரி படிப்பு வரை மக்கள்தொகை, குடும்பக் கட்டுப்பாடு இனக்கல்வி, இனவிருத்தியைத் தடுத்தல் போன்ற பாடங் களைக் குறிப்பாகப் பெண்களுக்குச் சொல்லித்தர வேண்டும்.

பெண் கல்விக்கு உயர்ந்த இடம் அளித்திடல் வேண்டும். பல உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகளை பெண்களுக்கு ஏற்படுத்தி குடும்பக்கலை, குடும்பக் கட்டுப்பாடு, இனவிருத்தி, இனப்பயிப்பு நன்முறையில் போதித்தல் வேண்டும். இதன் விளைவு எதிர் காலத்தில் நல்ல பலனை அளித்திடும். மேலும் முதியோர்க் கல்வியைப் பல இடங்களில் திறந்து தாய்மார்களுக்கு நல்ல முறையில் அறிவுரைகள் வழங்கிடவேண்டும். கிளினிக்குகள் ஏற்படுத்தி எதையும் முறைப்படி குடும்பக் கட்டுப்பாடு செய்திடல் வேண்டும். அதற்கு சுத்தமில்லாமல், படிப்பு இல்லாமல் இருந் தால் நல்லதை உண்டாக்குவதற்குப் பதில் கெடுதல்களைத்தான் உண்டு பண்ணும்.

மக்கள் வாழும் விதத்திலும், வாழ்க்கைத் தரத்திலும் இன்னும் எத்தனையோ குறைபாடுகள் உள்ளன. சுத்தமான, காற்றோட்ட முள்ள குளிக்கும் அறைகள், சமையல் அறைகள், தூங்கும் அறைகள், குடிதண்ணீர் வசதிகள் தேவைப்படுகின்றன. எந்தத் தடைகள் இருந்தபோதிலும், குடும்பக் கட்டுப்பாட்டுக்குச் சிறப்பிடம் அளித்து பணிபுரிதல் வேண்டும். ரோட்டரி கிளப், லயன்ஸ்கிளப் போன்ற சமூகநல இயக்கங்களையும் இதற் காகப் பணிபுரியுமாறு அழைத்துக் கொள்ளலாம்.

ஆரோக்கியம், பொருளாதார, சமூகநலத் திட்டங்கள் இவை மக்களின் நல்வாழ்வுக்குப் பயன்படுவதால், அதன் காரணமாகப் பிறப்பு, இறப்பு விகிதங்கள் குறையும். குறைவான பிறப்பு இறப்பு விகிதங்கள் நீண்ட ஆயுட்காலத்தையும் கொடுக்கும், பிறப்புக் கட்டுப்பாடு இறப்பு விகிதத்தையும் குறைக்கும், தேவையற்ற பிறப்புகளின் எண்ணிக்கையைக் குறைக்கும்; மேலும் குழந்தைகளின் இறப்பு விகிதமும் குறையும். பிறப்பு விகிதம் குறைந்தால் நாட்டில் இறப்பு விகிதமும் குறையும் ஏனெனில் அதிகமான குழந்தைகளின் இறப்பு மொத்த இறப்பில் தான் உள்ளது. அடிக்கடி தொடர்ந்து குழந்தைகளைப் பெறுவதால் இந்தியாவில் தாய்மார்கள் அதிகம் இறக்கிறார்கள். ஒரு குழந் தைக்கும் மற்றொரு குழந்தைக்கும் தாராளமான இடைக்காலம் கிடையாது. இடைக்காலம் நீண்டதாக இருந்தால், தாய்மார்களின் இறப்பு குறையும்; குடும்பத்தின் அளவும் குறையும் மக்களின் பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்தினால் அல்லது குறைத்தால் மக்கள்தொகையை நிலையாக்கம் செய்வதுடன் இறப்பு விகிதம் குறையவும் நேரிடும். கிராமப்புறங்களில் தாய்மார்கள் வாழ்க்கையை வெறுக்கிறார்கள். சந்தோஷம், அமைதி வாழ்க்கையில் கிடையாது. எத்தனையோ மாற்றங்கள் நடந்துகொண்டிருக்கும்போதும் புதிய

மாற்றங்கள் தோன்றும்போதும் கிராமத்திலுள்ள தாய்மார்கள் முன்னேறவில்லை. இருந்தபடியே இருக்கிருர்கள். அவர்கள் குறைந்தபட்சப் பொருள்களையும் இன்னும் அடையவில்லை. போதிய அளவுக்கு உண்ண உணவும், இருக்க இடமும், உடுத்திக் கொள்ளத் துணியும்இல்லாமல் அல்லல்படுகிருர்கள். குழந்தைகளை வளர்க்கமுடியாமல் தவிக்கின்ருர்கள். இது ஒரு பக்கம் இருக்க, மற்ருெரு பக்கம் ஏழ்மை, அறியாமை இருளில் வாழ்கின்ருர்கள். குழந்தைகளின் தொந்தரவும் கொடுமையாக உள்ளன. அரசாங்கப் புள்ளிவிவரப்படி 200,000 தாய்மார்கள் ஆண்டு ஒன்றுக்கு குழந்தை பிறப்பால் இறக்கிருர்கள். அதிலும் 1,000 தாய்மார்களில் 100 தாய்மார்கள் இளம்வயதில் குழந்தை பிறக்கும்போது இறக்கிருர்கள்; 1,000 குழந்தைகளில் 150 குழந்தைகள் ஓராண்டு முடிவதற்குள் இறக்கின்றன. கணக்கில் வராமல் எத்தனையோ குழந்தைகள் இறக்கின்றன. ஆகவே ஓர் ஆண்டில் எவ்வளவு இறக்கின்றன என்பதைச் சரியாகக் கண க்கிட முடியவில்லை. இதனுல் எத்தனையோ மக்களின் சக்தி வீண டிக்கப்படுகிறது. இளம் கணவன்மார்கள் தங்கள் மனைவியையும், குழந்தையையும் இழந்து விட்டு இருப்பதையும், தாய்மார்கள் தங்கள் குழந்தைகளை இழந்துவிட்டு இருப்பதையும் எப்படி வர்ணிக்க முடியும். அவர்களுடைய துயரங்கள் வார்த்தை களில் அடங்கா. இளம் தம்பதிகள் எத்தனையோ குழந்தைகளை இழக்கிருர்கள். ஆகவேதான் இதற்கு ஒரு முடிவு கட்டியாக வேண்டும்.

சில குடும்பங்களில் அதிகமான குழந்தைகள் பிறப்பதால் சில குழந்தைகள் இறக்கின்றன. பல குழந்தைகள் பிறந்து சில குழந்தைகள்தான் வாழ்கின்றன. ஆயிரக்கணக்கில் தாய்மார்களும் குழந்தைகளும் விரைவில் இறந்துவிடுவதால் சமூக, பொருளாதார பிரச்சினைகள் தோன்றுகின்றன. மனித வர்க்கத்தில் இவ்வளவு பேர்கள் இறப்பது நியாயமில்லை. இதைப் பார்க்கும்போது பிறக் காமல் இருப்பது நல்லது என கிரேக்க அறிஞர் ஒருவர் கூறி யுள்ளார். அப்படிப் பிறந்தால் விரைவில் இறப்பது அதைவிட நல்லது. ஆகவே இப்படிப்பட்ட பிரச்சினைக்கு பிறப்புக்கட்டுப்பாடு ஒன்றுதான் வழியாகும். அமெரிக்காவிலும், ஐரோப்பிய நாடுகளி லும் பிறப்புக் கட்டுப்பாடு பல்வேறு காரணங்களுக்காக பின்பற்றப் படுகின்றன. சிறிய குடும்பத்தை வைத்து குழந்தைகளுக்கு வேண்டிய வசதிகளை உயர்த்தவும், தாய்மார்களின் உடல்நலத் தைப் பாதுகாக்கவும்; சமூக முன்னேற்றத்தை விரும்பியும், மேலும் வாழ்க்கையை அனுபவிக்கவும், அதிகக் குழந்தைகள் இல்லாமல் சுமையைக் குறைத்து, ஓய்வுக்காகவும், குடும்பத்தின் நன்மையைக்

கருதியும் குடும்பத்தின் எண்ணிக்கையைக் குறைத்திடல் வேண்டும். குறிப்பாக மேல்நாடுகளில் பிறப்புக் கட்டுப்பாடு தாய்மார்கள், குழந்தைகளின் ஆரோக்கியத்திற்கும் ஒரு சாதனமாக விளங்குகிறது. அதே நேரத்தில் மக்களின் அழுத்தத்தையும் குறைக்கிறது. போர்களுக்குரிய முக்கிய காரணங்களில் ஒன்ருன மக்கள் தொகையைத் தடுத்துக் குறைக்கிறது. எல்லாவற்றிக்கும் மேல் அடிப்படை மனித உரிமைக்குப் பாதுகாப்பு அளிப்பதற்குச் சிறந்த சாதனமாகக் குடும்பக் கட்டுப்பாடு விளங்குகிறது. உரிமை என்ருல் தாய்மார்களுக்குரிய உரிமை, எத்தனைக் குழந்தைகளைப் பெற்றெடுப்பது, அவற்றை எப்போது பெற்றெடுப்பது என்று தாய்மார்களின் உரிமை தீர்மானிக்கப்படுகிறது. குழந்தைகள் பிறப்பது இனி சந்தர்ப்பத்திருல் அல்ல; தேர்ந்தெடுத்தலிஞலாகும். அசம்பாவிதத்திருல் அல்ல; திட்டத்திருல்தான் என்ற கொள்கை மேல் நாடுகளில் நாகரீகத்தின் வளர்ச்சியின் முக்கியப் பங்காக உள்ளது. இந்தியாவிலும் அதைப்போல் செயல்படுத்த முடியும். இன்று இந்தியாவில் எல்லோரும் இந்தக் கொள்கையை ஏற்றுக் கொண்டார்கள். 1935ஆம் ஆண்டில் திட்டக் கமிட்டி, தேசியத் திட்டக் கமிஷன் ஒன்றை நேருவின் தலைமையில் ஏற்படுத்தியது. சமூக நலங்களை முன்னிட்டும், குடும்ப சந்தோஷங்களை முன்னிட்டும் குடும்பக் கட்டுப்பாடு மிக அவசியமாகும்.

இந்தக் கொள்கையை அரசாங்கமும் ஏற்றுச் செயல்படுத்த வேண்டும். அதற்கான இந்த முறையைப்பற்றி அறிவுறுத்த வேண்டும். மலிவாகவும், பாதுகாப்பு உள்ளதாகவும் உள்ள குடும்பக் கட்டுப்பாடு முறைகளைச் செயல்படுத்தல் வேண்டும். 1950ஆம் ஆண்டில் திட்டக் கமிஷன் நேருவின் தலைமையில் ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டியது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்தே குடும்பக் கட்டுப்பாடு ஒரு சிறந்த அம்சமாக உள்ளது. ஒவ்வொரு திட்டக்காலத்திலும் ஏராளமான பணம் இதற்குச் செலவிடப்பட்டது. வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு வளரும் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த வேண்டும். அதிகமாக மக்கள் தொகை வளர்வதால் வாழ்க்கைத்தரம் குறைகிறது. அத்துடன் தலா வருமானமும் குறைகிறது. திட்டக் கமிஷன் இதற்குச் சாதகமாக மக்களிடையே உணர்ச்சிகளைத் தூண்டுதல் வேண்டும். எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய, தொல்லைகள் இல்லாத, எளிய, மலிவான, திறமையான குடும்பக் கட்டுப்பாடு முறைகளை அளித்திடல்வேண்டும். அதற்காக மக்களின் நோக்கங்கள், எண்ணங்கள் எந்த அளவிற்குக் குடும்பங்களின் அளவையும், நுட்ப முறையையும் பாதிக்கின்றன? எவ்வாறு மக்களுக்கு இதைத் தெரிவிப்பது? மருத்துவ, நுட்ப ஆராய்ச்சி முறைகளைப் பின்பற்றுதல் வேண்டும்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவில் அதிகமான மக்கள்தொகையா, குறைவான மக்கள்தொகையா? என்ற பிரச்சினை தோன்றியது. சில ஆண்டுகளுக்கு முன் குடும்பக்கட்டுப் பாடு நல்லதா, கெட்டதா? என்ற பிரச்சினை தோன்றியது. ஆனால் இன்று குடும்பக் கட்டுப்பாடு வேண்டுமா, வேண்டாமா? என்பதைப்பற்றி அல்ல. எந்த முறையை மக்கள் ஏற்றுக்கொள்வார்கள்? பல்வேறு மக்களை எவ்வாறு திருப்தி செய்ய முடியும்? கிராம மக்களிடையே எவ்வாறு இதை அறிமுகப்படுத்தமுடியும் என்பதுதான் பிரச்சினை. நம் தேசத்தில் இப்போது பெரிய மாற்றம் ஏற்பட்டு வருகிறது. குறிப்பாக, தாய்மார்கள் திட்டமிட்டக் குடும்பத்தைப் பெரிதும் ஆதரிக்கிறார்கள். 1951 ஆம் ஆண்டில் உலகச் சுகாதாரச் சங்கத்தின் அமைப்பினிடம் இந்திய அரசாங்கம் திட்டமிட்ட குடும்ப நிபுணர்களை இந்தியாவிற்கு அனுப்பிவைக்குமாறு வேண்டிக் கொண்டது. பெரிய அளவில் குடும்பக் கட்டுப்பாடு வெற்றிபெற வேண்டுமானால் எந்தச் சமயத்தில் குடும்பக் கட்டுப்பாடு செய்துகொள்வது நலமாகும்? எந்த முறை எளியது; தொல்லைகள் இல்லாதது? எது சுகமான அல்லது இயற்கையான காலம்? என்பதையும் அறிந்து கொள்வதற்காக அந்த நிபுணர்கள் அழைக்கப்பட்டார்கள். இதே கருத்தை அப்போது சுகாதார மந்திரியாக இருந்த திருமதி இராஜ குமாரி அமிர்தகௌரி ஆதரித்தார்கள், இப்போதுள்ள சமூக, பொருளாதார நிலைமைகளுக்கு ஏற்றவாறு இயற்கையான முறை நம்முடைய பழக்கவழக்கங்களுக்கு முரண்பட்டுப் போகாது. நாம் கொண்டு வரக்கூடிய முறையானது அதிக மக்களின் ஆதரவைப் பெற்று, குறைவான மக்களின் எதிர்ப்போடு இருந்திடல் வேண்டும், கிராமப்புறங்களில் இந்தமுறை எந்தவிதமான செலவையும் அதிகரிக்காமல் மக்களுக்கு நன்மை பயக்கவேண்டும்.

அதே நேரத்தில் அதிகமான கிராம மக்கள் பிடிவாதம், வசதியற்ற மக்கள் இவர்களுடைய நிலைமைகளையும் ஆராயவேண்டும். ஆகவே திட்டக்கமிஷன் இந்த முறையைச் செயல்படுத்த வேண்டும் என்றால் கிராமங்களில் வாழும் மக்களிடையே இயற்கையான முறையை ஒத்துக்கொள்ள அறிவுறுத்தல் வேண்டும். குடும்பங்களின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்துவதற்கு சிறப்பான பயன்தரக்கூடிய முறையைப் பின்பற்ற வேண்டும். அரசாங்கமும் இதற்கான விளம்பரத்தை அதிகப்படுத்த வேண்டும். இதற்காக ஏராளமான செலவையும் செய்து வந்துள்ளது. அதே நேரத்தில் தன்னைத்தானே கட்டுப்படுத்தியும், ஒழுக்கக் கட்டுப்பாடுகளை மதித்தும், குடும்பக்கட்டுப்பாட்டுமுறைக்கு இணையாக முழு அளவில் செயல்படுத்தினால் நல்ல நன்மைகளை அடையமுடியும்.

இந்த முறை எல்லா மக்களுக்கும் பயன்படுத்தப்பட்டால் போது மான பயன்கள் கிடைக்குமா, கிடைக்காதா? என்பதை அறியுமுன் உண்மையான பரிசோதனைகளைச் செய்து அறிந்துகொள்ள வேண்டும். ஆராய்ச்சி, பரிசோதனை ஒருமுறை செய்துபார்ப்பதை விட பலமுறைகள் செய்துபார்த்து எந்த முறை சிறந்தது என்பதைப் பார்க்கவேண்டும். குடும்பக் கட்டுப்பாடு முறைகளைத் தவிர வேறு முறைகளைப் பின்பற்ற இந்தியா விரும்பவில்லையென உலகச் சுகாதார நிலையத்திற்கு அறிவித்தது. 1951ஆம் ஆண்டில் மிகவும் புகழ்பெற்ற குடும்பக் கட்டுப்பாடு நிபுணர் டாக்டர் ஆப்ர காம் ஸ்டோன் அவர்கள் அமெரிக்காவிலிருந்து ட்டமிட்டக் குடும் பத்தின் அமைப்பின் அடிப்படையில் இந்தியாவுக்கு வந்தார். இந்த நிபுணர் இந்திய அரசாங்கத்திற்கு ஐந்து நிலையங்களை டில்லி, மைசூர், மே. வங்காளம் மாநிலங்களில் நிறுவுவதற்கு உதவினர். மருத்துவ ஆராய்ச்சி படிப்புக்கும் எவ்வாறு இந்த இணைப்பு முறைகளைச் செயல்படுத்துவது என்பதையும் விளக் கினர். ஆகவே பல்வேறு ஆராய்ச்சியின் முடிவாகக் குடும்பக்கட்டுப் பாடு முறையானது பிறப்புக் கட்டுப்பாடு செய்வதற்குச் சிறந்தது, திறமையானது, பொருத்தமானது என அறிந்தார்கள். இந்தியா முதல் நாடாக மக்கள்தொகைக் கட்டுப்பாட்டுக் கொள்கையைச் சட்டபூர்வமாக அறிவித்தது. ஆனால் ஜப்பானில் சிசுகுலைத்தல் ஒரு கட்டம் முன்னேறியுள்ளது. ஆகவே மக்கள்தொகையைக் கட்டுப்படுத்துவதற்குக் குடும்பக் கட்டுப்பாடு சிறந்தது என பல்வேறு அம்சங்களில் நாம் இதுவரை ஆராய்ந்தோம்.

# 31. தேசிய மக்கள்தொகைக் கொள்கை

ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் போன்ற நாடுகள் ஆதி நாட்களில் மக்கள்தொகையை அதிகரிப்பதற்கும், வளர்ப்பதற்கும் பல்வேறு முறைகளைக் கையாண்டன. அதேசமயத்தில் அதன் தரத்தையும் முன்னேற்றப் பலமுறைகள் மேற்கொள்ளப்பட்டன. திருமணங்களைத் துரிதப்படுத்தல், கருத்தடைச் சாதனங்களைக் குறைத்தல், சிசு கொலைத்தலுக்குத்தடை, பெரிய குடும்பங்களை உற்சாகப்படுத்தல், மாகாணங்களுக்கு நிதி உதவி அளித்தல், கல்யாணம் ஆகாதவர்களுக்கு வரி போடுதல், அதிகமாகக் குழந்தைகளைப் பெற்றெடுக்கும் தாய்மார்களுக்குத் தங்கப் பதக்கம் அளித்தல் போன்ற பல்வேறு முறைகளையும், வழிகளையும் மக்கள் தொகையை அதிகரிப்பதற்குக் கையாண்டார்கள். ரஷ்யா, பிரான்ஸ், பெல்ஜியம், சுவீடன் போன்ற நாடுகளும் பல்வேறு முறைகளைப் பின்பற்றின. மக்களின் எண்ணிக்கையை நிலையாகச் செய்யவும், தரத்தை மேம்படுத்தவும் சமூகநலப் பாதுகாப்புத்திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. 1945ஆம் ஆண்டில் பிரான்ஸ் தேசத்தில் ஜெனரல் டி கால் அவர்கள் 8 பேர்கள் கொண்ட கமிஷன் ஒன்றை ஏற்படுத்தினார்கள். மக்கள் தொகைக் கொள்கையைத் தயாரிப்பதற்கும், அடுத்த 10 ஆண்டில் 12 மில்லியன் குழந்தைகள் பிறந்தால் அதை எவ்வாறு பாதுகாப்பது என்ற பிரச்சினைகளை ஆராய்ந்து தகுந்த முடிவுகளை அறிவிக்கும்படி அந்தக் கமிஷனைக் கேட்டுக்கொள்ளப்பட்டது.

இறப்பு விகிதம் பிறப்பு விகிதத்தைவிட அதிகமாக இருந்தது. அதற்காகப் பல்வேறு சமூகநலத்திட்டங்களை மேற்கொண்டும், தாய்மார்களுக்குப் பொருளாதார உதவி அளித்தும், பெரிய குடும்பங்களுக்குச் சகல சலுகைகளும் அளித்தும் குறைந்துவரும் பிறப்பு விகிதத்தை மாற்றி அமைத்தார்கள். அமெரிக்காவிலும் மக்கள் தொகையின் எண்ணிக்கை தரத்தை உயர்த்துவதற்குப் பெரும் தடையாக இருந்தது. அதற்காக நல்லதொரு மக்கள்தொகைக்

கொள்கையை உருவாக்க முயன்றனர்கள். இங்கிலாந்து மக்கள் தொகை வளர்வதற்கு வேண்டிய கொள்கையைப் பின்பற்றியது. அதே நேரத்தில் இருக்கக்கூடிய மக்கள்தொகை குறையாமலும் பார்த்துக்கொண்டார்கள். இங்கிலாந்து, வேல்ஸ் ஆகியவற்றின் தலைமைப் பதிவாளர் அவர்கள் தெரிவிப்பது யாதெனில் 1940ஆம் ஆண்டில் மக்கள்தொகையைப்பற்றி புள்ளி ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. ஆண்டு ஒன்றுக்கு 130,000 பிறப்புக்களை அதிகரிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. கல்யாணம் செய்து கொள்ளும்படி உற்சாகப்படுத்தியும், பிறப்பு விகிதங்களைத் துரிதப்படுத்தியும், தாராளமாகத் திருமணங்களை மேற்கொள்ளும் படியும், திருமண வயதைக் குறைத்தார்கள். ராயல்கமிஷன் மக்கள் தொகையின் அறிக்கை ஒன்றும் வெளியிட்டது. குழந்தைகளின் பிறப்பு விகிதத்தை 2·2 சதவிகிதம் முதல்2·4 சதவிகிதமாக உயர்த்தியது. அதே நேரத்தில் அவர்கள் குடும்பக் கட்டுப்பாட்டைத் தடை செய்யவுமில்லை. குறைவான எண்ணிக்கை வைத்திருக்கும் பெற்றோர்களை நிர்ப்பந்தம் செய்யவில்லை. குழந்தைகள் அதிகரிப்பினால் செலவு அதிகரிக்கும். நல்ல வாழ்க்கைத்தரத்தை நிர்வகிக்க முடியாது என நினைக்கும் பெற்றோர்களுக்குப் பூரண சுதந்திரம் கொடுக்கப்பட்டது. குறைவாகக் குழந்தைகளை வைத்திருந்தால் அதிகமாகக் குழந்தைகளுக்குச் செலவிடலாம், ஆரோக்கியமாக வளர்க்கலாம். வாழ்க்கைத்தரத்தையும் ஒரேமாதிரியாக நிர்வகிக்கலாம், அதேநேரத்தில் ஆரம்பக்காலத்தில் குழந்தைகளுக்கு நல்வாழ்வு அளிக்கமுடியும் என்று பெற்றோர்கள் உணர்ந்தார்கள். மேலும் குழந்தைகளுக்குச் சிறந்த கல்வி தகுந்த சொத்தாகக் கருதப்பட்டது. பெற்றோர்கள் குழந்தைகளை நல்லமுறையில் வளர்த்து சிறந்த கல்வியும்அளித்திட்டார்கள். குடும்பக் கட்டுப்பாடு கமிஷனும் குடும்பக் கட்டுப்பாடு சாதனங்களை உபயோகிப்பதில் தவறு ஒன்றுமில்லை எனக்கூறியது. குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கொள்ள, தங்களுக்குக் கட்டுப்பாடு விதிமுறைகள் இல்லையென்றால் நல்வாழ்வு கிடையாது என்பதை உணர்ந்தார்கள். இந்தியாவில் ஜனநாயக முறையில் மக்கள்தொகைக் கொள்கையை உருவாக்கவேண்டும். இந்தியாவில் மக்கள்தொகைப் பிரச்சினைக்கு முக்கியமானவை அதிகமான பிறப்பு, அதிகமான இறப்பு ஆகியவையாகும். அதனால் இந்தியாவில் ஏனைய நாடுகளைவிடக் குறைவான ஆயுட்காலம் உள்ளது. பெரும்பான்மையான மக்கள் பரிதாபமான வாழ்க்கைத்தரத்தைப் பெற்றுள்ளார்கள். இங்கு ஏராளமான மக்கள் வளம் வீணடிக்கப்படுகிறது. சமூக, பொருளாதார, மத மாற்றங்கள் தேவைப்படுகின்றன. காலத்திற்கு ஏற்றாற்போல் சில மாற்றங்கள் தேவைப்படுகின்றன. பொருளாதாரத்திற்காக ஐந்தாண்டுத் திட்டங்களைச் செயல்படுத்தி அவற்றின் மூலமாகத் தொழில்,

விவசாயம், கல்வி, போக்குவரத்து இவற்றை அதிகரித்தல் வேண்டும். அதே நேரத்தில் குடும்ப நலத்திட்டங்களையும் ஒன்றாகச் செயல்படுத்தல்வேண்டும். ஆகவே எல்லாப் புள்ளிவிவரங்களையும் ஒன்றாகச் சேர்த்து சரிவரக் கணித்திடல் வேண்டும்.

மக்கள் கணிப்புத்துறை வாஷிங்டனில் உள்ளதைப்போல் நம் நாட்டிலும் இத்துறையை நிரந்தரமாக அமைத்தல்வேண்டும். 1941ஆம் ஆண்டில் மக்கள்தொகைக் கமிஷனர் இந்தத் துறை தேவையற்றது; மேலும் நிரந்தரமாகத் தேவையுமில்லை எனக் கூறினர். இந்தியாவில் இதனால் புள்ளிவிவரங்கள் கோவையாக, தொடர்ச்சியாகக் கிடைக்காமல் போகின்றன. தொடர்பு இருந்தால்தான் 10ஆண்டுகளுக்கு ஒருமுறை யாகிலும் ஒப்பிட முடியும். மேலும், சென்ற கணிப்பில் உள்ள தவறுகளை நிவர்த்தி செய்யமுடியும். அதனால் என்ன மாற்றங்களைச் செய்யலாம் என்பதும் புலப்படும். அவ்வப்போது கணித்து தொடர்பு இல்லாமல் வைப்பது நல்லதல்ல. இந்தியாவில் 10ஆண்டுகளுக்கு ஒருமுறை கணக்கெடுத்தாலும் எந்தவிதமான கவனிப்பும் கண் காணிப்பும் இல்லாமல் அவை மறைந்து விடுகின்றன.

எனவே கணக்கெடுக்கும் துறையை நிரந்தரமாக்கவேண்டும். மாகாணங்கள்தோறும் கிளை அலுவலகங்களை ஏற்படுத்தல் வேண்டும். அவற்றுக்கென்று தனியான அதிகாரங்கள் கொடுக்கப் படவேண்டும். இந்தப் புள்ளிவிவரங்களைச் சரியான முறைப்படி ஒன்றுபடுத்தல்வேண்டும். சில பிரத்தியேகமான புள்ளி விவரங்களை கணிக்க, சிற்சில இடங்களில் கணிப்பதற்கும் தனியார் கம்பெனிகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள், தொழில் நிலையங்கள், பல்கலைக்கழகங்கள், சமூகச் சங்கங்கள் இவையாவும் பொருளாதார ஆய்வுக்குப் பெரிதும் பயன்படும். பெரும்பாலும் இந்தியப் பொருளாதாரப் பிரச்சினைகள் இந்தப் புள்ளிவிவரங்களைப் பொறுத் துத்தான் உள்ளன. சரியான புள்ளிவிவரங்கள் கிடைக்காத காரணத்தால் பிரச்சினைகள் யாவும் பொருளாதார அடிப்படையில் அமையாமல் அரசியல் அடிப்படையில் அமைகின்றன. ஆகவே தான் புள்ளிவிவரங்களைச் சேகரிக்கவும், ஒழுங்குபடுத்தவும், ஆராய்வதற்கும் திறமையான பயிற்சிபெற்ற ஆட்களை நியமித்தல் வேண்டும். இந்தத்துறைக்குப் பணிபுரிய விரும்பும் ஆட்களுக்கு நல்ல பயிற்சி அளிப்பதுடன், அவர்களுடைய பட்டப்படிப்பு பாடத்தில் புள்ளியியல் சிறப்பான பாடமாக அமைந்திருந்தால் மிகவும் நல்லதாகும்.

இந்தியாவிற்கு எது மிகவும் சிறப்பானது? இராணுவத்திற்கும் தேவையான, தொழில்களுக்கும் விவசாயத்திற்கும் தேவையான

மக்கள் இவற்றை மனதில்கொண்டு உத்தம மக்கள்தொகையை நிர்ணயித்தல் வேண்டும். ஆகவேதான் எண்ணிக்கையின் அளவு பெரிய பிரச்சினையாக உள்ளது. மேல்நாடுகளில் மக்கள்தொகை நிரந்தரமாக இருப்பதுடன் குறையவும் ஆரம்பித்துவிட்டபடியால் அங்கு பிறப்பு விகிதத்தை அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. ஆனுல் இந்தியாவில் பிறப்பு விகிதத்தைக்குறைக்க வேண்டியுள்ளது. எனவே நாம் நிர்ணயிக்கக்கூடிய உத்தம மக்கள்தொகையின் எண்ணிக்கை, எதிரிகள் வந்து நம் நாட்டைத் தாக்கினுல் அதை எதிர்ப்பதற்கு நம்மிடம் தேவையான அளவுக்கு மக்கள்தொகை இருக்கவேண்டும். உத்தம மக்கள்தொகை எது என்ருல் வாழ்க்கைத்தரத்தின் உச்சகட்டம், அரசியல் நிலை யாக்கம், பொருளாதாரப் பாதுகாப்பு, போதிய அளவு சுதந்திரம், கலாச்சார மதிப்புக்களை அறிதல், தகுந்த ஓய்வு, உச்ச வருமானம் இவை இருக்கக்கூடிய, நிலவக்கூடிய நிலைதான். எந்த நாடும் அதிக மக்கள்தொகை குவைான மக்கள்தொகை என்று வருத்தப் படவேண்டியதில்லை. ஆகவே மக்களின் எண்ணிக்கையைத் தேவை, அளிப்பு இவற்றின் சமநிலைக்குக் கொண்டுவருதல் வேண்டும். உற்பத்தி, மறுஉற்பத்தி பிரச்சினை எப்போது தோன்றும் என்ருல் இருக்கக்கூடிய மக்கள்தொகையும், அவர்களுக்குப் போது மான வளங்களும் இல்லாவிட்டால் அப்போதுதான் எண்ணிக் கையின் அளவு அவசியமாகத் தோன்றும். அதேநேரத்தில் அவை மக்களின்தரத்திற்கும் அடிப்படையாகவும், வழியாகவும் விளங்கு கிறது. உத்தம மக்கள்தொகையை எவ்வாறு கணிப்பது? இந்தியாவில் அதிகமான அல்லது குறைவான மக்கள்தொகை இருந்தாலும் கவலைப்படத் தேவையில்லை. ஆனுல் அவர்கள் ஆரோக்கியமாகவும், அவர்களுக்குப் போதிய உணவு உடையும், வேலை வாய்ப்புக்களும், ஓய்வும் இருந்திட்டால் யாரும் பயப்பட வேண்டியதில்லை. மக்களின் எண்ணிக்கையை உணவின் தேவைக்கு ஏற்ப நிர்ணயிக்கின்ருேம். ஆனுல் உணவில் இந்தியா தன்னிறைவு அடையவில்லை; சென்ற யுத்தத்தின் காரணமாக உணவின் நிலைமை பெரிதும் பாதிக்கப்பட்டது. பாகிஸ்தான் பிரிவினுல் உணவு தானியம் விளையும் நிலங்களை இந்தியா இழந்து விட்டது. மேலும் வடமேற்கு, வடகிழக்குப் பகுதிகளில் 26சத விகிதம் அரிசிவிளையும் பகுதியும், 24·95 சதவிகிதம் கோதுமை விளையும் பகுதியும், 72·9 சதவிகிதம் சணல் விளையும் பகுதியும், 13·02 சதவிகிதம் பருத்திவிளையும் பகுதியும் மொத்தத்தில் 33·28 சதவிகித நீர்ப்பாசன வசதிகள் உள்ள நிலங் கள் பாகிஸ்தானுக்குப் போய்ச் சேர்ந்தன. 1951 ஆம் ஆண்டு முதல் இந்தியாவில் உணவு உற்பத்தி அதிகம் இல்லை. ஆண்டு தோறும் 4 மில்லியன் உணவு தானியங்கள் பற்ருக்குறை இருந்து

வந்தது. 1949ஆம் ஆண்டில் 3·7 மில்லியன் டன்கள் உணவு தானியங்கள் இறக்குமதி செய்தும், கொள்முதல் செய்தும், கட்டுப்பாடு, ரேஷன் போன்ற பலமுறைகளைப் பின்பற்றியும் உணவு பிரச்சினையைச் சமாளித்தது. குறைவான உற்பத்தியிருந்தால் குறைவான நுகர்வு வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கான திட்டத்தை மனதில் கொண்டு உணவு உற்பத்தியைத் துரிதப் படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆண்டு ஒன்றுக்கு உணவு உற்பத்தியை இரட்டிப்பாக்க வேண்டும். இறக்குமதியோடு இந்தியாவிலுள்ள மக்களுக்குக் குறைவான அளவில்தான் உணவு அளிக்க முடியும் என்றால், எப்படி இறக்குமதியை நிறுத்துவது, எப்படி நுகர்வை அதிகப்படுத்துவது? ஆண்டுதோறும் நான்கு மில்லியன் மக்கள் அதிகரித்துக் கொண்டே சென்றால் எப்படி வேண்டிய அளவுக்கு உணவு அளிக்க முடியும்? ஆகவே உணவு உற்பத்தியை ஆண்டு ஒன்றுக்கு 5 மில்லியன் டன்கள் அதிகரித்தால் தான் இறக்குமதியை நிறுத்த முடியும். எனவே ஒன்று உணவை அதிகரிக்க வேண்டும் அல்லது உணவின் தேவையைக் குறைக்க வேண்டும். இதுவரை அரசாங்கம் உணவின் உற்பத்தியைப் பெருக்குவதற்குவேண்டிய முயற்சிகளை மேற்கொண்டது. அதே நேரத்தில் குடும்பங்களின் அளவுகளைச் சிறியதாக்கிக் கொள்ளவும் உற்சாகம் அளித்தது. மக்களின் தரத்தை ஆராய்ந்தால் தலா குழந்தைக்கு வருமானம் தேசியத் தலாவருமானத்தைவிடக் குறைவாகும். வாழ்க்கைத்தரமும் குறைவு. வீட்டுவசதிகள், சுகாதார வசதிகளும் அதைவிட மோசம். மக்களின் தரத்தை உயர்த்துவதற்குச் சரியான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

மக்கள்தொகைக் கமிஷன் ஒன்றை ஏற்படுத்தி எல்லாவிதமான பிரச்சினைகளையும் ஆராய்ந்து தரத்தை உயர்த்த வேண்டும். மாகாணங்களிலும் மக்கள்தொகைக் கமிஷன்களை ஏற்படுத்த வேண்டும். அந்தக் கமிஷன்களில் மக்கள்தொகைக் கமிஷனர்கள், சமூகச் சீர்திருத்தவாதிகள், பொருளாதார நிபுணர்கள், புள்ளிவிவர அதிகாரிகள், மக்கள்தொகை நிபுணர்கள், மருத்துவ அதிகாரிகள் ஆகியோர் அங்கத்தினர்களாக நியமிக்கப்பெற வேண்டும். இவர்கள் மக்கள்தொகையின் எல்லா அம்சங்களையும் நன்முறையில் ஆராய்ந்து மக்களின் தரத்தை உயர்த்துவதற்கு நல்ல யோசனைகளை அறிவித்தல் வேண்டும். ஸ்வீடன், இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகளில் மக்கள்தொகைக் கமிஷன்கள் ஏற்படுத்தி நல்ல கொள்கைகளை உருவாக்கியுள்ளார்கள். மக்கள்தொகைக்காக மத்திய அரசாங்கத்தில் தனித்துறையை ஏற்படுத்தவேண்டும். இத்துடன் பொதுநலத் துறையையும் இணைத்திடல்வேண்டும். அப்படிப்பட்ட இலாக்கா

வின்கீழ் இந்த நான்கு முக்கிய அலுவலகங்களையும் அமைத்திடல் வேண்டும்.

(1) **திருமணத்திற்குரிய நிலையம்:** இந்தியா முழுவதும் எல்லோருக்கும் பொதுவான திருமணச் சட்டத்தை உருவாக்க வேண்டும். இந்தியா பல்வேறு மதங்களைக் கொண்டது. ஆகவே பொதுவான சட்டம் இயற்றுவது கடினம். மொழி, மதங்களில் வேற்றுமைகள், வாரிசு உரிமையிலும் பல்வேறு மாற்றங்கள். எனவே பொதுச்சட்டம் ஏற்படுத்துவது என்பது சற்றுக் கடின மானதாகும். இந்தியாவில் மதச்சார்பற்ற பொதுவான சட்டங்கள், திருமணம், விவாகரத்து, வாரிசு எல்லா மதத்தினருக்கும், மாகாணத்திற்கும், மொழியினருக்கும் பொதுவாக அமைந்திடல் வேண்டும்.

(2) **இளமையில் நடக்கும் திருமணக் கட்டுப்பாடு சட்டம்:** 1920 ஆம் ஆண்டுக்குப் பின்னர், அகில இந்தியப்போராட்டத்தின் காரணமாக சாரதா சட்டம் 1930ஆம் ஆண்டில் ஏற்படுத்தப் பட்டது. இது குழந்தைகளின் திருமணத்தைக் கட்டுப்படுத்தும் சட்டமாகும். அதாவது பெண்கள் 14 வயதுக்கும், ஆண்கள் 18 வயதுக்கும் குறைவாக இருக்கும்போது திருமணம் செய்யப் பட்டால் தண்டிக்கப்படுவார்கள். மைசூர், திருவாங்கூர், பரோடா போன்ற சில மாகாணங்கள் இச்சட்டத்தை அமுலாக்கின. திருமணத்தைத் தள்ளிவைத்தல் பிறப்புவிகிதத்தைக் குறைக்க ஒரு காரணமாகும். மேலும் கல்வி, பயிற்சி, வளர்ந்த வயதில் திருமணம் இவற்றினால் பிறப்பு விகிதத்தைக் குறைப்பதுடன் பெண்கள் நல்ல மனைவியராகவும், தாய்மார்களாகவும், குடி மக்களாகவும் செயல்படமுடியும். இப்போது இருக்கும் நிலையில் திருமணத்தைத் தள்ளிப்போடுவது எளிதல்ல. இந்தியாவில் திருமணத்தை முடித்துகொள்ளுதல் புனிதத் தன்மையாகக் கருதுகிறார்கள்.

(3) திருமணம் செய்துகொள்ளுமுன் மணமக்களை மருத்து வத் தகுதி நற்சான்றிதழ்களைக் கொடுக்கும்படி நிர்ப்பந்தம் செய்தல் வேண்டும். தம்பதிகள் எந்தவிதமான நோயும் இல்லாதவர்கள் என மருத்துவர்களிடமிருந்து நற்சான்றிதழ்கள் கொடுத்தல் வேண்டும் எனத் துருக்கியர்களின் சட்டம் பொதுச்சுகாதாரம் பிரிவு 122-ன்படி நிர்ப்பந்தம் செய்யப்படுகிறார்கள். ஆகவே திருமணம் செய்துகொள்ளும் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் மருத்துவ பரிசோதனை செய்துகொள்ளுதல் வேண்டும். அப்படித் தம்பதிகள் ஏதாகிலும் நோயினால் பாதிக்கப்பட்டிருந்தால்

திருமணத்திற்கு அனுமதி கிடையாது. அந்த வியாதியைக் குணப்படுத்திக்கொள்ள சிகிச்சையை மேற்கொள்ளவேண்டும்.

(4) இந்தியாவில் சமூக, பொருளாதார, சுகாதாரத் திட்டங்களைச் செயல்படுத்தும்போது குடும்பக் கட்டுப்பாடு முறைகளையும் ஒன்றாக இணைத்துச் செயல்படுத்தவேண்டும். கருத்தடைச்சாதனங்களைப்பற்றி கிராமப் பெண்களுக்கு அறிவுறுத்தல் வேண்டும். 1930ஆம் ஆண்டில் இரண்டே கிளினிக் இருந்தன. 1940ஆம் ஆண்டில் 21 நிலையங்கள் குடும்பக் கட்டுப்பாட்டிற்காக ஏற்படுத்தப்பட்டன. பின்னர் 40-லிருந்து 60ஆக உயர்ந்தது. அமெரிக்காவில் மக்கள்தொகை இந்தியாவின் மக்கள்தொகையில் மூன்றில் ஒரு பங்கு. ஆனால் அங்கு 650 கிளினிக் (மருத்துவ நிலையங்கள்) உள்ளன. ஒவ்வொரு குடும்பத்திற்கும் குடும்ப மருத்துவர்களும் உள்ளனர். ஆனால் இந்தியாவில் கிராம மக்களுக்குப் போதிய மருத்துவ வசதிகள், மருந்து வசதிகள், மருத்துவ ஆலோசனைகள் கிடைப்பதில்லை. குறிப்பாக தாய்மார்களுக்கு மருத்துவ வசதிகள் போதாது. பிரசவத்திற்கு முன்னும் பின்னும் தாய்மார்களுக்கும், குழந்தைகளுக்கும் மருத்துவ வசதிகள் போதாது. தாய், சேய் நலவிடுதிகள், மகப்பேறு நிலையங்கள் பல ஏற்படுத்தல் வேண்டும். உடலை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்கும் இலவசமாக ஆலோசனை, மருத்துவப் பரிசோதனை அளித்திடல் வேண்டும். பற்களைச் சுத்தமாக வைத்தல், போஷிப்பான சத்துள்ள உணவு குழந்தைகளுக்கும் தாய்மார்களுக்கும் அளித்தல், கல்வி வசதிகள் அளித்தல், பயிற்சி பெற்றத் தாதிகள் போன்ற சகல முறைகளையும் வசதிகளையும் கிராம மக்களுக்கு அளித்திடல் வேண்டும். ஸ்வீடன் நாட்டில் தாய்மார்களுக்கு சொந்த வீட்டில் அல்லது மகப்பேறு நிலையத்தில் பிரசவம் நடந்தால் இலவசமாக கவனிக்கப்படும். அவர்கள் திருமணம் ஆகியவர்களாகவோ ஆகாதவர்களாகவோ இருந்தாலும் சொந்த வருமானத்தைப் பொருட்படுத்தாமல் எல்லாத் தாய்மார்களுக்கும் இலவசமாக யாதொரு கட்டணமும் இன்றி மருத்துவம் செய்யப்படுகின்றன. இனவிருத்தியைக் குறைப்பதற்கு ஆபரேஷன் முறைகளும் பின்பற்றப்படுகின்றன. அமெரிக்காவில் 30 மாகாணங்களில் ஆபரேஷன் செய்துகொள்ளச் சட்டபூர்வமான அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ளன. கலிபோர்னியாவில் சட்டபூர்வமாக ஆபரேஷன் செய்துகொள்ள சென்ற 40 ஆண்டுகளாக வசதி உள்ளது. பெரும்பாலான ஆபரேஷன் விருப்பத்தின்பேரில் நடைபெறுகின்றன. வெவ்வேறு சாதியிலும், வெவ்வேறு மதங்களிலும் திருமணம் முடித்துக்கொள்ளச் சகல உரிமைகளும்

உள்ளன. இந்தியாவில் சாதிகளிடையே, மதத்தினர்களிடையே சண்டை சச்சரவுகளை நீக்கப் பிற சாதிகளில் திருமணத்தை முடித்துக்கொள்ள உற்சாகப்படுத்த வேண்டும். இந்திய நாட்டில் எல்லோரும் ஒரு குலம், ஓர் இனம் என்ற உணர்வு உண்டாக வேண்டும்.

வளர்ச்சியும், சத்தும் உள்ள உணவுத்திட்டங்களை அமுல் படுத்தல்வேண்டும். இந்தியாவில் பலவிதமான நோய்களுக்குக் காரணம் ஊட்டக்குறைவு, சத்துள்ள உணவுக்குறைவுதான் என்பதில் சந்தேகமில்லை. அதிகப்படியான குழந்தைகள், தாய்மார்கள் இறப்புக்குக் காரணம் சத்துள்ள உணவு இல்லாமையாகும். ஒவ்வொரு புதிய குழந்தையும் சத்துள்ள உணவு பற்றுக் குறையினால் அல்லலப்படுகிறது. உதாரணமாக 1940ஆம் ஆண்டில் 1,000 குழந்தைகள் உயிருடன் பிறந்தால் அதில் 155 குழந்தைகள் போஷிப்புக் குறைவால் இறக்கின்றன; ஓராண்டு முடிவதற்குள் 1½ மில்லியன் குழந்தைகள் இறக்கின்றன. மேலும் இதற்கான தாய்ப்பால், தாய்க்குச் சத்துள்ள உணவு இல்லாமையால் அதிக விகிதத்தில் குழந்தைகள் இறக்கின்றன. வைட்டமின் பி-யும் சி-யும் இல்லாமையால் வாதநோய், பெரிபெரி போன்ற வியாதிகளால் அல்லலப்படும் பெற்றோர்கள், குழந்தைகள் ஏராளம். அதன்காரணமாக இறப்பவர்களின் எண்ணிக்கையும் அதிகம். குழந்தைப்பருவம் முடியும்வரையில் அதிகமான இறப்பு விகிதம் இந்தியாவில் உண்டு. இந்தப் பருவத்தில் மற்ற எல்லா நாடுகளிலும் குழந்தைகள் நல்ல திடகாத்திரமாகவும், ஆரோக்கியமாகவும் உள்ளன. பொதுச்சுகாதாரக் கமிஷனரின் அறிக்கையின்படி 1936ஆம் ஆண்டில் குறிப்பிடுவதாவது, மொத்த இறப்பில் 10 வயதுக்கும்கீழ் இறக்கும் குழந்தைகளின் விகிதம் 49 சதவிகிதம்; ஆனால் இங்கிலாந்தில் 12 சதவிகிதமாகும். இந்தப் பருவத்தில். முதல் ஆண்டில் இந்தியாவில் இறப்பது இங்கிலாந்தைப்போல் 3½ மடங்கு அதிகமாகும்; ஒரு வயது முதல் 5 வயதுவரை இறப்பது 5 மடங்கு அதிகமாகும்; 5வயது முதல் 10 வயது வரை மூன்று மடங்குக்கு மேல் உள்ளன. பள்ளிக்குச் செல்லும் முன்னரே ஏராளமான குழந்தைகள் ஊட்டக் குறைவினால் இந்தியாவில் இறக்கிறார்கள். சத்துள்ள உணவு ஆராய்ச்சியின் நிபுணர்கள் கூறுகிறார்கள். இனவிருத்திப் பருவத்தில் பெண்கள், குறிப்பாக 15வயது முதல் 45வயது வரையுள்ள பெண்களின் இறப்பு விகிதம் ஆண்களைவிட அதிகம். அதிலும் குழந்தைகளைப் பெற்றெடுக்கும்போது தாய்மார்கள் அதிகம் இறக்கிறார்கள். பிராந்தியங்களுக்கு ஏற்றவாறு தாய்மார்களின் இறப்பு விகிதம் மாறுபடுகின்றன. உதாரணமாக இந்த விகிதாசாரம் 1,000

பிறப்புக்கு 16 முதல் 24 வரை உள்ளது. அதிலும் எல்லாப் பிராந்தியங்களிலும் ஆராய்ந்துபார்த்தால் தாய்மார்கள் மொத்தத்தில் இறப்பதற்குப் போஷிப்பு இன்மையே சிறப்பான காரணமாகத் தெரிகிறது. இந்த இறப்பில் கால் பாகத்திற்குமேல் நேரடியாக சோகை, ரத்தசோகை சம்பந்தப்பட்ட வியாதிகளால் இறக்கிருர்கள். கர்ப்பிணிகளாக இருக்கும்போது அடிக்கடி உடம்பு கெட்டுப் போதாவலும், ஆகாரத்தில் சத்துள்ள பொருள்களின் குறைவினுலும் சோகை வியாதி ஏற்படுகிறது. ஆகவேதான் இறப்பு தாய்மார்களில் அதிகமாக உள்ளது. அளவிலும், தரத்திலும் உணவு பற்ருக்குறையினுல் இறப்பு விகிதம் வளர்ந்து கொண்டே செல்கிறது. மத்திய, கிழக்கு இந்தியாவில் பெரிபெரி வியாதி அதிகமாக உள்ளது. தென் இந்தியாவில் நிரந்தரமான குருடுக்குக் காரணம் போஷிப்பான உணவு பற்ருக்குறையே ஆகும். உணவில் சத்துக்குறைவினுல் பல்வேறு நோய்கள் இந்தியாவில் தோன்றுகின்றன. 1935 ஆம் ஆண்டில் பொதுச்சுகாதாரக் கமிஷனர் குறிப்பிடுவதாவது: தவருன உணவு முறையினுல் பல்வேறு நோய்கள் தோன்றுகின்றன. மலேரியா, காசநோய், விஷக்காய்ச்சல், கண், பல், காது நோய்கள் தோன்றுகின்றன. குழந்தை தாய் க்ஷேம நல நிலையங்களை ஏற்படுத்தல், கொயினு மருந்துகளின் அளிப்பை அதிகரித்தல், க்ஷயரோக விடுதிகளை அமைத்தல் சானட்டோரியம், தொழுநோய் காலனிகள் ஏற்படுத்தல் போன்ற செயல்களை அரசாங்கம் மேற்கொள்ளவேண்டும். எத்தனை நிலையங்களை ஏற்படுத்தியபோதிலும் இந்த நோய்களுக்கு அடிப்படையான காரணம் யாது என்பதை ஆராய்ந்து, அதைத் தடுப்பதற்குரிய வழிமுறைகளையும், மருந்துவகைகளையும் கண்டு பிடிக்கவேண்டும். ஆரோக்கியத்தை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவருதல் வேண்டும். நல்ல திடகாத்திரமான உடல் நலனில் கவனம் செலுத்தல் வேண்டும். நோய்களை எதிர்க்கும் வகையில் நல்ல உணவு மக்களுக்கு அளித்திடல்வேண்டும். அப்போது திடகாத்திரமாகவும், ஆரோக்கியமாகவும் மக்கள் மாறுவார்கள். அதன்காரணமாகத் திறமை, உற்பத்தி, தரம் போன்றவற்றை அடையமுடியும். பேராசிரியர் J. D. பெர்நால் அவர்கள் பல்வேறு நோய்களுக்கு உலகம் பூராவும் நேரான காரணம் உணவில் இன்றியமையாத பொருள்கள் இல்லாத குறையாகும் என வலியுறுத்தியுள்ளார். பொதுவாக உணவு, வேலை செய்யும் நிலைமைகள் படுமோசமான நிலையில் உள்ள படியால் மக்கள் வாழும் முறைகளினுல் கொல்லப்படுகிருர்கள். சரியான உணவையும், அடிப்படையான வசதிகளையும் அளித்திட்டால் இன்னும் 20 முதல் 30 ஆண்டுகள்வரை மக்கள் உயிர்வாழ முடியும். அதனுல் ஆயுட்காலமும் அதிகரிக்கும்.

ஆகவே நோய்களுக்குப் பல்வேறு சூழ்நிலைகள்தான் காரண மாகும். சத்துள்ள உணவு இல்லாமை, சுகாதாரம் இன்மை, அசுத்தமான சூழ்நிலையில் வாழ்தல் போன்ற பலவாகும். சிறிய சாதாரண மருந்துகளால் இவற்றைக் குணப்படுத்தமுடியும். போதிய மருந்து வசதிகள் கிடைக்காத காரணத்தால் ஏராளமான மக்கள் நோய்களினால் பாதிக்கப்பட்டு இறக்கிறார்கள். 1936ஆம் ஆண்டில் டாக்டர் ஜூலியன் ஹக்சிலி (Dr. Julian Huxley) அவர்கள் அறிவுக்கும் போஷிப்பு உணவுக்கும் உள்ள சம்பந்தத்தை விளக்குகையில், 'பல்வேறு வகுப்புகளில் நல்ல திடகாத்திரமும், அறிவும் மாறுபடுவதற்கு முக்கிய காரணம் போஷிப்புதான்' என வலியுறுத்தியுள்ளார்கள். சமூகச் சூழ் நிலையும் எல்லாவற்றையும்விடச் சிறப்பானது. தலைமுறையாகச் சில வம்சங்களின் குணங்களைப் பெற்றிருப்பதும் காரணமாகும். இந்தப் பிரச்சினைக்கு வழி என்ன? உணவு நிபுணர்கள், சமூகச் சீர்திருத்தவாதிகள் இந்தியாவிலுள்ள வறுமை, ஏழ்மை, அறியாமையையும், குறைவான உற்பத்தியையும் இத்துடன் தொடர்புபடுத்தியுள்ளார்கள். பெரும்பான்மையான மக்கள் ஏழையாக இருப்பதால் அவர்களுக்குப் பாதுகாப்பான உணவு அல்லது சரிவிகித உணவு கிடைப்பதில்லை. அப்படி சிலருக்கு சரிவிகித உணவு அருந்துவதற்கு வாய்ப்பிருந்தாலும் அவர்கள் அதை அருந்துவதில்லை. ஒருவேளை தெரியாமலோ அல்லது மத, சமூகக் காரணங்களுக்காகவோ அருந்துவதில்லை போலும். சாதாரண உணவுப்பொருள்களில், நவதானியங்களில் பருப்பு வகைகளிலும் இன்னமும் தன்னிறைவு அடையவில்லை. சத்துள்ள உணவைச் செம்மைப்படுத்துவதற்கு நிபுணர்கள் நான்கு விதமான கடமைகளை வகுத்துள்ளார்கள்:

1. சராசரி இந்தியனின் வாங்கும்திறனை அதிகரித்தல் வேண்டும். அல்லது சத்துள்ள சரிவிகித உணவு முறையை வருமானத்திற்கு ஏற்றவாறு வகுத்திடல் வேண்டும். 2. வசதி படைத்தவர்களுக்கு சரிவிகித உணவை நல்ல முறையில் அருந்து வதற்கு அதைத் தெளிவுபடுத்தவேண்டும். சத்துள்ள உணவு அருந்தாவிடில் ஏழைக்குமட்டும்தான் நோய்கள் வரும் என்பது தவறாகும். 3. மதம், சமூக முறைகள் நல்ல உணவை அருந்து வதற்குத் தவறான எண்ணங்களைக் கூறிவருகின்றன. இவற்றினை நீக்கவேண்டும். 4. அதிகமாக உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து உணவு விஷயத்தில் தன்னிறைவு அடையவேண்டும்.

குன்னூரில் ஊட்ட உணவு ஆராய்ச்சி நிலையம் டாக்டர் ஐக்ரெட் (W.R. Aykroyd) அவர்கள் பல்வேறு உணவுக்குறைகளை

வகுத்துக்காட்டியுள்ளார். அவையாவும் வைட்டமின் சத்துக்கள் நிரம்பியுள்ளன. இந்திய தானியங்கள், நிலக்கடலை, கீரைவகைகள் இவற்றிலிருந்து சத்துள்ள உணவு தயாரிக்கப்பட்டுள்ளன. நம் உணவில் புரோட்டீன்கள், கார்போ ஹைடிரேட்டுகள், கொழுப்புக்கள், தாது உப்புக்கள், தண்ணீர், வைட்டமின்கள் ஆகிய ஆறுவகை சத்துக்கள் உள்ளன. அரிசியில் கார்போ ஹைடிரேட் அதிகமாயும் புரோட்டின், கொழுப்பு முதலியவை குறைவாகவும் உள்ளன. கார்போஹைடிரேட் பழங்கள், சர்க்கரை, கேழ்வரகு இவற்றில் உள்ளது. புரோட்டீன், கோதுமை, பட்டாணி, முட்டை, பால், மீன், எண்ணெய் முதலியவற்றில் உள்ளது. கொழுப்புவகைகள் மாமிசம், மீன்எண்ணெய், வெண்ணெய், எண்ணெய் முதலியவற்றில் உள்ளன. தாதுப்பொருள்கள் பழங்கள், முட்டை, கீரை, பால் முதலியவற்றில் உள்ளன. அறுவகை உணவையும் கலந்துசாப்பிட்டால் கலப்புஉணவு ஆகும். அரிசி, காய்கறி, நெய், பால், முட்டை, கீரைவகைகள், பழங்கள் முதலியவற்றைக் கலந்து உண்ணவேண்டும். எல்லாவகை உணவுச் சத்துக்களையும் நம் உடலுக்கு வேண்டிய விகிதத்தில் அளிக்கக்கூடிய பலவகை உணவுப்பொருள்கள் தகுந்த அளவில் கலந்த உணவிற்குச் சரிவிகித உணவு என்று பெயர். நடுத்தர உணவைச் சாப்பிடவேண்டுமென்று குன்னூரில் உள்ள ஊட்ட ஆராய்ச்சிசாலை அறிவித்துள்ளது.

| | | |
|---|---|---|
| அரிசி (கைக்குத்தல்) | : | 340 கிராம் |
| கம்பு, கேழ்வரகு, தினை | : | 170 கிராம் |
| பருப்புவகைகள் | : | 85 கிராம் |
| காய்கறிகள் | : | 285 கிராம் |
| கீரைவகைகள் | : | 150 கிராம் |
| நெய், எண்ணெய் | : | 85 கிராம் |
| பழங்கள் | : | 85 கிராம் |
| பால் | : | 300 கிராம் |

மாமிசத்தைச் சாப்பிடுபவர்கள் பருப்பு, நெய், எண்ணெய் இவற்றுக்குப் பதிலாக மாமிசத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். அத்துடன் அரிசி, கீரை, பழங்கள், காய்கறிகள் முதலியவற்றைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். பல்வேறு சோதனைகள் பாதுகாப்பு உணவு இல்லாமல் வெறும் சக்தி தரக்கூடிய உணவுகளை அருந்துகிறார்கள். ஆகவே பாதுகாப்பு உணவை அதிகரித்து

அதிக அளவில் நுகரவேண்டும். பாதுகாப்பு உணவில் பால் மிகவும் சிறந்தது. இது இந்தியாவில் குறைந்த அளவிற்குக் கூட கிடைப்பதில்லை. முதியோர்கள் அதிகமாக புரோட்டின் அடங்கியுள்ள பட்டாணி, கோதுமை, முட்டை, சோயாபின்ஸ், மீன் முதலியவற்றை அருந்தவேண்டும். குறைந்த அளவில் உள்ள பாலைக் குழந்தைகளுக்கும் தாய்மார்களுக்கும்தான் முதலில் கொடுக்கவேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. சைவ உணவு (மரக்கறி உணவு) அருந்துபவர்களுக்குப் பாலினுடைய முக்கியப் பணியை உணர்த்திடவேண்டும். ஒரு சிறிய அளவுக்குப் பாலை உணவுடன் குழந்தைகளுக்கு அளித்தால் அவற்றுக்குப் போதுமான உணவு ஆகிறது. வளர்ச்சியையும், ஆரோக்கியத்தையும் வளர்ப்பதற்கு குழந்தைகளுக்குப் புட்டிப் பால்களைக் கொடுப்பது நலம் ஆகும். டப்பாக்களில் அடைத்த பால் பவுடரைக் குழந்தைகளுக்கு வினியோகம் செய்வதால் ஓர் அளவிற்குச் சரிவிகித உணவை அடையமுடியும். இந்தியாவில் இன்னும் குழந்தைகளுக்கு பால் ஒரு போகப் பொருளாக உள்ளது. இந்திய நாட்டில் எத்தனையோ உபயோகமற்ற மிருகங்கள் உள்ளன. பாகிஸ்தான் பிரிவதற்கு முன்னர் சராசரி (பாலின் நுகர்வு நாள் ஒன்றுக்கு) பால், பால்சம்பந்தப்பட்ட பொருளின் நுகர்வு நாள் ஒன்றுக்கு 6·6 அவுன்ஸ். ஏழைமக்களுக்கு நாள் ஒன்றுக்கு 6 அவுன்ஸ் பால் கிடைப்பது அரிதாக உள்ளது. இந்த சராசரியின் நுகர்வு பிராந்தியங்களுக்கு ஏற்றவாறு பாலின் உற்பத்திக்கு மக்களின் ஜன அடர்த்திக்கு ஏற்றவாறு வேறுபடும். உதாரணமாக சிந்து மாகாணத்தில் நாள் ஒன்றுக்கு நபர் ஒன்றுக்கு 22 அவுன்ஸ். பஞ்சாபில் நபர் ஒன்றுக்கு 19·7 அவுன்ஸ். அஸ்ஸாமில் நபர் ஒன்றுக்கு 1·2 அவுன்ஸ் இப்போது சிந்தும் பஞ்சாபும் பாகிஸ்தானில் உள்ளன. ஆனால் இந்தியாவின் சராசரி பாலின் நுகர்வு 8 அவுன்ஸாகும். ஆனால் ஊட்ட நிபுணர்கள் 16 அவுன்ஸாக சிபார்சு செய்துள்ளனர். அதிலும் கிராம மக்களைவிட நகர்ப்புறத்தில் பலருக்கு அதிகமான உணவும், பணிகளும் கிடைக்கின்றன. நகர்ப்புறத்தில் பாலின் நுகர்வு நாள் ஒன்றுக்குச் சராசரி 12·6 அவுன்ஸ். அதாவது அகில இந்திய பால் நுகர்வைப்போல இரண்டு மடங்காகும். சராசரி நுகர்வோர் ஒருவர் அமெரிக்காவிலுள்ளவரின் வருமானத்தைவிடக் குறைவாக இருந்தபோதிலும் இருவரும் ஒரே விலையில்தான் பாலுக்காகப் பணம் செலுத்துகிறார்கள். இந்தியாவில் கொடுக்கும் விலை ஏனைய நாடுகளான இங்கிலாந்து, அமெரிக்கா போன்றவற்றைவிட அதிகம். இருந்தபோதிலும் இந்தியாவில் பால் உற்பத்தியும் வினியோகமும் குறைவாகத்தான் உள்ளது. ஆகவே பால் உற்பத்தி, பங்கீடு, நுகர்வு இவற்றினை நல்ல முறையில் ஆராய்ந்து, இலாபம் ஈட்டக்கூடிய

அளவில் நுகர்வோருக்கு நியாயமான விலையில் கிடைப்பதற்கும், அரசாங்கம் பால் தொழிலை ஊக்குவிக்கவேண்டும். உலகிலேயே மூன்றில் ஒருபங்கு கால்நடைகளைக்கொண்ட இந்தியாவில் பால் உற்பத்திக்குறைவுடன் வினியோக முறையும் மோசமாக உள்ளது. பெரும்பான்மையோர் சைவ உணவை அருந்தும் மக்களுக்குப் பால் மிக அவசியமாகும். ஆகவே விஞ்ஞான ரீதியில் பால் உற்பத்தியை இரட்டிப்பாக்குவது அல்லது 50 சதவிகிதமாகிலும் உயர்த்தவேண்டும் கால்நடைக்குவேண்டிய வசதிகள், தீனி வகைகள், விஞ்ஞான ரீதியில் இனவிருத்தி செய்தல் போன்ற பல நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும். எனவே பால் உற்பத்தியையும், நுகர்வையும் அதிகப்படுத்தல்வேண்டும். மரக்கறி உணவு உண்ணும் மக்களைக்கொண்ட இந்தியாவில் புரோட்டீன் சத்துக் குறைவாக உள்ளது. ஏனெனில், பால் பற்றுக்குறைதான் காரணம். ஆக நுகர்வுகளுக்கு ஒழுங்கான, நியாயமான அளவில் போதிய அளவில் பால் வினியோகம் செய்திடல் வேண்டும். அதன் நுகர்வையும் அதிகப்படுத்த வேண்டும். அதிகப் பால் அருந்திடல் வேண்டும் என்ற முகாம்களை இந்தியா பூராவும் நடத்திடவேண்டும். ஆகவே உணவின் இன்றியமையாத பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்திடல் வேண்டும். மக்கள்தொகை வளர்ச்சிக்கு ஏற்றவாறு அதன் அளிப்பையும், தொழில்களையும் அதிகப்படுத்தல் வேண்டும். இருக்கப்பட்ட வளத்திற்கு ஏற்றவாறு குடும்பத்தைக் கட்டுப் படுத்திக் கொள்வதற்கு மக்களுக்குப் போதியஅளவு அறிவு புகட்டிடவேண்டும்.

**கல்வி, வேலைவழிகள்:** குறைவான கல்வியின் அளவு சீர்திருத்தப் பாதையில் ஒரு பெரும் தடையாக உள்ளது. வெறும் கல்வியின் அறிவு நாட்டின் கல்விமட்டத்தை அறிந்துகொள்வதற்குரிய வழியல்ல. இந்த விஷயத்தில் இந்தியா மிகவும் பின்தங்கி உள்ளது. கலாச்சாரத்திற்குரிய வசதிகள், பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்களின் எண்ணிக்கை, செய்தித்தாள்களை வெளியிடுதல், வார, மாத இதழ்கள், புத்தகங்கள் வெளியிடுதல் ஆகியவற்றில் இந்தியா பின்தங்கியுள்ளது. கற்காத மக்களைக் கொண்டிருந்தால் சமூகச் சீர்திருத்தங்கள், அதிகமான மருத்துவ வசதிகள் இவற்றால் யாதொரு பலனும் கிடைக்காது. அரசாங்கம் இதற்காகக் கல்விக் கொள்கையை உருவாக்கிடல் வேண்டும். பள்ளி செல்லும் ஒவ்வொரு குழந்தைக்கும் கல்வி, முதியோர்க்கல்வி, கல்வியின் தரத்தை அடைவது ஆகிய மூன்று அம்சங்களும் சிறப்பானவை. இப்பொழுதுள்ள ஆரம்ப, உயர்நிலை, கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், இன்னும் மேல்படிப்பிற்கான நிலையங்கள் இப்போதுள்ள

54 கோடி மக்களின் தேவைக்குப்போதாது. இருக்கப்பட்ட நிலையங்களில் அதிகமான நெருக்கடி, அதிலும் படித்தவர் களிடையே வேலையின்மை, கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவை பற்றுக்குறைவினுல் எத்தனையோ குழந்தைகளுக்குக் கல்வி வாய்ப்பு கிட்டுவதில்லை. குழந்தைகளைப் படிக்கவைக்கவேண்டும் என்ற ஆர்வமும் மக்களிடையே அதிகரித்துவருகிறது. தாராள மான, ஒரேவிதமான ஆரம்ப, நடுத்தரக் கல்வி வசதிகளை அதி கரித்தல் வேண்டும். ஆயிரக்கணக்கான குடும்பங்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளியில் படிக்கவைக்க வசதியில்லாமல் இருக் கின்றனர். பெரிய குடும்பங்களில் இந்தப் பிரச்சினை மிகவும் அதிகம். மேலும் கிராமப்புறத்தில் ஏராளமான குழந்தைகள், முதியோர்கள் கல்வியில்லாமல் உள்ளனர். காரணம் கிராமப் புறங்களில் பள்ளிக்கூடங்கள் கிடையாது. அரசாங்கம் பாது காப்புச் செலவையும், ஒழுங்கு, சட்டம், அமைதி போன்றவற்றிற் குரிய செலவையும் குறைத்து கிராமம்தோறும் பள்ளிகளைத் திறந்து மக்கள் கல்வி அறிவுபெறச் செய்திடல் வேண்டும்.

எவ்வாறு கல்வி இந்திய மக்கள்தொகைப் பிரச்சினையைத் தீர்க்கமுடியும்? டாக்டர் சந்திரசேகரன் அவர்கள், தனி மனிதனுக்கு கல்வியானது சம்பாதிக்கும் சக்தியை அளிப்பதுடன் பிறப்புவிகிதத்தைக் குறைப்பதற்கும் ஏதுவாக உள்ளது. ("Education of an Individual may increase his earning capacity and lower the birth rate") என்கிறுர். தனிப்பட்டவனுடைய கல்வி அவனுடைய சம்பாதிக்கும் அளவை உயர்த்துகிறது. அத்துடன் பிறப்பு விகிதத்தைக் குறைக்கவும்செய்கிறது. கிடைக்கக்கூடிய ஆதாரங்களிலிருந்து நாம் அறிந்துகொள்வது அதிகமான கல்வி வசதி சமூக உயர்வை நிலைநாட்டும். கல்வியின் அடிப்படை யில்தான் மக்களின் தரத்தையும் வாழ்க்கைத்தரத்தையும் அறிய முடியும். ஆகவே பிறப்பு விகிதத்தைக் குறைக்கக் கல்வி ஒரு சாதகமான கருவியாகும். 1931ஆம் ஆண்டில் மக்களின் கணக் கெடுப்புக் கமிஷனர் கல்விச்செயல்கள் மக்களின் பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்த உதவும் எனவும், அதிகமான வாழ்க்கைத்தரத்தை அடைவதால் இனவிருத்தியின் விகிதத்தைக் குறைக்கமுடியும் எனவும் கூறியுள்ளார்கள். கல்வி கலாச்சாரத் தின் அதிகரிப்பாகும். பெண்களுக்குக் கட்டாயமான கல்வி அளிப்ப தனுல் அவர்கள் சுதந்திரமாக இருப்பதற்கும் வழிவகுக்கிறது. தற்போது கல்யாணம் பொருளாதாரப் பாதுகாப்புக்காக நடை பெறுகிறது கல்யாணம் வாழ்க்கைத் தேவைக்காக அல்ல. ஏழை மக்கள் சீக்கிரத்தில் கல்யாணம் செய்வது ஒரு சிறந்த காரியமாகக் கருதுகிறுர்கள். ஏனெனில் மனைவி குடும்பத்திற்காகப் பெரிதும் வர

வேற்கப்படுகிருள். குடும்ப வருமானத்திற்காக மனைவி வரவேற்கப் படுகிருள். அத்துடன் குடும்ப உழைப்பிற்கும் மனைவி வர வேற்கப்படுகிருள். எனவே திட்டமிட்ட கல்வியின் வளர்ச்சி மக்கள்தொகையைக் குறைப்பதற்கு வழியாக உள்ளது. அதனுல் திருமணம் தாமதிக்கப்படுகிறது. அதனுல் வாழ்க்கைத்தரம் உயரும். நல்ல குடிமகனுக ஆக்குவதற்குக் கல்வி பெரிதும் பயன் படுகிறது.

1949ஆம் ஆண்டில் கல்வியின் முன்னேற்றத்திற்காக சார்ஜன்ட் திட்டம் தயாரிக்கப்பட்டு வெளியிடப்பட்டது. பழைய அனுபவங்களை வைத்துக்கொண்டு இந்த அறிக்கை வெளியிடப் பட்டது. இத்திட்டம் கல்வியின் பின்தங்கிய நிலையை உயர்த்து வதற்குப் பயன்பட்டது. அதன் முக்கிய அம்சங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

1. எல்லாக் குழந்தைகளுக்கும் சமமான கல்வி வாய்ப்பு அளித்திடல்வேண்டும். எல்லாச் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் குறைந்தபட்சக் கல்வி, உயர்கல்வி அவர்களுடைய நோக்கத் திற்கு ஏற்றவாறு அளித்திடல்வேண்டும்.

2. எல்லாக் குழந்தைகளையும் 6முதல் 14 வயதுவரை கட் டாயமாகப் பள்ளியில் சேர்த்திடல்வேண்டும். இந்தப் பருவத்தில் கல்வி இலவசமாக இருக்கவேண்டும்.

3. உயர்நிலைப் பள்ளி, பல்கலைக்கழகம், நுட்ப வேலைகளுக் குரிய படிப்பு வசதிகள் ஏற்படுத்தல்வேண்டும். இவர்களுக்கு முழுச்சம்பளச் சலுகை அளித்திடல்வேண்டும்.

4. முதியோர் கல்வி, இயற்கையாகவே முடியாமல் இருக்கும் குழந்தைகளுக்குக் கல்வி வசதி அளித்திடல் வேண்டும். கல்வி முடிந்தபின்னர் அவர்களுக்குப் போதிய பொழுதுபோக்கு, சமூக வசதிகள், மருத்துவ வசதிகள், வேலைதேடித்தரும் நிலையங்கள் அமைத்திடல் வேண்டும்.

5. திறமையான நிர்வாக அமைப்பு ஏற்படுத்தல் நலம். நிர்வாகிகள் நல்ல தெளிவாகவும், உண்மையாகவும் தைரிய மாகவும் செயல்படவேண்டும்.

6. அதிக அளவில் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளித்திடல் வேண்டும்.

7. சர்வகலாசாலையின் பாடத்திட்டங்களை மாற்றி அமைத்திடல் வேண்டும். இந்தியாவில் தற்சமயம் சுமாராக 66-க்கு மேல் சர்வகலாசாலைகள் உள்ளன. இருந்தபோதிலும் இவை மக்களின் தேவைக்குப் போதாது. பள்ளி செல்லும் சிறுவர்களை விடக் கல்லூரி செல்லும் மாணவர்களின் விகிதாசாரம் அதிகமாக உள்ளது.

**சிறப்பான மருத்துவ நிலையங்கள்:** (1) மேலும் நவீன சுகாதார வசதிகளைக்கொண்ட திறமையான திட்டங்களைத் தயாரித்தல் வேண்டும். போதிய அளவிற்கு பயிற்சிபெற்ற பணியாளர்களை அமர்த்தல்வேண்டும். நிலையத்திற்குரிய சாதனங்கள், கருவிகள் யாவையும் அளித்தல்வேண்டும்.

(2) ஆராய்ச்சி நிலையங்களில் மேலும் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளவும், முன்னேற்றங்களைச் செய்யவும் துரிதப்படுத்த வேண்டும். இந்தியாவில் மருத்துவர்கள், மருத்துவமனைகள் தொழுநோய் காலனிகள், சயரோக சானட்டோரியம், பைத்தியக்காரர் மருத்துவ மனைகள் இவை யாவும் இருந்தாலும், மக்களின் எண்ணிக்கைக்கும், தரத்திற்கும் போதுமானவையல்ல. ஆராய்ச்சி நிலையங்கள் பழைய கருத்துக்களை நாள்கழித்துச் சொல்வதும் நூதனமாக உள்ளது. சரியான ஆராய்ச்சி முடிவுகளும் காணப்படவில்லை. நவீன கருவிகளைக்கொண்டும் புதிய விஞ்ஞான முறைகளைக்கொண்டும் பல சிறப்பான மருத்துவ ஸ்தாபனங்களைத் தேசிய மட்டத்தில் ஏற்படுத்தவேண்டும். தேசியத் தொழுநோய் நிலையம், சயரோக சானட்டோரியம், பைத்தியக்காரர் மருத்துவ மனை, கண் சிகிச்சை முகாம், மனவியாதியைக் குணப்படுத்தும் நிலையங்கள் பல அமைத்தல் வேண்டும்.

**பொழுதுபோக்குத் தேவை:** பொழுதுபோக்கின் அவசியத்தை இந்திய மக்களின் வாழ்க்கையில் புறக்கணிக்கப்படுகிறது எவரும் ரொட்டி, அரிசி இவற்றினால்மட்டும் வாழ்ந்திட முடியாது. மனிதனும் அடிப்படையில் மிருகம்போல் உள்ளான். மிருகங்களுக்குத் தேவைப்படுவதைப்போல் மனிதனுக்கும் சில பொருள்கள் தேவைப்படுகின்றன. மனிதனிடம் அறிவு ஒன்றுதான் சிறப்பாக உள்ளபடியால் பல உணர்ச்சிகளையும், நற்பண்புகளையும் பெறுகிறான். அதனால் தனிச்சிறப்பு அடைகிறான். மக்கள் தொகைக் கொள்கை என்பது உணவு, உடை, இருப்பிடம், பொருளாதாரப் பாதுகாப்பு அளிப்பது மட்டுமல்ல. வாழ்க்கையை அனுபவிப்பதற்குப் பொழுதுபோக்கு மிக அவசியமாகும். உண்ண உணவு, இருக்க வீடு கொடுத்து மிருகக்காட்சிசாலையில் உள்ள மிருகங்களைப்போல நடத்துவது நல்லதல்ல. உதாரணமாக கிராம

போன், வானொலிப்பெட்டி, திரைப்படக்காட்சி, உல்லாசப்பயணம், விளையாட்டு இவை மிக அவசியமாகும். சாதாரண மனிதனுக்கும் ஓய்வு தேவை. அந்த ஓய்வு நேரத்தில் சிறிது பொழுதுபோக்கும் தேவைப்படுகிறது. பெண்களுக்கு இந்தியாவில் ஓய்வுநேரமும், பொழுதுபோக்கும் கிடையாது. அதிகமான குழந்தைகளுடன் பொழுதுபோக்குவதைப் பெரிதாக எண்ணுகிறார்கள். ஆனால் இதைச் சரியான பொழுதுபோக்காகக் கருதமுடியாது; துன்ப மாகத்தான் கருதவேண்டும். குழந்தைகளிடம் அல்லல்படுவதைப் பொழுதுபோக்காக ஏற்றுக்கொள்வதற்கில்லை. அவர்களுக்கு வேறு சில நடவடிக்கைகளில் வாய்ப்பு அளித்திடல் வேண்டும். இதனால் சிறிது சமூக சுதந்திரமும் பெண்களுக்கு அளிக்கலாம். சில பொழுதுபோக்கில் குடும்பத்தில் உள்ள அங்கத்தினர்கள் அனைவரும் பங்குகொள்ளலாம். சில இடங்களில் ஆண், பெண் எனப் பிரிக்கக்கூடாது. இதுபோன்ற நிலைகள் இல்லாவிடில் வாழ்க்கை சந்தோஷமில்லாமல் வெறும் சோம்பலாகவும், உற்சாக மில்லாமலும் போகும். இந்திய மக்கள்பிரச்சினை உணவு, விவ சாயப் பிரச்சினையுடன் தொடர்புடையது. இந்தியா ஓர் ஏழ்மை யான, வறுமையான நாடு. இந்தியாவில் இருக்கக்கூடிய வளங்கள் அமெரிக்க, ரஷ்ய நாடுகளின் வளங்களைவிட த்தரக்குறைவானவை. இந்தியா உலகிலுள்ள ஏழ்மையான பின்தங்கிய நாடுகளில் ஒன்றாகும். தலா வருமானம் எல்லா நாடுகளையும்விட மிகக்குறை வாகும் ஒரு வேளைக்கும் போதாத தலா வருமானத்தை இந்தியா வில் காணமுடியும். ஒருவேளை நல்ல உணவு அருந்தமுடியாத அவலநிலையைக் காண்கிறோம். தனிநபரின் தலா வருமானம் மூன்றில் இரண்டு பேருக்கு உணவு அளிக்கமுடியாத நிலையைக் காண்கிறோம். ஆகவேதான் இந்தியாவில் பசி, உணவு பற்றாக்குறை, பஞ்சங்கள் என்றும் தாண்டவம் ஆடுகின்றன. உண்ண உணவு இல்லாத மக்களுக்கு, பசியோடு அலையும் மக்களுக்கு பொழுது போக்கு தேவையில்லை, வேடிக்கை தேவையில்லை; உணவுதான் மிக முக்கியம் எனத் தெரிகிறது. மொத்த மக்கள்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு போஷிப்புக் குறைவினாலும், நோயினாலும் பீடிக்கப்பட்டுள்ளார்கள். ஒரு மில்லியன் மக்கள் ஆண்டுதோறும் மலேரியாவினால் இறக்கிறார்கள். 10 மில்லியன் மக்கள் நோயினாலும் போஷிப்புக் குறைவினாலும் இறக்கிறார்கள். உலகத்திலேயே குழந்தை, தாய்மார்களின் இறப்பு இங்குதான் அதிகம். ஆயுட்காலம் அமெரிக்காவின் ஆயுட்காலத்தில் பாதி யாகும். இந்த நிலைக்குக் காரணம் அதிகப்படியான மக்கள் அழுத்தம் நிலத்தின்மீது உள்ளது. சரியாகத் திட்டமிடாத, தொழில் வளர்ச்சி இல்லாத காரணத்தால் 70 சதவிகித மக்கள் தொகை விவசாயத்தை நம்பி உள்ளார்கள். அதிலும் 85. சத

விகிதம் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ நிலத்தை நம்பி வாழ்கிறார்கள். ஒரு சதவிகித மக்கள் செம்மையான தொழில் களில் ஈடுபட்டுள்ளார்கள். குடிசைத்தொழில், கைத்தொழில் இவற்றைச் சேர்த்துப்பார்க்கும்போது மொத்தத்தில் 5 சதவிகிதத் திற்கும் குறைவாகவே தொழில்களில் ஈடுபட்டுள்ளார்கள். விவசாயத்திற்கும் தொழிலுக்கும் அடிப்படையில் சரியான பொருத்தமில்லை.

ஏழ்மையைப் போக்காவிடில் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியாது. சத்துள்ள ஆரோக்கியமான வாழ்க்கையையும் எதிர் பார்க்க முடியாது. நல்ல உணவு, நல்ல வீடு, நல்ல ஆரோக்கியம் என்று பேசுவதைவிட அவர்களுக்குக் குறைந்தபட்ச உணவு அளிக்கப்படவில்லையென்றால் அது அர்த்தமற்றதாகும். தொழில்களை நவீனப்படுத்துவதால் மொத்த மக்கள்தொகையில் 15 சதவிகிதம் முதல் 20 சதவிகிதம்வரை வேலைவாய்ப்புகளைப் பெருக்கிட முடியும். இந்தியாவில் அதிக மக்கள் நிலத்தையே நம்பியுள்ளார்கள். அமெரிக்காவில் தொழில்களில் ஈடுபட்டுள்ள வர்களின் குறைந்தபட்ச எண்ணிக்கை 17 மில்லியன்கள், விவ சாயத்தில் 11 மில்லியன்கள் ஆகும். மொத்தத்தில் இந்த இரு தொழில்களையும் நம்பிவாழும் மக்களின் எண்ணிக்கையைச் சேர்த்து கணக்கிட்டால் தொழில்களில் 42 மில்லியன்கள், விவசாயத்தில் 27 மில்லியன்கள் நேர்முகமாக நம்பி வாழ்கிறார்கள். அமெரிக்காவின் அப்போதைய மக்கள்தொகை 140 மில்லியன் களாகும். தொழில்களை அதிகப்படுத்துவதால் நிலங்களின் மீதுள்ள மக்களின் அழுத்தத்தைக் குறைக்கமுடியும். தொழில்களைத் துரிதமாகவும், அதிக அளவிலும் முன்னேற்றம் செய்தல் வேண்டும். அதற்குத் தேவையான மூலப்பொருள்கள், முதல்கள், நுட்ப உழைப்பு, அங்காடி, விஞ்ஞானம் யாவும் அளித்திடல் வேண்டும். இந்தியாவில் சென்ற சில காலமாகத் தொழில்களில் முன்னேறிய போதிலும், இன்னும் மக்களின் வேலை வாய்ப்புகள் குறைந்தபாடில்லை. குடிசைத் தொழில்களின் முன்னேற்றத்தினாலும் கிராம மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கலாம். ஆகவே பெரிய தொழில்கள், சிறிய தொழில்கள், குடிசைத்தொழில்கள், கைத்தொழில்கள் அனைத்தையும் துரிதப் படுத்தி கிராமப்புறங்களில் உள்ள உபரி மக்களை உபயோகமுள்ள வேலைகளில் அமர்த்திடல் வேண்டும். உழைப்பின் உற்பத்தித் திறனை அதிகரித்தல் வேண்டும். விவசாய முன்னேற்றம், புதிய நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டுவருதல், உற்பத்தியை அதி கப்படுத்தல் நவீன முறைகளைக்கையாளுதல் போன்ற திட்டங்களை மேற்கொள்ள வேண்டும். பாகிஸ்தான் பிரிவதற்கு முன்னர்

மொத்த விவசாய நிலம் 432 மில்லியன் ஏக்கர்கள். அவற்றில் 278 மில்லியன் ஏக்கர் அதாவது 64·4 சதவிகிதம் நிலத்தில் விவசாயம் செய்யப்பட்டது. மீதியுள்ள 154 மில்லியன் ஏக்கர் அதாவது 35·6 சதவிகிதம் நல்ல நிலமும் அல்ல. செழிப்பான நிலமும் அல்ல, ஆனால் விவசாய முன்னேற்றத்தால் இவற்றை மாற்ற முடியும். பெரிய அணைக்கட்டுகள், நீர்ப்பாசனத் திட்டங்கள் விவசாயத்திற்குப் பெரிதும் உதவுகின்றன. அதனால் விவசாயத்தைத் துரிதப்படுத்தலாம். ஜமீன்தார் ஒழிப்பு, நிலச்சீர் திருத்தம், நில உச்சவரம்பு நிர்ணயித்தல் இவற்றினால் விவசாயம் முன்னேறும். கூட்டுறவு பண்ணை முறையைப் பின்பற்றினால் நிலங்களை ஒன்றாக இணைத்து பெரிய அளவில் விவசாயம் செய்ய முடிகிறது. நிலங்களைச் சிறுதுண்டுகளாக ஆக்காமல் பாதுகாத்தல், நிலமீட்சியை எடுத்துக்கொள்ளுதல், நீர்ப்பாசன முறைகள் சிறிய, பெரிய அளவில் மேற்கொள்ளுதல், இயற்கை செயற்கை உரங்கள், செழிப்புத்தன்மையை உயர்த்தல், காடுகளை அழித்தல், கூட்டுறவு நாணயச் சங்கங்களை அமைத்தல், மாதிரிப் பண்ணைகளை நிறுவுதல், தரமான விதைகள் கருவிகள் விவசாயிகளுக்கு அளித்தல், இயந்திரங்களைக் கொண்டு பேரளவு கூட்டுறவுப் பண்ணைமுறையை மேற்கொள்ளுதல், தேவையற்ற கால்நடைகளை நீக்கிக் கால்நடைகளை அபிவிருத்தி செய்தல், தகுந்த முறையில் வளர்த்தல், இனவிருத்தி செய்தல், கூட்டுறவு, பால் பண்ணை, கோழிப்பண்ணைகளை நிறுவுதல், பழம் காய்கறிப் பண்ணைகளை அதிகப்படுத்தல், அங்காடிகளை மேலும் அதிகப் படுத்தல், திட்டத்தில் விவசாயத் தொழில்களுக்குச் சிறப்பிடம் அளித்தல், போக்குவரத்து, செய்தித்துறை, கல்வி, சுகாதாரம், வீட்டு வசதிகள், சமூக நலப்பணிகள் இவற்றுக்குச் சிறப்பிடம் அளித்தல் ஆகியவை நாட்டில் மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களாகும். இவை போன்ற பெரிய திட்டங்களைப் பொருளாதார முன்னேற்றத்திற்கு செயல்படுத்துவதற்கு மக்களின் முழு ஆதரவும் ஒத்துழைப்பும் தேவை. பெரிய தலைவர்கள் எவ்வளவு அறிவாற்றலும் முற்போக்கான கொள்கைகளும் கொண்டிருந்தாலும் மக்களின் ஒத்துழைப்பு மிக அவசியம். அமெரிக்காவில் தலைவர்கள் நாட்டினுடைய முன்னேற்றத்திற்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அது போன்று இந்தியாவில் தலைவர்கள் நாட்டின் நலனுக்கு, மக்களின் முன்னேற்றத்திற்குத் தங்களை அர்ப்பணித்துக்கொள்ளவேண்டும்.

# 32. பொருளாதார முன்னேற்றமும் மக்கள்தொகை வளர்ச்சியும்.

பொருளாதார நலம் கருதி மக்கள் வளத்தைப்பற்றிப் படிப்பது மிக அவசியமாகும். ஏனெனில் மக்கள் வளத்தை வைத்துக் கொண்டு பொருள் உற்பத்தி செய்யமுடியும். அதைப்போல் பொருள்களை நுகரவும் முடியும். உற்பத்தி செய்ய உழைப்பு ஓர் முக்கியக் காரணியாகும். எத்தனை இயற்கை வளங்கள் இருந்த போதிலும் அதனை நல்லமுறையில் செயல்படுத்தி பண்டங்கள், பணிகள் செய்வதற்கு உழைப்பு உறுதுணையாக இருக்கிறது. மக்களின் தேவைகளுக்கு ஏற்றவாறு பண்டங்கள், பணிகளைச் செய்து தரமுடிகிறது. மக்கள்வளம் நாட்டின் உற்பத்தியைப் பெரியதாக்கவும், துரிதப்படுத்தவும் எல்லாவிதமான வசதியான, சௌகரியமான வாழ்க்கைக்குரிய பொருள்களை உற்பத்தி செய்து தரவும் பெரிதும் உதவுகிறது. ஆகவேதான் மக்கள்வளத்தை நல்ல முறையில் ஆராய்ந்து அதன் வளர்ச்சியையும், அமைப்பையும், பங்கீட்டையும்பற்றி அறிதல் வேண்டும்.

மக்கள்தொகை மாற்றத்தின் கோட்பாட்டை மூன்று கட்டங்களாக ஆராய்தல் வேண்டும். குறிப்பாக பிறப்பு, இறப்பு விகிதங்கள் எவ்வாறு பொருளாதார முன்னேற்றத்திற்கு சம்பந்தப்பட்டவை. பிறப்பு, இறப்பு விகிதங்களின் அடிப்படையில் மூன்று கட்டங்களாக வளர்ச்சியின் மாற்றத்தை அறியலாம். மால்தஸ் அவர்கள் உணவு அளிப்பு அதிகமானல் மக்கள்தொகை அதிகரிக்கும் என்றதுடன் குறிப்பிட்ட பொருளாதார வளர்ச்சிக்கும் மக்கள் தொகைக்கும் உள்ள தொடர்பையும் விளக்கினர்கள். இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு பல நிபுணர்கள் சிந்தித்த படியால் மக்கள்தொகை மாற்றக் கொள்கை என்ற புதியதொரு கோட்பாடு சிறப்படைந்து வருகிறது. வளர்ச்சி பெற்ற நாடுகளின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு இக்கோட்பாடுகள்

உருவாக்கப்பட்டிருக்கின்றன எனக் கூறலாம். இக்கோட்பாட்டைக் கீழ்க்கண்ட பிரிவுகளாகப் பிரித்து ஆராயலாம்.

**முதல் கட்டம் :** விவசாயத்தைப் பெரிதும் அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரத்தில் இறப்பு விகிதம் அதிகம். சரியான உணவின்மை, சுகாதாரமின்மை, மருந்துவசதிகள் குறைவு ஆகியவையே காரணம். அதைப்போல் பிறப்பு விகிதம் அதிகமாக இருக்கும்; ஏனெனில் கல்வியின்மை, அறியாமை, குடும்பக் கட்டுப்பாடு முறைகள் தெரியாமை, விரைவில் திருமணம், பழங்காலக் கொள்கைகள் பழக்க வழக்கங்கள், பிடிவாதம், மூட நம்பிக்கை பெரிதும் கொண்டவர்கள். மேலும் அதிகமான குழந்தைகளை வரவேற்றனர். ஆரம்பத்தில் அதிகக் குழந்தைகளைப் பெற்றெடுத்தால் பெற்றோர்களுக்கு அந்திய காலத்தில் பாதுகாப்பு அளிக்கும் என்ற நம்பிக்கை இருந்துவந்தது. அதிகக் குழந்தைகள் இருந்தால் தான் பாதுகாப்பு பெறமுடியும் என்ற நம்பிக்கையைக் கொண்டிருந்தார்கள். இதுபோன்ற சூழ்நிலையில் அதிகமான மக்கள் வளர்ச்சி விகிதம் இருக்காது. அதிகப் பிறப்பு விகிதம் இருந்தாலும் அதிக இறப்பு விகிதத்தினுல் சரிசெய்யப்படுகிறது. அதனுல்தான் வளர்ச்சியினுடைய விகிதம் குறைவாக உள்ளன. பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் இருக்கும்போது மக்களில் பெரும்பாலோர் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பார்கள். உற்பத்தியில் மிகப்பழைய முறைகளைப் பின்பற்றுவதால் பண்டங்கள், பணிகளின் உற்பத்தியும், தலா வருமானமும் மிகக் குறைந்த அளவில் இருக்கும். இந்த நிலையில் பல காரணங்களினுல் பிறப்பு, இறப்பு விகிதங்கள் மிக அதிகமாகவும், மக்கள்தொகை வளர்ச்சியின் விகிதம் மிகக் குறைவாகவும் இருக்கும். பிறப்பு விகிதம் உயர்ந்திருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. உதாரணமாக, சமுதாய மதக் காரணங்களுக்காக எல்லோரும் கட்டாயம் திருமணம் செய்து கொள்வார்கள். குழந்தைகளை இளமைப் பருவத்திலேயே வேலைகளுக்கு அனுப்பி வருவாயைப் பெருக்க முடியும் எனப் பெற்றோர்கள் விரும்பலாம். சேமிப்பு குறைவாக உள்ள அந்த நிலையில் முதுமைக் காலத்தில் பிள்ளைகளை நம்பியிருக்க பெற்றோர்கள் விரும்பலாம். குழந்தைகளின் மரணவிகிதம் அதிகமாக இருப்பதால் பிறக்கும் குழந்தைகளில் இறப்பவர்கள் போக ஒன்று அல்லது இரண்டு குழந்தைகளாவது எஞ்சி இருக்காதா என்ற எண்ணத்தில் அதிகக் குழந்தைகளைப் பெற விரும்புவார்கள். இறப்பு விகிதம் அதிகமாக இருப்பதற்கும் பல காரணங்கள் இருக்கின்றன. சத்து மிகவும் குறைந்த பற்றுக்குறை உணவு, குறைந்த சுகாதாரச் சூழ்நிலை, கல்வியின்மை, அறியாமை, போட்டி, பொறாமை, பூசல் ஆகியவைகளின் காரணமாக அடிக்கடி நாடுகளிடையே சண்டைகள், நோய்

களைத் தடுக்க முடியாத நிலைபோன்ற பல காரணங்களால் இறப்பு விகிதம் அதிகம். இறப்பு விகிதமும், பிறப்பு விகிதமும் அதிகமாக இருப்பதால் வளர்ச்சி விகிதம் மிகக் குறைவாகவே இருக்கும். எனவே மக்கட்பெருக்கம் மிகக் குறைந்த வேகத்தில்தான் இருக்கும்.

**இரண்டாம் கட்டம்:** வருமானத்தின் உயர்வினால் மக்கள் தங்களுடைய உணவு அருந்தும் முறையில் முன்னேற்றம் அடைகிறார்கள். பொருளாதார முன்னேற்றத்தினால் போக்கு வரத்து அதிகரிக்கப்படுகின்றன. அதனால் உணவின் அளிப்பு தொடர்ந்து கிடைக்கிறது. இதன் காரணமாக இறப்பு விகிதம் குறைகிறது. இந்த இரண்டாவது கட்டத்தில் பிறப்பு விகிதம் அதிகமாகிக்கொண்டும் இறப்பு விகிதம் குறைந்துகொண்டும் செல்கின்றன. இது மக்களின் வளர்ச்சியை அதிகப்படுத்துகிறது. இரண்டாம் கட்டத்தில் குறிப்பாக பிறப்பு விகிதம் அதிகரித்துக் கொண்டே செல்கிறது. அதே சமயத்தில் இறப்பு விகிதம் குறைந்துகொண்டே செல்கிறது. ஆகவே துரிதமான மக்கள் தொகை வளர்ச்சி ஏற்படுகிறது. இப்போது இந்தியா இந்த நிலையில்தான் உள்ளது. சராசரி குடும்பத்தினுடைய வளர்ச்சி விகிதம் அதிகரித்துக்கொண்டு செல்கிறது. மேலும் பிறப்பு விகிதம் நிரந்தரமாக இருந்து இறப்பு விகிதம் குறைந்தாலும் மக்கள்தொகை வளரலாம்.

இந்த நிலையில்தான் பொருளாதாரம் வளர்ச்சிப் பாதையில் செல்கிறது. போக்குவரத்துச் சாதனங்கள், கல்வி வளர்ச்சி, வேலை வாய்ப்புகள் அதிகரிப்பு, வருமான உயர்வு இவை ஏற்படுகின்றன. மக்களின் உற்பத்தித்திறன் பெருகி ஏராளமாக உற்பத்திசெய்து சந்தைகள் மூலம் பண்டங்கள் பரிமாற்றங்கள் நடைபெறும். இந்த நிலையில்தான் இறப்பு விகிதம் மிக வேகமாகக் குறைந்துகொண்டே செல்லும். பிறப்பு விகிதம் குறையாமல் அப்படியே இருக்கும். இறப்பு விகிதம் குறையக் காரணங்கள் பின் வருமாறு :

(1) உயர்ந்துவரும் வாழ்க்கைத்தரம் (2) சுகாதார வசதி களுடன் வாழுதல் (3) மருந்து, மருத்துவ வசதிகள் அதிகரிப்பு (4) குழந்தைகளின் இறப்பு விகிதம் குறைதல் (5) சட்டம், ஒழுங்கு, அமைதி போன்ற முறைகள் கடைப்பிடிக்கப்படுவதால் உயிருக்கு நல்ல பாதுகாப்பு (6) தொத்து நோய்களைக் கட்டுப் படுத்தல், அம்மை குத்திக்கொள்ளுதல், காலரா தடுப்பு ஊசி போட்டுக்கொள்ளுதல் போன்றவற்றால் கொள்ளை நோய் களைத் தடுத்து நிறுத்தல் இவற்றினால் இறப்பு விகிதம் குறை கின்றது. சமுதாயத்தின் பல பழக்கவழக்கங்களாலும், தொன்று

தொட்டு கடைப்பிடிக்கப்படும் பல சமுதாயச் சட்டதிட்டங்களால் நிர்ணயிக்கப்படுவதாலும், நோய்கள் தடுப்புமுறைகளை மக்கள் ஏற்றுக்கொள்ளும் அளவிற்கு பிறப்பைத் தடுக்கும் முறைகளை மக்கள் விரைவில் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்ற காரணத்தால் பிறப்பு விகிதம் குறையாமல் அதிகமாகவே இருந்து வருகிறது. இந்த நிலையில்தான் தற்சமயம் இந்தியா இருக்கிறது எனலாம். கடந்த 20 ஆண்டுகளாக மருத்துவத்துறையில் ஏற்பட்ட பெருத்த மாற்றங்களால் இறப்பு விகிதம் வேகமாகக் குறைந்துவிட்டதென்றாலும், மக்களின் மனநிலை மாறாத காரணத்தால் பிறப்பு விகிதம் மாறாமல் அப்படியே இருந்து வருகிறது. இறப்பு விகிதம் குறைவாகவும், பிறப்பு விகிதம் அதிகமாகவும் இருப்பதால் வளர்ச்சி விகிதம் அதிகமாகிறது. எனவே மக்கட் பெருக்கம் மிகவேகமாக அதிகரிக்கிறது.

மூன்றும் கட்டம்: இந்த நிலையில் விவசாயப் பொருளாதாரம் தொழில் பொருளாதாரமாக மாறுகிறது. தொழில் வளர்ச்சியினால் மக்கள் கிராமப் பகுதிகளிலிருந்து தொழில், வாணிக நகரங்களை நோக்கிச் செல்லுகிறார்கள். அதனால் நகரங்களில் மக்கள்தொகை அதிகரிக்கின்றது. பெண்களின் பங்கும், வேலைவாய்ப்புகளும் நகர்ப்புறங்களில் அதிகரித்துவருகின்றன. பொருளாதார நன்மைகளை அடைவதற்குக் குடும்பங்களின் அளவைச் சிறியதாக ஆக்கிக்கொள்வார்கள். மேலும் அதிகக் குழந்தைகள் தொந்தரவாகவும் கருதப்பட்டன. வாழ்க்கைத்தரம் உயர்வதற்குச் சிறிய குடும்பமே சிறந்ததென நகர்ப்புறங்களில் மக்கள் உணர்ந்தார்கள். ஆகவே பிறப்பு விகிதம் குறைந்தது. ஏற்கெனவே இறப்பு விகிதம் குறைந்துள்ளது. ஆகவே மூன்றாவது கட்டத்தில் பிறப்பு விகிதம், இறப்பு விகிதம் இரண்டும் குறைந்துள்ளன. சிறிய குடும்பம் மக்கள்தொகை வளர்ச்சியின் விகிதம் குறைவாக இருக்க உதவியது. அதனால் மக்கள்தொகை குறையத் தொடங்குகிறது. ஆக இந்த மூன்று நிலைகளில் ஆராய்ந்து பார்க்கையில் அதிகமான பிறப்பு இறப்பு விகிதங்கள் எவ்வாறு குறைவான பிறப்பு இறப்பு விகிதங்களாக மாறுகின்றன என்பது விளங்குகிறது. முதல் கட்டத்திலிருந்து இரண்டாவது கட்டத்திற்கு மாறும்போது பொருளாதாரத்தில் மாற்றம் ஏற்படுகிறது. அப்போது இறப்பு விகிதம் குறைவதாகவும் பிறப்பு விகிதம் நிரந்தரமாகவும் இருக்கின்றன. இறப்பு விகிதத்தை எளிதில் கட்டுப்படுத்தலாம். ஏனெனில் நல்ல மருந்து வசதிகள், உணவு வசதிகள், சமூக நலத்திட்டங்கள் இவற்றின் மூலம் குறைக்கலாம். ஆனால் பிறப்பு விகிதத்தைக் குறைப்பதற்கு எளிதாக முடிவதில்லை. இதற்கு மக்களின் மன மாற்றம், பழக்கவழக்கங்கள், குடும்பத்தின் அளவு, திருமணத்தை

தள்ளிப்போடுதல் தேவைப்படுகின்றன. அதிலும் இதற்கு நீண்ட காலம் தேவைப்படுகிறது ஆகவேதான் பிறப்பு விகிதமானது நீண்ட நாட்களுக்குப் பிறகு குறையத் தொடங்குகிறது. இரண்டாவது கட்டத்தில் மக்கள்தொகை வெடிப்பு ஏற்படுகிறது. இது வளரும் பொருளாதாரத்திற்கு ஒரு இக்கட்டாகக் கருதப் படுகிறது. அதிலும் இறப்பு விகிதம் குறைவதால் பொருளாதாரத்தில் மாற்றம் ஏற்படுகிறது. அதைச் சரிக்கட்டுவதற்கும் நாட்கள் பிடிக்கின்றன. ஆகவேதான் இந்தக் கோட்பாட்டை மக்கள்தொகை மாற்றம் எனலாம். சமீப காலத்தில் சமுதாயத்தில் பெருத்தமாற்றம் ஏற்பட்டுள்ளது. பிறப்பு இறப்பு விகிதங்கள் குறைவாக உள்ளன. இவை இரண்டும் குறைவான மட்டத்தில் சரிசெய்யப்படுகின்றன. ஆகவேதான் மக்கள்தொகையின் வளர்ச்சி விகிதம் குறைந்து வருகிறது. மக்கள்தொகை வளர்ச்சியைப் பிறப்பு இறப்பு விகிதங்கள் எவ்வாறு குடும்பத்தின் அளவை, மக்கள்தொகை வளர்ச்சி விகிதத்தைப் பாதிக்கின்றன என்பதைக்கொண்டு தீர்மானித்தல் வேண்டும்.

பொருளாதாரம் நல்ல முன்னேற்றம் அடைந்து மக்கள் வாழ்க்கைத்தரமும் மிக உயர்ந்த நிலையில் இருப்பின் அந்த நிலையில் பிறப்பு, இறப்பு விகிதங்கள் குறைந்த அளவில் இருக்கும். அதற்குரிய காரணங்கள் பல உண்டு. இறப்பு விகிதம் குறைந்து இருப்பதற்குரிய காரணங்கள் சிலவற்றை இரண்டாம் நிலையில் பார்த்தோம். அத்துடன் மருத்துவத்துறையிலும், சுகாதாரச் சுற்றுப்புறச் சூழ்நிலையிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களினால் இறப்பு விகிதம் மேலும் குறைந்து செல்லும். இரண்டாம் நிலையில் பிறப்பு விகிதம் அதிகமாக இருப்பதற்குச் சொல்லப்பட்ட காரணங்கள் பல மறையத்தொடங்குவதாலும், மக்கள் வேண்டு மென்றே குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைக்க விரும்புவ தாலும், பெண்கள் அதிகமான அளவு பொதுப்பணிகளிலும் தொழில்களிலும் ஈடுபடுவதாலும், குழந்தைகளைப் பேணி வளர்ப் பதற்கு அவர்களுக்கு நீண்டகாலப் பயிற்சியும், கல்வியும் தர வேண்டிய பொறுப்பு மிகுதியாவதாலும், பிறப்பு விகிதம் ஏறத்தாழ இறப்பு விகிதத்திற்குச் சமமாகக் குறைந்துவிடுகிறது. இந்த நிலையில் இன்றைய பல மேலை நாடுகள் உள்ளன. வளர்ச்சி விகிதம் குறைந்து மக்கட் பெருக்கமும் குறைவாக இருக்கிறது.

பொருளாதார வளர்ச்சியினால் மக்கட்பெருக்கத்தில் தோன்றும் பல விளைவுகளை இக்கோட்பாடு விளக்கினாலும், பொருளாதாரம் வளர்ச்சி அடையும் எந்தக் காலத்தில் பிறப்பு விகிதம் குறையும் என்று இக்கோட்பாடு உறுதியாகக் குறிப்பிட

வில்லை. எந்தக் காரணங்களால் பிறப்பு விகிதம் குறையும் என்பதையும் தெளிவாக இக்கோட்பாடு குறிப்பிடவில்லை. எனவே இக்கோட்பாட்டைக் குறைபாடே இல்லாத கோட்பாடு எனவும் கூறமுடியாது. மேலும் இந்தியா, எகிப்து போன்ற நாடு களில் கிராமப்பகுதிகளில் நகர்ப்புறங்களில் ஒரேமாதிரியான பிறப்பு விகிதம் இருப்பதற்குத் தகுந்த காரணம் இக்கோட்பாடு தரவில்லை; மலேயா போன்ற நாடுகளில் அதிகமாக மலேரியா தடுப்பு முறைகள் பயன்படுத்தப்பட்டதால் இறப்புவிகிதம் குறைந்தது; பொருளாதார முன்னேற்றத்தினால் அல்ல. இருந்தபோதிலும், சில குறைகள் இருப்பினும் பொதுவாக இக்கோட்பாடு பலரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூன்று கட்டங்களையும் கீழேயுள்ள பட்டியல்களின்மூலமாக விளக்கலாம்.

முதல் கட்டம்:

| ஆண்டு | பிறப்புவிகிதம் (ஆயிரத்துக்கு) | இறப்புவிகிதம் | நிகரஅதிகரிப்பு |
|---|---|---|---|
| 1911 | 50 | 49 | 1 |
| 1921 | 62 | 55 | 7 |
| 1931 | 65 | 57 | 8 |
| 1941 | 68 | 59 | 9 |
| 1951 | 70 | 60 | 10 |

முதல்கட்டத்தில் பிறப்புவிகிதமும், இறப்பு விகிதமும் அதிகரிக் கின்றன. ஆனால் நிகர மக்கள்தொகை அதிகரிப்பு குறைந்த விகிதத்தில் வளர்ந்துவருகிறது. இதை வரைபடத்தின் மூலமாகவும் எடுத்துக்காட்டலாம்.



**இரண்டாம் கட்டம்:**

| ஆண்டு | பிறப்புவிகிதம் (ஆயிரத்துக்கு) | இறப்புவிகிதம் | நிகர அதிகரிப்பு |
|---|---|---|---|
| 1911 | 50 | 48 | 2 |
| 1921 | 62 | 46 | 16 |
| 1931 | 64 | 44 | 20 |
| 1941 | 68 | 42 | 26 |
| 1951 | 72 | 40 | 32 |

இரண்டாவது கட்டத்தில் பிறப்பு விகிதம் அதிகரித்தும் இறப்பு விகிதம் குறைந்தும் வருவதைக் காணலாம். ஆனால் நிகர மக்கள் தொகை அதிகரிப்பு வளர்ந்துவரும் விகிதத்தில் துரிதமாக அதிகரித்துவருகிறது. முதல் கட்டத்திற்கும் இரண்டாவது கட்டத்திற்கும் உள்ள முக்கிய வித்தியாசம் நிகர மக்கள்தொகை அதிகரிப்பு இரண்டாம் கட்டத்தில் துரிதமாக வளர்ந்து வருவதைக் காணலாம். இந்தக் கட்டத்தையும் வரைபடம் மூலமாக எடுத்துக்காட்டலாம்.




**மூன்றும் கட்டம்:**

| ஆண்டு | பிறப்புவிகிதம் (ஆயிரத்துக்கு) | இறப்புவிகிதம் | நிகரஅதிகரிப்பு |
|---|---|---|---|
| 1911 | 50 | 49 | 1 |
| 1921 | 49 | 48 | 1 |
| 1931 | 46 | 45 | 1 |
| 1941 | 45 | 44 | 1 |
| 1951 | 40 | 39 | 1 |

மூன்றும் கட்டத்தில் பிறப்புவிகிதமும் இறப்புவிகிதமும் குறைந்து வருவதைக் காணலாம். அதே சமயத்தில் நிகர மக்கள்தொகை அதிகரிப்பு நிலையான விகிதத்தில் வளர்ந்து வருவதையும் காணலாம். இதையும் வரைபடம் மூலமாக எடுத்துக்காட்டலாம்.




## மக்கள் பெருக்கமும், பொருளாதார முன்னேற்றமும்

மக்கள்தொகை வளர்ச்சிக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உள்ள தொடர்புகளை ஆராய்ந்துபார்க்கையில் நாம் கருத்தில் கொள்ள வேண்டிய முக்கிய அம்சங்கள் தேவையின் அளவில் மாற்றம், விலைகளில் மாற்றம், நுகர்வில் மாற்றம், சேமிப்பில் மாற்றம், மூலதன ஆக்கத்தில் மாற்றம் முதலீட்டில் மாற்றம் போன்றவையாகும். இந்த அம்சங்களின் அடிப்படையில் ஆராய்ந்து பார்த்தால் வளர்ந்துவரும் மக்கள்தொகை நாட்டின் பொருளாதார நிலைமைகளுக்கேற்ப வளர்ச்சிக்குப் பேருதவியாக இருக்கலாம்; அல்லது வளர்ச்சிக்குப் பெரியதடையாக இருக்கலாம். இவ்விரண்டு கருத்துகளையும் சற்று ஆராய்வோம். மக்கள் பெருக்கம் பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் ஒரு காரணியாகக் கருதலாம். மக்கள்தொகையைக் குறைவாகக் கொண்டுள்ள நாடுகளில் மக்கள்தொகை பெருகும்போது, உழைப்பின் அளிப்பு அதிகரிப்பதால் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் உதவுவதாக உள்ளது. வளர்ச்சி பெற்ற நாடுகளிலும் அதிகமாக வாங்கும் சக்தியுள்ள நாடுகளிலும் மக்கள் பெருக்கம் பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமாக இருக்கிறது. மக்கள்தொகை அதிகரிப்பதால் மக்களின் தேவைகளும் அதிகமாகிக்கொண்டேபோகும். இத்தேவைகளை நிறைவேற்ற உற்பத்தியாளர்கள் அதிகமாக

உற்பத்தி செய்துகொண்டே இருப்பார்கள். வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளில் மக்களுக்கு வாங்கும் சக்தி ஏராளமாக உள்ள படியால் வளரும் மக்கள்தொகை உற்பத்திப் பெருக்கத்திற்கும் அதன் காரணமாகப் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உதவு கிறது. மேலும் இந்த நாடுகளில் மக்களின் தேவைகளுக்கேற்ப உற்பத்தியும் பெருகிக்கொண்டே செல்வதால், விலைவாசிகள் உயர்ந்து பண வீக்கம் தோன்றும் என்பதற்கில்லை. அதிகமாகி வரும் மக்கள்தொகையினால் உற்பத்திக்கு இன்றியமையாத காரணி யான உழைப்பின் அளிப்பு தாராளமாக இருக்கும். இப்படிப்பட்ட தாராளமான உழைப்பு இல்லாதிருந்தால் முன்னேறிய நாடுகள் இந்த அளவுக்கு வளர்ந்திருக்குமா என்பது சந்தேகம்தான். ஆகவே வளர்ந்துவரும் மக்கள் உற்பத்திக்கு ஆதாரமாகவும், உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை நுகர்வோர்களாகவும் இருந்தால் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவியாக இருக்கும். பொதுவுடமைக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் மக்கள்தொகை வளர்ச்சி எப்பொழுதுமே பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதில்லை எனக் கூறுவார்கள். நாட்டில் ஏற்படும் பற்றுக்குறைக்கும் வேறுபல இன்னல்களுக்கும் முதலாளித்துவ முறைதான் காரணம் என்பது அவர்களின் கருத்தாகும்.

மக்கள்தொகையின் வளர்ச்சி பொருளாதார முன்னேற்றத் திற்குத் தடையாக இருப்பதைப்பற்றிச் சற்று ஆராய்வோம். வாங்கும் சக்தி குறைவாக உள்ள நாடுகளிலும், பின்தங்கிய நாடுகளில் அதிகமான மக்கள்தொகையைப் பெற்றிருக்கும் நிலையில் மக்கட்பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பல வழி களில் தடையாக இருக்கிறது. பின்தங்கிய நாடுகளில் பொதுவாக மக்கள்தொகை அதிகரிக்கும்போது அதற்குத் தகுந்தாற்போல் தேவை அதிகரிப்பதில்லை. ஏனெனில் ஏழ்மையின் காரண மாகவும், குறைந்த தலாவருமானத்தின் காரணமாகவும் தேவையை உண்டாக்க முடிவதில்லை. அதனால்தான் உற்பத்தி அதிகரிப்ப தில்லை. உற்பத்தியின் பெருக்க வீதம் மக்கட்பெருக்க வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருப்பதில்லை; சமமாகக்கூட இருப்பதில்லை. ஆகவே திட்டமிட்டப் பொருளாதாரத்தைப் பின்பற்றினாலும் மக்களின் தேவை அதிகரித்தாலும், பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் உள்ளபடியால், மூலதனம், மூலப்பொருள்கள் ஆகிய வற்றைப் போதுமான அளவு பயன்படுத்த இயலாத நிலையில் அல்லது பற்றுக்குறை நிலையில் இருந்தாலும், தேவைக்கேற்ப உற்பத்தியை அதிகரிக்க முடியாமல் போகலாம். உற்பத்தி குறைவாக இருந்து, திட்டமிட்ட பொருளாதாரத்தைப் பின்

பற்றினுல், மக்களின் வாங்கும் சக்தி உயர்த்தப்படும்போது விலைகள் விரைவில் அதிகமாகி பணவீக்கம் தோன்ற வாய்ப்புகள் இருக்கலாம். விலைவாசிகள் உயர்ந்தால் மக்கள் இன்றியமையாத பொருட்களை அதிகமாகவும், வசதிப்பொருட்களையும் போகப் பொருட்களையும் மிகக் குறைவாகவும் நுகர்வார்கள். இதனுல் பொருளாதாரம் பின்னேக்கிச் செல்கிறது.

திட்டமிட்டப் பொருளாதாரத்தைப் பின்பற்றி முன்னேறும் நாடுகளில் மக்களின் பணவசதியும் வாங்கும் சக்தியும் அதிகரிக்கும். தேவையும் அதிகரிக்கும்போது விலைவாசிகள் உயர்ந்து பணவீக்கம் ஏற்படலாம். அப்படி ஏற்படும் பண வீக்கத்தை உறுதியான நடவடிக்கைகளால் தடுக்காவிட்டால் பணவீக்கம் மிக வேகமாக வளர்ந்து, தாவு வேகத்தில் வளர்ந்து பொருளாதாரத்தைச் சீர்குலைத்துவிடலாம். இத்தகைய நிலையில் வளர்ச்சிப் பாதையில் சென்றுகொண்டிருக்கும் பல நாடுகளைக் காணலாம்.

பெருகிவரும் மக்கள்தொகையினுல் நுகர்வின் அளவு, சேமிப்பின் அளவு, முதலீட்டின் அளவு ஆகியவற்றில் தோன்றும் மாறுதல்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெரிதும் பாதிக்கலாம். மக்கள்தொகை அதிகரிக்கும்போது நுகர்வின் அளவு அதிகமாகிறது. நாட்டு வருமானம் அதிகமாகப் பெருகாவிட்டால் குறிப்பாக பின்தங்கிய நாடுகளில் சேமிப்பின் அளவு மிகவும் வேகமாகக் குறைகிறது. குறிப்பிட்ட அளவு வருமானத்தை எல்லா மக்களுக்கும் பகிர்ந்து அளிக்கப்படுவதால், மக்களிடையே சேமிக்கும் சக்தியும் குறைந்து விடுகிறது. நுகர்வு குறைவதனுல் திறமையும் குறையும். அதனுல் உற்பத்தி குறைந்து, வருவாய் குறைந்து அதன் காரணமாக மீண்டும் நுகர்வு குறைகிறது. இதனுல் பொருளாதாரம் பின்னேக்கிச் செல்லலாம்.

மக்கள்தொகைப் பெருக்கத்தால் குறைந்த வயதுடையவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும். எனவே கல்வி போன்ற முக்கியமான துறைகளில் அதிகமாக முதலீடு செய்யவேண்டும். மொத்த மக்கள் அதிகமிருப்பதால் உற்பத்தியை அதிகரிக்க எல்லாத்துறைகளிலும் அதிகமான முதலீடு தேவைப்படும். ஆனுல் அதேசமயத்தில் உற்பத்தித்திறன், வருவாய், சேமிப்பு சக்தி யாவும் குறைவாக இருப்பதால் மூலதனம் அதிகரிக்கவும் முதலாக்கம் பெருகவும் வாய்ப்புகள் இரா. ஆகவே அதிகரிக்கும் மக்களால் முதலீட்டின் அளிப்பும் குறைகிறது. இதனுல் பொருளாதார முன்னேற்றம் பாதிக்கப்படும்.

மக்கள்தொகை அதிகரிப்பால் நம்பி இருக்கும் மக்களின் எண்ணிக்கை அதாவது சார்புப் பளு அதிகமாகிறது. குறைந்த அளவில் உள்ள உழைப்பாளர்களின் வருமானத்தை நிறைந்த, அதிக அளவுள்ள சாந்திருப்போர்கள் எல்லோரும் பகிர்ந்து கொள்ளவேண்டும். ஒருவர் உழைத்து வரக்கூடிய வருமானத்தைப் பலர் பகிர்ந்து வாழவேண்டியுள்ளது. உழைக்கும் பருவத்தில் உள்ள எல்லோருக்கும் வேலைவாய்ப்பும் கிட்டுவதில்லை. இக்குறைபாடுகள் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. குறைந்த அளவு வருமானமும், நுகர்வும் உடைய ஒரு பொருளாதாரத்தில் அதிகமான அளவுள்ள மக்கள் தொகை விகிதம், பொருளாதார முன்னேற்றத்தை மிக மோசமாகக் கட்டுப்படுத்துகிறது. அவர்கள் நுகர்வின் தேவையை அதிகரிக்கிறார்கள். ஆகவே மக்கட்பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறது எனக் கருதப்படுகிறது.

# 33. மால்தஸின் மக்கள்தொகைக் கோட்பாடு

ஒரு நாட்டின் உழைப்பின் அளிப்பு அந்த நாட்டின் மக்கள் தொகையைப் பொறுத்ததாகும். அதிலும் மக்கள்தொகையில் உழைக்கும் மக்களின் வீதம், ஒவ்வொருவரும் எவ்வளவு நேரம் உழைக்கின்ருர்கள், அவர்களின் திறமை ஆகிய காரணிகளைப் பொறுத்ததாகும். பொருளாதார வரலாற்றில் வணிகவாதிகள் வளர்ந்துவரும் மக்கள்தொகை நாட்டுக்கு நன்மை பயப்ப தாகும் என்று நம்பி வந்தார்கள். எந்த அளவுக்கு மக்கள்தொகை ஒரு நாட்டில் இருக்கின்றதோ அதைப் பொறுத்துதான் அந்த நாட்டின் வலிமை இருக்கும் எனக் கருதுகிருர்கள். மால்தஸ் மக்கள் தொகையைப்பற்றிச் சிந்திப்பதற்கு அடிப்படையாக விளங்கிய ஜெர்மானியப் பொருளாதார நிபுணர் சில்ஸ்மிக் என்பவரும் இதே கருத்தைக் கொண்டிருந்தார். உணவுப் பொருட்களுக் கேற்றவாறுதான் மக்கள்தொகை இருக்கவேண்டும் எனக் கருதிய தாலும், நாட்டின் பாதுகாப்புக்கு அதிக மக்கள்தொகை நல்லது எனக் கருதியதால் இக்கருத்து நிலவியது. உணவுப் பொருள் களுக்கு ஏற்றவாறுதான் மக்கள்தொகை வளரும் என்று மிராபோ அவர்களும் கருதினுர்கள். மக்கள்தொகைபற்றியதொரு தனிக் கோட்பாடு தேவையற்றது என ஆடம் ஸ்மித் கூறினுர்கள். ஆனுல் தாமஸ் ராபர்ட் மால்தஸ் அவர்கள்தான் முதன்முதலாக மக்கள்தொகையைப்பற்றிய கோட்பாடும் அது சமுதாயத்தின் வளர்ச்சியை எதிர்காலத்தில் எவ்வாறு பாதிக்கும் என்பதைப் பற்றிய கட்டுரையை எழுதி வெளியிட்டார்.

மக்கள்தொகைப் பிரச்சினை பண்டைக் கிரேக்க நாட்டில் நகர ஆட்சிக் காலத்திலிருந்து வந்திருப்பதாகப் பேராசிரியர் கார் சாண்டர்ஸ் கூறுகிருர்கள். கிரேக்க நாட்டில் திருமணக் கட்டுப் பாடு இருந்ததாகவும், மக்கள்தொகையைக் கட்டுப்படுத்த

திருமண ஒத்திவைப்பு இருந்ததாகவும் பிளேட்டோவின் நூல்களிலிருந்து அறியலாம். மேலும் சிசு குலைத்தல், குடியிறக்குத்தடை போன்ற முறைகளும் கையாளப்பட்டன. அதிலும் ஒரு நகர நாட்டரசில் 5,040 குடிகளுக்குமேல் இருத்தல்கூடாது.

**தாமஸ் ராபர்ட் மால்தஸ்** (1766—1834): தொன்மைப் பொருளாதாரக் கூட்டத்தில் தலைசிறந்தவர்களில் ரர்பர்ட் மால்தஸும் ஒருவர் ஆவார். இவர் 1766ஆம் ஆண்டு பிப்ரவரி மர்தம் 14ஆம் நாளில் ராக்கிரி என்ற கிராமத்தில் டேனியல் மால்தஸ் என்பவருக்குக் கடைசி மகனுக அவதரித்தார். டேனியல் மால்தஸ் நல்ல முறையில் படித்தவர். பலருக்கு நண்பராக விளங்கினுர். குறிப்பாக டேவிட் ஹ்யூம், ரூஸோ ஆகியோருக்கு நெருங்கிய நண்பர். ராபர்ட் மால்தஸ் கேம்பிரிட்ஜ் கலாசாலையில் கலைப் பாடங்களைக் கற்ருர். கணிதம், கிரேக்க லத்தீன் மொழிகள் ஆகியவற்றில் பரிசுகள் பெற்ருர். 1791ஆம் ஆண்டில் எம். ஏ. பட்டம் பெற்ருர். இவர் மெதுவாகவும், திக்கியும் பேசும் இயல்பு உடையவர். 1798ஆம் ஆண்டில் தம் பெயரைக் குறிப்பிடாமல் மக்கள்தொகையைப்பற்றிய கட்டுரையை வெளியிட்டார். இக்கட்டுரையைப்பற்றிப் பலர் கண்டனங்கள், குறைகள் தெரிவித்தார்கள். இதன் நடுவில் மற்ற நாடுகளிலுள்ள நிலைமைகளை நன்கு புரிந்துகொள்ளும் பொருட்டு 1799முதல் 1802 வரை ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப்பிரயாணம் மேற்கொண்டார். டேனியல் கிளார்க் என்பவருடன் நார்வே, சுவீடன், பின்லாந்து, ரஷியா, ஜெர்மனி, பிரான்ஸ், சுவிட்சர்லாந்து போன்ற பல நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்தார். பின்னர் 1803ஆம் ஆண்டில் மக்கள்தொகைக் கட்டுரையை இரண்டாம் முறையாகத் திருத்தி வெளியிட்டார். அப்போதுதான் தம் பெயரையும் வெளியிட்டார். 1805ஆம் ஆண்டில் வரலாறு, அரசியல், பொருளாதாரம் போன்ற பாடங்களுக்கு எயில்பரி என்ற கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி 1834ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ஆம் தேதி மறைந்தார்.

மால்தஸ் காலத்தில் தொழிற் புரட்சி தொடங்கியதன் விளைவாகவும் மக்கள் ஏராளமாகப் பெருகியிருந்தமையாலும் பஞ்சமும், பசியும், விலையுயர்வும், வேலையில்லாத் திண்டாட்டமும் கொள்ளை, தொத்து நோய்களுமாக இங்கிலாந்து நாட்டு மக்கள் அல்லல்பட்டுக் கொண்டு இருந்தபடியால் மால்தஸ் தான் கண்டு அனுபவித்த காட்சிகளின் அடிப்படையில் தமது கொள்கையை வகுத்தார். மக்கள்படும் துன்பத்திற்கெல்லாம் அரசாங்கமே காரணம் என்று வலியுறுத்தி 1793ஆம் ஆண்டில் வில்லியம்

காட்வின் என்பவர் எழுதிய நூலும், அந்தக் கருத்துக்களை அப்படியே ஏற்றுக்கொண்ட தம் தந்தையான டேனியல் மால்தஸ் அவர்களின் கருத்துக்களும் மால்தஸின் சிந்தனைக்கு அடிப் படையாக விளங்கின. 18ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இங்கிலாந்தில் விவசாயம் முன்னேற்றம் அடைந்திருந்தது. ஆனால் அதே நூற்றாண்டின் பிற்பகுதியில் விவசாயம் செழிக்கவில்லை. உற்பத்தி குறைந்து விலைவாசிகள் உயர்ந்தன. எங்கும் பஞ்சம், பட்டினி, பசி தலைவிரித்தாடின. அயர்லாந்தில் மக்கள்தொகை மிஞ்சியது. ஆகவே மால்தஸ் இங்கிலாந்தின் தொழிற்புரட்சி யால் விளைந்த கேடுகளை, குறிப்பாக நோய், பிணி, வேலையின்மை, பஞ்சம் இவற்றைக் கண்ணுற்ற பின்னர் மக்கள்தொகையைப்பற்றி முதன்முதலில் பொருளாதார உலகில் கட்டுரை எழுதினார்.

மனிதன் உயிர்வாழ உணவு இன்றியமையாதது. அதைவிட ஆண், பெண் உறவு தவிர்க்கமுடியாதது. மக்கள்தொகைப் பெருக்கம் உணவுப் பெருக்கத்தைவிடத் துரிதமாக வளரும் எனவும் கூறினார். மக்கள்தொகை வளர்ச்சியையும், உணவு உற்பத்தியையும் ஒப்பிட்டுப் பார்க்கையில் மக்கள்தொகை வேக மாகவும் எளிதிலும் விரைவாகவும் அதிகரிக்கிறது. ஆனால் உணவு உற்பத்தி மெதுவாகவும், கடினமாகவும் வளர்கிறது. மக்கள்தொகைக்கு எந்தவிதமான கட்டுப்பாடுமில்லாமல் இருந்தால் 25 ஆண்டுகளில் இரட்டிப்பாகும்.

மனிதனுக்குத் தனது வமிசத்தை விருத்தி செய்யும் சக்தியும், நிலத்திற்கு மனிதனுக்குத் தேவைப்படும் உணவை உற்பத்தி செய்யும் சக்தியும் இருக்கின்றன. ஆனால் நிலத்தின் சக்தியைக் காட்டிலும் மனிதனின் சக்தி நிச்சயம் அதிகமாக இருக்கிறது. மக்கள்தொகை வேகமாகப் பெருக்கல் விகிதத்தில் அதிகரிக்கும், 1, 2, 4, 8, 16, 32, 64, 128...என்பதாக. ஆனால் உணவு உற்பத்தி கூட்டல் விகிதத்தில், கணித முறையில் அதிகரிக்கும், 1, 2, 3, 4, 5, 6, 7, 8....என்பதாக. உணவு உற்பத்தி குறைந்து செல் விளைவு விதியை அடிப்படையாகக் கொண்டது. மக்கட் பெருக் கத்திற்கும் உணவுப் பெருக்கத்திற்குமுள்ள வேறுபாட்டால் பற்றுக்குறை தோன்றும். இரண்டு நூற்றாண்டில் மக்கள் தொகைக்கும் உணவு உற்பத்திக்கும் உள்ள விகிதம் 256 : 9. மூன்று நூற்றாண்டில் அதன் விகிதம் 4,096 : 13 ஆகும். இவ்வாறு மக்கள்தொகை உணவு உற்பத்தியைவிட அதிகமானால், மக்கள் சொல்ல முடியாதத் துன்பங்களுக்கு ஆளாக வேண்டும். மக்கள் தொகைப்பெருக்கம் ஏற்படுவது மனித இனத்தின் புலன் சார்பு இயல்புகளால் நிகழ்கிறது. இனவிருத்தி செய்வது மிருகங்கள்,

தாவரங்கள், கிருமிகள் போல மனிதனும் பெற்ற இயற்கைப் பண்பு. ஆனால் மனிதன் பகுத்தறிவு உடையவன். ஆனபடியால் தனது பெருக்கத்தைத் தானே தடைசெய்ய முடியும். இங்கிலாந்தில் மிருகங்களின் இனப்பெருக்கம் மிகவும் கவனத்தோடு கட்டுப்பாடு செய்யப்பட்டபோது மனிதனின் இனப்பெருக்கம் கட்டுப்பாடின்றிக் கவனக்குறைவாக விடப்பட்டதனால் ஆத்திரமடைந்த மால்தஸ் இங்கிலாந்து நாட்டிற்கு ஓர் அபாய அறிவிப்பாக இருக்கும்படி தமது கோட்பாட்டை அமைத்தார். விலங்குகளைப்போல் மக்களும் இயற்கை ஊக்கிகளால் உந்தப்பட்டே இனவிருத்தி செய்கிறார்கள். இக்கோட்பாட்டை அமைப்பதற்கு விலங்கியல் வல்லுநர்களின் மிருக இனவிருத்தி முடிவுகள் அவருக்கு உதவியாக இருந்திருக்க வேண்டும். ஜூலியன் ஹக்ஸ்லி என்ற விலங்கியல் வல்லுநர் ''ஒரு பச்சைப் பூச்சியின் வருக்கம் எல்லாம் உயிருடனிருந்தால் சில மாதங்களில் அவற்றின் எண்ணிக்கை சீனாவின் மக்கள்தொகையைவிட அதிகமாகப் பெருகிவிடும்'' என்று கூறியுள்ளார். வால்ராஸ் என்ற புள்ளியியல் நிபுணரது ஆராய்ச்சியின் முடிவு ''நான்கே குழந்தைகளைப் பெறப்போகும் ஒரு திருமண நிகழ்ச்சி 1,213 ஆண்டுகள் கழித்து 4,120 இலட்சம் மக்களைத் தோற்றுவிக்கக்கூடிய சக்தி படைத்ததாகும்'' என்பதாகும்.

மக்கள்தொகையைக் கட்டுப்படுத்துவதற்கு இரண்டுவகைத் தடைகள் உள்ளன: ஒன்று இயல்புத் தடைகள்; மற்றொன்று தவிர்ப்புத் தடைகள். தவிர்ப்புத் தடைகளைப் பின்பற்றாவிடில் இயல்புத் தடைகள் செயல்படும். பஞ்சம், பட்டினி, நோய், போர் யாவும் இயல்புத் தடைகள். பிரம்மசாரியாக இருத்தல், காலம் கடத்தி திருமணம் செய்தல், இல்லறத்தில் ஒரு நிலைக்குப்பின் துறவற வாழ்வு வாழ்தல் போன்று மக்கள் தாங்களே கடைப்பிடிக்கத்தக்க முறைகளைத் தவிர்ப்புத் தடைகள் அல்லது செயற்கைத் தடைகள் எனலாம். மக்கள் எந்தவிதமான கட்டுப்பாட்டையும் செயல்படுத்தவில்லை என்றால், மக்கள்தொகை உணவின் அளிப்பைவிட அதிகமாகி அதனால் பஞ்சம், பற்றாக்குறை தோன்றும். எனவே மக்கள் சமுதாயத்தின் நலன் கருதியும், இயற்கையின் கொடுமைகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வேண்டியும் தாங்களே முன்வந்து தவிர்ப்புத் தடைகளை மேற்கொள்ள வேண்டும். சமநிலை மக்கள்தொகையிலிருந்து மிகையான மக்கள்தொகை நிலையை அடைந்து, பின்னர் இயல்புத் தடைகளினால் சரி செய்து சமநிலைக்கு வருவதை ''மால்தஸின் சுழல்'' எனலாம். சமநிலையில் மக்களுக்குத் தேவையான உணவு, வசதிகள், உடலுறுதி கிடைப்பதனால் மக்களில் பெரும்பாலோர்

அபரீத இனவிருத்தியில் ஈடுபடுவதனுல் மிகையான மக்கள் தொகை ஏற்படுகிறது. அது மீண்டும் இயல்புத் தடைகளால் கட்டுப்படுத்தப்பட்டு சமநிலை மக்கள்தொகை ஏற்படுகிறது. இவ்விதமாக மூன்று நிலைகளும் மீண்டும் மீண்டும் ஒரு சுழல் போல் தோன்றுகிறது. கீழேயுள்ள படம் இதைக் குறிக்கிறது.




மீண்டும் மீண்டும் செயல்படும் இயல்புத் தடைகளிலிருந்து மக்களை விடுவிக்க ஒரே வழி தவிர்ப்புத் தடைகளைக் கையாளுதல் வேண்டும்.

ஒழுக்கக்கட்டுப்பாடு, திருமணத்தைத் தள்ளிப்போடுதல், மணம் செய்யாமல் வாழ்க்கை நடத்தல், தன்னடக்கம் ஆகியவை தவிர்ப்புத் தடைகள் ஆகும். ''மனிதனுல் கட்டுப்படுத்தப்படாத மக்கள்தொகை இயற்கையால் கட்டுப்படுத்தப்படும்'' என மால்தஸ் கூறியுள்ளார்.

**மால்தஸ் மக்கட் கோட்பாட்டின் குறைகள்:** பொருளாதார உலகில் மால்தஸின் கோட்பாட்டைச் சிலர் தூற்றியும், பலர் போற்றியும் உள்ளார்கள். காட்வின் என்பவர் ''மனித சமுதாயத்தின் நம்பிக்கைகளையெல்லாம் தின்றடிக்கும் பயங்கரமான கரும்பூதம்'' என்று இதனைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

1. இயற்கையில் மக்களின் இனவிருத்தி அதிகமானது என்பதை காண்டிலான் என்னும் நிபுணர் ''தானியக் களஞ்சியத்தில் சுண்டெலிகள் பெருகுவதைப் போல மனிதன் பெருகுகிருன்'' என்று குறிப்பிட்டுள்ளார். ஆனுல் இது முற்றிலும் உண்மை ஆகாது. ஏனெனில் மால்தஸ் குறிப்பிட்டுள்ளது போல பெருக்கல் விருத்தி வேகத்தில் மக்கள் பெருகுகின்ருர்கள் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் இல்லை.

2. விவசாயத்தில் குறைந்துசெல் விளைவு விதி செயல் படுவதால் விளைவு மிக வேகமாகப் பெருக முடியாவிட்டாலும்,

நவீன விஞ்ஞான முறைகளினாலும், புதிய கருவிகள் எரு, உரம், முதலீடு இவற்றினாலும் உணவின் உற்பத்தி அளவை அதிகரிக்க முடியும். வளர்ச்சி பெற்ற நாடுகளில் மக்கள்தொகை வளர்ச்சி விகிதத்தைக் காட்டிலும் உணவு உற்பத்தி விகிதம் அதிகமாய் இருப்பதைக் காணலாம். அப்படியே பற்றுக்குறை ஏற்பட்டால் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்ள முடியும். இதற்கு இங்கிலாந்தே உதாரணமாக விளங்குகிறது தொழில்துறையில் ஏற்பட்ட முன்னேற்றத்தின் காரணமாக விலை உயர்ந்த நுட்பமான இயந்திரங்களைப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து தனக்குத் தேவையான உணவுப் பொருட்களை இறக்குமதி செய்து கொள்கிறது. எனவே உணவு உற்பத்தி கணித விருத்தி வேகத்தில்தான் போகும் என்பதும் பொய்யாகிறது.

3. மக்கள்தொகைப் பிரச்சினை உணவை மட்டும் பெரிய தாகக் கொண்டிருப்பதில்லை. மாறாக, நாட்டின் செல்வத்தின் அளவையும், மக்களின் உற்பத்தித்திறன் போன்றவற்றையும் பொறுத்தது. செலிக்மேன் என்ற பொருளாதார நிபுணர் கூறுவது: "மக்கள் பிரச்சினை என்பது அளவை மட்டும் பொறுத்த தல்ல; திறன்மிக்க உற்பத்தி, சமமான பகிர்வு இவற்றையும் பொறுத் திருக்கிறது." உணவின் அளிப்பு அதிகமானாலும் மக்கள் அதை விடப் பெருகினாலும் என்றுமே மக்கள் பராமரிப்பு நிலையில் தான் வாழ முடியும் என்றும் அந்நிலைக்கு நல்ல நிலையில் மக்கள் வாழ வழியில்லை என்றும் கருதிய மால்தஸின் கூற்றை முன்னேறிய நாடுகளில் சிறப்பாக வாழும் மக்கள் பொய்ப்பித்து விட்டார்கள் எனலாம்.

4. விஞ்ஞான வளர்ச்சியையும், நுட்ப அறிவின் முன் னேற்றம், ஆச்சரியப் படக்கூடிய அதன் விளைவுகளைப் பற்றியும் மால்தஸ் அறியாதவராக இருந்திருக்கிறார். 20ஆம் நூற்றாண்டில் எவருடைய கற்பனையையும் மிஞ்சும் அளவுக்கு அறிவியல் வளர்ச்சி பெற்றிருப்பதையும், அதனால் விளைந்த நற்பயன்களையும் இன்று காண்கிறோம்.

5. மக்களின் பிறப்பு கட்டுப்படுத்த முடியாததென்று மால்தஸ் குறிப்பிட்டுள்ளதைப் பார்த்தால் குழந்தைப் பேற்றிற்கும் குழந்தை பெறும் சக்திக்கும் உள்ள வித்தியாசத்தை அறியாதவர் போலத் தோன்றுகிறது. குழந்தைபெறும் சக்தி அதிகம் இருந் தாலும் குழந்தைப்பேற்றைக் குறைத்துக் **கொள்ளமுடியும்** என்பதை அவரே தன் நூலில் தவிர்ப்புத் தடைகளில் குறிப்பிட்

டுள்ளார். ஆகவே, மக்கள் பெருகும் சக்தி கட்டுப்படுத்த முடியாத ஒரு சக்தியல்ல என்பது தெளிவாகியுள்ளது.

6. நாகரிக வளர்ச்சி, கலாச்சாரம், கல்வியின் முன்னேற்றம் இவற்றின் காரணமாக மக்கள் தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொள்வதையும் பலர் திருமணமாகாமலே இருப்பதையும் வரலாறு தெளிவுபடுத்துகிறது. ஐரோப்பிய நாடுகளில் கூலி மட்டம் அதிகம் இருந்தபடியால் பிறப்பு விகிதம் குறைவாக இருந்தது. பிரான்ஸ் நாட்டில் குறைந்துவரும் மக்கள்தொகையை நிறுத்தவும், அதைத் துரிதப்படுத்தவும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

7. மால்தஸ் வாழ்ந்த காலத்தில் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளிலும், இங்கிலாந்திலும் மக்கள்தொகை வெகுவேகமாகப் பெருகியதை மக்கள்தொகை எப்பொழுதும் 25 ஆண்டுகளுக்கு ஒரு முறை இரட்டிக்கும் எனக்கூறிய கருத்து மாறியது. இது சரியான முடிவு அல்ல.

8. மக்களை வெறும் நுகர்வோராக மட்டுமே கருதக்கூடாது. பொருளாதாரம் வளர்வதற்கு வளர்ந்துவரும் மக்கள்தொகையும் அதன் வழியாக வளர்ந்துவரும் உழைப்பாளர்களின் எண்ணிக்கையும் காரணமாகலாம்.

9. மனிதன் தனது அறிவு, வாழ்க்கை நிலை, தன்னைச் சுற்றியுள்ளவர்களின் வாழ்க்கைத்தரம் என்பவற்றை ஆராய்ந்து அதன்படியே பிறப்பு விகிதத்தைக் குறைக்கிறான். பேராசிரியர் F. S. நிட்டி என்பவர் மக்கள்தொகை வளர்ச்சி மனிதனாலேயே நிருணயிக்கப்படுகிறதேதவிர மனிதனினின்றும்வேறுபட்ட ஒன்றால் நிருணயிக்கப்படுவதில்லை என்றார். இதே கருத்தைத் தொன்மைப் பொருளர்தாரப் பேராசிரியர் நாசோ சீனியர் என்பவரும் வலியுறுத்தியுள்ளார்.

10. மால்தஸின் கோட்பாடு பொருத்தமற்றது; தேவையற்றது. ஒன்று அல்லது இரண்டு நாடுகளின் அடிப்படையிலான அனுபவத்தை வைத்துக்கொண்டு மிகவிரைவான முடிவு எடுக்கப்பட்ட கோட்பாடாகும். ஆகவே இது உணவின் அளிப்பிற்கும் மக்கள்தொகைக்கும் விஞ்ஞான ரீதியில் தொடர்பை உண்டுபண்ணவில்லை. பொதுவாக ஏழைக்குடும்பங்கள் அதிகமான குழந்தைகளையும், பெரிய குடும்பங்களையும் வைத்துள்ளனர். ஆனால் பணக்காரக் குடும்பங்கள் அளவோடு குழந்தைகளைப் பெற்றுச் சிறிய குடும்பங்களை வைத்துள்ளார்கள். ஆகவேதான் மக்கள்

தொகை தவருக வளர்கிறது. ஆகவே மக்களின் வாழ்க்கைத் தரத்தை செல்வத்தின் அடிப்படையில் உயர்த்தி அதன் மூலமாக மக்கள்தொகையைக் குறைத்திடல் வேண்டும். உணவு பற்ருக் குறை ஏற்பட்டால் அதைச் சமாளிக்க அதிகமான விஞ்ஞான முறைகளை விவசாயத்தில் பின்பற்றுதல் வேண்டும். நம்முடைய உடம்பின் அளவுக்கு ஏற்றவாறு துணி எடுத்தல் வேண்டும். துணிக்குத் தகுந்தவாறு நம் உடம்பைக் குறைத்துக் கொள்ள முடியாது. மால்தஸ் குடும்பக் கட்டுப்பாட்டை விரும்பவில்லை. இந்தக் குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரிப்பவர்கள் புதிய கருத்துக் களைக் கொண்டவர்கள். மால்தஸ் மக்கள்தொகையைத் தடுப்பு முறைகளில் கட்டுப்படுத்தும்படி கட்டளையிட்டார். அதாவது முன்கூட்டியே ஊகித்தல், ஒழுக்கக் கட்டுப்பாடு, சுயக்கட்டுப்பாடு, கல்யாணத்தைத் தள்ளிப்போடுதல் இவற்றைப் பின்பற்றும்படி கூறினர்.

11. மால்தஸின் கோட்பாட்டை. மிகவும் கண்டித்த கானன் என்ற நிபுணர், ''பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் ஒருவாய் மட்டு மல்லாமல் இரண்டு கைகளுமுடையதாக இருப்பதனுல் மக்கள் தொகைப் பெருக்கத்தின் காரணமாக உற்பத்தி கூடும்'' எனக் கூறுகிருர். இக்கூற்று ஒரளவிற்கு உண்மையே. எனினும் அளவு கடந்த மக்கள்தொகையால் குறைந்துசெல் விளைவே ஏற்படும். மேலும் பிறந்த குழந்தையின் இருகரங்கள் சுமார் 20 ஆண்டு கட்குப் பின்னரே உற்பத்திக்கு உதவுகின்றன. ஆனல் வாய் உடனடியாகச் செயலில் ஈடுபடுகிறது.

19ஆம், 20ஆம் நூற்ருண்டுகளில் மேற்கு நாடுகளில் வாழ்க்கைத்தர உயர்வு, பெண் கல்வி முன்னேற்றம், திருமணங்களைத் தள்ளிப்போடுதல் போன்றவற்றின் காரணமாக இனப்பெருக்கம் குறைந்திருப்பதைக் காணலாம். இக்குறைபாட்டைச் சுட்டிக் காட்டிய கானன், ''ஒரு நவநாகரிகத் தம்பதிகளிடம் ஒரு பேபி வேண்டுமா அல்லது பேபி ஆஸ்டின் கார் வேண்டுமா? என்று கேட்டால் பேபி ஆஸ்டின் காரையே அத்தம்பதிகள் விரும்புவார் கள்'' எனக் கூறுகிருர். மேலும் கல்வி அறிவு படைத்த பெண்கள் காலம்கடந்து திருமணம் செய்துகொள்வதையே நாகரிகமாகக் கருதுகின்ருர்கள். பிரான்ஸ் நாட்டில் பிறப்பு விகிதம் மிகவும் குறைந்து இனத் தற்கொலை நடந்து வருவதாக அறிகிருேம். ரஷ்ய நாட்டில் மக்கள்தொகைக் குறைவை நீக்க 10 குழந்தைகளுக்கு மேல் பெறும் தாயாருக்கு 'வீரத்தாய்' என்ற பட்டத்தை வழங்கி ஒரு தங்கப்பதக்கம் அளிக்கப்படுகிறது. இதிலிருந்து மால்தஸ் கோட்பாடு வளர்ச்சியுற்ற நாடுகளுக்குப் பொருந்தும் எனக் கொள்ளல் இயலாது.

12. மால்தஸ் கூறிய தவிர்ப்புத்தடைகள் இயற்கைக்கு முரணானவையாகும். திருமதி மேரி ஸ்டூப்ஸ், திருமதி மார்கரெட் சாங்கர் போன்று புதிய கருத்துக்களைக் கொண்டவர்கள் மால்தஸ் கூறிய தவிர்ப்புத்தடைகளைப் புறக்கணித்து அவற்றிற்குப் பதிலாக மருத்துவமுறைக் கருத்தடைச் சாதனங்களையும், அறுவை சிகிச்சை போன்ற நிரந்தர இனவிருத்தித் தடைகளையும் ஆதரித்துக் கூறியுள்ளார்கள்.

இத்தகைய பல குறைபாடுகளைக் கொண்டிருந்தபோதிலும் மால்தஸின் கொள்கை முற்றிலும் தவறானதொரு கொள்கை என ஒதுக்கிவிடவும் முடியாது. மக்களை இயற்கையின் கொடுமைகளிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்திற்காக எழுதப் பட்டதால் இக்கோட்பாடு சிறந்ததாகும். எவ்வளவுதான் குறைகள் இருந்தாலும் உணவுப் பெருக்கத்தைவிட மக்கள்தொகைப் பெருக்கம் அதிகமாகவே உள்ளது என்ற அவரது கொள்கையின் அடிப்படை உண்மை முற்றிலும் சரியானது என்பதைக் குறிப்பாக ஆசியாவில் உள்ள நாடுகள் தெளிவுபடுத்துகின்றன. இந்த நாடுகளில் மக்கள்தொகை ஏராளமாகப் பெருகிவருவதால் பஞ்சமும் வறுமையும் இருந்து வருவதும் உண்மையாகும்.

கொள்கையளவில் மார்ஷல், இலி, பேட்டன், டாசிக் போன்ற பல பொருளாதார நிபுணர்கள் தங்களின் கொள்கைகளுக்கு மால்தஸின் மக்கள்தொகைக் கொள்கையை அடிப்படையாக அமைத்துள்ளார்கள். சார்லஸ் டார்வின் என்ற விஞ்ஞானியும் தம்முடைய பரிணாமக்கொள்கையில் மால்தஸின் கொள்கையைக் கடைப்பிடித்துள்ளார். எல்லோருக்கும் எப்போதும் பொருந்தக் கூடிய கொள்கை என வாக்கர் அவர்கள் இக்கோட்பாட்டைப் புகழ்ந்துள்ளார்கள். மால்தஸின் முடிவு யாதெனில் தடையின்றி மக்கள் வளர்ந்தால் உலகம் தாங்காது என்பதாகும். "அவருடைய ஆதாரங்களையும் புள்ளிவிவரங்களையும் குறை கூறினாலும், அவற்றின் உட்கருத்தைக் குறைகூற இயலாது" எனப் பேராசிரியர் வாக்கர் கூறியுள்ளார். முடிவாக இக்கோட்பாட்டின் தராதரத்தைப் பேராசியர் கிளார்க் வாயிலாகத் தெரிந்துகொள்வோம்: "மால்தஸின் கோட்பாடு பலமுறை எதிர்க்கப்பட்டதிலிருந்தே அஃது உண்மை என்பது வெளிப் படை" என அழகுபடக் கூறியுள்ளார்கள். இன்று உலகில் எல்லா நாடுகளும் செயற்கை முறையில் மக்கட் பெருக்கத்தைக் குறைக்க முயல்வதற்குப் பல காரணங்களிருந்தாலும் முக்கியமாக தாங்கள் பெற்றுள்ள வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதுதான் அடிப்படைக் காரணமாகவே இருக்கிறது. ஆக, மால்தஸ் கூறியதைப்போல் மக்கள் தவிர்ப்புத்தடைகளைப் பயன்படுத்து

கின்றனர். மேலும், மால்தஸ் கூறியது போல மக்கள் சமுதாயம் பராமரிப்பு நிலையைக்காட்டிலும் நல்ல வாழ்வை அனுபவிக்க முடியாதென்பது தவறுதான். இருந்தாலும் அதிகமாக வளர்ந்து வரும் மக்கள்தொகை உலகுக்கு அதிர்ச்சி தருவதாக இருக்கிறது. வேலைப்பகுப்பு முறையைப் புகுத்தல், உற்பத்தித்திறனை அதிகப் படுத்தல், செல்வம், வருமானம், நல்லமுறையில் பங்கீடு செய்தல் போன்ற செய்கைகளினால் ஓரளவுக்கு வளர்ந்து வரும் மக்கள்தொகையினால் ஏற்படும் ஆபத்துகளைத் தவிர்க்கலாம் என்றாலும் நீண்டகாலத்தில் இம்முறைகள் பயன்தராமல் போகலாம். ஆகவே மால்தஸின் கொள்கை ஓரளவுக்கு உண்மை தான் என்பதை யாரும் மறக்கமுடியாது.

### மால்தஸின் கோட்பாடும் இந்திய மக்கள்தொகையும்

உலக மக்கள்தொகை 330 கோடிக்குமேல் என்றும் நாள் ஒன்றுக்கு 82,000 மக்கள் வீதம் பெருகிவருவதாகவும் புள்ளி விவரங்கள் வாயிலாக அறிகிறோம். அதே நேரத்தில் பெருகிவரும் மக்களுக்கு வேண்டிய அளவு உணவுப் பண்டங்கள் உலகில் விளையவில்லை என்பது திண்ணம். எனவே உலகில் பல நாடுகளில் மக்கள்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் உணவு இல்லாமல் பட்டினியாலும், பிணியாலும் அவதிப்படுகிறார்கள். இதற்குக்காரணம் அளவுக்கு மிஞ்சிய மக்கள்பெருக்கம் என்பதில் ஐயமில்லை. மால்தஸ் கூறிய விதியானது உலக மக்கள்தொகை யைப் பொறுத்த அளவில் உண்மையே. இந்தியாவில் மக்கள் தொகை 1–4–71 கணக்கின்படி 546 மில்லியன்கள்; 1961ஆம் ஆண்டில் மக்கள்தொகை 439 மில்லியன்கள். 10 ஆண்டில் மக்கள்தொகை 108 மில்லியன்கள் அதிகரித்துள்ளது. மக்கள் வளர்ச்சி சென்ற 10 ஆண்டில் 24·57 சதவிகிதமாகும். இவ்வளவு பெரிய மக்கள்தொகையைப் பேணுவதற்கு நம்மிடம் போதுமான உணவுப்பொருள்கள் இல்லை. ஆகவேதான் சென்ற சில ஆண்டு களில் உணவு இறக்குமதியைச் செய்துவந்தோம். பஞ்சம், உணவு பற்றாக்குறை, ரேஷன் முறை உணவுப்பொருள்கள் கட்டுப் பாடு, வேலையில்லாத் திண்டாட்டம், விவசாயத்தில் மக்கள் நெருக்கம், இடவசதியற்ற குடித்தனம், சமுதாயச் சச்சரவுகள் பூசல்கள், பள்ளிக்கூடங்களில் கல்லூரிகளில் இட நெருக்கடி, இரயில்கூட்டம், பஸ்ஸில் கூட்டம், சினிமா தியேட்டர்களிலும் ஓட்டல்களிலும் ஏராளமான கூட்டம் போன்ற பல நிகழ்ச்சி களையும், பிரச்சினைகளையும் காண்கிறோம். கோல்டுஸ்மித் கூறியதைப்போல் செல்வத்திரட்சியால் மனிதர் பாழாகவில்லை; மாறாக, மனிதரின் திரட்சியால் செல்வம் பாழாகும் நிலை ஏற்பட்டுள்ளது. இப்போதிருப்பதைப்போல் ஆண்டுதோறும் 2·5

சதவிகிதம் மக்கள்தொகை அதிகரித்தால் 1981ஆம் ஆண்டில் இந்தியாவின் மக்கள்தொகை 82 கோடியைத் தாண்டிவிடு மென்றும், நம்முடைய வருங்காலத் திட்டங்கள் எல்லாம் வெற்றி பெற்றாலும் உணவு உற்பத்தி 58 கோடி மக்கட்கே போதுமானதாக இருக்குமென்றும் புள்ளி விவரங்கள் வாயிலாக அறிகிறோம். ஆக, எதிர்காலத்தில் பஞ்சம், பட்டினி, பிணி, உணவு பற்றாக்குறை, குழப்பத்தாலும் ஏராளமான மக்கள் மடிவார்கள். மால்தஸ் கூறியபடி இயல்புத்தடைகள் மூலம் மக்கள்தொகை கட்டுப்படுத்தப் படும் என்பதில் சந்தேகம் இல்லை. இந்தச் சூழ்நிலையிலிருந்து இந்தியாவைக் காப்பாற்ற மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தியே ஆகவேண்டும். இதற்காகத்தான் குடும்பக் கட்டுப்பாடு முறைகளை இந்தியாவில் துரிதப்படுத்தவேண்டும். பொருளாதார முன்னேற்றத்தின் உச்சியை அடைந்துவிட்ட அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கு மால்தஸ் விதி ஒருவேளை பொருந்தாவிடினும் இந்தியா சீனா போன்ற நாடுகளுக்கு நிச்சய மாகப் பொருந்தும் என்பதில் சந்தேகமில்லை. ஆண்டுதோறும் மக்கள்தொகை உணவு உற்பத்தியைவிட அதிகமாக வளர்கிறது. மேலும், இந்தியாவில் உள்ள மக்களுக்கு இந்தியாவில் விளையும் உணவு தானியங்கள் போதவில்லை. அதிகமான மக்கள்தொகை யைக் கொண்டிருப்பதால் தலாவருமானம் குறைவு. அதன் காரணமாக வாழ்க்கைத்தரமும் குறைவாக உள்ளது. மேலும் குடும்பங்களின் எண்ணிக்கை அதிகரிக்கின்றன. ஒருவருடைய வருமானத்தைப் பலர் பங்கிட்டு வாழ வேண்டியுள்ளது. மக்களின் தரம், திறமை யாவும் குறைவாக உள்ளது. போதிய உணவு, உடை, இருக்க இடம் இல்லாமல் எத்தனையோ மக்கள் அல்லல் படுகிறார்கள். இயல்பான தடைகள் சில சமயம் செயல் படுவதையும் இந்தியாவில் காணலாம். பஞ்சம், பட்டினி, பிணி, குற்றங்கள், குழப்பங்கள் யாவும் நிகழ்கின்றன. ஆகவேதான் மால்தஸ் கோட்பாடு பொதுவாக பின்தங்கிய நாடுகளுக்குப் பொருந்தும் என்பதில் சந்தேகமில்லை. வளர்ந்த நாடுகளில் தவிர்ப்புத் தடைகளைப் பெரிதும் பின்பற்றி முன்னேறியுள்ளார்கள் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

# 34. உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு

லண்டன் பொருளாதாரப் பள்ளியைச் சேர்ந்தவர்களான எட்வின் கானன், கார் சாண்டர்ஸ் போன்றவர்களின் முயற்சியால் உருவாக்கப்பட்டது. உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு. இக் கோட்பாடு குறிப்பாக 1920 முதல் 1930 வரை உள்ள பத்தாண்டு களில் மிகவும் புகழ் பெற்றதாகும். இது மக்கள்தொகைக்கும் செல்வத்தின் உற்பத்திக்கும் உள்ள தொடர்பை விளக்கும். ஒரு நாட்டினுடைய மக்கள்தொகை நிலையானதல்ல. இது உத்தம மக்கள்தொகையின் எண்ணிக்கைக்கு மேலும் போகலாம், கீழும் போகலாம்; உத்தம மக்கள்தொகை என்றால் ஒரு நாட்டிற்கு உகந்த, விரும்பத்தக்க, பொருத்தமான மக்கள்தொகையின் அளவைக் காட்டும்; உச்ச தலாவருமானம் கிடைக்கும்; அதுவே சரியான நியாயமான மக்கள்தொகையாகும். அந்த நாட்டில் கிடைக்கக் கூடிய உண்மையான தலா வருமானம் உச்சக்கட்டத்தில் இருக் கும். உத்தம மக்கள்தொகை என்பது மிக உயர்ந்ததும் அல்ல, மிகக்குறைந்ததும் அல்ல. அது சரியான எண்ணிக்கை, பொருத்த மான அளவைத்தான் எடுத்துக்காட்டும். ஒரு நாட்டின் மக்கள் தொகை உத்தம மக்கள்தொகையைவிடக் குறைவாக இருந்தால் நாட்டினுடைய வளங்களை முழு அளவிற்குப் பயன்படுத்த மக்களின் அளவு போதாது. ஆகவே தலா வருமானம் உச்சக் கட்டத்தைவிடக் குறைவாக இருக்கும். இந்த நிலைக்குக் குறைவான மக்கள்தொகை எனப்பெயர். ஒரு நாட்டினுடைய மக்கள்தொகை உத்தம மக்கள்தொகையைவிட அதிகம் இருந்தால், அப்போதும் தலா வருமானம் குறைவாகவே இருக்கும். ஏனெனில் அதிகப் படியான மக்கள் இருக்கப்பட்ட வளங்களைத் திறமையாகப் பயன் படுத்தி, அந்த வருமானத்தை இந்த அதிகப்படியான மக்களுக்குப் பகிர்தல் வேண்டும். அதன் காரணமாகத் தலா வருமானம் குறை கிறது. இந்த நிலைக்கு அதிக மக்கள்தொகை எனப்படும்.

உத்தம மக்கள்தொகை என்பது அந்த நாட்டினுடைய வளங்களுக்கு ஏற்றவாறு தீர்மானிக்கப்படுவதாகும்; உணவு அளிப்புக்கு ஏற்றவாறு அல்ல. மக்க தொகை இந்த உத்தம மக்கள்தொகையின் எண்ணிக்கை அதிகரிக்கலாம். உத்தம மக்கள் தொகை மாறுபடக்கூ யது. நாட்டிலுள்ள வளங்களை முன்னேற்றத் திட்டங்களை கொண்டு அதிகப்படுத்தும்போது, அப்போது அந்த நிலையும் பெரும். வளங்கள் குறையும்போதும், சண்டை சச்சரவு, வெள் , புயல் இவற்றினுல் குறைந்தாலும் உத்தம மக்கள்தொகை அ பாது குறையும்.

கானன் என்பவர் மால்தஸைப்போல் மக்கள்தொகையை உணவு உற்பத்தியோடு ஒப்பிட்டுப் பார்க்காமல் நாட்டின் எல்லா விதமான வளத்தோடும் ஒப்பிட்டுப் பார்த்து உச்சநிலைத்தலா வருமானத்தைக் கொடுக்கக்கூடிய மக்கள்தொகையை உத்தம மக்கள்தொகை எனக் குறிப்பிடுகிருர். குறிப்பாகச் சொன்னுல் மற்றவை மாருமலிருக்கும்போது ஒரு நாட்டின் சரியான சீரான அளவு மக்கள்தொகையை உத்தம மக்கள்தொகை எனப்படும். மக்கள்தொகை இந்த எல்லையைத் தாண்டினுல் அமித அல்லது அதிக மக்கள்தொகை எனவும், இதைவிடக் குறைவாக இருந்தால் அப்போது போதா அல்லது குறைவான மக்கள்தொகை எனவும் கூறலாம். உத்தம அளவிற்குக் குறையும்போதும், கூடும் போதும் மக்களின் தலாவருமானம் குறைவதைக் காணலாம். எனவே உத்தம மக்கள்தொகை தன் அளவில் நிலைத்து நின்ருல் மக்களின் தலா வருமானம் உச்சநிலையை அடையும். உச்சநிலைத் தலா வருமானத்தைப் பெறச் சில நிபந்தனைகள் மாருமல் இருக்க வேண்டும். முதலில் நாட்டின் வளங்களெல்லாம் முற்றிலும் பயன் படுத்தப்பட்டிருக்க வேண்டும். நாட்டுமக்களின் கல்வி, அறிவு, அவர்களின் வயது பிரிவு, உழைப்பவர்களின் உடல்நிலை, உள நிலை, பண்டங்களின் தேவை, முதலீடு போன்றவை நிலையாக மாருமல் இருக்கவேண்டும். இவற்றில் ஏதாகிலும் ஒன்றில் சிறிதளவுகூட மாருதிருக்க வேண்டுமென எதிர்பார்ப்பது தவறு. இவை எப்பொழுதும் இயங்கிக் கொண்டிருப்பதனுல் உத்தம அளவு மக்கள்தொகையும் மாறிக்கொண்டே இருக்கும்.

நாட்டில் இருக்கிற உற்பத்திச் சாதனங்களையும் கச்சாப் பொருள்களையும் நல்ல முறையில் பயன்படுத்தி அதிகமாக உற்பத்தி செய்யும் மக்கள்தொகையே உத்தம மக்கள்தொகை எனப்படும். ஆகவே எந்த அளவில் மக்கள் உயர்ந்தநிலைத் தலாவருமானத்தை அடைகிருர்களோ அந்த அளவை உத்தம மக்கள்தொகை எனலாம். நாட்டிலுள்ள மக்கள்தொகையின்

அளவு உத்தம மக்கள்தொகையைவிடக் குறைவாக இருந்தால், அப்போது மக்கள்தொகை அதிகரித்தால் உற்பத்தியின் அதிகரிப்பு மக்கள்தொகை அதிகரிப்பைக்காட்டிலும் மிகுதியாக இருக்கும். அதனால் தலாவருமானம் அதிகரித்துக்கொண்டே செல்லும். குறிப்பாக, புதிதாக மக்கள் குடியேறும் நாடுகளில் இதுபோல நிகழலாம். பயன்படுத்தவேண்டிய நிலம், மூலப்பொருள்கள், வளங்கள் யாவும் மக்கள்தொகை குறைவாக இருப்பதன் காரணமாக முழுமையான அளவில் பயன்படுத்தப்பட முடியாதாகையால், மக்கள்தொகை அதிகரிக்கும்போது தலாவருமானமும் உயர்ந்துகொண்டே செல்லும். மேலும் மக்கள்தொகை அதிகரிக்கும்போது வேலைபகுப்புமுறை, சிறப்புத் தேர்ச்சி முதலியவற்றைப் புகுத்த நல்ல வாய்ப்புகள் ஏற்படும். அதன் காரணமாக அதிக உற்பத்தியும், அதிக வருமானமும் ஏற்படும் ஆனால் உத்தம மக்களின் அளவைவிட மக்கள்தொகை மேலும் அதிகரிக்கும்போது உற்பத்தியில் ஏற்படும் அதிகரிப்பு மக்கள் தொகை அதிகரிப்பைக் காட்டிலும் குறைவாகவே இருக்கும். அதாவது மக்கள் அதிகமாகவும், பயன்படுத்துவதற்குத் தேவையான நிலம், மூலதனம் பற்றாக்குறையாகவும் இருக்கும். இதனால் வேலையின்மை, உணவுப்பொருள்கள் பற்றாக்குறை, வருமானக் குறைவு போன்ற எல்லாவிதமான துன்பங்களும் ஏற்படும். உழைப்பாளர்களின் இறுதிநிலை உற்பத்தி பூஜ்ய நிலையை அடைவதால் அங்கு மறைமுக வேலையின்மை அதிகரிக்கும். அதனால் தலா வருமானம் குறையத்தொடங்கும். எனவே உத்தம மக்கள்தொகை சிறப்பானதாகும்.




OX அச்சில் மக்கள்தொகையின் அளவும், OY அச்சில் தலாவருமானமும் குறிப்பிடப்பட்டுள்ளன. $OM_1$, $OM$, $OM_2$ என்ற மூன்று மக்கள்தொகை அளவில் தலா உற்பத்தி முறையே $M_1P_1$, $MP$, $M_2P_2$ ஆக உள்ளன. OM அளவுதான் உத்தம மக்கள்

தொகை; MP தான் உச்ச தலாவருமானத்தைக் காண்பிக்கிறது. $OM_1$ குறைவான மக்கள்தொகையையும், $OM_2$ அதிகமான மக்கள்தொகையையும் காண்பிக்கின்றன. APR என்ற தலா வருமானக்கோட்டில் P என்ற புள்ளியில் மட்டும்தான் தலா வருமானம் உச்சக் கட்டத்திலிருக்கிறது. உத்தம மக்கள்தொகை யாக இருக்கும்போது தலா வருமான வளைவு கோட்டில் தலா வருமானம் உச்சநிலையான Pயை அடைகிறது.




OX அச்சில் மக்கள்தொகையின் அளவும், OY அச்சில் தலா வருமானமும் குறிப்பிடப்பட்டுள்ளன. APR என்ற கோடு முதலில் குறிப்பிட்டபடி தலா வருமான வளைவு கோடாகும். அதில் P என்ற புள்ளி உச்சத்திலிருப்பதால் OM அளவு உத்தம மக்கள்தொகை அளவைக் குறிப்பிடுகிறது. எக்காரணத்தைக் கொண்டாவது மூலதனம், இயற்கைவளங்கள் உற்பத்தி முறைகளில் மாற்றங்கள் ஏற்பட்டால் அதனுல் தலா வருமானக் கோடு $A_1$, $P_1$, $R_1$ என்று குறைந்த நிலைக்கு வந்துவிட்டால் அப்போது உத்தம மக்கள்தொகையின் அளவு OMலிருந்து $OM_1$ ஆகக் குறைந்து விடுகிறது. அதைப்போல் தலாவருமானக்கோடு $A_2P_2R_2$ என உயர்ந்துவிடுமானுல் உத்தம மக்கள்தொகை அளவு OMலிருந்து $OM_2$ என்ற அளவுக்கு அதிகரித்துவிடுகிறது. இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது யாதெனில் உத்தம மக்கள்தொகை என்பது நிலையானது அல்ல; பல்வேறு சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாறுபடும்.

பேராசிரியர் மீடு (Prof. Mede) தந்துள்ள ஓர் உதாரணத்தின் மூலம் ஒரு நாட்டின் மக்கள்தொகை, தேசிய வருமானம், தலா

வருமானம், இறுதி நிலை வருமானம் ஆகியவற்றின் மாறுதல்கள் கீழே தரப்பட்டுள்ளன:

### அட்டவணை 85

| மக்கள்தொகை (கோடியில்) | தேசியவருமானம் (கோடியில்) | தலா வருமானம் | இறுதிநிலை வருமானம் |
|---|---|---|---|
| 3 | 150 | 50 | — |
| 4 | 240 | 60 | 90 |
| 5 | 350 | 70 | 110 |
| 6 | 480 | 80 | 130 |
| 7 | 630 | 90 | 150 |
| **8** | **720** | **90** | **90** |
| 9 | 765 | 85 | 45 |
| 10 | 800 | 80 | 35 |
| 11 | 825 | 75 | 25 |
| 12 | 840 | 70 | 15 |

பேராசிரியர் மீடு தந்துள்ள உதாரணத்தில் முதலில் ஏற்படும் மக்கள்தொகைப் பெருக்கத்தால் தேசியவருமானம், தலா வருமானம், இறுதிநிலைவருமானம் ஆகியவை அதிகரிப்பதைக் காண்கிறோம். 8 கோடி மக்களைக் கொண்ட இந்த நாட்டில் மக்களின் தலாவருமானம் ரூ 90/– ஆகும். இதைவிட மக்கள் தொகை அதிகரித்தால் அமித மக்கள்தொகை ஏற்பட்டுத் தலா வருமானம் குறைகிறது. 8 கோடியிலிருந்து மக்கள்தொகை குறைந்தால், போதா மக்கள்தொகை ஏற்பட்டுத் தலாவருமானம் குறைகிறது. ஆகவே 8 கோடி மக்கள் இந்த நாட்டின் உத்தம மக்கள்தொகை எனப்படும். மேலும் இறுதிநிலை வருமானத்தைத் தலாவருமானத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தும் மக்கள்தொகையின் நிலையை அறியலாம். இறுதிநிலை வருமானம் தலாவருமானத்திற்குக் குறைவாக இருந்தால் அதிகப்படியான மக்கள்தொகை ஏற்பட்டுவிட்டதைக் குறிக்கும். இந்த உதாரணத்தில் இதன்படி 9 கோடி மக்கள் அமித மக்கள்தொகையைக் காட்டுகிறது.

இந்த நிலையில் இறுதிநிலை வருமானம் ரூ. 45 ஆக இருக்கும் போது தலாவருமானம் ரூ. 85–ஐவிடக் குறைவாக உள்ளது. தலா வருமானத்தைவிடக் கூடுதலாக இருந்தால் மக்கள்தொகை உத்தம மக்கள்தொகையின் அளவிற்கும் குறைவாக இருக்கும்.

உதாரணத்தில் 7 கோடி மக்கள் இருக்கும்போது தலாவருமானம் ரூ. 90 ஆகவும், இறுதி நிலை வருவாய் ரூ. 150/– ஆகவும் இருப்பதைக் காணலாம். ஆகவே உத்தம மக்கள்தொகையாக இருந்தால் இறுதிநிலை வருமானம், தலாவருமானத்திற்குச் சமமாக இருக்கும் எனலாம்.

நாட்டிலிருக்கும் மக்கள்தொகையின் அளவு உத்தம மக்கள் தொகை அளவிலிருந்து எவ்வளவு தூரம் மாறுபட்டிருக்கிறது என்பதைக் கணக்கிட டால்டன் அவர்கள் ஒரு வாய்பாட்டினை வகுத்துள்ளார்:

$$M = \frac{A-O}{O}$$

A நடப்பு மக்கள்தொகையையும், O உத்தம மக்கள்தொகையையும், M மக்கள்தொகைப் பொருத்தமின்மையின் வீதத்தையும் குறிக்கின்றன. M எதிர்மறையிலிருந்தால் அந்த நாடு போதா மக்கள்தொகையைக் கொண்டிருக்கிறதென்றும் M நேர்க்கணியமாக இருந்தால் அந்த நாடு அமித மக்கள்தொகையைக் கொண்டிருக்கிறதென்றும் அறியலாம். ஒரு நாட்டின் பல ஆண்டுகளின் தலா வருமானத்தைக் கணக்கிட்டுப் பார்ப்பதன் மூலமாக, மக்களின் அளவைக் கணக்கிடலாம். தலாவருமானம் குறைந்துகொண்டே செல்லுமாயின் மக்கள் உத்தம அளவுக்கு அதிகமாக இருக்கிறார்கள் என்றும், தலா வருமானம் உயர்ந்துகொண்டே சென்றால் உத்தம அளவுக்குக் குறைவாக இருப்பதாகவும் கருதலாம். டால்டன், ராபின்ஸ் ஆகிய இரு பேராசிரியர்களும் உத்தம மக்கள்தொகையின் அளவைத் தலா வருமானத்தின் அடிப்படையிலும், சமுதாயம் பெறும் நன்மைகளினாலும் விளக்கியுள்ளார்கள். தலாவருமானம் உச்சக்கட்டத்தை அடையும்போதுதான் உத்தம மக்கள்தொகையின் அளவு தீர்மானிக்கப்படுகிறது எனப் பேராசிரியர் டால்டன் கூறியுள்ளார்கள். ஆனால் பேராசிரியர் ராபின்ஸ் அவர்கள் தலா வருமானம் கொஞ்சம் குறைவாக இருந்தாலும் மொத்தத்தில் ஒவ்வொருவரும் லாபகரமான தொழில்களிலும், வருமானம் தரக்கூடிய தொழில்களிலும் ஈடுபட்டு சமுதாய உச்சநிலை நன்மையைப் பெற்றால் அந்த நிலைதான் உத்தம மக்கள்தொகை எனக் கூறியுள்ளார்கள்.

**உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டின் குறைகள்:** இக்கோட்பாடு சில காலம்தான் புகழ்பெற்று இருந்தது. ஆனால் பின்னர் பல்வேறு காரணங்களால் இக்கோட்பாட்டை நிராகரித்தார்கள். முதலில் எளிதாக உத்தம மக்கள்தொகையைக் கணக்கிட இயலாது. மக்களைக் கூட்டியோ, குறைத்தோ பார்ப்பதற்கான

வாய்ப்புகள் இல்லை. மேலும் ஒரு நாட்டின் தலாவருமான வளர்ச்சி மக்கள்தொகையைமட்டும் பொறுத்ததென்பது தவறு. அம்மக்களின் உழைக்கும் திறன், ஆண் பெண் விகிதாசாரம், வயதுப் பிரிவினை போன்ற பல காரணிகளையும் கணக்கில்கொள்ள வேண்டும். நாட்டின் மூலதனம், உற்பத்தி முறைகள் அடிக்கடி மாறிக்கொண்டே இருப்பதால் உத்தம மக்கள்தொகையும் அடிக்கடி மாறிக்கொண்டே இருக்க நேரிடும். ஆகவே இதுதான் உத்தம மக்கள்தொகை எனத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. மேலும் எத்தகைய பொருளாதாரக் கொள்கையும் உருவாக்க முடியாது. இக்கோட்பாடு அந்த அளவுக்குப் பயன்படாது. உத்தம அளவையும், உத்தம அளவிலிருந்து ஒரு நாட்டின் மக்கள் தொகை எந்த அளவுக்கு வேறுபட்டு இருக்கிறதென்பதையும் நடைமுறையில் அளவிடுதல் இயலாது. உத்தம அளவு மக்கள் தொகை ஒரு நிரந்தரமான நிலை அன்று. விஞ்ஞான வளர்ச்சி, நுட்ப அறிவு முன்னேற்றத்தாலும், இயற்கை வளங்களை மேலும் கண்டுபிடிப்பதாலும் உத்தம மக்கள்தொகை மாறுவது இயல்பு. திடீரென்று புதிய கனிவளங்கள் கண்டுபிடிக்கப்பட்டால் உத்தம மக்கள்தொகை போதா மக்கள்தொகையாக மாறலாம். இன்னும் இயந்திரங்களை உற்பத்தியில் புகுத்துவதனுல் மக்கள்தொகை அதிகமாகி அமித நிலையை அடையலாம்.

இக்கோட்பாட்டில் குறைகள் இருந்தாலும் ஒருவிதத்தில் இது சிறப்புடையதாகும். நாட்டின் செல்வத்தோடு, இயற்கை வளங் களோடு ஒப்பிட்டுப்பார்க்கையில் மால்தஸ் கோட்பாட்டைவிட இது சிறப்பாகத் தோன்றுகிறது. மேலும், மால்தஸ் எதிர்காலத்தை ஆபத்தாகவும், அதன் துன்பத்தையும் பற்றி அதிகமாகக் கூறினுர் கள். ஆனுல் இக்கோட்பாடு உச்சநிலைத் தலா வருமானம் நல்ல தாகவும் எதிர்காலத்தை எண்ணுகிறது. இது திடமான கருத்தைக் கொண்டது. இக்கோட்பாடு அமித மக்கள்தொகையைச் சாப மெனக் கூறவில்லை. நாட்டின் வளங்கள் முழுவதும் பயன்படுத்தப் படும்வரையில் வளர்ந்து செல்லும் மக்கள்தொகையை வரவேற்க வேண்டியதுதான் எனக் கானன் கூறுகிறுர்கள். இக்கோட் பாட்டின்படி இந்தியாவின் வளங்கள் சரிவரப் பயன்படுத்தப் பட்டால் நமது நாடு அதிகமான மக்கள்தொகையைக் கொண்ட தாகக் கூறமுடியாது. ஆகவேதான் உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு நவீன கோட்பாடாகக் கருதுகிறேம்.

குறைந்துவரும் மக்கள்தொகையின் விளைவுகள்: இந்தியாவில் மக்கள்தொகை அதிகமிருப்பதால் மக்கள்தொகை குறைந்தால் நல்லது எனக் கருதலாம். ஆனுல் மக்கள்தொகை குறைந்தால்

அது நல்லதல்ல. குறிப்பாக வளர்ச்சி பெற்று செல்வம் கொழிக்கும் நாடுகளில் மக்கள்தொகை குறைந்தால் பல்வேறு விளைவுகள் ஏற்படலாம். மக்கள்தொகை குறையும்போது உறுதித்தேவை, அதாவது திறனுள்ள தேவையின் அளவு குறையும். தேவை இல்லை யென்றால் உற்பத்தி அதிகரிக்காது. பண்டங்களும் பணிகளும் குறைவான அளவிலேயே தேவைப்படுவதால் உற்பத்தியின் அளவு குறையும். அதனால் மக்களின் வருமானமும் குறையும். உற்பத்தி குறைந்துகொண்டே சென்றால் எல்லோருக்கும் வேலை வாய்ப்பு அல்லது வேலை நிறைவு அடையமுடியாது. அந்த நிலையையும் பாதுகாக்க முடியாது. மக்கள்தொகை குறைந்து வருவதால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருக வாய்ப்புகள் ஏற்படும். குறிப்பாக நிலைமாற்ற வேலையின்மை தொழில்களில் ஏற்படும். ஆகவே குறைவான மக்கள்தொகை குறைவான தேவையை உண்டாக்கும். குறைவான தேவை, குறைவான உற்பத்தி, அதனால் குறைவான வேலை வாய்ப்புகள் ஏற்படுகின்றன. உற்பத்தியும், வேலையில்லாத் திண்டாட்டமும் மக்களின் வருமானத்தைக் குறைத்து நாட்டின் வருமானத்தையும் குறைக்க வழி செய்யும். கடைசியாக பொருளாதாரம் சரிந்து மந்த நிலையை அடையும். ஆகவேதான் பேராசிரியர் ஹான்சன் அவர்கள் முன்னேற்றம் அடைந்த நாடுகளில் மக்கள்தொகை வளர்ந்துகொண்டே போவது மிகவும் நல்லதெனக் குறிப்பிட்டுள்ளார்கள். இனி உத்தம மக்கள் தொகை அளவைக்காட்டிலும் மக்கள்தொகை குறைவாக இருந்தால் அதனால் ஏற்படும் விளைவுகள் சிலவற்றையும் ஆராய்வோம்.

உற்பத்திக் காரணிகளின் தொகுப்பு உத்தம அளவிலிருந்தால் தான் உற்பத்தி உச்சநிலையை அடையமுடியும். அதற்குக் காரணிகளின் அளிப்பு தாராளமாகவும் விரைவாகவும் கிடைக்க வேண்டும். மக்கள்தொகை குறைவாக இருந்தால், உழைக்கும் மக்களின் எண்ணிக்கையும் குறைந்து உழைப்பின் அளிப்பும் குறைகின்றன. ஆகவே உற்பத்தியின் அளவும் குறையலாம். மேலும், உழைப்பின் அளிப்பு குறைவதால் பேரளவு உற்பத்தி செய்யமுடியாமல் போகலாம். இப்போதுள்ள நவீன உற்பத்தி முறையில் வேலை பகுப்புமுறை, சிறப்புத் தேர்ச்சி யாவும் தவிர்க்க முடியாததாகும். அத்தகைய சிறப்புத் தேர்ச்சிக்கான வாய்ப்பும் வசதியும் மக்கள்தொகை குறைவதால் ஏற்படுகின்றன. ஆகவே நாட்டில் மக்கள்தொகை குறைவாக இருப்பதால் அதன் காரணமாக சிறப்புத் தேர்ச்சியும், பேரளவு உற்பத்தியும் ஏற்படாமல் பாதிக்கப்படுகின்றன. மேலும் மூலப்பொருள்களை நன்முறையில் பயன்படுத்தி உற்பத்தியைத் துரிதப்படுத்தியும் நாட்டின் செல்வ நிலையை உயர்த்தமுடியாமல் போகலாம்.

**அமித மக்கள் இருப்பதால் ஏற்படும் விளைவுகள்:** உத்தம மக்கள் தொகையின் அளவுக்குமேல் மக்கள்தொகை இருப்பின் அதனால் ஏற்படும் விளைவுகள் சிலவற்றைக் காணலாம். அதிக மான மக்கள்தொகையைக்கொண்ட நாடுகளில் வேலையின்மை மிக முக்கிய பிரச்சினையாக உள்ளது. அனைவருக்கும் வேலை வாய்ப்பு ஏற்பட வழி செய்தாக வேண்டும். இது எளிதான காரியமும் அல்ல. உழைப்பின் அளிப்பு அதிகமாக இருக்கும் போது பிற காரணிகளின் அளிப்பில் தராதரப் பற்றாக்குறை ஏற்படுகிறது. குறைந்த அளவில் உள்ள பிற உற்பத்திக் காரணி களோடு மிகுதியான அளவு உழைப்பைப் பயன் படுத்தும்போது உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித்திறன் மிகவும் குறைந்து விடலாம். ஆகவே மக்கள்தொகை அதிகமிருப்பதால் அதன் அளிப்பு அதிகரிக்க உழைப்பின் உற்பத்தித்திறன் குறைந்து விடலாம். உழைப்பின் அளிப்புக்கேற்பப் பிற காரணிகளின் அளிப்பையும் அதிகரிக்கலாம் என்றால் அதுவும் இயலாது. உதாரணமாக நிலத்தின்அளவை அதிகரிக்க முடியாது. மக்கள் தொகை அதிகரிக்கும்போது உணவு, உடை, வீட்டுவசதிகள், கல்விவசதிகள், மருத்துவ வசதிகள், சுகாதாரவசதிகள் எல்லா வற்றையும் மிக வேகமாக அதிகரிக்கவேண்டும். இதற்குத் தேவையான உற்பத்தியை அதிகரிக்க வேண்டும். இல்லாவிடில் நாட்டில் பஞ்சம், பட்டினி பிணி போன்ற கொடிய நோய்களும், பிரச்சினைகளும் தோன்றும். எங்கும் பற்றாக்குறைதான் ஏற்படும்.

**மால்தஸின் கோட்பாட்டிற்கும் உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டிற்கு முள்ள ஒற்றுமை வேற்றுமைகள்:** இவ்விருகோட்பாடுகளும் குறைந்து செல்விளைவு விதியினை அடிப்படையாகக் கொண்டுள்ளன. மால்தஸ் உணவு உற்பத்தியில் குறைந்து செல்விளைவு விதி செயல்படுவதால் உணவின் உற்பத்தி வேகம் மெதுவாகச் செல்கிறது என்றும், கானன் தலாவருமானத்தில் குறைந்த விளைவு ஏற்படுவதைப்பற்றியும் விளக்கியுள்ளார்கள். ஆனால் மால்தஸ் உணவு உற்பத்தியைமட்டும் மக்கள்தொகையோடு ஒப்பிட்டு விதியை வகுத்தார். கானன் இயற்கை வளங்கள் எல்லா வற்றோடும் மக்கள்தொகையை ஒப்பிட்டு விதி அமைத்தார். மால்தஸ் மக்கட்கோட்பாட்டில் மக்கள்தொகைக்கு ஓர் உச்ச வரம்பு செய்யப்பட்டது. அதிகமாக, தேவைக்குமேல் அதிகரிக்கும் மக்கள்தொகை இயல்புத் தடைகளால் குறைக்கப்படுவதாகக் கூறினார். கானன் கோட்பாட்டில் ஒரு நிலையான அளவு மக்கள் தொகையைப்பற்றி யாதொன்றும் கூறவில்லை. நாட்டு வளங்கள் நன்முறையில் பயன்படுத்தப்படுவதால் உத்தம மக்கள்தொகை யின் அளவு அவ்வப்போது மாறுபடும் எனக் கூறியுள்ளார்.

பொருளாதார முன்னேற்றத்திற்குத் தகுந்தவாறு உத்தம மக்கள் தொகையின் அளவும் மாறுபடும். பேராசிரியர் R. N. சாட்டர்ஜி அவர்கள் இரு கோட்பாடுகளையும் ஒப்பிட்டுப் பேசுகையில் "மால்தஸ் எப்பொழுதும் பொருளாதார நரகத்தைப்பற்றியே பயந்து கொண்டிருந்தார். ஆனால் உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டினைப் புனைந்தவர்கள் மோட்சத்தை அடையலாம் என்ற நம்பிக்கை உள்ளவர்களாக உயர்ந்திருக்கிறார்கள்" என அழகான முறையில் கூறியுள்ளார்கள். அதாவது சுருங்கக் கூறினால் மால்தஸின் வழி சோர்வு மனப்பாங்கினதாகவும், கானனின் வழி திட மனப்பாங்கினதாகவும் காணப்படுகின்றன. மால்தஸ் தம் கோட்பாட்டில் நுகர்ச்சிக்குத்தான் சிறப்பிடம் அளித்துள்ளார். அதாவது மக்களின் உணவுக்குத்தான் முக்கியத்துவம் கொடுத்துள்ளார். ஆனால் கானனின் கோட்பாட்டில் ஆக்கத்திற்குதான் சிறப்பிடம் அளிக்கப்பட்டுள்ளது. தலா வருமானம் உச்சநிலையில் இருக்கும்போது நாட்டின் உத்தம மக்கள்தொகையின் எண்ணிக்கை தீர்மானிக்கப்படுகிறது என்றால் உற்பத்திக்கு எந்த அளவுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டுள்ளது என்பது புலனாகும். இன்றைய உலகில் மக்கள்தொகை பெருகிவரும் வேகத்தைக் கண்ணுற்றால் மால்தஸின் கோட்பாடே சிறந்தது எனத்தோன்றுகிறது. டாக்டர் சந்திரசேகர் சில தந்துள்ள புள்ளிவிவரங்களைப் பயன்படுத்தி இதை நன்கு தெரிந்துகொள்ளலாம். கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்து உலக மக்கள்தொகை நிதானமாகப் பெருகிப் பின்னர் வேகமாகப் பெருகியதையும் கீழேயுள்ள புள்ளி விவரங்களிலிருந்து அறியலாம்:

| | மக்கள்தொகை | இடைவெளி |
|---|---|---|
| கி.பி. முதல் நூற்றாண்டு | 1,25,000 | |
| கி.பி. 1850ஆம் ஆண்டில் | 100கோடி | 1,850ஆண்டுகள் |
| கி.பி. 1925 ,, | 200கோடி | 75 ,, |
| கி.பி. 1960 ,, | 300கோடி | 35 ,, |
| கி.பி. 1967 ,, | 330கோடி | 7 ,, |
| கி.பி. 2,000 (ஊகம்) | 640கோடி | 34 ,, |

இந்தப் புள்ளி விவரங்களில் கால இடைவெளியைக் கவனிக்கவும். சுமார் 1 லட்சம் மக்கள் 100 கோடியாகப் பெருக 1850 ஆண்டுகள் ஆயின. ஆனால் 100 கோடி மக்கள் 200 கோடியாகப் பெருக 75 ஆண்டுகள் ஆயின. பின்னர் 200 கோடியிலிருந்து 35 ஆண்டுகளில் 300 கோடியாக மாறிய மக்கள்தொகை இன்னும் 34 ஆண்டுகளில் 640 கோடியாகப் பெருகுமெனக் கணக்கிடப்படுகிறது. இவ்வளவு விரைவில் பெருகி

வரும் மக்கள்தொகைக்கேற்ப உணவு உற்பத்தி செய்ய முடியாது. ஆகவேதான் மால்தஸின் கோட்பாடு நிரூபிக்கப்படும் காலம் வந்து விட்டதெனலாம்.

நாட்டில் பிழைப்பு மட்டத்தைக் காட்டிலும் மக்கள்தொகை அதிகரித்தால் துன்பமும், துயரமும் பெருகும் என்று மால்தஸ் குறிப்பிட்டுள்ளார். ஆனால் உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டின்படி உத்தம அளவு நிலையானதல்ல; நாட்டின் இயற்கை வளம், மூலதனம், கச்சாப் பொருள்கள் போன்ற பல காரணிகளின் அளவுக்கேற்ப மாறக்கூடியது. சண்டை, சச்சரவு, பஞ்சம், பிணி ஆகியவை அதிக மக்கள்தொகைக்கு அடையாளங்கள் என்று மால்தஸ் குறிப்பிட்டார். ஆனால் இத்தகைய கொடுமைகள் இல்லாமல் அதிகமான மக்கள்தொகை இருக்க முடியும் என்பது உத்தம மக்கள்தொகையின் சிறந்த அம்சமாகும். எங்குத் தலா வருமானம் குறைந்துகொண்டே செல்கிறதோ அங்கு அதிக மக்கள் இருப்பதாகக் குறிப்பிடலாம் என்பது இதன் கருத்து. உத்தம மக்கள்தொகைக் கொள்கை பல ஆண்டு காலங்களில் வாழும் மக்களைப்பற்றிப் படிப்பதால், அது இயங்கு நிலைக்கொள்கை என்றும், நாட்டு வளர்ச்சியில் குறிப்பிட்டதொரு காலத்தில் மட்டும் உள்ள மக்களைப்பற்றி மால்தஸ் குறிப்பிட்டுள்ளபடியால் இக்கோட்பாட்டை நிலையான கோட்பாடு என்றும் கூறலாம்.

மால்தஸ் கோட்பாட்டிலிருந்து மேலும் முன்னேற்றம் அடைந்ததுதான் உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு. மால்தஸ் மக்களின் எண்ணிக்கையைப் பெரியதாகக் கொண்டார். ஆனால் பேராசிரியர் செலிக்மென் மக்களின் பிரச்சினை மக்களின் அளவைப் பொறுத்தது அல்ல என்பதோடு திறமையான உற்பத்தி, சமமான பங்கீடு இவற்றைத்தான் மிக முக்கியமாக வலியுறுத்தி உள்ளார். உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு இந்தப் பிரச்சினையை எண்ணிக்கையிலும் தரத்திலும் ஆராய்கிறது. மக்களின் அளவை இயற்கையின் வளங்களுக்கேற்றவாறு தீர்மானித்தல் வேண்டும். மால்தஸ் பிறக்கும் குழந்தைகளின் கைகளை விட்டுவிட்டு வாய்களை மட்டும் எண்ணினார். ஆனால் உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு இந்த இரண்டு அம்சங்களிலும் கவனம் செலுத்தியுள்ளது. உற்பத்தி திறமையாகவும், வருமானப் பங்கீடு சமமாகவும் இருந்தால் ஒரு நாடு அதிகமான மக்கள்தொகையைச் சமாளிக்க முடியும். மால்தஸ் அவர்கள் அதிகமான மக்கள்தொகை வளர்வதால் நாட்டில் உண்டாகக்கூடிய கொடுமைகளை எண்ணினார். ஆனால் உத்தம மக்கள்தொகைக்கோட்பாடு அதுபோல எந்த விதமான உச்ச அளவையும் தீர்மானிக்கவில்லை.

மால்தஸ் மக்கள்தொகை அதிகரிப்பு கெட்டதாகவும், மனிதனின் மகிழ்ச்சிக்கு ஆபத்தானதாகவும் கருதினர். ஆனால் உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு அதிகரிப்பை எப்போதும் நல்லதாகவும், கெடுதலாகவும் நினைக்கவில்லை. மக்கள்தொகை அதிகரிப்பு நல்லது; ஏனெனில் அது வேலைப்பகுப்பை அதிகரிக்கும்; அதனால் தலா உற்பத்தியும் பெருகும். உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு சரியான நோக்கத்தோடு மக்கள் பிரச்சினையை அணுகு கிறது. அதே நேரத்தில் மக்களின் பயத்தையும் குறைக்கிறது. மால்தஸ் கோட்பாடு பிடிவாதமான பழைய கருத்தைக்கொண்டது. உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு புதிய வடிவில் மக்கள் தொகைப் பிரச்சினையை ஆராய்கிறது. மால்தஸ் உணவின்மீது தம் முழுக்கவனத்தையும் செலுத்தினர். அதற்காக மக்கள் தொகையையும் உணவின் அளிப்பையும் சம்பந்தப்படுத்தி விகிதத்தை நிலைநிறுத்தினர். இருப்பினும் அவர் முடிவுகள் தெளிவாகஇல்லை. இந்தவிகிதமானது மக்கள் தொகைக்கும் பொருளாதார வளங்களுக்கும் நிறுத்தப்பட வேண்டும். மால்தஸ் தனி நபரின் உணவு அடைதலை எடுத்துக் காட்டுகிறது. ஆனால் கானன் தனி நபர் வருமானத்தின் உச்சத்தை அடைவதைக் காட்டுகிறது மால்தஸ் பஞ்சம், பட்டினி, சண்டை நோய் இவை அதிக மக்களின் அறிகுறிகள் என்றார். உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டின்படி அதிகமான மக்கள்தொகை இருக்கலாம். ஆனால் தலா வருமானம் மக்கள்குறைப்பினால்தான் உயரும் என வலியுறுத்தப்பட்டுள்ளது. மால்தஸ் கோட்பாட்டை விட உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு உயர்ந்ததாக இருந்த போதிலும் இதிலும் குறைகள் இல்லாமல் இல்லை. இந்தக் கோட் பாடு மக்கள்தொகையில் உழைக்கும் மக்களின் எண்ணிக்கை, பொருளாதார வளங்கள், நுட்பஅறிவு நிரந்தரமாக உள்ளன என்ற தத்துவங்களை உடையது. ஆனால் வளரும் பொருளாதாரத்தில் இவை எல்லாமே மாறுபடும். ஆகவே உத்தம மக்கள்தொகையும் மாறுபடும்

# 35. உயிரியல் மக்கள்தொகைக் கோட்பாடு

அண்மையில் ரெயிமாண்ட் பேர்ல் (Roymond Pearl) என்ற விலங்கியல் நிபுணர் பிராணிகளின் இனப்பெருக்கத்தின் போக்கும் மனித சமூக இனப்பெருக்கத்தின் போக்கும் ஒரேவிதமான தன்மையுடையன என்ற முடிவுக்கு வந்துள்ளார். அவரது முடிவை அவர் அமைத்த லாஜிஸ்டிக் வளைவு கோட்டின் மூலமாக அறிந்து கொள்ளலாம். X அச்சில் காலத்தையும், Y அச்சில் மக்கள்தொகையையும் அளவிட்டால் மக்கள்தொகை வளர்ச்சியின் போக்கு கணித இயலில் பயன்படும் லாஜிஸ்டிக் வளைகோட்டின் வடிவினை உடையதாக இருக்கும். இது ஆங்கில எழுத்தான S மாதிரி இருக்கும்.




இந்த வளைவுகோடு முதலில் a-யிலிருந்து bவரை மிதமாக உயர்ந்து பின்னர் b-யிலிருந்து cவரை செங்குத்தாக உயர்ந்து மீண்டும் c-யிலிருந்து dவரை மிதமாக உயர்ந்து வருவதைக் காண்க. அழிந்துபோன பண்டை நாகரிகங்களில் பிறப்பு விகிதம் இறப்பு விகிதம் அதிகமாக இருந்தபடியால் மக்கள்தொகை

மிதமாக உயர்ந்தது. இது S கோட்டின் முதல் பகுதி. மால்தஸ் கூறியபடி இயல்புத்தடைகளால் மக்கள்தொகையைக் கட்டுப் படுத்திய காலம். பின்னர் விஞ்ஞான, நுட்ப வளர்ச்சி, சுகாதார ஆரோக்கிய வசதிகள் இவற்றில் முன்னேற்றம் அடைந்தபடி யாலும் புதிய மருத்துவ முறைகள், கண்டுபிடிப்புகள், மருந்து வகைகள் இவற்றினுலும் இறப்பு விகிதம் குறையத் தொடங்கியது. ஆனுல் பிறப்பு விகிதம் மாருதிருந்ததால் மக்கள்தொகை அதிகமாக, விரைவாகப் பெருகி வளர்ந்தது. இது S கோட்டின் இரண்டாம் பகுதியைக் காண்பிக்கிறது. அடுத்து விஞ்ஞான முன்னேற்றத்தால் அதிகநாள் வர்ழவும், ஆயுட்காலம் நீண்ட காலமாகவும் மாறியது. குடும்பக் கட்டுப்பாட்டைப் பின்பற்றியும், தவிர்ப்புத்தடைகளைப் பின்பற்றியும் மக்கள்தொகையின் வளர்ச்சி மீண்டும் மிதமான நிலையில் காணப்பட்டது. இந்த நிலையில் பிறப்பு விகிதமும், இறப்பு விகிதமும் குறைய ஆரம்பித்துள்ளன. இதை S கோட்டில் மூன்ருவது நிலை எடுத்துக்காட்டும். முன்னேற்றம் அடைந்த நாடுகள் பெரும்பாலும் வளைவு கோட்டின் மூன்ருவது கட்டத்தை அடைந்திருக்கின்றன. கிழக்கு நாடுகள் பெரும்பாலும் இரண் டாவது கட்டத்தில் உள்ளன. இக்கோடு மக்கள்தொகை வளர்ச்சியின் போக்கைத் தெரிந்துகொள்ள உதவுகிறதேயன்றி மக்கள்தொகையின் வளர்ச்சியின் காரணங்களைத் தெரிந்துகொள்ள உதவவில்லை.

அமெரிக்க நாட்டு உயிரியல் நிபுணர் பேராசிரியர் ரெயிமாண்ட் பேர்ல் தம்முடைய கோட்பாட்டை ஈக்களின் இனவிருத்தி முறையி லிருந்து ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்தார். ஈக்கள் முதலில் மிகவும் அதிகமான வேகத்தில் பெருகுவதையும், பின்னர் பெருகும் வேகம் குறைந்துகொண்டே செல்வதையும் ஒரு சில சமயங்களில் பெருகும் வேகம் எதிர்மறையில் செல்வதையும் கண்டார். வளரும் வேகம் குறைவாக இருந்தாலும் எண்ணிக்கையின் அளவு முன்பு இருந்ததைக்காட்டிலும் அதிகமாக இருப்பதைக் கண்டார். குறிப்பிட்ட நிலைக்குப்பின் அவை மீண்டும் மிக வேகமாக வளர்ச்சி பெறுவதையும், பின்னர் குறைந்த வேகத்தில் செல்லுவதையும் கண்ணுற்ருர். இதை அடிப்படையாகக்கொண்டு பேராசிரியர் பேர்ல் உயிரியல் மக்கள்தொகைக் கோட்பாட்டை உருவாக்கினுர். ஆகவேதான் குறிப்பிட்ட நாகரிக நிலையில் மக்கள் முதலில் மிக வேகமாகவும், பின்னர் குறைந்த வேகத்திலும் அதிகரிக்கின்ருர்கள். அடுத்த நாகரிகம் தோன்றினுல் மீண்டும் மக்கள் வேகமாக வளர்ச்சிபெற்றுப் பின்னர் குறைந்த வேகத்தில் வளர்ச்சி பெறு வார்கள். நாகரிகம் மாறுபடுகின்ற காரணங்களால் மக்கள் வேகம் முதலில் அதிகரித்துப் பின்னர் குறைகிறது. நாகரிகம் இல்லாத பழங்காலத்தில் பாதுகாப்பு கிடையாது; கல்வி அறிவு எதுவும்

கிடையாது; மக்களுக்குப் போதிய உணவும் கிடைக்கவில்லை. அதனால் மக்கள்தொகைமெதுவாக வளர்ந்தது. நாகரிகம் வளர்ச்சி பெறும்போது மக்கள்தொகையும் வேகமாக வளரும். ஆனால் நாகரிகம் உச்சக் கட்டத்தை எட்டும்போது மக்கள்தொகை வளர்ச்சியின் வேகம் குறையும்.

உலக மக்கள் தொன்றுதொட்டு விரைவாகவோ மெது வாகவோ அதிகரித்து வருகிறார்கள் என்பது உண்மை என்றாலும், மற்ற உயிரினங்கள், ஈக்கள் போலத்தான் ஆறறிவு பெற்ற மனிதர்களும் பெருகி வருகிறார்கள் என்பது பொருத்தமற்றது. மக்கள்தொகைப் பெருக்கல் வேகத்தில் அதிகரித்துக்கொண்டே போகும் என மால்தஸ் குறிப்பிட்டார். ஆனால் பேர்ல் அவர்கள் மக்கள்தொகை நாகரிக வளர்ச்சிக்கு ஏற்பதான் பெருகும் என்று குறிப்பிட்டுள்ளார்கள். பேர்ல் அவர்களின் கோட்பாடு மால்தஸ் கோட்பாட்டைப் போல் இருண்ட எதிர்கால நோக்கைக் கொண்டதல்ல என்பதையும் நாம் அறியவேண்டும்.

---

# மேற்கோள் நூல்களின் பட்டியல்


1. Dr. Chandrasekaran : 'Population'
2. Dr. Chandrasekaran : 'Planned Parenthood'
3. Dr. Chandrasekaran : 'Hungry People & Empty Lands'
4. Dr. Bright Singh : 'Economic Development'
5. Dutt and Sundaram : 'Indian Economy'
6. Kindleberger : 'Economic Development'
7. K. P. M. Sundaram : 'Indian Economy'
8. Reddaway : 'Development of Indian Economy'
9. Government of India : 'Five Year Plans' (I to IV)
10. W. A. Lewis : 'Theory of Economic Growth'
11. Haney : 'Economic Thought'
12. Hindustan Year Book (1970, 1971)
13. R. Balakrishna : 'Review of Economic Growth in India' (1961)
14. Government of India : 'Reports of National Income Committee'
15. S. R. Sen : 'Strategy for Agricultural Development'
16. Benjamin Higgings : 'Economic Development'
17. Leibenstein : 'Economic Backwardness and Growth'
18. Myrdal : 'Economic Theory and Under-Developed Regions'
19. Rostow : 'The Economics of take off into sustained growth'
20. UNO : 'Measures for the Economic Development of UDC, 1951'
21. Alak Ghosh : 'Indian Economy'
22. B. R. Shenoy : 'Problems of Indian Economy'
23. Government of India : 'Economic Survey of India'
24. V. K. R. V. Rao : 'Essays in Economic Development, 1966'
25. Das and Chatterjee : 'Indian Economy'

# கலைச்சொற்கள்

(ஆங்கிலம் — தமிழ்)

Artificial checks — செயற்கைத் தடைகள்
Biological theory of population — உயிரியல் மக்கள்தொகைக் கோட்பாடு
Birth control — பிறப்புக் கட்டுப்பாடு
Birth rate — பிறப்பு விகிதம்
Celibacy — கன்னியாக இருத்தல்
Census — மக்கள்தொகைக் கணிப்பு
Climate — வெப்பதட்பம்
Death rate — இறப்பு விகிதம்
Density — அடர்த்தி, நெருக்கம்
Diseases — நோய்கள்
Disguised unemployment — மறைமுக வேலையின்மை
Family planning — குடும்ப நலத்திட்டம்
Gross reproduction — மொத்த இனவிருத்தி
Malthusian theory of population — மால்தஸ் மக்கள்தொகைக் கோட்பாடு
Migration — குடியேற்றம்
Moral restraint — ஒழுக்கக் கட்டுப்பாடு
Mortality — இறப்பு
National income — தேசிய வருமானம்
Natural checks — இயற்கைத் தடைகள்
Net Reproduction — நிகர இனவிருத்தி
Occupational structure — வேலைகளின் அமைப்பு
Optimum population — உத்தம மக்கள்தொகை
Over population — அமித மக்கள்தொகை
Per capita income — தலா வருமானம்
Positive checks — உறுதியான தடைகள்
Preventive checks — தவிர்ப்புத் தடைகள்
Primary occupation — முதன்மையான வேலை

| | | |
|---|---|---|
| Public health | — | பொதுச் சுகாதாரம் |
| Quality of labour | — | உழைப்பின் தரம் |
| Quantity of labour | — | உழைப்பின் அளவு |
| Redistribution | — | மறுபங்கீடு |
| Religion | — | மதம் |
| Sanitation | — | சுகாதாரம் |
| Sex Ratio | — | ஆண் பெண் விகிதாசாரம் |
| Standard of living | — | வாழ்க்கைத்தரம் |
| Sterilisation | — | கருத்தடை சிகிச்சை |
| Trade union | — | தொழிற் சங்கம் |
| Under-developed countries | — | பின்தங்கிய நாடுகள் |
| Under-employment | — | வேலைக்குறைவு |
| Under-population | — | போதா மக்கள்தொகை |
| Urbanisation | — | நகரங்களின் வளர்ச்சி |